# போதி மாதவன்

ஆசிரியர் :

ப. ராமஸ்வாமி



பாரி நிலையம்

59. பிராட்வே · சென்னை 1.

# முன்னுரை

புத்தர் பெருமானின் சரிதையை விரிவாக எழுத வேண்டுமென்று பல்லாண்டுகளாக எனக்கு ஆவல் இருந்து வந்தது. 1951-ஆம் ஆண்டு, ஒரு சமயம் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை யவர்களிடம் என் ஆவலைத் தெரிவித்தேன். உடனேயே அவர்கள் மகிழ்ச்சியுடன் துள்ளி அமர்ந்துகொண்டு, 'அவசியம் எழுதுங்கள்' சீக்கிரம் எழுதி முடியுங்கள்! எனது "ஆசிய ஜோதி"யிலுள்ள பாடல்களில் தேவையானவைகளை எடுத்து உபயோகித்துக்கொள்ளுங்கள்!' என்று ஆர்வத்தோடு ஆசி கூறினார்கள். ஆசிய ஜோதியாய்—அகில ஜோதியாய்—விளங்கிய போதிமாதவனிடம் கவிமணியவர்கள் கொண்டிருந்த ஈடுபாடு எனக்கும் ஊக்கமளித்தது. அரசு நிழலிருந்து அருளறம் பூண்ட அண்ணலின் சரிதையையும், அவரது தருமத்தையும் பற்றி எழுதுவதற்குத் தகுதியும் ஆற்றலும் இல்லாதிருப்பினும் எழுத முற்பட்டேன். அதன் விளைவாக ஆறு நூல்கள் உருவாயின.

'**போதி மாதவன்**' என்ற இந்நூல் பெருமானின் திவ்விய சரிதை. பௌத்த சமயத்தின் கொள்கைகளைப்பற்றி நான் எழுதி முடித்த நூல் '**பௌத்த தருமம்**'. உலகில் தோன்றிய ஆறு தீர்க்கதரிசிகளிடையே புத்தர்பிரானின் நிலையைப் பற்றி விளக்கும் நூல் '**புத்த ஞாயிறு**'. பௌத்தத் திருமுறைகளில் ஒரு பகுதியாகவும், உணர்ச்சி மயமாகவும், கவிதைப் பண்பு மிகுந்தும் விளங்கும் பெருமானுடைய 423-சூத்திரங்களைக் கொண்ட '**தம்ம பதம்**' என்ற நூலையும்

தமிழில் பெயர்த்தெழுதியுள்ளேன், அவருடைய உபதேச மொழிகள் அடங்கிய நூல் '**புத்தர் போதனைகள்**'. ஆங்கிலத்தில் மேற்குறித்த போதனைகளைத் தொகுத்துப் பதிப்பிக்க ஏற்பாடு செய்தேன். இவைகள் யாவும் வருகிற வைகாசிப் பூர்ணிமையில் புத்தர் பெருமானின் 2,500-ஆவது ஜயந்தி விழாவில் வெளி வருகின்றன.

பெருமானைப்பற்றிய சரித்திர ஆதாரங்கள் குறைவு; கற்பனைக் கதைகளே அதிகம்; பௌத்தத் திருமுறைகளிலிருந்து சில குறிப்பிட்ட சரித்திர ஆதாரங்களே கிடைக்கின்றன. அவைகளில் புத்தர் தமது சுயசரிதையைத் தாமே கூறியுள்ள பகுதிகள் மேலும் சுருக்கமானவை. சரித்திரக் குறிப்புக்களை மட்டும் ஆதாரமாய்க்கொண்டு எழுதினால், நூல் சதையற்ற எலும்புக் கூடுபோலிருக்கும். கதைகளையே ஆதாரமாய்க்கொண்டு எழுதினால், புதிய புராணமாகிவிடும். எனவே சரித்திரம், புராண வரலாறு ஆகிய இரண்டையும் துணைக்கொண்டு நான் இந்நூலை எழுதியுள்ளேன். கௌதம புத்தர் சரித்திர நாயகர் என்பதிலும், அவரது வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகளிலும் துளியேனும் சந்தேகமில்லை. பௌத்த தருமம் இந்தியாவில் 1,500 ஆண்டுகட்கு மேலாக நிலைத்து வளர்ந்து வந்திருக்கிறது. அந்தக் காலத்திலேதான் உலகிலே இந்நாடு மகோன்னத நிலையை அடைந்திருந்தது. வட இந்தியாவிலே, கோசலம், மகதம் முதலிய சில பகுதிகளில்மட்டும் பரவியிருந்த பௌத்த சமயத்தை **அசோக சக்கரவர்த்தி** உலகப் பெருஞ் சமயமாக்கி யிருந்தார். 'இங்கே பகவர் பிறந்தார்' என்று பொறித்துள்ள கற்றூண் ஒன்றை அவர் நாட்டி வைத்திராவிட்டால், பெருமான் அவதரித்த தலம்கூட உலகுக்குத் தெரிந்திருக்க முடியாது. பிறவிப் பிணி மருத்துவரும், நல்லறம் பகர்ந்த நாயகரும், சன்மார்க்கப் போதகரும், தயாவீரரும், கலைகட்கெல்லாம் நாதருமான சாக்கிய முனிவர் சம்பந்தமான கல்வெட்டுக்களும், ஸ்தம்பங்களும், ஆல

யங்களும், விகாரைகளும் சரித்திரக் குறிப்புக்கள் தயாரிக்க மிகவும் உதவியாக இருக்கின்றன.

நான் இந்நூலை எழுதி வரும்போது, 1952, நவம்பர்மீ 29உ போபால் ராஜ்யத்திலுள்ள பௌத்தத் தலமாகிய சாஞ்சியிலே ஒரு பெருந் திருவிழா நிகழ்ந்தது. உலகப் பௌத்தர்களின் கலைப்பண்பு மகாநாடு 'பாரத ரத்னம்' டாக்டர் சரவபள்ளி ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் அங்கு நடந்தேறியது. அதே நன்னாளில் பகவான் புத்தருடைய அந்தரங்கச் சீடர்கள் இருவருவடய புனித அஸ்திகளும் சாஞ்சிக் குன்றுக்கு எடுத்துவரப் பெற்றன.

சுமார் 2,500 ஆண்டுகட்கு முன்னர் ததாகதராகிய புத்தருடன் நெருங்கி வாழ்ந்து வந்த ஆதிச்சீடர்கள் பதின்மர் : காசியபர், ஆனந்தர், சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர், அநுருத்தர், சூபூதி, பூர்ணர், காத்தியாயனர், உபாலி, இராகுலர். இவர்களில் சாரீபுத்திரர் பகவருடைய கடைசி யாத்திரையில் சில இடங்களுக்கு மட்டும் அவரோடு சென்றுவிட்டுத் தமது கிராமத்திற்குச் சென்று தேகவியோகமானார். அதன் பின்பு மௌத்கல்யாயனர் புறச்சமயிகளின் சூழ்ச்சியால் கொலையுண்டு இறந்தார். இவர்கள் பெருமானின் வலக்கரமாகவும், இடக்கரமாகவும் இருந்து பணியாற்றி வந்த மேதாவிகள். இவர்களுடைய அஸ்திகள் பிற்காலத்தில் சாஞ்சி ஸ்தூபம் ஒன்றில் புதைக்கப் பெற்றிருந்தன. ஒரு கால் இந்திய அரசாங்கத்தின் புதைபொருள் ஆராய்ச்சித் தலைமையதிகாரியா யிருந்த தளபதி கன்னிங்ஹாம் 1850-ஆம்ஆடு அவைகளைக் கண்டெடுத்து, லண்டனிலுள்ள விக்டோரியா-ஆல்பர்ட் கண்காட்சிச் சாலைக்கு அனுப்பி வைத்தார். இந்திய நாடு விடுதலை பெற்றபின், தேடுதற்கரிய அச்செல்வங்கள் திரும்பக் கிடைத்தன.

அவைகளை அடக்கம் செய்து வைப்பதற்காக இரண்டு லட்ச ரூபாய்க்கு மேற்பட்ட செலவில் இந்திய மகாபோதி சங்கத்தார் சாஞ்சியிலேயே புதிதாக ஒரு விகாரை அமைத்

திருந்தார்கள். சாஞ்சிக் குன்றில் பழைய விகாரைக்கு அருகிலேயே இது அழகுற அமைந்துள்ளது.

நவம்பர் 30உ ஐம்பதினாயிரத்திற்கு மேற்பட்ட மக்களின் பெருங்கூட்டத்தோடு அஸ்திகள் அடங்கிய தங்கப் பேழை ஊர்வலமாக எடுத்துவரப் பெற்றது. மணிகள் முழங்கவும், மந்திர கீதங்கள் ஒலிக்கவும், பிக்குக்களும், பிக்குணிகளும் தரையில் விழுந்து வணங்கவும், மக்களனைவரும் பணிந்து போற்றிப் பரவசமாக நிற்கவும், இந்திய மகாபோதி சங்கத்தின் தருமகர்த்தா புனித பிக்கு ஸ்ரீனிவாச நாயகத்தேரரும், இலங்கை மகாபோதி சங்கத் தலைவர் புனித பிக்கு டாக்டர் பி. வஜிராணண மகாதேரரும் அஸ்திகளை இந்தியப் பிரதம மந்திரி திரு. பண்டித நேரு அவர்களிடமிருந்து பெற்று விகாரையுள் அடக்கம் செய்தனர். புத்தகயையிலிருந்தும், அனுராதபுரத்திலிருந்தும் வந்திருந்த இரண்டு அரசிளங் கன்றுகளும் நடப்பெற்றன.

இந்த அரிய நிகழ்ச்சியும், மகாநாட்டுச் சொற்பொழிவுகளும் இந்நாட்டு மக்களுக்குப் பௌத்த தருமத்தின் பண்டைப் பெருமைகளைப் படம் பிடித்துக் காட்டியிருக்கும். 'கண் பிறர்க்களிக்கும் கண்ணோன்' என்று துதிக்கப்பெற்ற புத்தர் எண்பது ஆண்டுகள் இனிது வாழ்ந்து, இந்நாட்டில் காடும் கிராமமும், நாடும் நகரும் சுற்றிவந்து, மக்களிடம் அருள் சுரந்து தரும உபதேசம் செய்து, அற ஆழியை உருட்டிவந்த செய்தி கற்றோர் யாவருக்கும் நினைவுக்கு வந்திருக்கும். பௌத்த தருமம் பற்பல நூற்றாண்டுகளாக நாடெங்கும் பரவித் தழைத்து வளர்ந்து வந்தமை இப்பொழுது பழங் கதையாய்ப் போய்விட்டது. தூர தொலைவிலுள்ள ஆசிய நாடுகள் பலவற்றிலேயே பௌத்தம் பல்கி வளர்ந்து வருகிறது. பிறந்த நாட்டிலே, கிழக்குப் பாகிஸ்தான் மூலையிலேதான் அதைத் தேடிக் காணவேண்டியிருக்கிறது! ஆயினும் பௌத்த தருமத்தின் உயரிய கொள்கைகள் பலவும் இங்குள்ள பிறசமயங்களிலே ஊறிக்

கலந்துள்ளன. பெரும்பாலான அறிவாளர்கள், தாங்கள் பௌத்தர்களா யில்லாதிருப்பினும், அதனிடத்திலும், புத்தரிடத்திலும் அன்பு கொண்டுள்ளனர்.

புத்தரைப் பகவான் என்று பக்தர்கள் பக்தியால் பரவுவார்கள். அவர் நம்மைப் போன்ற மனிதரே; அரண்மனையிலே பிறந்து, அரச போகங்களைத் துய்த்தவர்; ஆனால், அரியாசனத்தைத் துறந்து வெளியேறிய பின்பு, காடுதான் அவருக்கு வீடு; கையிலிருந்த ஓடுதான் வற்றாத செல்வம். அந்நிலையில் இராஜகிருக நகரில் ஒருநாள் முதன் முதல் பிச்சையெடுத்தார். திருவோட்டில் சேர்ந்த உணவுடன் அவர் ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறத்திற்குப் போய் உணவருந்த அமர்ந்தார். ஓட்டிலிருந்து ஒரு கவளம் எடுத்து வாயில் போடுகிறார், வாய் குமட்டுகிறது! அறுசுவை உண்டி எங்கே! கண்டவர் வீடுகளில் வாங்கிய கதம்பச் சோறு எங்கே! உணவு உள்ளே செல்ல மறுத்தது. ஆனால் சித்தார்த்தர் அதை வெளியே தள்ள மறுத்தார். உலகின் துக்கத்தை யெல்லாம் ஒழித்துக் கட்டவேண்டுமென்று கிளம்பிய உத்தமர் பிச்சைச் சோற்றுக்குப் புறங்கொடுத்து ஓட முடியுமா? எப்படியோ உள்ளத்தில் உரமேற்றிக் கொண்டு அவர் அதை உண்டுவிட்டார். அது முதல்—அதாவது, அவருடைய 29 வயது முதல்—80 வயது வரை அவர் பிச்சைச் சோறே உண்டு வாழ்ந்தார்!

வாழ்நாள் முழுதும் ஒரு கடுஞ் சொல் அவர் வாயிலிருந்து வந்ததில்லை. அவர் செவிகளும் தீ மொழிக்கு அடைத்த செவிகள். மூர்க்கமான விலங்குகளும் செந்தாமரை போன்ற அவர் திருமுகத்தைப் பார்த்தால் சினம் தணியுமென்றால், மக்களைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

இருபது இயல்களிலே பெருமானுடைய வாழ்க்கையைப் பற்றி இந்நூலில் ஓரளவு சுருக்கமாகவே எழுதியுள்ளேன். இதைத் தொடர்ந்து, துக்கம், துக்க காரணம், துக்க

நிவிர்த்தி, துக்க நிவிர்த்தி மார்க்கம் என்று புத்தர் கூறிய நால்வகை வாய்மைகள்பற்றியும், எட்டுப் படிகளுடன் அவர் வகுத்த அஷ்டாங்க மார்க்கம்பற்றியும், 'அநித்தம், துக்கம், அநான்மம்' என்ற மூன்று பௌத்தக் கொள்கைகள் பற்றியும், பௌத்த தருமத்தின் இலட்சியமான நிருவாண முக்திபற்றியும், பௌத்தமும் சாதிப் பிரிவினையும், பௌத்த சங்கம், பௌத்தத் திருமுறைகள் ஆகியவை பற்றியும் 'பௌத்த தருமம்' என்ற நூலில் விரிவாக எழுதியுள்ளேன். இந்த இரண்டு நூல்களும் ஒரே நூலாகக் கருதத்தக்கவை. சரிதையைப் படிப்போர் தருமத்தைப் பற்றியும் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டும்.

பௌத்த தருமத்தின் கொள்கைகள் சிலவற்றைப் பற்றியும், இறைவன், ஆன்மா பற்றிப் புத்தர் பெருமானின் கருத்துக்கள் பற்றியும் அறிஞர்களிடையேகூட அபிப்பிராய வேற்றுமைகள் இருந்து வருகின்றன. பௌத்த சமயத்திலும் சில உட்பிரிவுகள் இருக்கின்றன. பௌத்தம் வெளி நாடுகளில் பரவிய நிலையில் ஆங்காங்குள்ள கொள்கைகளால் பாதிக்கப்பட்டு அதிலே சில மாறுதல்கள் ஏற்பட்டிருப்பதும் இயற்கையே. எனினும், முடிவான இறுதி இலட்சியம்பற்றிப் பெருமானுடைய உபதேச மொழிகளைக் கவனித்தால், பல ஐயங்களும், மயக்கங்களும் தீர்ந்து போகக்கூடும் :

'ஓ பிக்குக்களே! பிறப்பற்ற, ஆரம்பமற்ற சிருஷ்டிக்கப்படாத, உருவாகாத, ஒன்று இருக்கிறது. அப்படி ஒன்றில்லையானால், பிறப்புள்ள, ஆரம்பமுள்ள, சிருஷ்டிக்கப்பட்ட, உருவுள்ள உலகிலிருந்து தப்பித்துக் கொள்ளவே முடியாமற் போகும்.'

'பிறரைச் சார்ந்து நிற்பவனிடம் சலனம் (உறுதியின்மை) இருக்கின்றது. சுதந்திரமாக உள்ளவனிடம் சலனமில்லை. சலனம் எங்கே யில்லையோ, அங்கே அமைதி உண்டு. அமைதி எங்கே உளதோ, அங்கே

(மோகம் முதலிய வெறிகள் சம்பந்தமான) இன்பம் நுய்க்கும் களியாட்டமில்லை. இன்ப வேட்டை எங்கேயில்லையோ, அங்கே (பிறப்பு இறப்பாகிய) வருதலும் போதலும் இல்லை. வருதலும் போதலும் எங்கேயில்லையோ, அங்கே ஒரு நிலையிலிருந்து மற்றென்றுக்கு மாறுதலும் இல்லை. ஒரு நிலையிலிருந்து மற்றென்றுக்கு மாறுதல் எங்கே யில்லையோ, அங்கே "இங்கு" என்பதில்லை, "அப்பால்" என்பதில்லை, "இங்கும்-அங்கும்' என்பதுமில்லை. அதுவே துக்கத்தின் முடிவு.

'புறத் தோற்றங்களான யாவும் ஒழிந்த பிறகுதான் ஒரே உயிர்த் தத்துவம் மட்டும் எஞ்சி நிற்கின்றது: அது பிரபஞ்ச இயல்புகளுக்கு அப்பாற்பட்டுச் சுதந்திரமாயுள்ளது; விறகு தீர்ந்த பிறகும், சுடர் அணைந்த பிறகும், நித்தியமான ஒளியில் எரிந்துகொண்டிருக்கும் தீ அதுதான்; ஏனெனில் அந்தத் தீ சுடரிலுமில்லை, விறகிலுமில்லை; அந்த இரண்டின் உட்புறத்திலுமில்லை; ஆனல் மேலேயும், கீழேயும், எங்கும் உள்ளது அது.'

*இந்நூலிலுள்ள குற்றங்களையும் குறைகளையும் அறிஞர்கள் பொறுத்தருளி, அவைகளை எனக்கு அறிவிக்கும்படி வேண்டிக்கொள்கிறேன். பிந்திய பதிப்புக்களில் பிழைகளைக் களைவதற்கு அவை உதவியாகும்.*

*திருநெல்வேலி,*
*9-5-'56*

ப. ராமஸ்வாமி

# இந்நூலை எழுத உதவிய நூல்கள்

| | |
|---|---|
| ஆசியஜோதி | — கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை |
| உலகை உய்வித்த உத்தமன் | — ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் |
| சிலப்பதிகாரம் | — டாக்டர் உ. வே. சாமிநாதைய ரவர்கள் பதிப்பு |
| தமிழ் நூல்களில் பௌத்தம் | — திரு. வி. கலியாணசுந்தரர் |
| திருக்குறள் | — திருவள்ளுவர் |
| நாலடி நானூறு | — சமண முனிவர் |
| நீலகேசி | — திரு. A. சக்கரவர்த்தி நயினர் அவர்கள் பதிப்பு |
| பழைய நீதிக் கதைகள் முதல் பாகம் | — A.S. பஞ்சாபகேச ஐயர், I.C.S. |
| புத்த சரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கம் | — டாக்டர் உ. வே. சாமிநாதைய ரவர்கள் |
| புத்த தர்மச் சுருக்கம் | — பிக்கு சோமாநந்த |
| புத்தரது திவ்ய சரித்திரம் | — விவேக சிந்தாமணிப் பிரசுரம் |
| புத்தர் | — பிக்கு சோமாநந்த |
| புத்தர் சரித்திரம் | — ,, ,, |
| புத்தர் ஜாதகக் கதைகள் | — எஸ். கிருஷ்ணஸ்வாமி சர்மா |
| ,, ,, ,, | — 'ராஜம்' |
| பௌத்தக் கதைகள் | — மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் |
| பௌத்தமும் தமிழும் | — ,, ,, |
| மணிமேகலை | — டாக்டர் உ. வே. சாமிநாதைய ரவர்கள் பதிப்பு |
| மணிமேகலைக் கதைச் சுருக்கம் | — ,, ,, |
| மணிமேகலைச் சுருக்கம் | — ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் |
| வீரசோழியம் | — ராவ்சாகிப் தாமோதரம் பிள்ளை அவர்கள் பதிப்பு |

# BIBLIOGRAPHY


**A Buddhist Catechism** —*Col H. S. Olcott*

**A Comparative Study of Jainism and Buddhism** —*B. S. Prasadji*

**A Manul of Buddhism** —*R. Spence Hardy*

**A Short History of the World** —*H. G. Wells*

**Buddha** —*Devamitta Dharmapala*

**Buddha and the Gospel of Buddhism** —*Ananda K. Coomaraswamy*

**Buddhism** —*A. S. Mudaliar*

" —*Christmas Humphreys*

" —*Rai Bahadur Pandit Sheo Narain*

" —*T. Rhys Davids*

" —*Mrs. Rhys Davids*

**Buddhism in Translations** —*Henry Clarke Warren*

**Buddhist Bible** —*Dwight Goddard*

**Buddhist India** —*T. Rhys Davids*

**Buddhistische Anthologie** —*Dr. Karl Eugen Neumann*

**Buddhist Popular Lectures** —*Dr. Annie Besant*

**Buddhist Rules for the Laity** —*D. J. Subasinha*

**Chinese Buddhism** —*Rev. Joseph Edkins, D. D.*

**Dhammapada** —Translated by *F. Max Muller*

" —Translated by *Dr. S. Radhakrishnan*

**Discovery of India** —*Pandit Jawaharlal Nehru*

**For Ever India** —*G. Venkatachalam*

**Gautama the Buddha** —*Dr. S. Radhakrishnan*

**Glimpses of World History** —*Pandit Jawaharlal Nehru*

**Gotama the Buddha** —*Ananda K. Coomaraswamy and I. B. Horner*

**I, The Buddha** —*J. Vijayatunga*

**Mahavamsa** —Translated by *William Geiger*

**Message of Buddhism** —*Bhikkhu Subhadra*

**Sacred Books of the Buddhists Series, Sacred Books of the East Series, Some Sayings of the Buddha** —*F. L. Woodward*

**Sutra of 42 Sections** —*Kyoto, Japan*

**The Basic Conception of Buddhism** —*Vidhushekara Battacharya*

**The Buddha - Charita of Asvagosha** —Translated by E. B.Cowell

**The Chinese Dhammapada** —*Samuel Beal*

**The Fo-Sho-Hing-Tsan-King** —*Life of Buddha in Chinese* Translated by *Samuel Beal*

**The Gospel of Buddha** —*Paul Carus*

**The Jatakas** —Edited by E. B. Cowell

**The Life and Legend of Gaudama** —*R. Rev. Bigandet*

**The Life of Buddha** —*A. Ferdinand Herold*

**The Life of Buddha in Legend and History** —*E. J. Thomas, M.A., D. Litt.*

**The Life of the Buddha** —*W. W. Rockhill*

**The Light of Asia** —*Sir Edwin Arnold*

**The Psychology of Progress** —*The Anagarika Dharmapala*

**The Questions of King Milinda**—*T. W. Rhys Davids*

**The Religion of Burma** —*Bhikkhu Ananda Metteyya*

**The Romantic History of Buddha from the Chinese Sanskrit** —*Samuel Beal*

**The Spirit of Buddhism** —*Sir Hari Singh Gour*

**The Youngest Disciple** —*Edward Thompson*

**Three Parables of the Buddha** —*International Book House Ltd., Bombay.*

**What is Buddhism ?** —*The Buddhist Lodge, London.*

# உள்ளுறை



ஆசிரியர்

## திரு. ப. ராமஸ்வாமி



### ஆசிரியரின் இதர நூல்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| பௌத்த தருமம் | ... | ரூ. | 3 | 0 |
| புத்த ஞாயிறு | ... | ரூ. | 2 | 0 |
| புத்தர் போதனைகள் | ... | ரூ. | 1 | 8 |
| தம்ம பதம் | ... | ரூ. | 1 | 4 |
| **Thus Sphake The Buddha** | ... | ரூ. | 1 | 8 |
| வாழ்க்கை [டால்ஸ்டாயின் கட்டுரை] | ... | ரூ. | 2 | 0 |
| தான்பிரீன் [ஐரிஷ் வீரனின் சரிதை] | ... | ரூ. | 1 | 0 |

# புத்தரின் அவதாரம்

'இந்த உலகத்திலே, ஏதோ ஒரு காலத்தில், மிக அருமை யான, ஒப்பற்ற ஒருவர் தோன்றுகிறார். இந்த ஒப்பற்ற ஒருவர் யார்? அவரே பூரண ஞானமடைந்து உயர்நிலை பெற் றுள்ள ததாகதர்.'

—புத்தர்

**வட** இந்தியாவில் கி. மு. ஆருவது நூற்ருண்டில் அமைந்திருந்த ராஜ்யங்களில் முக்கியமானவை இரண்டு: அவை கோசல நாடும், மகத நாடும். கோசல நாட்டின் தலை நகர் **சிராவஸ்தி***. மகதத்தின் தலைநகர் **இராஜகிருகம்**. மகத நாடு பிற்கால இந்திய சரித்திரத்தில் எல்லையற்ற புகழ் பெற்றது. சந்திரகுப்தர் மகத சக்கரவர்த்தியாக வந்த போது அதன் தலைநகர் பாடலிபுரம். கௌதம புத்தர் காலத்தில் பாடலிபுரம் 'பாடலிகாமா' என்ற கிராமமாகவே இருந்தது.

மகதத்திற்கு வடக்கே **வைசாலியைத்** தலைநகராகக் கொண்ட **விரிஜி†** நாடு இருந்தது. அதற்கும் அப்பால் மல்லர் என்ற வகுப்பினர் வாழ்ந்து வந்தனர்.

கோசலத்தின் வட எல்லையில் சாக்கிய வகுப்பினர் வாழ்ந்து வந்தனர். சாக்கிய நாடு கோசலத்திற்கு உட்பட்

*சிராவஸ்தி (வடமொழி) - பாலியில்: சாவத்தி.

†விரிஜி (வடமொழி) - பாலியில் : வஜ்ஜி.

டது. சாக்கிய நாட்டை அடுத்துக் கீழ்த்திசையில் கோலிய வகுப்பினர் வாழ்ந்து வந்தனர்.

சாக்கியரென்ற பெயரே ஆற்றல் மிக்க வீரர்களைக் குறிக்கும். சாக்கியர் க்ஷத்திரிய வகுப்பினர்; தாம் வீர மிக்க தனி வகுப்பினரென்று அவர்கள் பெருமை கொண்டிருந்தனர். நெல் வயல்களும், நெடிய சோலைகளும் நிறைந்த அடிவார நிலத்திலும், இமயமலைச் சாரலிலும் அவர்களுடைய நாடு பரவியிருந்தது. மழை வளத்தாலும், ஆறுகளின் வெள்ளத்தாலும் நாடெங்கும் முத்துப்போன்ற செந்நெல் சிந்தும் வயல்களோடு, சந்தன மரங்களும், தேக்கு, தேவதாரு, கருங்காலி மரங்களும் செழித்து வளர்ந்திருந்தன.

## கபிலவாஸ்து

சாக்கிய மன்னர்களின் தலைநகர் **கபிலவாஸ்து***. முற்காலத்தில் அங்கே கபில முனிவர் தங்கியிருந்தாராம். இக்ஷ்வாகு வமிசத்தைச் சேர்ந்த நான்கு அரசிளங்குமரர்கள், தங்கள் தந்தையின் விருப்பப்படி, தங்கள் நாட்டைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு, அங்கே வந்து, கபிலரின் உதவியால் அந்நகரை அமைத்து ஆண்டுவந்ததாகக் கூறப்படுகிறது. கபிலரின் நினைவு நீங்காதிருப்பதற்காக அந்தக் கடிநகருக்குக் கபிலவாஸ்து‡ அல்லது கபிலை என்று பெயரிடப்பட்டது.

---

*கபிலவாஸ்து - உரோகிணி நதிக்கரையிலிருந்த இந்நகரம் இப்போது பாழடைந்து கிடக்கின்றது. இது உத்தரப் பிரதேசத்தில் (பழைய ஐக்கிய மாகாணத்தில்) பிரிட்ஜ்மாங்குஜ் என்ற ரயில்நிலையத்திற்கு அருகிலுள்ளது. இப்போது இதன் பெயர் பிப்ரஹவ என்று சொல்லப்படுகிறது. உரோகிணி நதி இக்காலத்தில் கொகான என்று அழைக்கப்படுகிறது. இது கங்கையின் கிளைநதிகளுள் ஒன்று.

‡கபிலவாஸ்து - கபிலர் இடம்.

நீல முடி தரித்த பல மலைகளுக்குத் தென்பால், சால மரங்களும், ஆலமரங்களும், மற்றும் பல அழகிய காட்டு மரங்களும் அடர்ந்த குளிர்ச்சியான சோலைகள் சூழ்ந்த சமவெளியில் அந்நகரம் அமைந்திருந்தது. எங்கணும் நறு மணம் வீசும் ஜவந்தி, தகரம், பத்திரம், ஜம்பு, அசோகம் முதலிய மலர்கள் கொள்ளை கொள்ளையாகப் பூத்துக் குலுங் கிக் கொண்டிருந்தன. தெளிந்த நீருள்ள நீர்நிலைகள் பல வற்றிலும் தாமரை, குமுதம் போன்ற மலர்கள் நிறைந் திருந்தன. ஏரிகளின் கரைகளிலுள்ள மரங்கள், செடிகள், கொடிகள் கொத்துக் கொத்தான பூக்களுடன் ஏரிகளுள் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தன. சுற்றியிருந்த வனங் களில் மான்களும், யானைகளும், சிங்கங்களும் ஏராளமாகத் திரிந்துகொண்டிருந்தன. அருகே உரோகிணி ஆறு, ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு ஒருமுறை அவதரிக்கும் புத்தர் தன் மடிமீது வந்து தவழப் போகிறார் என்ற செருக் குடன், ஆனந்தமாக ஆடிப் பாடி ஆரவாரம் செய்து ஓடிக் கொண்டிருந்தது. இத்தனை இயற்கை யழகுக்கும் நடுவே, விண்ணை முட்டிக்கொண்டு உயர்ந்து நின்ற கோட்டை கொத்தளங்களும், அரண்மனைகளும், மாளிகைகளும், விசாலமான வீதிகளும், கடைத் தெருக்களும் நகரை அணி செய்துகொண்டிருந்தன.

## சுத்தோதன மன்னர்

இற்றைக்கு 2,500 ஆண்டுகட்கு முன் அத் திருநகரில் அமர்ந்து அரசு புரிந்துகொண்டிருந்த மன்னர் **சுத்தோதனர்**. அவர் கௌதம கோத்திரத்தைச் சேர்ந்தவர். அக்காலத்து அரசர் பலரும் தம் குல குருவின் கோத்திரத்தையே தம் கோத்திரமாகக் கொண்டிருந்தனர். மல்லர்கள் வசிஷ்ட கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். சுத்தோதனர் ஆட்சியில் அறம் நிலைத்து நின்றது; தானமும் தருமமும் பல்கி வளர்ந் தன. மக்கள் பலவகைச் செல்வங்களையும் பெற்றுப் பய

மின்றி வாழ்ந்து வந்தனர். நீதி வழுவாத நெறிமுறையால் எங்கணும் இன்பம் கொழித்துக்கொண்டிருந்தது.

சுத்தோதன மன்னருக்கு சுக்கிலோதனர், தௌதோதனர், அமிருதோதனர் என்ற மூன்று சகோதரர்களும், அமிருதை, பிரமிதை என்ற இரு சகோதரிகளும் இருந்தனர்*. அவருக்கு மாயாதேவி, கௌதமி† என்ற இரு மனைவியர் இருந்தனர். இவர்கள் கோலிய மன்னர் அஞ்சனரின் குமாரிகள். இவர்களுடைய அன்னையின் பெயர் யசோதரை. அஞ்சனர் கபிலவாஸ்துவின் அருகேயிருந்த தேவதாக நகரில் ஆட்சிபுரிந்து கொண்டிருந்தார்.

பட்டத்து ராணியான மாயாதேவி பேரழகும் பெருங்குணமும் பெற்றிருந்தாள். திருமகள்போல் எழிலுள்ள அவ்வரசி தன்னைச் சுற்றியிருந்த மக்களனைவருக்கும் பரிசுகள் வழங்கி அவர்களின் துயரங்களைக் களைந்து வந்தாள். கௌதமிக்கு அவளிடம் பொறாமை யிருந்துவந்தது. இவ்விருவருக்கும் நெடுங்காலம் மக்கட்பே றில்லாததால், மன்னரும், தமக்குப் பின்னால் தமது குலத்தை விளக்க ஒரு குழந்தையில்லையே யென்று, வருந்தி வந்தார். அந்நிலையில், அவரும் அவருடைய தேவியரும் செய்த தவத்தாலோ, மாநிலமே செய்த மாதவ மகிமையாலோ, மாயாதேவி, தனது நாற்பத்தைந்தாவது வயதில் கருவுற்றாள். வையகத்தின்

---

*சுத்தோதனர் சிம்மஹனு மன்னரின் மூத்த குமாரர். அவருடன் பிறந்த சகோதரர்கள் நால்வரென்றும், சகோதரிகள் நால்வரென்றும் சில வரலாறுகளில் காணப்படுகிறது.

†இவர்கள் சாக்கிய சுப்பிரபுத்தரின் குமாரிகளென்றும், மாயா மூத்த மகளென்றும், கௌதமி கடைசி மகளென்றும், இவர்களுடைய சகோதரிகள் அறுவரைச் சுத்தோதனரின் சகோதரர்கள் மூவரும் தலைக்கு இரு மனைவியராக மணந்துகொண்டனரென்றும் பலவிதமான வரலாறுகள் உண்டு. கௌதமிக்கு மகா பிரஜாவதி என்றும் ஒரு பெயருண்டு.

வாட்டத்தை யெல்லாம் மாற்றவந்த புத்தரே அவ்வம்மை யின் மணிவயிற்றிலே கோயில் கொண்டிருந்தார்.

புத்தர் பூமியில் தோன்றுவதற்குரிய காரணத்தையும், விவரத்தையும் புராணக்கதைகள் பலவகையாக விரித்துக் கூறுகின்றன. கௌதம புத்தருக்கு முன்னல் உலகில் ஆறு புத்தர்கள் அவதரித்தனரென்று 'மகாபதான சூத்திர'த் திலும், இருபத்துநான்கு புத்தர்கள் இருந்ததாகப் 'புத்த வம்ச'த்திலும், ஐம்பத்து நான்கு புத்தர்கள் என்று 'லலித விஸ்தர'த்திலும், நூற்றுக்கு மேற்பட்டவரென்று, 'மகா வஸ்து'விலும் கூறப்படுகிறது. 'மணிமேகலை' 'எண்ணில் புத்தர்கள்' என்று கூறும். இது எவ்வாறிருப்பினும், சரித் திரம் ஒப்புக்கொண்டு மக்கள் நினைவி லிருந்துவரும் புத்தர் கௌதம புத்தர் ஒருவரே. பௌத்த நூல்களின்படி இனி வரப்போகும் புத்தர் **மைத்திரேய புத்தர்.**

கௌதமர் முன்னம் ஒரு பிறவியில் **தீபங்கர**ரென்ற குருவின் முன்னிலையில் தாம் புத்தராகத் தோன்ற வேண்டு மென்று உறுதி செய்துகொண்டு, பின்பு தெய்வலோகங் களுள் ஒன்ருகிய துஷித உலகில் இருந்து வந்தார். தெய்வ லோகங்களிலுள்ளவர்களுக்கும், தேவர்களுக்கும், மற்றும் யாவருக்குமே பிறப்பும் இறப்பும், இன்பமும் துன்பமும் உண்டென்பது பௌத்த நூல்களின் கூற்று. பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் பிரம பதவி, இந்திர பதவி முதலிய பதவிகளை அவ்வக் காலத்தில் வகிப்பவர்களேயன்றி நிலையானவர்களல்லர். எவர்களும் அந்தப் பதவிகளை அடைய முடியும். மனிதர் தம் தவவலியால் தேவராகப் பிறக்கலாம்; ஆனுல், முடிவில் மனிதராகப் பிறந்து, ஆசை களை அகற்றி, நிருவாண மோட்சம் பெற்ருல்தான் பிறவித் துன்பம் நீங்குமென்று அந்நூல்கள் கூறுகின்றன.

கௌதமர் தம் இறுதிப் பிறவியில் உலகில் புத்தராகத் தோன்றுவதற்குரிய காலம் வந்ததும், எந்த இடத் தில், எந்தக் குலத்தில் அவதரிக்கலாம் என்பதைப்

பற்றிச் சிந்திக்கலானார். துஷித உலகிலிருந்த அந்தக் காலத்தில் அவருக்குப் பிரபாபாலர் என்று பெயர். பின்னால் புத்தராவதற்குரிய பண்பும் தகுதியுமுள்ளவர்களைப் போதி சத்துவர் என்றழைப்பது பௌத்த மரபு. பிரபாபால போதிசத்துவர், ஜம்பூத்வீபத்திற்கு அடிக்கடி போய்ப் பழக்கமாயிருந்த சுவர்ணபூதி யென்ற தேவனை அழைத்து, அவனிடம் விசாரித்தார். 'தேவபுத்திரா! நீ ஜம்பூத்வீபத்திற்குப் பன்முறை போயிருக்கிறாய். எனவே, ஆங்குள்ள நகரங்கள், கிராமங்கள், மன்னர்களின் மரபுகள் முதலியவற்றையெல்லாம் நீ அறிந்திருப்பாய். போதி சத்துவர் எடுக்கவேண்டிய கடைசிப் பிறவியில், எந்தக் குடும்பத்தில் பிறக்கலா மென்பதற்கு ஆலோசனை கூறுவாய்!' என்று கேட்டார்.

தேவன், இந்திய நாட்டிலிருந்த பல ராஜ்யங்கள், நகரங்கள், கிராமங்களைப்பற்றி யெல்லாம் விவரமாகக் கூறினான். எதிலும் பிரபாபாலரின் மனம் பற்றவில்லை. கோசலம், விரிஜி, மாவந்தி, வடமதுரை, அஸ்தினாபுரி, மிதிலை முதலிய எந்த இடமும் அவர் மனத்தைக் கவரவில்லை. தேவன், மத்திய தேசத்தின் எல்லைப்புற ராஜ்யங்களில் ஆண்டுவந்த உத்தமமான பிராமண குலத்தினரைப் பற்றிக் கூறினான். பிரபாபாலர், தாம் உயர்ந்த க்ஷத்திரிய மரபிலேயே தோன்ற விரும்புவதாயும், பெற்றோர் ஒழுக்கமும் பண்பும் நிறைந்தவரா யிருக்கவேண்டு மென்றும், நாட்டு மக்களும் அறத்தில் நாட்டமுள்ளவர்களா யிருக்கவேண்டு மென்றும் தெரிவித்தார். முடிவில் சுவர்ணபூதி, 'புராதனமான இக்ஷ்வாகு வமிசத்திலே தோன்றி, மக்களும் தேவரும் வணங்கத்தகுந்த சுத்தோதன மன்னர் கபிலவாஸ்து நகரில் செங்கோலோச்சி வருகிறார். அந்தக் குலத்தில் பிறக்கலாம்!' என்று கூறினான். போதிசத்துவரும் அந்த யோசனையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார். தாய்வழியும் தந்தைவழியும் தலைமுறை தலைமுறையாக மாசு மருவின்றித் தூய்மையானவை

யென்றும், போதிசத்துவர் பிறப்பதற்குரிய அறுபத்து நான்கு உயரிய பண்புகளும் சுத்தோதனர் குலத்தில் விளங்குவதாயும், அவருடைய அன்புக்குரிய மாயாதேவி, அழகும் குணமும் ஒருங்கேயமைந்து, தம்மைக் கருவிலே தாங்குவதற்குரிய முப்பத்திரண்டு சீரிய பண்புகளையும் பெற்றிருப்பதாயும் கூறி, பிரபாபாலர் பூவுலகில் அவதரிக்கத் தீர்மானித்தார்.

போதிசத்துவர் பூவுலகை நோக்கி இறங்கிவருவதற்குச் சிறிது நேரத்திற்கு முன்பு, கபிலவாஸ்துவில் இராணி மாயா தன் கணவரிடம் பேசிக்கொண்டிருந்தாள். 'மகாராஜா! இன்றிரவுமுதல் நான் கடுமையான நோன்பை மேற்கொள்ள விரும்புகிறேன். அது என் உள்ளத்தையும் உடலையும் தூய்மை செய்துகொள்வதற்குரிய நோன்பு. உயிர்களுக்கு உறுகண் செய்யாமை, பொய், பொறாமையாகிய தீக்குணங்களை விலக்கல், ஐம்புல இன்பங்களைத் துறத்தல், நன்மைகளை மேற்கொள்ளல் முதலிய எட்டுவகை விரதங்களைக் கடைப்பிடிக்க நான் உறுதிகொண்டுள்ளேன். எல்லா உயிர்களிடத்தும் என் உள்ளத்தில் அருள் சுரக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்!' என்று மகாராணி கூறினாள். உடனே மன்னர், 'உன் சித்தப்படியே நடக்கட்டும்! நீ விரும்பிய வண்ணமே செய்வாயாக! உனது நோன்புக்கு இடையூறு ஏற்படுவதைவிட எனது ராஜ்யத்தையே இழந்துவிடத் தயாராவேன்!' என்றார். அந்தக் கணத்திலேயே அவர் தமது ஆசனத்தைவிட்டெழுந்து விலகிச்சென்று, மாயாதேவியைத் தமது தாய் அல்லது தமக்கை யென்று கருத ஆரம்பித்தார்; தமது உள்ளத்தையும் தூய்மையாக்கிக் கொண்டார். இதன் பின்னரே பிரபாபால போதிசத்துவர் ஆவிரூபமாக வந்து, மாயாதேவியின் மணி வயிற்றில் வலது புறமாகப் புகுந்து, அங்கே பூரண சாந்தியுடன் கோயில் கொண்டிருந்தார். போதிசத்துவர் வெள்ளை யானை உருவில் மண்ணுலகுக்கு இறங்கிவந்ததாகக் கதைகள்

கூறும். வெள்ளை யானை அறிவுக்கும் ஆற்றலுக்கும் அறிகுறி.

போதிசத்துவர் பூமியில் வந்து சேர்ந்ததும் உலக மெங்கும் ஒரு பேரொளி துலங்கிற்று. அதனால், என்றுமே இருள்நிறைந்த மலைக் கணவாய்கள்கூடச் சோதி மயமாக விளங்கின. மக்களும், தேவரும், சமணரும், சதுர்மறை யோரும், மாரனும், பிரமனும் — யாவருமே அவ்வொளியைக் கண்டு வியந்தனர். 'ஏது இந்தப் பேரொளி? இது எதற்கு அறிகுறி?' என்று கண்டவரெல்லோரும் அதிசயித்துக் கேட்டனர். உடனே பூமி ஆறுமுறை அதிர்ந்தது. மலை கள் குலுங்கின, கடல்கள் குமுறின, ஆறுகளெல்லாம் வந்தவழியே திரும்பி மலைகளை நோக்கி ஓடின, வனங்களும் மரங்களும், செடிகளும் வண்ண வண்ணமான தங்கள் மலர்களை யெல்லாம் மண்மீது தூவின. மண்ணும், விண் ணும் இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்ததோடு, நீங்காத் துன்பம் நிறைந்த நிரயங்களும் இன்பத்தில் திளைத்தன. பேரொளி தோன்றியது, போதிசத்துவர் மெஞ்ஞானப் பேறுபெற்று, மண்ணக மக்களின் உள்ளங்களிலுள்ள அறியாமை யிருள் அகலும்படி தம்முடைய நான்கு வாய்மைகளையும் போதித்து, அறவுரை பகர்வாரென்பதைக் குறித்தது. பூமி யதிர்ச்சிகளும் பிறவும் பூரண ஞானம் பெற்ற புத்தர் பெருமான், உலகைத் துன்புறுத்தி வந்த தீமைகள், பாவங் களை யெல்லாம் சிதறடித்து, எல்லா மக்களையும் நிரு வாண இன்பத்திற்கு அழைத்துச் செல்வாரென்பதை அறி வுறுத்தின. ஆறுகள் வந்தவழியே திரும்பிச் சென்றமை, அதுகாறும் மக்கள் இறந்திடப் பிறந்தும், பிறந்திட இறந் தும், ஜனன-மரணச் சுழலிலிருந்து தப்பமுடியாமல் அதி லேயே சிக்கியுழல்வதை மாற்றி, புத்தர் பிறப்பறுத்துப் பெருவாழ்வடையும் மார்க்கத்தைக் காட்டுவா ரென்பதைக் காட்டியது.

இந்நிலையில், மாநிலத்தின் மணிவிளக்கைத் திருவயிற்

றில் மைந்தனைக் கொண்டிருந்த மாயாதேவி அன்றிரவு அழகியதோர் கனவு கண்டாள். ஆறு தந்தங்களுள்ள வெள்ளை யானை ஒன்று வானத்திலிருந்து இழிந்து, மாணிக்கம்போன்ற செவ்வொளியுள்ள தாரகையாக வலப்புறம் வந்து தன் விலாப் பக்கமாக வயிற்றினுள் புகுந்ததாக அக்கனவில் தோன்றிற்று. மறுநாள் காலையில் அவள் மன்னரிடம் தன் கனவைக் கூறி, 'அப்போது நான் அடைந்த மகிழ்ச்சியைப்போல் வாழ்வில் என்றுமே கண்டிலேன் !' என்றாள்.

மன்னர், மாமறையோர் சிலரை அழைத்து, அக்கனவின் கருத்தை விளக்கும்படி வேண்டினார். அவர்கள் அத்தகைய கனவுகளைப்பற்றி விவரித்துக் கூறினார்கள். சூரியன் தன் விலாப்புறம் நுழைவதாகத் தாய் கனவு கண்டால், சக்கரவர்த்தியாகத் திகழக்கூடிய மைந்தனைப் பெறுவாளென்றும், சந்திரன் அவ்வண்ணம் நுழைவதாகக் கண்டால், மைந்தன் மன்னர்களில் முதல்வனாக விளங்குவானென்றும், வெள்ளை யானை புகுவதாகக் கண்டால், உலகையும் மக்களையும் துக்கக் கடலிலிருந்து கரையேற்றும் மாநிலத்தின் தனி நாயகமான புதல்வனை அத்தாய் பெறுவாளென்றும் அவர்கள் கூறியதோடு, அதுமுதல் மாயாதேவியைக் கண்ணுங் கருத்துமாய்க் கவனித்துவர வேண்டுமென்றும் அறிவுறுத்தினார்கள்.

சுத்தோதனர் அடைந்த இன்பத்திற்கு அளவேயில்லை. கனவை விளக்கிய மறையோர்களுக்கு அவர் ஊணும், உடைகளும், பொன்னும், பூண்களும் பரிசளித்தார். நகர மக்களும் இந்த நற்செய்தியிற் களிக்க வேண்டுமென்று மலர்களையும், மற்ற மங்கலப் பொருள்களையும், உண்டிகளையும், இனிய பானங்களையும், உடைகளையும் அவர்களுக்கு அள்ளிக் கொடுத்ததோடு, ஆடுகள், குதிரைகள், வாகனங்களைக்கூடத் தானமாக வழங்கினார்.

மேகங்கள் மின்னற் கொடியைத் தம்மகத்தே வைத்

துப பேணுதல்போல மாயாதேவி தன் குலக்கொழுந்தை வயிற்றில் வைத்துப் பேணி வந்தாள். குழந்தையும், சிறிது சிறிதாக வளராமல், ஆரம்பத்திலேயே முழுப் பருவமும் பெற்றிருந்தது. துன்பமோ துயரமோ இன்றி எந்த நேரமும் மாயா இன்பத்தில் திளைத்திருந்தாள். வாய்மையும் தூய்மையும் அவள் உள்ளத்தை வளஞ் செய்துவந்தன. அவள் நோற்காத நோன்பில்லை, செய்யாத பிரார்த்தனை யில்லை. தீயவை யாவும் அவளிருந்த திசையைவிட்டே அகன்றுவிட்டன. பேயும் பிசாசும் அவள் முகவிலாசத்தைக் காண அஞ்சி ஓடி மறைந்தன. அவள் தொட்ட பொருள்களைத் தொட்ட மக்கள்கூட நோய் நொக்காடுகள் நீங்கிச் சுகம் பெற்றனர்.

## புத்தர் பிறந்தார்!

கருவுற்ற பத்தாவது மாதத்தில் மாயாதேவி தேவதாக நகரில் தன் தந்தையின் அரண்மனைக்குச் செல்ல விரும்பினாள். உடனே அரசர் அவள் விரும்பிய வண்ணம் நிறைவேற்ற ஏற்பாடுகள் செய்தார். கபிலவாஸ்துவிலிருந்து தேவதாக நகர்வரை சாலை முழுதும் செம்மையாக்கப்பட்டது. வழியெங்கும் வாசனை நீர் தெளிக்கப்பெற்று, மலர்கள் தூவப் பெற்றன. புனிதவதி மாயாவுக்கு அரண்மனையிலிருந்த நவரத்தினங்களிழைத்த நகைகள் பலவற்றையும் அணிவித்து, மலர் மாலைகள் சூட்டி அலங்கரித்தனர். அவள் ஏறியிருந்த முத்துச் சிவிகையைச் சுற்றி யானைகளும், குதிரைகளும், படையினரும் சூழ்ந்துவர, முன்னும் பின்னும் இசைகள் முழங்க, நடன மாதர்கள் பலர் தொடர்ந்து வர, நகரமே அவளோடு புறப்பட்டுச் செல்வதுபோலிருந்தது.

வழியிலே, தலைநகரிலிருந்து பன்னிரண்டு மைல்களுக்கப்பால், மன்னர்க்குரிய மாமலர்ச் சோலையான உலும்பினி வனத்தைக் கண்டதும், மாயாதேவி அங்கே தங்கி இளைப்

பாற விரும்பினுள். அவ்வண்ணமே பல்லக்கு அவ்வனத்துள் கொண்டுசெல்லப்பெற்றது. அங்கே கொண்டல்கள் முழங்கவும், குயில்கள் பாடவும், கிளிகள் மழலையரற்றவும், மரங்கள் மலர்மழை பொழியவும், மயில்கள் ஆடவும், கண்ணுக்கும் கருத்துக்கும் இனிய காட்சிகள் நிறைந்திருந்தன. எங்கணும் இசை நிரம்பியிருந்தது. மாயா, பணிப்பெண்கள், நடனமாதர்களுடன், தான் விரும்பிய பக்கமெல்லாம் சென்று காட்சிகளைக் கண்ணுற்றுக் களித்துக் கொண்டிருந்தாள். மயிலின் தோகைபோல் இலைகளடர்ந்துள்ள ஒரு பலா மரத்தைக் கண்டு, அதனடியில் சிறிது நேரம் இளைப்பாற எண்ணி நின்ருள். அம்மரத்தின் கிளைகள் ஏதோ மாய சக்தியால் பணிவதுபோலத் தாழ்ந்து தொங்கின. அவள் அக்கிளைகளில் ஒன்றைப் பற்றிக் கொண்டு உயரே வானத்தை நிமிர்ந்து பார்த்த காட்சி கார் காலத்திலே வானத்திலே தோன்றும் வானவில் போலிருந்தது.

காலையும், மாலையும் தெரியாத அந்தக் கற்பகச் சோலையிலே, நகைகளும், உடைகளும், மலர்களும், இலைகளும், தளிர்களும் பன்னிற ஒளிவீசக் கையில் கொப்புடன் வான வில்போல் வளைந்து நின்ற அன்னையின் நிலையை வயிற்றிலிருந்துகொண்டே உணர்ந்த போதிசத்துவர், தாம் வெளி வருதற்குரிய காலம் வந்துவிட்டதென்று அறிந்தார். அன்னையின் விலாப்புறத்தின் வழியே அறவாழி அந்தணர் உலகிலே அவதரித்தார்.

அந்தக் காலத்தில் வையகமெல்லாம் ஒரு பெருஞ் சோதி சூழ்ந்திருந்தது. முன்போலவே பூமியதிர்ச்சி உண்டாயிற்று. மேகங்களின்றியே இடிகள் முழங்கின. சாரல் துளிகள் பனிபோல் விழுந்துகொண்டிருந்தன. எட்டுத் திசைகளிலிருந்தும் மெல்லிய பூங்காற்று வீசிக்கொண்டிருந்தது.

தேவர்கள் நால்வர் தெய்வக் குழந்தையை மென்மை

யான துணியிலேந்தி, அவரை உலகுக்கு ஈன்றளித்த பெருமாட்டியிடம் காட்டினர். 'மாதரசே! உமது மகிழ்ச்சியே, மகிழ்ச்சி! உமக்கு வீரத் திருமகன் பிறந்துள் ளான்!' என்று கூறினர். போதிசத்துவரின் உடல் பரி சுத்தமாக இருந்தது. அன்னையின் உடலும் யாதொரு தீங்குமின்றித் தூய்மையாயிருந்தது. பின்னல் பகவான் புத்தரே தமக்குச் சொன்னதாக அவருடைய அணுக்கத் தொண்டர் ஆனந்தர் கூறிய வரலாற்றில், 'காசிப்பட்டில் ஓர் இரத்தினத்தை வைத்தால், இரத்தினத்தால் பட்டு அசுத்தமாகாது, பட்டாலும் இரத்தினம் அசுத்தமாகாது, ஏனெனில் அவை யிரண்டுமே தூயவை. இதுபோலவே புத்தர் பிறக்கும்போதே புனிதராகத் தோன்றுகிருர்' என்று குறிப்பிட்டிருக்கிருர்.

போதிசத்துவர் மண்ணகத்திற்கு வந்ததும், 'இதுவே எனது இறுதிப் பிறப்பு; இனிமேல் பிறவியெடுக்க மீண் டும் கருக்குழியில் நான் விழமாட்டேன்! இனி என் வாழ் வின் இலட்சியம் பூர்த்தியாகும், நான் புத்தராவேன்!' என்று கூறிஞர். பிறகு எவர் உதவியுமின்றியே எழுந்து நின்று, ஒவ்வொரு திசையையும் பார்த்து ஏழடி நடந்து சென்ருர். அவர் அடியெடுத்து வைக்கும்போதெல்லாம் அவர் திருவடிகளின் அடியிலே பூமியிலிருந்து ஓவ்வொரு தாமரை மலர் மலர்ந்தது. ஒவ்வொரு திசையையும் நோக்கி அவர், 'நானே உலகின் தலைவன், நானே முதன்மையான வன்! இதுவே எனது இறுதிப் பிறவி! இன்று முதல் என் பிறவிகள் முடிந்தன. நான் புத்தராகிப் பூதலத்தின் துக் கத்தை வேரோடு பறித்தெறியப் போகிறேன்!' என்று கூறிஞர். இவ்வாறு கூறியது குழவியின் மழலைச் சொற் களிலன்று, தேசிகர்களின் தெளிந்த ஞானம் போலிருந்தது. தேவர்களும் மனிதர்களும் உவகை கொண்டு உள்ளம் பூரித்தனர். குருடர்கள் கண்பெற்று உலகில் பரந்துள்ள புத்தொளியைக் கண்டு மகிழ்ந்தனர். ஊமையரும் செவிடர்

களும் போதிமாதவரின் அவதாரம் பற்றிய நன்னிமித்தங் களைப் பற்றி இன்பமாக உரையாடிக்கொண்டிருந்தனர். கூனிக் குறுகியிருந்தவர்கள் கூனல் நிமிர்ந்தனர், நொண்டி கள் உற்சாகம் பெற்று ஓடிச் சாடித் திரிந்தனர். அடிமை களின் விலங்குகள் அற்றுவிழுந்தன. பட்ட மரங்களும் தளிர்த்துப் பசுமை பெற்றன. நரகத்தின் நெருப்பும் நடுங்கி அவிந்தது. மாநிலமெங்கும் மதுரகீதம் நிறைந்தது. குவலயம் முழுதுமே குதூகலமுற்றது.

அன்னையையும் மதலையையும் மஞ்சன நீராட்டுவதற் குப் பக்கத்திலே நீரில்லையே யென்று பணிப் பெண்கள் தயங்கி நின்றனர். உடனே அவர்கள் கண்முன்பு வெந் நீரும் தண்ணீரும் நிறைந்த இரண்டு அழகிய தடாகங்கள் தோன்றின. அவற்றின் நீரால் மாயாதேவியை நீராட் டினர். அருகே வேறோரிடத்தில் திடீரென்று இரண்டு ஓடைகள் தோன்றின. அவற்றில், ஒன்றில் தண்ணீரும் மற்றதில் வெந்நீரும் ஓடிக்கொண்டிருந்தது. அவைகளில் போதிசத்துவரைப் புனித நீராட்டினர். தானே ஒளிவீசிக் கொண்டிருந்த குழந்தையின் மீது கதிரொளிபடாமல் தேவர்கள் தங்கப் பிடியுள்ள வெண்கொற்றக் குடை பிடித்து நின்றனர். சிலர் சாமரை கொண்டு விசிறினர். தேவர்கள் மலர்மாரி பொழிந்து கொண்டே யிருந்தனர்.

மன்னர்க்குப்பின் மாநிலமாள ஒப்பற்ற ஒரு மைந்தன் பிறந்தான் என்ற செய்தியை உலும்பினி வனத்திலே கேட் டறிந்த மதிமந்திரி **மகாநாமர்** விரைந்து சென்று மகாராஜா விடம் சோபனச் செய்தியைத் தெரிவித்தார். மட்டற்ற மகிழ்ச்சியால், மன்னர் அவருக்கு என்ன பரிசளிக்கலாம் என்று தெரியாமல் தயங்கினர். மகாநாமர், 'எங்கள் இள வரசருக்கு இடைவிடாமல் தொண்டு செய்யும் பாக்கி யத்தை அளிப்பதே எங்களுக்கேற்ற பரிசு!' என்றார். இருவரும் உடனே பரிவாரங்களுடன் உலும்பினி நோக்கிப் புறப்பட்டுச் சென்றனர்.

வழியில் சுத்தோதனர் தம் அமைச்சரை நோக்கி, 'இந்தக் குழந்தை பிறந்ததில் ஏற்பட்டுள்ள அற்புதங்களை யெல்லாம் கவனிக்கும்போது, இன்பமடைவதா, துக்கப்படுவதா என்று என் உள்ளம் துளங்குகின்றது!' என்று கூறினார். உடனே மகாநாமர் அவருக்கு வேண்டிய பல ஆறுதல் மொழிகள் கூறினார். முன்னால் பல பெரியார்கள் தோன்றும்போது பல அற்புத தருமங்கள் ஏற்பட்டதை எடுத்துக் காட்டி மன்னரின் கவலையை மாற்றினார். உலும்பினி வந்ததும், அவர்கள் அதனுள்ளே சென்று ஒருபுறமாக ஒதுங்கி நின்று, மன்னர் குழந்தையைப் பார்க்க வந்திருப்பதாக மகாராணிக்குச் செய்தி யனுப்பினர். மகாராணியும் மன்னர் அப்போதே வரலாமென்று சொல்லி யனுப்பினாள்.

மன்னரைக் கண்டதும் ஒரு பணிப்பெண், பட்டுத் துகிலில் பாலனை எடுத்துக்கொண்டு, அவர் முன்பு சென்றாள்; 'இளவரசர் தம் தந்தையை வணங்குகிறார்!' என்று கூறிப் புன்னகை பூத்து அவரிடம் பொற்பதுமை போன்ற குழந்தையைக் காட்டினாள். சுத்தோதனர், 'முதலில் மந்திரி, மறையோர்களிடம் காட்டு; அதன் பிறகு குழந்தை என்னைப் பார்க்கட்டும்!' என்றார். முதன் மந்திரியும், மற்ற மறையோர்களும் மன்னரையும் மைந்தனையும் வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினார்கள். 'புனிதமான சக்கரவர்த்தி அவதரித்திருக்கிறார்! சாக்கியர் குலமே தழைத்துவிட்டது!' என்று கூறி மகிழ்ந்தார்கள். மன்னரும் போதிசத்துவரின் பேரழகையும் முகவிலாசத்தையும் கண்டு பெருமகிழ்ச்சியுற்றார். குழந்தையின் குரல் இமயமலைச் சாரலிலுள்ள கருவிகப் பறவைகளின் இசைபோல் இனிமையாயும் உள்ளத்தை உருக்குவதாயும் இருந்தது. மாயாதேவி மன்னரிடம் நெருங்கி வந்து, 'மகாராஜா! சக்கரவர்த்தியாக வரக்கூடிய இலக்கணங்கள் யாவை? தெரிந்தால், நானும் மற்றவர்களைப்போல் மகிழ்ச்சியடைவேன்!' என்று கேட்டாள்.

சுத்தோதனர் கூடவந்திருந்த வேதியர்களைத் திரும்பிப் பார்த்து, அந்த இலக்கணங்களை எடுத்துக் கூறும்படி வேண்டிக் கொண்டார். அவ்வாறே அந்தணர்கள் விளக்கிக் கூறினார்கள்.

## மக்களின் மகிழ்ச்சி

பல அற்புதங்களின் நடுவே பிறந்த தம் அற்புதக் குழந்தையை நகருக்கு அழைத்துச் செல்ல எந்த வாகனத்தை உபயோகிக்கலாம் என்று சுத்தோதனர் ஆலோசனை செய்தார். அவருடைய ஆலோசனை முடியுமுன்னரே, தெய்வத் தச்சன் விசுவகர்மன் தெய்விகமான பல்லக்கு ஒன்றைத் தயாரித்து உலும்பினித் தோட்டத்திற்கு அனுப்பி வைத்தான். மானிடர் அதுவரை அறிந்திருந்த கலைகள் எவற்றினாலும் அத்தகைய சிவிகையை அமைத்திருக்கமுடியாது என்று கருதும்படி, அது அவ்வளவு அழகாயிருந்தது.

தலைநகருக்குத் திரும்புவதற்குரிய ஏற்பாடுகள் விரைவாக நடந்தேறின. யானைகள், குதிரைகள், படைகளெல்லாம் திரண்டு சென்றன. மக்கள் பலரும் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்துகொண்டு சென்றனர். மண்ணகத்தின் மகிழ்ச்சியிலே பங்கு கொள்ளத் தேவர்களும் உருமாறித் திரள் திரளாக வந்து கலந்து கொண்டனர். திசை காவலரான நான்கு தேவர்கள், வேற்றுருக் கொண்டு போகிகளாக வந்து, போதிசத்துவரின் பல்லக்கைத் தூக்கிச் சென்றனர்.

வழியிலே, கபிலவாஸ்துவுக்கு அருகில் ஒரு தேவாலயம் இருந்தது. போதிசத்துவரை அங்கு அழைத்துச் சென்றது பற்றி ஒரு கதையுண்டு. தொன்று தொட்டே சாக்கிய மரபினர் அங்குள்ள சிலையை வணங்கி வழிபடுதல் வழக்கம். சுத்தோதனரும் தம் அருமைக் குழந்தை அவ்வாலயத்துள்ள தெய்வத்தை வணங்குதல் நலமென்று கருதி,

குழந்தையையும் பரிவாரங்களையும் உள்ளே அழைத்துச் சென்றார். குழந்தையை ஒரு பணிப்பெண் கையிலே வைத்துக் கொண்டு சிலையருகே சென்றாள். அந்த நேரத்தில் அபயன் என்னும் தேவனொருவன், அந்தச் சிலை போதிசத்துவரின் வணக்கத்திற்குரியதன்று என்றும், அதுவே அவரை வணங்குதற்குரியது என்றும் கருதி, பீடத்திலிருந்து சிலை இறங்கி வந்து போதிசத்துவர் முன்பு தரையில் தலை வைத்து வணங்கும்படி செய்தான். அப்போது அவன் பணிப் பெண்ணைப் பார்த்து, 'அம்மா! உன் கையிலிருப்பவர் உலகங்களெல்லாம் உவந்து வணங்குதற்குரியவர்! அவர் வணங்குதற்குரியவர் எவருமில்லை!' என்று கூறினன். இக்காட்சிகளைப் பார்த்தவர் யாவரும் பரவசமுற்றனர்.

தங்கள் இளவரசர் தலைநகருக்கு வருகிறார் என்றதைக் கேட்டதும், கபிலவாஸ்துவின் மக்கள் அனைவரும் நகரை அலங்கரிக்க ஆரம்பித்தனர். வீதிகளை விளக்கி, வாசல்களில் குலை வாழைகள் கட்டி, எங்கும் தோரணங்கள் நட்டு, மலர்ப் பந்தல்கள் அமைத்து, நகரம் முழுதும் நறுமணங் கமழச் செய்தனர். தெருக்களிலே பார்த்த இடமெல்லாம் பல வேடிக்கைகள் நடந்து வந்தன. புலிவேடம், கரடிவேடம் புனைந்து ஆடுவோரும், இசையும் முழவும் முழங்க, கால்களில் சலங்கைகள் கலீர் கலீரென்று ஒலிக்க, நாட்டியமாடும் மாதர்களும், உடல் வலிமையால் மல்யுத்தம் முதலிய பிரமிக்கத்தக்க காட்சிகள் காட்டுவோரும், மங்கல வாத்தியங்கள் பல வாசிப்போரும் ஆங்காங்கே மக்களை மகிழ்வித்து வந்தனர். எங்கணும் திருவிழாவாகவே யிருந்தது. இத்தனை மக்களும் அன்றுவரை எங்கேயிருந்தனரென்று வியக்கும்படி, ஜனங்கள் கூட்டங்கூட்டமாகக் கூடிக் கடலலைகள்போல் ஒலி செய்துகொண்டிருந்தனர்.

மன்னரின் உறவினர்களும், நகரின் செல்வர்களும், சாக்கிய குலதிலகங்களான வீரர்கள் யாவரும் ஒருவருக்

கொருவர் முந்திக்கொண்டு இளவரசரை ஆவலோடு வர வேற்றனர். அரண்மனை முழுதும் கோலாகலமாக விளங்கி யது. சுத்தோதன மன்னர் அந்தணர் பலரையும் வர வழைத்து, தங்கக் கிண்ணங்களில் உணவளித்து, விலை யுயர்ந்த ஆடைகளையும் வழங்கினர். இளவரசைக் கண்டு வணங்கப் பல இடங்களிலிருந்து வந்திருந்த வணிகர்கள் தங்கத் தாலங்களிலே சந்தனம், அகில், கஸ்தூரி, கற்பூரம் முதலிய கந்தப் பொருள்களையும், ஆவி விரியும் பால் நுரை போன்ற பட்டுக்கள், துணிகள், சல்லாக்கள், சால்வைகள், கம்பளங்களையும், கனக மணி மாலைகள், முத்துச் சரங்கள் முதலிய ஆபரணங்களையும் ஏந்தி வந்து, மன்னரை வாழ்த் தித் திறையாகச் செலுத்தினர்கள். மாடங்கள் கூடங்க ளெல்லாம் மங்கல கீதங்கள் முழங்கிக்கொண்டிருந்தன.

## அசித முனியின் ஆசிகள்

ஒப்புயர்வில்லாத உலகச்சோதியான குழந்தை மாநிலத் தைத் தேடிவந்து மன்னர் மாளிகையிலே வளர்ந்துவந்த செய்தியை யறிந்த **அசித முனிவர்** என்பார், அதைக் காண் பதற்காக மிக விரைவாக வந்து சேர்ந்தார். அவர் தவத்தா லுயர்ந்த தபோதனராதலால், மன்னர் அவரைக் கண்டதும் எழுந்து வணங்கி, வரவேற்று உபசரித்தார். முனிபுங்கவர் ஓர் ஆசனத்தில் அமர்ந்தபின், புதிதாய்ப் பிறந்த புனிதக் குழந்தையை அவர் பாதத்தடியில் கொணர்ந்து வைக்கும் படி அரசர் ஆணையிட்டார். அருந்தவம் புரியும் அசிதர் வாயால் செல்வச் சிறுவனை வாழ்த்திட வேண்டுமென்று அவர் விரும்பினர். தாமரைச் செல்வி தங்கப் பதுமையை ஏந்தி வருதல்போல், மாயாதேவி மைந்தனைப் பட்டுத் துகிலில் படுக்கவைத்து எடுத்து வந்தாள். கறுத்த முனி வரைக் கண்டதும், தேவி குழந்தையின் முகத்தை அவர் பக்கமாகத் திருப்பி, 'வேதிய ரிஷியை வணங்கு, என் செல்வமே!' என்று கூறினள். குழந்தை முகத்தை அவள்

பக்கமாகவே திருப்பிக்கொண்டு, கால்களை முனிவர் பக்க மாக நீட்டிற்று. அன்னை மூன்று முறை முயன்றும், அசித ருக்கு நேராக அதன் திருவடிகளே தென்பட்டன. இந்த வேடிக்கையைக் கண்டு முற்றுந்தெரிந்த முனிவர் தமக் குள்ளே நகைத்துக்கொண்டு, ஆசனம் விட்டெழுந்து, தம் அங்கங்கள் தரையில் படும்படி வீழ்ந்து குழவியுருக் கொண்ட குருநாதரை வணங்கினர்.

'மதலாய் நின்னடி மலரிணை தொழுதேன் !
அவனே நீயாம், ஐய மதற்கிலை!
'உண்மை ஒளியால் உள்ளிருள் போக்கி,
நன்மை விளைக்கும் ஞாயிறு நீயே !'

என்று பக்தியால் பலபடக்கூறி வழுத்தினர். கோடி யுகம் தவம் செய்தாலும் காணமுடியாத நற்றவமூர்த்தி அவதரித் திருக்கையில்,தாம்அவரோடிருந்து அவர் திருவாயால் அறம் கூறுவதைக் கேட்பதற்கில்லாமல் தம் ஆயுள் முடிந்து விடுமே என்றெண்ணி அவர் வருந்தினர். பிணி, பசி, மூப்பு, துன்பமாகிய வாழ்வைவிட்டு, விரைவிலே மர ணத்தை வரவேற்க வேண்டுமென்று ஆசைகொண்டிருந்த அம் மகரிஷி, மாயாதேவியின் அருமைப் புதல்வர் வளர்ந்து பெரியவராகும் வரை வாழ்வதற்கில்லையே யென்று கருதிய தும், அவர் கண்களிலிருந்து முத்து முத்தாகக் கண்ணீர் சிந்தியது. இக்காட்சிகளை யெல்லாம் கண்ட மன்னர் மருண் டார்; மாயாதேவி மருகலானாள். ஏதேனும் அபசாரம் ஏற்பட்டுவிட்டதோ என்று இருவரும் கலங்கினர்.

முனிவர் குழந்தையை அன்போடு கைகளில் வாங்கித் தம் ஆசனத்தமர்ந்து, அதை மடியில் வைத்துக்கொண்டார். மாயா அவரை நோக்கி, 'அதன் முடி தங்கள் திருவடிகளில் படும்படி வைத்துக்கொள்ளுங்கள் !' என்று வேண்டினாள். அசிதர், 'அம்மணி ! இம்முடி எவரையும் வணங்காத் திருமுடி ! நான் மட்டுமல்ல—தேவர்களும், யாவர்களுமே

வணங்கிப் போற்றவேண்டிய குழந்தை யல்லவா இது!' என்று கூறினர்.

சுத்தோதனர், 'பெருந்தவ முனிவ! என் மதலையைக் கண்டதும் தாங்கள் கண்ணீர் பெருக்கி வருந்தியதேன்?' என்று வினவினர்.

அசிதர் உள்ளங் களிப்புற்றுக் கூறலானர் :

'அரசே, பூரண சந்திரனைப்போல் நீ மகிழ்ந்து மலர்ச்சி யடைய வேண்டும்! ஏனெனில், உத்தமமான ஒப்பற்ற புதல்வனை நீ பெற்றிருக்கிறாய்.

'நான் பிரமனைக்கூட வணங்குவதில்லை, ஆனல், இந்தக் குழவியை இறைஞ்சி ஏத்துகிறேன்! ஆலயந்தோறும் அமர்ந்துள்ள தெய்வங்கள் யாவும் தத்தம் பீடங்களை விட்டிறங்கி வந்து இவனை வணங்கும்.

'எனக்கு வயதாகிவிட்டது. அந்த நினைப்பு உண்டானதும் கண்ணீரை என்னல் அடக்க முடியவில்லை; ஏனெனில், என் முடிவு நெருங்கிவிட்டது. ஆனல், உன் மகன் இத்தரணியை யெல்லாம் ஆளப்போகிறன்; ஜீவ ராசிகள் அனைத்திற்காகவுமே இவன் அவதரித்துள்ளான்.

'கப்பலுடைந்து கடலுள் தத்தளிப்பவர்களுக்குத் தாரகமாகும் கரைபோல, இவனுடைய பரிசுத்தமான போதனை விளங்கும். இவனது தருமம் தண்மை நிறைந்த பொய்கையாயிருக்கும்; ஆசைத் தீயால் வெந்தவர்களும் நொந்தவர்களும் அப்பொய்கை நீரை அள்ளியள்ளிப் பருகலாம்.

'காமக் குரோதங்களாகிய நெருப்பின் மேலே இவனுடைய கருணையாகிய கார்முகில் கவிந்துகொண்டு, தருமமாகிய மழைநீரால் அத்தீயை அணைத்துவிடும்.

'ஏக்கமுற்றுத் தவிப்பவர்களுக்கு இவனே புகலிடம்; தாமே பின்னிக்கொண்ட அறியாமை, பாவம் என்னும் வலைக்கண்ணிகளிலிருந்து சகல ஜீவன்களுக்கும் கடைத்தேற்றமளிக்கும் வள்ளல் இவன்!

'தருமராஜா வந்துவிட்டான்! ஏழைகளின் பங்காளன் வந்துவிட்டான்! துயரப்படுவோர், திக்கற்றவர் யாவரையும் காப்பாற்றுவோன் வந்துவிட்டான்!

'அரசே! இந்தக் குழந்தை அரசவமிசத்திலே தோன்றிய தெய்வத் தாமரை மலர்! ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு ஒரு முறை உலகில் மலரும் ஒண்மலரான உதம்பர மலர் இது! இந்த ஞாலமெல்லாம் இதன் ஞானத்தால் நறுமணங் கமழும்!'

மாமுனி கூறிய மாற்றங்களால் மன்னர் மகிழ்ச்சியும் துயரமுங் கொண்டார். மைந்தனின் பெருமைகளைக் கேட்கும்போது அவர் உவகையடைந்தார். ஆனால், அவனியெங்கும் அறத்தின் அரசனுய்ப் போதனை செய்வான் என்றதைக் கேட்டதும் மைந்தன் நாட்டைத் துறந்துவிடுவானோ என்று வருந்தினர். எனினும், ஒருவாறு மனத்தைத் தேற்றிக் கொண்டு, மணிமாலைகள் முதலிய மதிப்புயர்ந்த அணிகள் பலவற்றை முனிவருக்குக் காணிக்கையாக வைத்து வணங்கினர். முனிவர் அந்த ஆபரணங்களை அப்படியே குழந்தைக்குக் காணிக்கையாக வைத்து, 'மகுடபதி! நீ என் ஏற்றங் கருதி அளித்த பொருள்கள், என்னினும் ஏற்றமுள்ள இடத்திலே சேர்ந்துவிட்டன!' என்று சொல்லிவிட்டு, அரிதில் விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

குழந்தைக்குச் 'சர்வார்த்த சித்தன்' (விரும்பியதையெல்லாம் பெற்றவன்) என்று பெயர் வைக்கப் பெற்றது. பிறந்த அன்றே பெறவேண்டிய திருவனைத்தும் பெற்றிருந்ததால், சுத்தோதனர் இப்பெயரையே விரும்பிச் சூட்டினர். ஆயினும் இந்தப் பெயர் சுருக்கமாகச் 'சித்தார்த்தன்' என்றே கூறப்பட்டு வந்தது. சரித்திரத்திலும் சித்தார்த்தன் என்பதே நிலைத்துவிட்டது.

வேதியர் பலர் வந்து ஜாதகம் கணித்துச் சோதிடம் பார்த்துச் சொன்னார்கள். சித்தார்த்தன் முப்பத்திரண்டு சாமுத்திரிகா லட்சணங்களையும் ஒருங்கே பெற்றிருப்ப

தால், அவன் பருவமடைந்து பெரியவனுகும்போது குடும்பத்தோடு அரண்மனையில் தங்கியிருந்தால், அகிலத்தை ஆளும் சக்கரவர்த்தியாய்த் திகழ்வானென்றும், உலக இன்பங்களை உதறித்தள்ளி வெளியேறிவிட்டால், அவன் பூரணஞானம் பெற்று உலக குருவாக விளங்குவானென்றும், இந்த இரண்டில் ஒன்று நிச்சயம் நடைபெறுமென்றும் அவர்கள் மகாராஜாவுக்கு விளக்கிச் சொன்னுர்கள். அவர்கள் இரண்டாவதாகக் கூறிய பலனை எண்ணுந்தோறும் மன்னர் பெருந்துயரடைந்தார். ஆயினும், மைந்தனின் மதிமுகத்தைப் பார்த்துப் பார்த்து மனத்துயரை மறந்து வந்தார்.

## மாயாதேவியின் மறைவு

கருவுயிர்த்த ஏழாம் நாளில் அன்னை மாயாதேவி புன்னகையோடு அருந்துயில் கொண்டவள் மீண்டும் கண்ணை விழிக்கவேயில்லை. உறங்கிய வண்ணமே, யாதொரு நோயும் நொம்பலமுமின்றி, அவள் துறக்கம்சென்றடைந்து விட்டாள். உலகிலே வாழை, நண்டு, சிப்பி முதலியவை சூல் கொண்டு கருவுயிர்த்தபின் மரணமடைதல் போலவே, புத்தர்களைப் பெறும் அன்னையரும் பின்னுல் வாழ்வது வழக்கமில்லை என்பர். மேலும், அறிவுக்களஞ்சியமான புத்தரைப் பெற்ற தாய் பின்னுல் வேறு சூல் கொள்வதுமில்லை. மாயாதேவி கருவுற்றிருந்த பத்துத் திங்களிலும் எல்லையற்ற இன்பப்பேற்றை அடைந்திருந்தாள். குழந்தை பிறந்த பின்பு அவ்வின்பம் போய்விட்டது. அத்துடன் போதிசத்துவர் பூமியில் அவதரித்ததிலிருந்து அவள் கண்ட அற்புதங்களும் அதிசயங்களும் அவளை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்தியிருந்தன. ஆனுல், பேரழகும், பெருஞ்செல்வங்களும் பெற்றிருந்த அந்த வீரத்திருமகன், அரசுரிமை துறந்து ஆண்டியாகித் துறவுக் கோலத்தில் துலங்குவானென்று சோதிடரும் மற்றோரும் கூறுவதைக் கேட்டு, அத்தகைய காட்சி நேரும்போது அவள் எப்படிச் சகித்துக்

கொண்டிருக்க முடியும்! இத்தகைய காரணங்களால், அவள் தன் சகோதரி கௌதமியிடம், ‘ புத்தரைப் பெற்ற மாதா பின்னால் வேறு குழந்தையை ஒருகாலும் பெறமாட்டாள். நான் விரைவில் இவ்வுலகையும், என் கணவராகிய மன்னரையும், என் குழந்தை சித்தார்த்தனையும் விட்டுச் செல்வேன். நான் போன பின்பு நீயே குழந்தையின் தாயாயிருந்து பேணி வளர்த்து வரவேண்டும்!’ என்று கூறியிருந்தாள். கௌதமி கதறிக் கண்ணீர் வடித்துக்கொண்டே ‘சரி’யென்று உறுதி கூறினாள்.

சாக்கியரிற் பல பெரியோரும் அவளே சித்தார்த்தனுக்குத் தாயாயிருக்க விரும்பினர். அவ்வாறே கௌதமி, சிற்றன்னையாயில்லாமல், பெற்றவள் போன்ற அன்புடனே குழந்தையை ஏற்றுக்கொண்டாள். அதைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றி வந்தாள். குழந்தையும் வளர்பிறை மதியம் வளர்வது போல எழிலுடன் வளர்ந்து வந்தது.

குழந்தையின் நலனை எண்ணுந்தோறும் சுத்தோதனரின் மனம் மேலும் மேலும் தருமப் பாதையிலேயே சென்று கொண்டிருந்தது. இராஜ்யத்திலுள்ள கைதிகள் யாவரையும் அவர் விடுதலை செய்தார். கொலைக் குற்றத்திற்காக மரண தண்டனை பெற்றவர்களையும் விடுவித்து, மேற்கொண்டு அறவழியில் நடக்கும்படி ஆதரவோடு உபதேசஞ் செய்தனுப்பினர். தமது தருமங்கள் யாவும் குழந்தையின் சேமநிதியென்று அவர் கருதினர். தெய்வங்களுக்கெல்லாம் அவர் பிரார்த்தனை செய்தார். ஆலயங்களனைத்திலும் அர்ச்சனைகள் செய்துவர ஏற்பாடு செய்தார். நூறாயிரம் அந்தணர்களுக்கு உயர்ந்த கறவைப் பசுக்களைத் தானம் செய்தாரென்றும் கதைகள் கூறுகின்றன.

போதிசத்துவர் பிறந்த புனித பூமியாதலால் சாக்கிய நாட்டிலே பஞ்சமும் வறுமையும் நீங்கிச் செல்வம் கொழித்துக்கொண்டிருந்தது. மக்கள் அச்சமின்றி இன்பமாக வாழ்ந்து வந்தனர். எங்கும் அமைதி நிலவியிருந்தது. அங்

நாட்டிலே புலன்களின் இன்பத்திற்காகக் காதலை நாடுவாரில்லை யென்றும், ஆசைகளின் காரணமாகப் பொருள் சேர்ப்பார் எவருமில்லை யென்றும், செல்வஞ் சேர்ப்பதற்காகச் சமயச் சடங்குகளை மேற்கொள்வோர் எவருமில்லை யென்றும், மதத்தின் பெயரால் உயிர்ப்பிராணிகளுக்கு ஊறு செய்வார் எவருமில்லை யென்றும் புகழ்பெற்ற 'புத்தசரிதை'க் காவியத்தின் ஆசிரியரான **அசுவகோஷர்** வருணித்துள்ளார்.

புத்தர் பெருமான் தமது அவதாரத்தைப் பற்றிப் பிற்காலத்தில் தம் சீடர்களுக்கு உரைத்த சில வாக்கியங்களைப் பார்த்தால், உலகை உய்விக்கவே அவர் தோன்றினுரென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும் :

> 'ஓ பிக்குகளே! மாநில மக்களிடம் கொண்ட அன்பினுலே, அவர்களுடைய இன்பத்திற்காகவும், நலனுக்காகவும், தேவர்கள் மனிதர்களின் இன்பத்திற்காகவும், நலனுக்காகவும், ஒப்பற்ற ஒருவர் தோன்றுகிருர்.
>
> 'இந்த ஒப்பற்ற ஒருவர் யார்? இவரே பூரண ஞானமடைந்து உயர்நிலை அடைந்துள்ள ததாகதர் ஆவார்.
>
> 'அறிவு ஆற்றல்களினுலே ஒப்பற்ற ஒருவர் இவ்வுலகிலே அவதரித்திருக்கிருர். இந்த ஒப்பற்ற ஒருவர் யார்? இவரே பூரண ஞானமடைந்து உயர்நிலை அடைந்துள்ள ததாகதர் ஆவார்.'
>
> —அங்குத்தர நிகாயம்.

இரண்டாம் இயல்

# இளமைப் பருவம்

'இன்பம்சார் பெரும்பாரம் ஈரைந்தும் உடனிறைந்து
நன்கன நிலைபெற்ற நாதன்.'

குழந்தையில்லையே யென்று வருந்திக் கொண்டிருந்த மன்னர் சுத்தோதனர், பெற்ற மதலையைப் பேணி வளர்ப்பதில் அதிகக் கவலை கொண்டார். சோதிட நூல் வல்லார் குழந்தையின் சாமுத்திரிகா லட்சணங்கள் அனைத்தையும் கண்டு, சாதகம் கணித்துப் பரிசீலனை செய்து, பலன்களை எடுத்துக் கூறினர். 'மன்னரின் மைந்தன் மாநிலச் சக்கரவர்த்தியாவான், அல்லது வையகத்து உயிர்களுக்கெல்லாம் உய்யும் வழிகாட்டும் உத்தம புத்தனுவான்' என்று அவர்கள் உறுதி சொல்லினர். 'உலக வாழ்வில் பற்றுக் கொண்டால்; அவன் அரசர்க்கரசாக அரியாசனத்தில் அமர்ந்திருப்பான் ; சமய வாழ்வில் பற்றுக்கொண்டால், வாழ்வு துறந்து போதியடைந்த புத்தனுவான்' என்பதையும் விளக்கினர். இதனுலேயே மன்னரின் மனம் ஒரு நிலையில் நில்லாது ஏக்கமுற்று வந்தது. மைந்தன் ஒரு காலத்திலும் துறவு என்ற பெயரைக்கூடச் சிந்திக்காத முறையில் அவனைப் பாதுகாத்து வருவது எங்ஙனம் என்பதே அவர் கவலையா யிருந்தது. அரசரின் கவலையை மாற்ற அவருடைய சகோதரர்களும், மற்றச் சாக்கிய குலத் தலைவர்களும் இயன்ற உதவியெல்லாம் அளித்து வந்தனர்.

சாக்கியத் தலைவர்கள் ஏராளமான பரிசுகள் கொணர்ந்து தங்கள் எதிர்காலப் பார்த்திபனுக்குக் காணிக்கையாகச் செலுத்தினர். பொன்னும் மணிகளும்

புனைந்து செய்த நகைகள், தந்தத்திலும் தங்கத்திலும் செய்த செப்புக்கள், தேர்கள், யானைகள், மான்கள், குதிரைகள் முதலிய விளையாட்டுப் பொருள்கள் இளவரசற்காக வந்து குவிந்துகொண்டே யிருந்தன. முத்துச் சரங்களும் நவரத்தின மாலைகளும் கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் விளங்கியதைக் கண்ட அன்னை கௌதமி, அவைகளிற் சிலவற்றைச் சித்தார்த்தனுக்கு அணிவித்து இன்புற வேண்டுமென்று ஆசை கொண்டாள். அவ்வாறே மணி மாலைகளை அவன் கழுத்தில் அணிவித்துக் கைகளில் காப்பு முதலிய அணிகளையும் பூட்டினாள். பூணெல்லாம் பூண்ட புண்ணிய மூர்த்தியை அன்னை ஆவலோடு ஏறிட்டுப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! எவ்வளவோ ஒளிவீசிக் கொண்டிருந்த மணிகளும் இழைகளும், சித்தார்த்தனின் உடலிற் சேர்ந்தவுடன், ஒளிமங்கிவிட்டன. அவன் உடலிலிருந்து விரிந்து பரவிய பேரொளியில் அணிகளின் ஒளி மறைந்து விட்டது! அந்த நேரத்தில் விமலை யென்ற தேவதை அக்காட்சியைக் கண்டு களிப்புற்று, 'உலகமெல்லாம் ஒளி நிறைந்த சாம்பூநதப் பொன்னால் இயன்றதெனினும், புத்தரின் ஒளியில் ஓர் இரேகையின் முன் அது ஒளியிழந்து நிற்கும்! தானே தனிச் சுடராக விளங்கும் புத்தனுக்குப் பொன்னும் மணியும் எதற்கு?' என்ற பொருள்படப் பாடிக்கொண்டே, பிறர் கண்ணுக்குப் புலனாகாதபடி வானவீதியிலே பறந்து சென்றது. உடனே குழந்தைமீது மலர்மழை பொழிந்தது. கௌதமி, உண்மையிலேயே தன் செல்வனுக்கு அணிகள் அவசியமில்லை யென்று உணர்ந்து, அவைகளைக் கழற்றி விட்டாள். அவனைப் பார்க்குந்தோறும், அவனைப்பற்றிச் சிந்திக்குந்தோறும், அவள் எல்லையற்ற இன்பமடைந்துவந்தாள்.

## நடுகை விழா

சித்தார்த்தன் பிறந்து ஐந்து மாதங்கள் சென்றபின்பு, கபிலவாஸ்துவில் நடுகை விழாக் கொண்டாட ஏற்பாடா

யிற்று. பண்டைப் பழங்காலத்திலிருந்தே ஒவ்வோர் ஆண்டிலும் விளைநிலங்களில் முதன் முதல் ஏர்கள் பூட்டி உழுவதை விவசாயிகள் பெருந் திருவிழாவாகக் கொண்டாடுதல் இந்தியா, சீனம் முதலிய நாடுகளிலெல்லாம் வழக்கமாயிருந்து வருகிறது. இவ்விழாவிலே பெருஞ் செல்வம் படைத்த பிரபுக்களும், அரசர்களும் கலந்து கொள்வதும் வழக்கம்.

கபிலவாஸ்துவில் நடைபெற்ற விழாவுக்கு அரசர் குழந்தை சித்தார்த்தனையும் தம்முடன் அழைத்துச் சென்றிருந்தார். வயல்களின் அருகே குழந்தையை ஓர் அழகிய கட்டிலில் படுக்கவைத்து, உயரே பலவர்ணப் பட்டுத்துணிகளால் குடைகள் அமைத்து, நாற்புறத்திலும் திரைகளிட்டு, நூறு தாதிகள் அங்கு நின்று இளவரசைக் கவனித்து வரவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

அரசர் அன்று அலங்காரமான உடைகள் அணிந்திருந்தார். ஆயிரம் பிரபுக்கள் அவரைச் சூழ்ந்து நின்றனர். ஒரே சமயத்தில் உழுவதற்கு ஆயிரம் கலப்பைகள் தயாராக வைக்கப் பெற்றிருந்தன. அவைகளில் நூற்றெட்டுக் கலப்பைகள் வெள்ளியிற் செய்தவை ; அரசர்க்கு உரியது மட்டும் தங்கத்திற் செய்தது. அந்த உயர்ந்த ஏர்களை இழுக்கும் எருதுகளும் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. ஏராளமான பொதுமக்களும் அந்தக் கோலாகலத்தைக் கண்டு களிப்பதற்காகக் குழுமி நின்றனர்.

முதலில் மன்னர் தனது பொன்ஏரைப் பிடித்துக் கிழக்கிலிருந்து மேற்கு முகமாக ஒரு முறை உழுதார். உடனே நூற்றெட்டுப் பிரபுக்கள் வெள்ளி ஏர்களால் மூன்று முறை உழுதனர். உழவர்கள் யாவரும் மற்ற ஏர்கள் அனைத்தையும் பற்றி உழ ஆரம்பித்தனர். பெரிய ஆரவாரத்திடையே, மன்னர் தலைமையில் ஆயிரம் ஏர்கள் ஏக காலத்தில் உழுதமை கண்கொள்ளாக் காட்சியாக இருந்ததால், தூரத்தில் இருந்தவர்களும் அந்த நேரத்தில்

கூட்டத்தோடு புலங்களின் அருகே வந்து கலந்து நின்ற னர். சித்தார்த்தனைக் கவனித்துக் கொண்டிருந்த தாதி யர் அனைவரும் அக்காட்சியைக் காணச் சென்று, அங்கேயே மெய்ம்மறந்து நின்று கொண்டிருந்தனர்.

சிறிது நேரத்திற்குப் பின்பு அவர்கள் திரும்பிச் சென்று பார்க்கையில், சித்தார்த்தன் கட்டிலின் அருகே, தரைக்குச் சற்று மேலே, காற்றில் அமர்ந்து கொண்டிருந் தான். தரையிலே யாதொரு பற்றுமின்றி அவன் அந்த- ரத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டு அவர்கள் பேராச்சரியம் அடைந்து, மன்னரிடம் ஓடிச்சென்றனர். 'இங்கே ஏர் உழும் காட்சி இருக்கட்டும்; அங்கே இளவரசர் காட்சியின் விந்தையை வந்து பாருங்கள்!' என்று கூவி அழைத்தனர்.

மன்னரும் விரைந்துசென்று பார்த்தார். குழந்தை யின் பேராற்றலைக் கண்டு பிரமித்து, ஆனந்தக் கண்ணீர் பெருக்கி, அவர் அதன் பாதங்களைப் பற்றிக்கொண்டு வணங்கினார். அப்போது காலைச் சூரியன் கீழ்த்திசையி லில்லாமல், வானத்து உச்சியில் விளங்கிக் கொண்டிருந் தான். சித்தார்த்தன் மீது வெய்யில் படாமல் இருப்பதற் காகக் குழந்தை அமர்ந்திருந்த மரத்திற்கு நேர் உயரே சூரியன் நிலைத்து நின்றான். சுத்தோதனர் தம் செல்வனைப் பார்த்து, 'ஐய! உன் ஆற்றலை யெல்லாம் என்னிடம் ஏன் காட்டுகிறாய்? இதையெல்லாம் பார்த்து ஆனந்திக்கவேண்டி யவள் உன் அருமைத் தாய்! அவள் இப்போது இல்லையே!' என்று கூறி வருந்தினார்.

இவ்வாறு சித்தார்த்தனின் இளமைப் பருவத்தைப் பற்றி எத்தனையோ கதைகள் இருக்கின்றன. ஆயினும், ஆதாரமுள்ள சரித்திரக் குறிப்புக்கள் இல்லை; பெரும் பாலும் நாமாகக் கற்பனை செய்தே கண்டு கொள்ள வேண்டியிருக்கிறது. நாட்டின் செழிப்பும், அரண்மனை, ஆறு, விளைநிலங்கள், நந்தவனங்கள் யாவும் இளமையி லேயே அவன் உள்ளத்தைக் கவர்ந்திருக்கலாம். அரசரின்

வீரச் செயல்கள், பராக்கிரமம் மிக்க சாக்கியர்களின் சாகஸங்கள், பாரத நாட்டின் பண்டைய மகரிஷிகளின் மாண்புகள், வீரர்களின் சரிதைகள் ஆகியவைபற்றி அவன் ஏராளமான கதைகளையும் பாடல்களையும் கேட்டு இன்புற்றிருக்கக் கூடும். எல்லாவற்றிற்கும் மேலாக, வானுற ஓங்கி வனப்புடன் திகழ்ந்த வெள்ளிப் பனிவரையாகிய இமயமலையின் தொடர்களையும் சிகரங்களையும் தூரத்திலிருந்தே பார்த்துப் பார்த்து, அவன் மனச் சாந்தியும் மகிழ்ச்சியும் பெற்றிருக்கக் கூடும். குழந்தைப் பருவத்திலிருந்தே சித்தார்த்தனுடைய வாழ்க்கைக்கு ஒழுக்கமே அடிப்படையாக அமைந்து விளங்கியிருக்க வேண்டும். அளவற்ற அன்பினால் அன்னை கௌதமி குழந்தையைக் கெடுத்து விடாத முறையில் சீலம் நிறைந்த சுத்தோதனர் கண்காணித்தும் வந்திருப்பார்.

## கல்விப் பயிற்சி

குழந்தை சிறுவனாகி, வயதும் எட்டாயிற்று. சித்தார்த்தன் பள்ளிக்குச் செல்லவேண்டிய பருவம் வந்தது. அரச குலத்துச் சிறுவர்களுக்குக் கல்வி போதித்து வந்த விசுவாமித்திரரிடமே அவனையும் மன்னர் ஒப்படைத்தார். எழுதுவதற்காக நாற்புறமும் மாணிக்கக் கற்கள் பதித்த சட்டத்துடன் விளங்கிய சந்தனப் பலகையுடன் சித்தார்த்தன் ஆசிரியரிடம் சென்றான். விசுவாமித்திரரைக் கண்டதும், 'ஆசாரிய! அறுபத்து நான்கு வகை மொழிகளில் எனக்கு இப்போது தாங்கள் கற்றுக் கொடுக்கப்போகும் மொழி எது?' என்று கேட்டான். கேட்டதுடன் நில்லாது, திராவிட மொழி உள்ளிட்ட அறுபத்து நான்கு மொழிகளையும் வரிசையாகக் கூறி, 'இவைகளில் நான் முதலில் கற்கவேண்டியது எதுவோ?' என்று வினவினான். ஆசிரியர், எதிரே நின்ற இளைஞன் தம்மிடம் கற்க வரவில்லையென்பதையும், தாமே அவனிடம் கற்கவேண்டுமென்பதையும் உடனே

உணர்ந்து கொண்டு, மெய்ம்மறந்து நின்றூர். அவன் கூறிய பாஷைகளில் சிலவற்றின் பெயரைக்கூட அவர் கேட்டதில்லை! எழுத்தைப் போலவே சித்தார்த்தன் எண்ணிலும் தேர்ச்சி பெற்றிருந்தான். ஆசிரியர் முதல் நாளில் நூறுயிரம் வரை சொல்லிக் கொடுக்கலாம் என்று கருதித் தாம் சொல்வதைத் தொடர்ந்து சொல்லி வரும்படி கூறி, இலட்சம் வந்ததும் நிறுத்திக் கொண்டார். ஆனுல், சித்தார்த்தன் அதற்கு மேலும் பத்து லட்சம், கோடி, பத்துக் கோடி, நூறு கோடியென்று, கோடி கோடியாகச் சொல்லிக் கொண்டிருந்தான். அவன் சொல்லி வந்த எண்கள் கடற்கரை மணலையும், வானத்துத் தாரகைகளையும் கணக்கிடக்கூடிய பெருந் தொகைகளாயிருந்தன. பல கலைகளிலும் தேர்ச்சி பெற்ற மகா பண்டிதரான விசுவாமித்திரர் வெகு நேரம் நின்று அவற்றைக் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. குழந்தையுருக் கொண்டு விளங்கிய அந்தக் குருநாதனுடைய காலடியில் வீழ்ந்து அவர் வணங்கலுற்றூர். ‘ஐயனே! ஆசிரியர்களுக்கு நீயே ஆசிரியன்! உனக்கு நான் குருவல்லன்—நீயே என் குருநாதன்!’ என்று அவர் சித்தார்த்தனைப் பலவகையாகப் பாராட்டிப் புகழ்ந்தார். இளவரசனும் ஆசிரியரிடம் பேரன்பும் பெரும் பணிவும் கொண்டு விளங்கினுன். அறிய வேண்டிய அனைத்தையும் அறிந்திருப்பினும், அவனுடைய அடக்கம் யாவர்க்கும் ஓர் எடுத்துக் காட்டாக இருந்தது.

எண்ணும் எழுத்தும் கற்றது போலவே, அவன் வேறு பல ஆசிரியர்களிடம் வில்வித்தை, குதிரையேற்றம் முதலிய அரசர்க்குரிய கலைகளைப் பயின்று வந்தான். அவனுக்குப் போர்த் தொழில் கற்றுக் கொடுக்க நியமிக்கப் பெற்ற ஆசிரியர் சாந்திதேவர் சாக்கியகுல இளைஞர் பலருக்கும் போதித்து வந்தவர். ஆனுல், சித்தார்த்தன் தனியே யிருந்து தானே தனக்குப் போதித்துக்கொண்டு வந்தான். மற்றையோர் பல்லாண்டுகள் பயின்ற கலைகளை அவன் சில நாட்களிலே பயின்று வந்தான். எப்பொருளிலும் உட்பொருளை

ஒரு கணத்திலேயே அவன் உணர்ந்து விடுகிறுனென்றும், எதையும் எளிதில் விளக்கிவிடுகிறுனென்றும், அவன் கேள்விகளே அவனது மேதையைத் தெளிவாகக் காட்டு கின்றனவென்றும் ஆசிரியரே வியந்து பாராட்டினுர். யானை யேற்றம், தேரோட்டுதல், போர் முறைகள் முதலிய பயிற்சி களிலெல்லாம் அவன் அஞ்சா நெஞ்சம் படைத்த வீரனுக விளங்கியபோதிலும், அவ்வீரத்தோடு அருளும் அடக்கமும் சேர்ந்து பொருந்தியிருந்தன. அவன் ஏறிச் செல்லும் குதிரை களைத்துப் பெருமூச்சுவிட்டால், உடனே அவன் பாய்ச்சலை நிறுத்தி, அதை ஆதரவோடு தட்டிக் கொடுப் பான். பந்தயக் குதிரை ஓட்டத்தின் நடுவே வியர்வை யொழுகக் களைத்து வருந்தினுல், அவன் அப்பிராணியிடம் அன்பு காட்டி, ஓட்டத்தை நிறுத்திவிட்டுப் பந்தயத்தை இழக்கத் தயாராவான். வனவிலங்குகளை வேட்டையாடச் செல்லும்போதும், மான் முதலிய ஜந்துக்கள் பதறி மிரண்டு விழிக்கும் ,பரிதாபத்தைப் பார்த்து, வேட்டையாடாமலே திரும்பிவிடுவான்.

## கருணை உள்ளம்

வசந்த காலத்தில் ஒரு சமயம் சித்தார்த்தன் அரண் மனைத் தோட்டத்தில் அமர்ந்திருந்தான். அப்பொழுது உயரே வானவீதியிலே தூய வெண்மையான அன்னப் பறவைகள் வடதிசையில் இமயமால்வரையை நோக்கிப் பறந்து சென்று கொண்டிருந்தன. மலையிலேயுள்ள கூடு களில் காத்துக் கத்திக்கொண்டிருக்கும் தங்கள் குஞ்சுக ளிடம் அளவற்ற அன்புடன் அவைகள் ஏதேதோ கூவிக் கொண்டு சென்றன. சித்தார்த்தன் கண் கொள்ளாத அந்த ஆனந்தக் காட்சியை அண்ணுந்து பார்த்துக்கொண்டிருக்கை யில், திடீரென்று ஓர் அன்னப்புள், தன் சிறகெல்லாம் சிவப்பாகி, உடலிலிருந்து உதிரம் ஒழுக, அந்தப் பூம்பொழி லில் அவன் பக்கத்தில் வந்து விழுந்தது. அவன் பதறி

யெழுந்து, அதை எடுத்து, உதிரத்தைத் துடைத்து, அதன் உடலில் தைத்திருந்த அம்பு ஒன்றை மெதுவாக வெளியே எடுத்தான். அந்த அன்னத்தின்மீது குறி வைத்து யாரோ வெளியே யிருந்து அம்பு தொடுத்திருக்க வேண்டும்.

சித்தார்த்தன் வெளியே எடுத்த அம்பினைத் தன் கையிலே இலேசாகக் குத்திப் பார்த்தான்; கையில் வலியெடுத்தது. அவ்வளவு கூர்மையான கொடிய அம்பு மென்மையான அன்னத்தின் உடலை என்ன பாடு படுத்தியிருக்கும் என்று அவன் எண்ணி, மனம் வருந்தி, அன்னத்தை மடி மீது வைத்துத் தட்டிக் கொடுத்து, அதன் புண்ணுக்குப் பச்சிலைகளை வைத்துக் கட்டினன்.

அன்னத்தை எய்தவன் சித்தார்த்தனின் அம்மானை சுப்பிரபுத்தரின் குமாரன் தேவதத்தன். அன்னம் சித்தார்த்தன் இருந்த தோட்டத்தில் விழவே, அவன் அதைத் தன்னிடம் தரவேண்டுமென்று கேட்டு ஒரு வேலைக்காரனைச் சித்தார்த்தனிடம் அனுப்பினன்.

சித்தார்த்தன் அன்னம் தன்னுடையதாகிவிட்டது என்று வேலைக்காரனிடம் சொல்லியனுப்பினன். பின்னர் தேவதத்தனே நேரிற் சென்று கேட்டான். அம்பு விடுத்ததில் அன்னம் இறந்திருந்தால், அது எய்தவனின் உடைமையாகலாம்; ஆனல் அது உயிருடன் இருந்ததாலும், தன்னிடம் வந்து விழுந்ததாலும், அதன் உயிரைக் காப்பாற்றிய தனக்கே அது சொந்தம் என்று சித்தார்த்தன் கூறினன்.

இருவரும் ஒரு முதியவரை அண்டித் தங்கள் வழக்கினைத் தீர்த்து வைக்க வேண்டினர். அவர்,

'உயிரைக் காப்பவனே — என்றும்
உயிர்க்(கு) உடையவனும்;
அயர்வு வேண்டாமையா — இதுவே
அறநூல் விதிஐயா!'*

---

*'ஆசிய ஜோதி'

என்று கூறி, அன்னம் சித்தார்த்தனுடையதே என்று தீர்ப் பளித்தார். அவனியை யெல்லாம் தண்ணருளால் சொந்த மாக்கிக்கொள்ள அவதரித்த சித்தார்த்தன், அந்த அருளா லேயே வென்ற முதற் பரிசாக அம்புபட்ட அன்னத்தை எடுத்துச் சென்றான். அது குணமடைந்த பின், ஆகாயத் தில் பறந்து தன் இனத்தோடு இன்புற்று வாழும்படி அதை விட்டுவிட்டான்.

இவ்வண்ணம் இளவயதிலிருந்தே, எப்பொழுதும் எதி லும், சித்தார்த்தனுடைய கருணை துலங்கிக்கொண்டிருந் தது. போதிசத்துவ நிலைக்குரிய பாரமிதைகளாகிய* உயர்ந்த பண்பாடுகள் பத்தும் அவனிடம் நிலைபெற்று விளங்கின. பற்பல பிறவிகளிலே சித்தார்த்தன் பயிற்சி செய்து பெற்ற பண்பாடுகள் இவை என்று பௌத்த நூல் கள் கூறும்.

சித்தார்த்தனுடைய பதினைந்தாம் வயதில் அவனுக்கு மன்னர் இளவரசுப் பட்டம் சூட்டினர்.

---

*பத்துப் பாரமிதைகள்—இவை தச பாரமிதைகள் என்று கூறப் பெறும்: தானம், சீலம், நிஷ்காமியம், பிரஜ்ஞை, வீரியம், சத்தியம், சாந்தி, அதிஸ்தானம், மைத்திரி, உபேட்சை. 'நீலகேசி' நூலில் இவை பின் கண்ட முறையில் குறிக்கப் பெற்றுள்ளன :

'தானம், சீல மே,பொறை, தக்கதாய வீரியம்,
ஊனமில்தி யானமே, உணர்ச்சியோ(டு), உபாயமும்,
மானமில் அருளினை வைத்தலே, வலிமையும்,
ஞான(ம்) ஈரைம்பாரமிதை..................'

தானம் - ஈகை; சீலம் - ஒழுக்கம்; நிஷ்காமியம் - சுயநலமற்ற தியாகம்; பிரஜ்ஞை - மெய்யறிவு; வீரியம் - இடைவிடா முயற்சி; சத்தியம் - வாய்மை; சாந்தி - பொறுமை; அதிஸ்தானம் - உறுதி அல்லது பலம்; மைத்திரி - கருணை; உபேட்சை - உள்ளத்தின் சமநிலை.

பாரமிதைகள் என்றால், (ஆற்றின்) மறு கரையை அடையத் தக்கவை என்று பொருள்.

மூன்றும் இயல்

# மண வாழ்க்கை

' நித்திய ஆனந்தத்தை — அரசே !
நீயும் அடைவதுண்டோ ?
சித்தத் தெளிவுடையாய் ! — சிறிது
சிந்தனை செய்திடுவாய்.'

—ஆசியஜோதி

இளவரசனுக்குப் பதினெட்டு வயதானதும், அரசர் அவனுக்காக மூன்று பெரிய மாளிகைகள் கட்டிக் கொடுத்தார். 'இராமம், சுராமம், சுபதம் என்னும் பெயருள்ள மூன்று இணையற்ற மாளிகைகள் எனக்கு இருந்தன'* என்று பின்னால் புத்தர் பெருமானே குறிப்பிட்டுள்ளார். குளிர் காலத்தில் வசிப்பதற்குரிய மாளிகையினுள்ளே சுவர்களில் தேவதாரு, சந்தனம் முதலிய மரப் பலகைகள் இழைத்துச் சேர்த்து வைக்கப் பெற்றிருந்தன. கோடை காலத்திற்குரிய மாளிகை பச்சை, நீலம் முதலிய கண்ணுக்கினிய நிறங்களுள்ள பளிங்குக் கற்களால் அமைக்கப் பெற்றது. வசந்த காலத்திற்குரிய மாளிகை செங்கல்லால் கட்டப் பெற்றது ; அதன் மேல்முகட்டில் நீல ஓடுகள் பதிக்கப் பெற்றிருந்தன ; சுற்றிலும் மலர்ச் செடிகளும் கொடிகளும் நிறைந்த நந்தவனங்களும் இருந்தன.

### மன்னரின் கவலை

சித்தார்த்தன் அடிக்கடி சிந்தனையில் ஆழ்ந்திருப்பதையும், அவன் முகத்தில் சோகம் படர்ந்திருப்பதையும் கவனித்துவந்த சுத்தோதனர், மந்திரிகளைக் கூட்டிவைத்து

*' புத்த வம்சம் '

அவர்களுடன் கலந்து ஆலோசனை செய்தார். எழிலுடைய தக்க நங்கை ஒருத்தியை அவனுக்குத் திருமணம் செய்து, அழகிகள் பலரைப் பணிப்பெண்களாக நியமித்து விட்டால், அவன் மனம் கேளிக்கைகளிலே ஈடுபட்டு, உலக வாழ்வில் பற்றுக் கொள்ளும் என்று அவர்கள் கருதினார்கள். சிதறிச் செல்லும் சிந்தனைகளை மைக்குழல் மாதரசி ஒருத்தி ஒரு நிலைப் படுத்தித் தன்வசப்படுத்திக் கொள்வாள் என்றும், இரும்புச் சங்கிலிகளாலும் கட்டிப் பிணிக்க முடியாத உள்ளத்தை அவளுடைய மென்மையான கூந்தல் கட்டி விடும் என்றும் அவர்கள் அபிப்பிராயம் கூறினர். அரசர்க்கும் அது சரியான யோசனையாகத் தோன்றியது. தமது வமிசம் ஆற்றொழுக்குப் போல் உலகில் நீடித்து நிலைத்திருக்க வேண்டுமென்றும், சித்தார்த்தனோடு முடிவடைந்து விடக் கூடாதென்றும் பல்லாண்டுகளாகக் கருதி வந்த நிலையில், அவர் விரைவிலே மைந்தனுக்குத் திருமணம் செய்து வைப்பதே நலமென்று இசைந்தார்.

ஆனால், சித்தார்த்தனுக்கு ஏற்ற பெண்ணை எப்படித் தேடிக் காண்பது? மன்னர் தேர்ந்தெடுத்த பெண்ணை, அவன் ஏற்பான் என்பது என்ன உறுதி? வனப்பு மிகுந்த பல பெண்களை அவன் முன்பு கொணர்ந்து காட்டினால், எல்லோரையும் பார்த்துவிட்டு, 'இதுதானா பெண்ணுலகம்! எனக்குத் திருமணமே வேண்டாம்!' என்று அவன் கூறி விட்டால், என் செய்வது? இவ்வாறு பல வினாக்களையும் எழுப்பி, மன்னர் மந்திரிகளோடு கலந்து ஒரு முடிவுக்கு வந்தார். நகரிலுள்ள பேரழகிகளை அரண்மனையிலே ஒரு நாள் கூட்டிவைத்து, அவர்களிடையே அழகுப்போட்டி முதலிய போட்டிகள் நடத்தி, வெற்றி பெற்ற பெண்களுக்குச் சித்தார்த்தன் கையாலேயே பரிசுகள் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதே அந்த முடிவு. சித்தார்த்தனுடைய பிறந்த நாளும் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அந்த நன்னாளையே போட்டிக்குரிய

நாளாக வைத்துக் கொள்ளலாம் என்று மன்னர் கருதி யிருந்தார்.

முதலில் இளவரசனுடைய கருத்தை அறிய வேண்டும், என்று கருதி, சுத்தோதனர் அவனை அழைத்துப் பேசினார். 'மைந்த! உனக்குத் திருமணமாகக் கூடிய வயது வந்து விட்டது. உன் மனத்திற்கு உகந்த பெண் யாராவது இருந் தால் என்னிடம் சொல்லலாம்' என்று கேட்டார். அந்த விஷயமாகச் சிந்தித்து முடிவு சொல்வதற்கு தனக்கு ஒரு வாரம் அவகாசம் வேண்டும் என்று சித்தார்த்தன் கூறினான்.

ஏழு நாட்களாகத் திருமணத்தால் ஏற்படக்கூடிய புதிய நிலைமையைப் பற்றிச் சித்தார்த்தன் ஆழ்ந்து சிந்தித் துப் பார்த்தான். 'ஆசையிலிருந்து விளையக் கூடியது எல்லையற்ற தீமையே. ஆசைக் காட்டில் வளர்ந்து முதிரும் மரங்களின் வேர்கள் துயரத்திலும் கலக்கத்திலும் ஊன்றி நிற்பவை, அம்மரங்களின் இலைகள் நஞ்சு போன்றவை. ஆசை அனலைப் போல் எரிக்கும், வாள் போல் வடுவுண் டாக்கும். நான் பெண்கள் துணை விரும்பிப் பெண்களோடு வாழும் கூட்டத்தைச் சேர்ந்தவனல்லன்; சாந்தி நிறைந்த வனத்திலே ஏகாந்தமாக வசிக்க வேண்டியவன் நான்...... ஆயினும், சேற்றிலேயும் தாமரை மலர்கள் மலர்வதில்லையா? மனைவியரோடும் குழந்தைகளோடும் வாழ்ந்தவர்களும் ஞானத்தை அடையவில்லையா?' என்றவாறு அவன் ஆலோ சனை செய்தான். விவாகம் செய்து கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்த பின், தனக்கு மனையாளாக வாய்ப்பவள் பெற்றிருக்க வேண்டிய அழகையும், குணங்களையும் பற் றிய தன் கருத்துக்களையும் தொகுத்து எண்ணிப்பார்த்தான்.

ஏழாம் நாளில் அரசர் பெருமான் மைந்தனைக் கண்டு அவன் தீர்மானத்தை அறிய விரும்பினார். சித்தார்த்தன், தான் மணஞ் செய்து கொள்வதாயிருந்தால், கீழ்க்கண்ட சிறப்புக்களெல்லாம் ஒருங்கே பொருந்தியுள்ள ஒரு நங்கை யையே செய்துகொள்ள முடியுமென்று கூறினான்:

'நான் மணந்து கொள்பவள் கன்னிப் பருவத்து இளம் பெண்ணா யிருக்க வேண்டும்; நான் மணந்துகொள்பவள் அழகின் நறுமலராக விளங்க வேண்டும்; ஆயினும், அவள் இளமையால் ஏற்படும் ஆடம்பரமற்றிருக்க வேண்டும்; அழகினாலே செருக்கடையாமலிருக்க வேண்டும். நான் மணந்து கொள்பவள் உடன் பிறந்த சகோதரிபோல் அன்புடையவளா யிருப்பாள்; எல்லா உயிர்களிடத்திலும் தாயைப்போல ஆதரவு காட்டுவாள்; பொறாமை அவள் அண்டையிலும் அணுக வொண்ணாது. அவள் தன் கணவனைத்தவிரக் கனவிலும் வேறோர் ஆடவனைக் கருதமாட்டாள்; ஒருகாலும் மிடுக்கோடு அவள் பேசமாட்டாள்; அடக்கமே அவள் அணியாக விளங்கும். குற்றேவல் செய்யும் பணிப் பெண்ணைப் போல அவள் பணிவுடனிருப்பாள், அவசியமானவை தவிர வீணாகத் தேவைகளைப் பெருக்கிக் கொள்ள மாட்டாள்; தனக்குக் கிடைத்த பாக்கியமே பெரிதென்று மனநிறைவு கொண்டிருப்பாள். மதுவகைகளை அவள் விரும்பாள். இனிப்புப் பண்டங்களிலே அவள் மனத்தைப் பறிகொடுக்கமாட்டாள். கானமும், கந்தப் பொருள்களும் அவளைப் பாதிக்க மாட்டா. ஆடல் பாடல்களிலும், விழாக் கொண்டாட்டங்களிலும் அவள் அலட்சியமா யிருந்துவிடுவாள். என் பணியாளர்களிடத்திலும், அவளுடைய பணிப்பெண்களிடத்திலும் அவள் அன்புடன் பழகுவாள். அரண்மனையில் அதிகாலையில் கண் விழிப்பவள் அவளாகவே யிருப்பாள்; இரவில் இறுதியாகத் துயில் கொள்பவளும் அவளாகவே யிருப்பாள். நான் மணந்து கொள்ளும் மாது மனம், வாக்கு, காயம் ஆகியவை அனைத்திலும் பரிசுத்தமாயிருப்பாள்!'*

---

*ஹெரோல்ட் என்ற பிரெஞ்சு ஆசிரியர் எழுதிய 'புத்தர் வாழ்க்கைச் சரிதை'—'The Life of Buddha' by A. Ferdinand Herold —translated from the French by Paul C. Blum.

இதைக் கேட்டு உளம் மகிழ்ந்த அரசர், தமது அரண்மனைப் புரோகிதரை அனுப்பி, இளவரசனுக்கு ஏற்ற எழிலுடைய நங்கையர் எங்கெங்கு இருக்கின்றனர் என்று விசாரித்தறியும்படி கோரினர். புரோகிதர், கோலிய மன்னர் சுப்பிரபுத்தரின் குமாரி, எழிலரசி **யசோதரா தேவியே** சித்தார்த்தன் விரும்பிய பண்புகள் யாவும் பொருந்தியவள் என்று கண்டு, அரசர்க்கு அறிவித்தார். சுப்பிரபுத்தர் மன்னரின் மைத்துனரே. ஆயினும் சித்தார்த்தனுக்குப் பெண் கொடுப்பதை அவர் விரும்பவில்லை. ஏனெனில் இளவரசனின் ஜாதக முறைப்படி அவன் விரைவிலேயே எல்லாவற்றையும் துறந்து வனத்திற்குச் செல்லக் கூடும் என்று சோதிடர்கள் கூறிய செய்தியை அவர் அறிந்திருந்தார். தவிரவும் இளவரசன் மன்னர்க்குரிய வில்வித்தை, வாட்போர், மல்யுத்தம், குதிரையேற்றம் முதலியவற்றில் மற்ற இளைஞர்களுடன் போட்டியிட்டு வெற்றி பெறுமல், அரண்மனைகளிலே அடைபட்டிருப்பதாயும் அவர் கருதினர். அவர் கருத்து எப்படியிருப்பினும், பெண்திலகமான யசோதரை, தன்னைத் திருமணம் செய்து கொண்டு மறுநாளே இளவரசன் துறவு பூணுவதாயிருப்பினும், தான் அவனையே கணவனாக அடைய விரும்புவதாகவும், உலகிலே தன்னை மணந்து கொள்ளத் தக்கவர் வேறு எவரும் இல்லையென்றும் கூறிவந்தாள்.

## காதலும் திருமணமும்

இடையில் இளவரசனுடைய பிறந்த நாளும் கிட்டி வந்தது. அன்று நகரிலுள்ள கன்னியர் அனைவருக்கும் அவன் பரிசுகள் அளிப்பதாயும், போட்டிகளில் வென்றவர்களுக்கு விசேடப் பரிசுகள் வழங்குவதாயும் நகரெங்கும் முரசறைவிக்கப் பெற்றது.

பிறந்த நாள் வைபவத்திலே சித்தார்த்தன் ஓர் அரியாசனத்தில் அமர்ந்து பரிசுகள் வழங்கிக் கொண்டிருந்தான்.

கபிலவாஸ்துவின் கன்னியர் பலரும் தோகை மயில்களைப் போல் அவனைச் சுற்றிக் கூட்டங் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர். திரும்பிய இடமெல்லாம் மைதீட்டப் பெற்ற வேல் போன்ற கண்கள்! கன்னங் கரிய கார்மேகம் போன்ற கூந்தல்கள்! சந்திர வதனங்கள்! வண்ண வண்ண மான பட்டுடைகளும், சல்லாக்களும், சால்வைகளும்! உயிர் பெற்று உலவிய அந்த அழகிய ஓவியங்கள் பரிசு பெறும்போது, இளவரசனை ஏறிட்டுப் பார்க்க நாணித் தரையைப் பார்த்துக் கொண்டே நடந்தன. சித்தார்த்தன் ஆடவர் திலகமாய்க் கம்பீரத்தோடு கொலு வீற்றிருந்தான். எனினும், அவன் முகத்தில் ஆசையின் சாயை தென்படவே யில்லை. பெருந்தவ முனிவன் மணிமுடியும் நல்லணிகளும் அணிந்து, சாந்தியோடு திகழ்வது போலவே அவன் காணப் பெற்றான். மானினம் துள்ளிவருவது போலவும், மயிலினம் ஆடி வருவது போலவும், பெண்கள் தொடர்ச்சியாக வந்து அவனிடம் பரிசுகள் பெறும்போது, 'இவன் நமக்கு எட்டாத கனி!' என்று எண்ணி அடக்கத்தோடு ஒதுங்கிச் சென்று கொண்டிருந்தனர்.

ஆயிரக் கணக்கான பெண்களுக்கு அப்பால் கடைசியாக யசோதரை வந்து கொண்டிருந்தாள். மான் மிரள்வது போன்ற அவள் விழிகளும், தண்ணொளி பரப்பிக்கொண்டிருந்த அவள் திருமுகமும், சித்தார்த்தனுடைய கவனத்தை முதலிலேயே கவர்ந்து விட்டன. அவள் நிமிர்ந்த தலையுடன், அண்ணலை ஒருமுறை நேராகப் பார்த்தாள். 'எனக்கு ஏதாவது பரிசுண்டா?' என்று கேட்டுக் கொண்டே, அவள் புன்னகை பூத்து நின்றாள். இளவரசன் முன்னால் வைத்திருந்த பரிசுப் பொருள்கள் யாவும் தீர்ந்து விட்டன. ஆயினும் முதற்பரிசு பெறவேண்டிய பசுங்கிளி அவன் எதிரே காத்து நின்று கொண்டிருந்தது. அவ்வளவில் சித்தார்த்தன், 'பரிசுகள் தீர்ந்துவிட்டன! ஆயினும், எனது மரகத மாலையை நகரின் அழகு ராணியான நீ

ஏற்றுக் கொள்!' என்று சொல்லிக் கொண்டே, தன் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றி அவளிடம் கொடுத்தான். இருவருடைய கண்களும் சந்தித்தன. இருவரும் பிரியும்போது எழுச்சியுடன் காணப் பெற்றனர்.

இந்த நிகழ்ச்சியை அறிந்த சுத்தோதனர் தமது கருத்துப்படியே இளவரசன் யசோதரையின்பால் காதல் கொண்டுள்ளான் என்று களிப்படைந்து, மைத்துனரைச் சந்தித்து விவரத்தைக் கூறினர். சுப்பிரபுத்தர் இளவரசனின் வீரத்தையும், பலத்தையும் பரீட்சித்துப் பார்க்க விரும்பினர். அரசர் மைந்தனிடம் அதைப் பற்றி அறிவித்தபொழுது, 'அரசே! விரைவில் நகரின் இளைஞர்களை அழைத்துப் போட்டிப் பந்தயங்களுக்கு ஏற்பாடு செய்யலாம். தாங்கள் எதற்கும் கவலையுற வேண்டாம். என் கைவண்ணத்தையும், மக்கள் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் அளியுங்கள்!' என்று தைரியமாக வேண்டிக் கொண்டான்.

அவ்வாறே ஒரு வாரத்தில் போட்டிகளுக்கு ஏற்பாடு செய்யப் பெற்றது. சாக்கிய குலத் திலகங்களான யுவர்கள் பலரும் அவைகளிலே கலந்துகொண்டனர். குதிரையேற்றம், வில்வித்தை முதலிய ஒவ்வொரு பந்தயத்திலும் சித்தார்த்தனே வெற்றி பெற்றான். கலைகள் பலவற்றிலும் அவனே முதல்வன் என்றும் நிரூபித்தான். நகரமே அரண்மனையில் திரண்டு நிற்பது போல் கூடியிருந்த மக்களனைவரும் பெருமகிழ்ச்சி கொண்டனர். இளவரசனின் திறமைகளைக் கண்ணாரக்கண்டு சுப்பிரபுத்தரும் தம் அருமை மகள் யசோதரை அவனுக்கே உரியவள் என்று அந்தச் சபையிலேயே அறிவித்தார்.

அவ்வாறே சித்தார்த்தனுக்கும் யசோதரைக்கும் ஒரு நன்னாளில் திருமணம் கோலாகலமாக நடந்தேறியது.

சில வரலாறுகளில் யசோதரையின் பெயர் பத்தகச்சானா என்று குறிக்கப் பெற்றுளது. சித்தார்த்தன் பிற்காலத்தில் புத்தராகி உபதேசம் செய்கையில், 'ஆபரணங்

களால் அலங்கரிக்கப் பெற்ற நாற்பதாயிரம் பெண்கள் எனக்குப் பணிவிடை செய்து வந்தார்கள்; பத்த கச்சானு எனது மனைவி' என்று கூறியுள்ளதில், பத்த கச்சானு யசோதரா தேவியே என்று உரையாசிரியர்கள் கூறுகின்றனர். ஒருசில வரலாறுகளில் கோலி நாட்டுத் தண்டபாணி (சுப்பிரபுத்தரின் சகோதரர்) என்பவரின் மகள் கோபாவைச் சித்தார்த்தன் மணந்து கொண்டதாகக் காணப்பெறுகின்றது. ஆயினும், பெரும்பாலான வரலாறுகள் யசோதரையின் பெயரையே கூறுவதால், அவள் ஒருத்தியே சித்தார்த்தனின் மனைவி என்று கொள்ளலாம். யசோதரையே முன்னால் பல பிறவிகளிலும் தமக்கு மனைவியாக விளங்கினாள் என்று புத்தர் பெருமானே பிற்காலத்தில் அறிவித்துள்ளார்.

## காதல் வலை

சித்தார்த்தனுக்கு ஏற்ற பேரெழிலுள்ள வாழ்க்கைத் துணைவி வாய்த்து விட்டாள். யசோதரையின் அழகும், குணங்களும், பணிசெய்யும் பண்பும் அவனைப் பரவசப் படுத்தி வந்தன. யாதொரு விகாரமுமில்லாத சுந்தரிகள் பலர் பணிப் பெண்களாக அமர்ந்திருந்தனர். கலைகளிலே தேர்ச்சி பெற்ற மங்கையர் பலர் தங்கள் ஆடல்களாலும், பாடல்களாலும், இசைக் கருவிகளாலும் இளவரசனின் கண்ணுக்கும், செவிக்கும், சிந்தைக்கும் இடைவிடாத விருந்தளித்து வந்தனர். இல்லறத்தை மேற்கொண்ட சித்தார்த்தனுக்குக் காமன் மண்டபம் என்று சொல்லத் தக்க மாபெரும் இன்ப மாளிகை யொன்றும் கட்டப்பெற்றது. அதைச் சுற்றிலும் உத்தியான வனம் அமைந்திருந்தது. அதிலே யிருந்த செய்குன்றைச் சுற்றி உரோகிணி ஆறு சிரித்து விளையாடிப் பாய்ந்து கொண்டிருந்தது. குன்றுக்கு வடபால், மோனத்திலே அமர்ந்த முனிவர்களைப் போன்ற இமயமலையின் வெள்ளிய சிகரங்கள் விண்ணை

யளாவி நிமிர்ந்து நின்று கொண்டிருந்தன. வெள்ளிப் பனிவரையும், சுற்றிலும் பசுமை போர்த்து விளங்கிய வனங்களும், அரண்மனையும், உத்தியானமும்—எல்லாமுமே வெளியுலகை மறக்கச் செய்யும் மாண்புடன் விளங்கின.

புதிய அரண்மனை சாக்கிய நாட்டுச் சிற்பக்கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கிற்று. அதன் கதவுகள் தந்தம் பதித்த சந்தன மரத்தாலானவை; உயரமான மண்டபங்களும், சிற்பங்களும், சிலைகளும், சித்திரங்களும் காண்போர் மனத்தைக் கொள்ளைகொண்டன. வெளியே உலாவி வருவதற்கான நடைபாதைகளில் பளிங்குக் கற்கள் பாவப் பெற்றிருந்தன. பளிங்குக் கற்களால் அமைந்த படிக்கட்டுகளுள்ள தடாகங்கள், பூங்கொடிப் பந்தர்கள், வசந்த மண்டபங்கள் பலப்பல ஆங்காங்கே அமைந்திருந்தன. புறாக்களும், கிளிகளும், மற்றும் பன்னிறப் பறவைகளும் அரண்மனையைச் சூழ்ந்து பறந்தும் கூவியும் இன்புறுத்தி வந்தன. மான்களும் மயில்களும் ஏராளமாய்க் கவலையற்றுத் திரிந்து கொண்டிருந்தன.

இவ்வாறு இயற்கை யழகும், மனிதர் கைபுனைந்து இயற்றிய எழிற் காட்சிகளும், மகளிர் அளித்த இசைகளும் இன்பங்களும் சித்தார்த்தனின் சித்தத்தைச் சிறைப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தன. அரசர் சுத்தோதனர் அதனால் மனச் சாந்தி பெற்றுத் தாம் மட்டும் உள்ளத் துறவு பூண்டு, ஒழுக்கம் பேணி, உயரிய முறையில் அரசு புரிந்து வந்தார். சித்தார்த்தன் தங்கியிருந்த அரண்மனைக்கு வெளியே வெகு தூரத்திற்கு அப்பால் ஒரு பெரிய கோட்டை கட்டி, அதன் நடுவே உள்வாயில், நடுவாயில், வெளிவாயில் என்று மூன்று வாயில்களை அமைத்து, அவ்வாயில்களில் காவலுக்காகத் திறமை மிக்க வீரர்களை அவர் நியமித்திருந்தார். யாரும் அவ்வாயில்களைக் கடந்து செல்ல முடியாது. இளவரசனைக் கூட அவ்வாயில்களில் அனுமதிக்கக்கூடாது என்று அங்கிருந்த காவலர்களுக்குக் கண்டிப்பாக ஆணையிடப் பெற்றது.

எனவே வெளியுலகிலுள்ள துயரம், சோகம் எதையும் காணமுடியாத நிலையில், வாழ்வே முடிவில்லாத ஒரு காதற் கீதம் என்று இளவரசன் கருதிக் கொண்டிருக்கும்படியே, சூழ்நிலை யாவும் பொருந்தியிருந்தன.

இவ்வண்ணமாக நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகி, மாதங்கள் வருடங்களாகிக் கழிந்துகொண்டிருந்தன. சித்தார்த்தன் முன்னம் பல பிறவிகளிலே மனிதனாயும், விலங்காயும், அருகத்தாயும், போதிசத்துவராயும் தான் நோற்ற நோன்புகளையும், இயற்றிய தவங்களையும், ஆற்றிய அறங்களையும் மறந்திருந்தவன்போல், காதல் வலையின் மென்மையான கண்ணிகளிடையே பத்து ஆண்டுக் காலம் கட்டுண்டிருந்தான்.

நான்காம் இயல்

# மூன்று காட்சிகள்

'நின்றன நின்றன நில்லா என உணர்ந்து
ஒன்றின ஒன்றின வல்லே செயின் செய்க!

—நாலடியார்

**சி**த்தார்த்தருக்கு வயது இருபத்தொன்பது ஆயிற்று. இவ்வுலகில் வாழும் உயிர்களைப் பற்றியோ, அவைகளின் துயரங்களைப் பற்றியோ ஏதும் அறியாமல், மையலிலே சிக்குண்டு, தமது மாபெரும் மாளிகைகளிலே அவர் சிறைப் பட்டிருந்தார். உலகில் காணப்பெறும் நோய்நோக்காடுகள் இன்பதுன்பங்கள், சுயநலம் காரணமாக மக்களிடையே தோன்றும் போட்டிகள், பொல்லாங்குகள், எல்லா உயிர் களுக்கும் பொதுவாக ஏற்படும் பிணி, மூப்பு, சாக்காடு முதலியவைகளைப் பற்றி அவர் சிந்தித்துப் பார்ப்பதற்கே வழியில்லாதபடி பேரரசர் சுத்தோதனர் தடைசெய்து வைத்திருந்தார். தளிர் மேனியும், கரிய கூந்தலும், நிலை யற்று அலையும் மருண்ட விழிகளும் கொண்ட எழிலுடைய நங்கையர் கூட்டத்தின் நடுவே, இளவரசர் இரவும் பகலும் இசை வெள்ளத்திலே மிதந்துகொண்டிருந்தார். தோகை மயில்களைப் போன்ற மாதர்கள் தங்கள் நடனங்களின் மூலம் அவர் கருத்தைக் கவர்ந்து வந்தனர். எந்த நேரத்தில் எது தேவை என்பதை அறிந்து உடனுக்குடன் அவர் எண்ணத்தை நிறைவேற்றிவைக்க ஆயிரக்கணக்கான பணிப்பெண்களும் ஊழியர்களும் காத்து நின்றனர். எழிலரசி யசோதரை தனது சௌந்தரியத்தாலும், பண்பி னாலும் அவர் உள்ளத்தைத் தனக்கே உரிமையாக்கிக்

கொண்டிருந்தாள். இசை, நடனம், காதல் — காதல், நடனம், இசை என்ற முறையில் அவர் காதுகளுக்கும், கண்களுக்கும், கருத்துக்கும் மாறிமாறி விருந்தளிப்பதையே தொழிலாய்க் கொண்டிருந்தனர் அவரைச் சூழ்ந்திருந்த அணங்குகள் அனைவரும்,

நாடு, மக்கள் இனங்கள், உழைப்பு, தொழில்கள், வாழ்வு, வாழ்க்கைப் போராட்டம், வனங்கள், விலங்குகள் முதலிய எதையும் இளவரசர் நேரில் பார்த்தறிய வழி யில்லை. இரவு நேரத்தில் அயர்ந்து துயிலும்போது கனவிலே மட்டும் அவர் பல காட்சிகளைக் காண்பது வழக்கம். அக் காட்சிகளின் முடிவில், 'அருமை உலகே! அறிந்தேன், அறிந்தேன்! இதோ வந்தேன்!' என்று அவர் முணு முணுப்பார். இச் சொற்களைக் கேட்டுத் திடுக்கிட்டு விழிக் கும் யசோதரை அவரை எழுப்பி 'என்ன நேர்ந்தது' என்று கவலையுடன் கேட்பாள். ஏக்கமும் சோகமும் தேங்கிய முகத்துடன் சித்தார்த்தர் அவள் துயரத்தை மாற்றுவதற் காக, 'ஒன்றுமில்லை!' என்று வலிந்து புன்னகை புரிவார்.

## தேவகீதம்

ஒரு நாள் இரவில் அந்தப்புரத்தில் அமர்ந்திருந்தபோது தேன் பிலிற்றுவதுபோல் தேவகீதம் ஒன்று அவர் செவிகளில் கேட்டது. வாடி நொசிந்த சுடர்க் கொடிகளைப் போலப் பெண்கள் அனைவரும் அயர்ந்து துயிலும் நேரத்தில், வெளியே யிருந்து வீசிய பூங்காற்றில் இசை கலந்து வந்து ஒலித்துக்கொண்டிருந்தது. காற்றைப் போன்றது சுகன வாழ்க்கை என்றும், எவ்வளவுதான் உறுதியாய்ப் பற்றி யிருப்பினும், இந்த வாழ்வு முடிவில் உளுத்துப்போகும் என்றும், 'நாம் எங்கிருந்து வந்தோம், எதற்காக வந்தோம், எங்கு செல்கின்றோம், எதற்காகச் செல்கின்றோம்?' என்ற செய்திகளை அறியாமல் மன்பதை யெல்லாம் மயங்கி நிற் கின்றது என்றும், மாநிலத்தின் துயரையெல்லாம் மாற்ற

வந்துள்ள ஞானக் கதிரான சித்தார்த்தர் மேற்கொண்டு காலங்கடத்தாமல் துயில் நீங்கித் துள்ளியெழுந்து வர வேண்டும் என்றும், அந்தத் தேவகீதம் மெல்லிய இசையுடன் முழங்கிக் கொண்டிருந்தது.

'நித்திய ஆனந்தத்தை — அரசே,
நீயும் அடைவதுண்டோ ?
சித்தத் தெளிவுடையாய் — சிறிது
சிந்தனை செய்திடுவாய் !

'சாலவே உலகம் — துயரால்
தளர்ந்து வாடுதையா !
மாலை மாலையாய்க் — கண்ணீர்
வடிய விடுதையா !

'"என்று வந்திடுவான் — ரக்ஷகன்
எவ்விடம் தோன்றிடுவான் ?"
என்றிப் புவியெலாம் — நோக்கி
எதிரே நிற்குதையா !

'கண்ணி லா உலகம் — இடறிக்
கவிழ்ந்து வீழாமல்,
அண்ண லே, எழுந்து — விரைவில்
அருள வேண்டுகின்றோம் !'*

தேவகீதத்தைக் கேட்டது முதல் சித்தார்த்தருக்கு நிலை கொள்ளவில்லை. இத்துடன் பணிப் பெண் ஒருத்தி கூறிய கதைகளால் அவருக்கு நாடு நகரங்களையும், பலதிறப்பட்ட மக்களையும், வீதிகளையும், சோலைகளையும் கண்டு வரவேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. முதலில் தமது தலைநகரத்தையும், அதற்கு அணித்தே யிருந்த சோலையையும் பார்க்க வேண்டும் என்று அவர் தீர்மானித்தார். குளிர்ந்த ஏரிகளும் குளங்களும், கொத்துக் கொத்தாக மலர்களுடன் விளங்கும் செடிகளும் கொடிகளும், கனிகள் தொங்கும்

*'ஆசிய ஜோதி.'

மரங்களும், பாடித் திரியும் பலநிறப் பறவைகளும் நிறைந்த மன்னரின் சோலை அவர் உள்ளத்தை ஈர்த்தது. கட்டுத் தறியை விட்டுக் கானகத்தில் சுயேச்சையாகத் திரிய வேண்டுமென்று விரும்பும் களிறு போல், அவர் அரண்மனையை விட்டுச் சிறிது நேரமாயினும் வெளியேற வேண்டும் என்று ஆசைகொண்டார்.

## முதற் காட்சி

மைந்தரின் நோக்கத்தைக் கேள்வியுற்ற மன்னர் உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் ஈடுபட்டார். சாலைகள் செப்பஞ் செய்யப் பெற்றன. வீடுகளும் வீதிகளும் அலங்கரிக்கப் பெற்றன. கொடிகளும் தோரணங்களும் ஐயனின் வரவை எதிர்பார்த்து ஆடிக் கொண்டிருந்தன. நகரமக்கள் யாவரும், உயர்ந்த ஆடை ஆபரணங்களுடன், திருவிழாக் கோலத்தில் திரண்டு நின்றனர். உயர்தரமான நான்கு வெள்ளைப் புரவிகள் பூட்டிய மணித் தேரும் தயாராக வந்து நின்றது. இளவரசர் முகத்தில் இன்பமும் துன்பமும் கலந்த உணர்ச்சிகளைக் கண்டு சுத்தோதனர், 'வெளியே இன்பக் காட்சிகளைக் கண்டு வந்தால் அவன் உள்ளம் உவகையுறும்' என்று கருதி ஆசி கூறி வழியனுப்பினர்.

இரதமும் புறப்பட்டுச் சென்றது. இளவரசரின் எழில் நலத்தைக் காண்பதற்காக மகளிரும் மைந்தரும் ஒருவரையொருவர் முந்திக்கொண்டு ஓடி வந்தனர். நாட்டுப் புறத்திலிருந்தும் திரள்திரளாக மக்கள் வந்திருந்தனர். மாடங்களிலெல்லாம் மகளிரின் மதி முகங்கள் பிரகாசித்துக்கொண்டிருந்தன. மந்திரிகளும் மற்ற அதிகாரிகளும் இரதத்தைச் சூழ்ந்து குழுமியிருந்தனர். ஏழைகள், செல்வர்கள், வயோதிகர்கள், வாலிபர்கள் — யாவருடைய கண்களுக்கும் வள்ளல் சித்தார்த்தரின் திருமுகம் நல்விருந்தாக விளங்கிக்கொண்டிருந்தது. எங்கணும் மலர்ந்த முகங்கள்

விளங்கின; வாழ்த்தொலிகள் முழங்கின. சிலர் குதிரைகளின் கழுத்துக்களில் மாலைகள் அணிவித்தனர்; சிலர் உவகையோடு வெற்றிமுழக்கம் செய்து வரவேற்றனர்.

வழியெங்கும் சோகமோ துயரமோ விளைவிக்கும் காட்சி எதுவும் இளவரசர் கண்ணில் தென்பட்டு விடக் கூடாது என்று அரசர் முன்னதாகவே ஆணையிட்டிருந்தார். கூனர், குருடர், செவிடர், முடவர், நோயாளர் எவரும் வீதிகளில் வராமல் தடை செய்வதற்காகத் தனியாகக் காவலர்கள் நியமிக்கப் பெற்றிருந்தனர். எங்கும் மகிழ்ச்சி நிறைந்திருந்தது; எவர் முகத்திலும் கவலைக் குறியே இல்லை.

மக்களின் மகிழ்ச்சி சித்தார்த்தரையும் பற்றிக்கொண்டது. பொன்னும் மணிகளும் புனைந்து செய்த இரதம் இந்திர விமானம்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அதன்மீது தாம் பவனி வருவதைக் காண்பதில் மக்கள் கொண்ட மகிழ்ச்சியைக் கண்டு, சித்தார்த்தர், அந்த மக்களைக் கொண்ட இராஜ்யத்தைப் பெற்றிருப்பதே பெரும் பேறு என்று கருதினார். அவர் உள்ளமும் உவகையால் மலர்ந்தது. 'நடந்தால் நாடெல்லாம் உறவு; படுத்தால் பாயும் பகை' என்ற பழமொழிக்கு ஏற்பத் தாம் வெளியே வந்ததில் மக்கள் தம்மிடம் கொண்டுள்ள நேசத்தை அவர் நேரில் பார்க்க முடிந்தது. அதனால், அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. இரதம் நகர வாயிலை அடைந்ததும், மேற்கொண்டு சோலையை நோக்கிச் செலுத்தும்படி அவர் பாகனிடம் கூறினார். சாரதி **சந்தகன்** அவ்வாறே தேரைத் திருப்பினான்.

அந்த நேரத்தில் சாலை ஓரத்திலே, தேவர்களில் ஒருவன் தன் உருமாறி, ஒரு வயோதிகப் பிச்சைக்காரனாகக் காட்சியளித்தான். அவனுடைய உலர்ந்த உடலும், வற்றிய தோலும், குழிவிழுந்த கண்களும் பார்க்கப் பயங்கரமாயிருந்தன. 'ஐயா, பிச்சை!' என்று அவன் கூவும்போதே இருமல் அவனைப் பற்றிக்கொண்டது. அவன் கையிலிருந்த

கழியின் மேல் உடலைச் சாய்த்துக்கொண்டு, மெல்லமெல் லத் தள்ளாடிக் கொண்டே முன்னால் நகர்ந்து வந்தான். சுற்றியிருந்த ஜனங்கள், 'இளவரசர் வருகிறார்!' என்று கூறி அவனைக் கண் மறைவாக ஒதுங்கும்படி அழைத்துச் சென்றனர். அதற்குள் சித்தார்த்தர் அந்தக் கிழவனை நன்றாகக் கண்டுகொண்டார். உடனே, அவனை யாரும் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று பணித்தார்.

அவர் சந்தகனைப் பார்த்து, 'இவன் எத்தகைய மனிதன்? தலை நரைத்து, கண்கள் பள்ளத்தில் ஆழ்ந்து, உடல் ஒட்டிப் போயுள்ள இவன் யார்? இவனுடைய உடல் வெப்பத்தால் உலர்ந்து போய்விட்டதா, அல்லது பிறவியிலேயே இவன் இவ்வாறு தோன்றியவனா?' என்று வினவினார். சாரதி திடுக்கிட்டுப் போய், உள்ளதை உள்ளபடி கூற அஞ்சினான். ஆனால், கிழவன் உருக்கொண்டு எதிரே நின்ற தேவனின் தெய்விக ஆற்றலால் அவன் உண்மையையே கூற நேர்ந்தது.

'இவன் வயதான கிழவன். நெடுநாள் வாழ்ந்ததில் உடலின் ஆற்றல் வற்றிவிட்டது; நரம்புகள் தளர்ந்து விட்டன. எண்பது ஆண்டுகளுக்கு முன் இவனும் பச்சிளங் குழந்தையாயிருந்து தன் அன்னையின் அமுதப் பால் பருகி வளர்ந்தவன்தான்! பின்னால் அழகுள்ள வாலிபனாயிருந்து இவன் ஐம்புல இன்பங்களில் ஆழ்ந்திருந்தான். இவனும் நம்மைப்போல் நிமிர்ந்து நடமாடியவன்தான்; வயது ஏற ஏற உடல் தளர்ந்துவிட்டது; முதுமை வந்து விட்டது. இவனுடைய விளக்கில் எண்ணெய் வற்றி விட்டது; இப்போது திரிமட்டும் சிறிது எரிந்துகொண்டிருக்கிறது. அதுவும் விரைவில் அணைந்து போய்விடும்...... இதைப்பற்றி யெல்லாம் இளவரசர் கவனிப்பானேன்!' என்று சந்தகன் விளக்கிக் கூறினான்.

இளவரசர் முகம் வாட்டமடைந்தது. அவர் உள்ளம் உருகிவிட்டது. 'முதுமை யடைந்தவன் இவன் ஒருவன்

தானு? அல்லது மற்றவர்களுக்கும் இதே கதி உண்டாகுமா? இவனைப்போல நெடுநாள் வாழ்ந்தால், நானும் இதே தோற்றத்தை அடைவேனு? மூப்பினுல் யசோதரைக்கும் நரையும் திரையும் ஏற்படுமோ? மற்றவர்களுக்கும் முதுமை உண்டாகுமோ?' என்று கேட்டார்.

சாரதி மறுமொழி கூறினன்: 'ஆம், இளவரசே! பிறவியெடுத்த அனைவருக்கும் முதுமை உண்டு. இளவரசருக்கும் இந்த நிலை ஏற்படுவது இயல்பு. உருவம் மாறும்; இளமைத் தோற்றம் மறைந்து ஒரு சமயம் முதுமை ஏற்படுவதே இயற்கை. மக்கள் யாவருக்கும் இது பொதுவான விதி!'

இதைக் கேட்டதும், சித்தார்த்தரின் சித்தம் சோகத்தால் கலங்கிவிட்டது. நீண்ட பெருமூச்சு விட்டு அவர் தலையை அசைத்துக்கொண்டே, அந்த வயோதிகனையும், அவனைச் சுற்றி ஆரவாரம் செய்து கொண்டிருந்த ஜனங்களையும் பார்த்த வண்ணம் பேசலானுர்: 'முதுமை எல்லோரையுமே அடித்துத் தள்ளிவிடுகின்றது! நமது அழகு, நினைவு, வீரம் எல்லாவற்றையும் தொலைத்து விடுகின்றது! இதை அறிந்த பின்னும் உலகம் கவலையின்றிக் காலங் கழித்து வருகின்றதே! — தனக்கு ஏற்படப் போகும் கதி கண் முன்பு தெரிந்துகொண்டிருந்தும் அது சலனமடையவில்லையே!'

பிறகு அவர் பாகனை விளித்து, 'முதுமையைப்பற்றிய சிந்தனைகள் என் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருக்கையில், நாம் சோலையிலே சென்று என்ன காட்சியைக் காணப் போகிறோம்! உடனே இரதத்தை அரண்மனைக்குத் திருப்பி விடு!' என்று கூறினுர். அவனும் அவ்வாறே திருப்பி விட்டான்.

அரண்மனையிலும் சித்தார்த்தரின் உள்ளம் அமைதி பெறவில்லை. எந்த நேரமும் 'முதுமை, முதுமை, முதுமைப் பருவம்' என்ற ஒன்றைப்பற்றியே அவர் சிந்தனை

சென்றுகொண்டிருந்தது. பல்லாண்டுகளாக உடலைப் பற்றியோ, உயிரைப்பற்றியோ சிந்தனையற்றிருந்தவர் இப்போது அவைகளைப்பற்றியே ஆராய முற்பட்டார். இதனால், உள்ளத்தின் சாந்தி குலைந்து, சோகம் புகைந்து கொண்டிருந்தது. அரண்மனையிலுள்ள எவரும், எந்தப் பொருளும் அவருக்கு இன்பமளிக்கவில்லை. உண்ணாமலும், துயிலாமலும், அவர் இருந்த இடத்தில் இருந்துகொண்டே, இரவு முழுதும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

அவருடைய சோகத்தையும், அதன் காரணத்தையும் அறிந்த சுத்தோதனர் மிக்க வருத்தமும் கவலையும் கொண்டார். எதைச் செய்தாவது கோமகன் சோகத்தை விரைவில் மாற்றவேண்டும் என்று இரவில் நெடுநேரம் ஆலோசனை செய்துகொண்டே கண்ணயர்ந்து விட்டார். துயிலின் நடுவே அவர் கண்ட கனவுகள்வேறு அவர் உள்ளத்தை உளையச் செய்தன. வெள்ளித் தந்தங்களுள்ள மலைபோன்ற யானைகள் பத்து உலகம் அதிரும்படி சுற்றி வருவதுபோலவும், அவைகளில் ஒன்றின்மீது சித்தார்த்தர் அமர்ந்து செல்வதுபோலவும், ஒளிவிடும் தங்கமும் நவரத்தினங்களும் இழைத்த பெரிய திகிரி ஒன்று கருதற்கரிய வேகத்துடன் சுழல்வதுபோலவும், நான்கு வெள்ளைப் புரவிகள் பூட்டிய தேர் ஒன்றில் சித்தார்த்தர் எங்கோ சென்றுகொண்டிருப்பதுபோலவும், இடியோசைபோல் அதிரும்படி அவர் ஒரு பெரிய பேரிகையைக் கொட்டி முழக்குவதுபோலவும் அக் கனவுகளிலே பல காட்சிகள் தோன்றின.

பொழுது விடிந்ததும் பார்த்திபர் கனவுநூல் வல்லார் பலரை அழைத்து விசாரித்தார். ஆனால், அவர் கண்ட கனவுகளின் பொருளை அவர்களால் விரித்துரைக்க முடியவில்லை. கடைசியாக மான் தோல் உடையுடன் ஒரு வயோதிகத் துறவி அரண்மனைக்கு வந்து அரசர் கண்ட கனவுகளைப்பற்றி விளக்கி யுரைத்தார். அரசர் அவைகளை எண்ணித் துயரப்படாமல் மகிழவே வேண்டும் என்று

அவர் கூறினர். யானைகள் உலகு அதிரும்படி சென்றது சித்தார்த்தர் பத்துவகை ஞானமும் பெற்று உலகுக்கு அறத்தினை உபதேசிப்பதாகும் என்றும், நான்கு குதிரைகள் பூட்டிய இரதம் நான்கு வகை வாய்மைகளுடன் பொருந்திய அவருடைய தரும இரதம் என்றும், பொன்னாலான திகிரி சுழன்றது அண்ணல் உருட்டப் போகும் அற ஆழியைக் குறிக்கும் என்றும், பேரிகை முழக்கம் அவருடைய அருளறம் பல நாடுகளிலும் வெற்றிகரமாகப் பரவுவதைக் குறிக்கும் என்றும், அவர் கனவுகளுக்குப் பொருள் கூறி மன்னரைச் சமாதானப்படுத்தினர். மேலும், ஏழு நாட்களில் கனவில் கண்ட காரியங்கள் பலிக்க ஆரம்பிக்கும் என்றும், செல்வமும் சிறப்பும் வாய்ந்த இராஜ்யங்களைப் பார்க்கிலும் பெரிய செல்வங்களைச் சித்தார்த்தர் அடைவார் என்றும், அவருடைய துவராடை பொன்னுடைகளைவிடச் சிறப்புடையதாக விளங்கும் என்றும் கூறி, அத்துறவி மிக்க விநயத்துடன் வணக்கம் செய்துவிட்டுத் திடீரென்று எழுந்து வெளியே சென்றுவிட்டார். மன்னர் அவருக்குச் சேரவேண்டிய பரிசுகளைப் பணியாளர் மூலம் அனுப்பிவைத்தார். ஆனல், அவர்கள் அவரைக் கண்டு பிடிக்க முடியாமல் திரும்பிவிட்டனர். 'அவர் ஓர் ஆலயத்துள் நுழைவதைக் கண்டு நாங்களும் உள்ளே சென்று எங்கும் தேடினோம். அவர் எப்படியோ மாயமாய் மறைந்துவிட்டார். ஆலயத்தில் ஒரே ஒரு வௌவாலைத் தவிர வேறு உயிர்களையே காணவில்லை!' என்று அவர்கள் கூறியதிலிருந்து, அரசர் அதிலும் ஏதோ அதிசயம் இருப்பதை உணர்ந்துகொண்டார்.

அவருடைய கவலை பன்மடங்கு அதிகமாயிற்று. மேலும் மேலும் இளவரசருக்கு இன்பமளிக்கும் விஷயங்களை ஆராய்ந்து அவற்றைச் செய்து வரும்படி உத்தரவிட்டார். சௌந்தரியம் மிக்க புதிய நடனமாதர் பலரையும் அனுப்பிவைத்தார். அரண்மனையைச் சுற்றியிருந்த

கோட்டை வாயில்களைக் கவனமாய்க் காத்து வரும்படி திறமை மிக்க காவலர் பலரையும் நியமித்தார்.

## இரண்டு காட்சிகள்

சித்தார்த்தர் மீண்டும் நகரையும், பூஞ்சோலையையும் பார்த்து வரவேண்டும் என்று மன்னரிடம் வந்து விடை கேட்டார். எத்தனையோ இன்பங்கள் நிறைந்ததாகத் தோன்றும் வாழ்க்கை நதி முடிவில் காலமென்னும் பாலை மணலில் பாய்ந்து அவலமாய்ப் போகும் கதியைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்த நிலையில், அவர் தம் நகர மக்களை நேரிலே சென்று பார்க்க விரும்பினார். முன்னறிவிப்பு இல்லாமல், எவ்வித ஏற்பாடுகளும் இன்றி, அவர் மாறு வேடத்திலே சுற்றிவரத் தீர்மானித்திருந்தார். அரசரும் அதற்குச் சம்மதித்தார். மறுமுறை சுற்றிவந்தால், முதல் நாள் நேர்ந்த விபரீதத்தை மாற்றிவிடக்கூடும் என்று அவர் கருதினார். மறுநாள் நண்பகலில் இளவரசரும் தேர்ப் பாகனும் வெளியே சென்றுவர ஏற்பாடாயிற்று.

மறுநாள் கோட்டை வாயிலில் அரசருடைய முத்திரையைக் காட்டியதும் காவலர்கள் நெடுங் கதவுகளைத் திறந்து வழிவிட்டனர். சித்தார்த்தர் ஒரு வணிகரின் உடை அணிந்திருந்தார், சந்தகன் வணிகரின் பணியாளாக நடித்தான். காவலர் எவரும் அவர்களை இனம் கண்டுகொள்ள முடியவில்லை. அதுபோலவே நகர மக்களும் அவர்கள் எவர்கள் என்பதை உணரவில்லை. எனவே சித்தார்த்தரும் சாரதியும் பல வீதிகளின் வழியாகச் சென்று, வர்த்தகர்கள், தொழிலாளர்கள், மாணவ மாணவிகள், ஆசிரியர்கள், படைவீரர்கள், தண்ணீர் கொண்டு செல்லும் பெண்கள் முதலிய பல திறப்பட்ட மக்களையும் நிதானமாகச் சந்தித்துப் பார்க்க முடிந்தது. கடைத் தெருக்கள், பள்ளிகள், ஆலயங்கள், தொழில் நிலையங்கள் முதலியவை யெல்லாம் சித்தார்த்தருக்குப் புதுமைகளாகவே யிருந்தன. எங்கணும்

மக்கள் வெள்ளம், எல்லோரும் ஏதேதோ வேலைகளின் மேல் சென்றுகொண்டிருந்தனர். காட்சிகள் அனைத்தை யும் பார்த்த வண்ணம் சித்தார்த்தரும், சாரதியும் உரோ கிணி நதிக்குச் செல்லும் சாலைப் பக்கமாகத் திரும்பிச் சென்றனர்.

அந்தச் சாலையில் திரும்பியதும், தேவர்களின் சூழ்ச்சி யால் நோயாளி ஒருவன் அவர்கள் முன்பு தோன்றினன். மெலிந்து, நலிந்து, வயிறு வீங்கியிருந்த அந்த நோயாளி தரைமீது தத்தளித்துக் கொண்டிருந்தான். அருகேயிருந்த புற்களைப் பற்றிக்கொண்டு அவன் எழுந்திருக்க முயன் ருன். ஆனால் முடியவில்லை. 'அம்மா, அப்பா!......யாரே னும் உதவ மாட்டீர்களா?' என்று வேதனை தாங்காமல் அவன் மெல்லக் கூவினன். சித்தார்த்தர் ஓடிச் சென்று, அவன் தலையை மெதுவாகத் தூக்கித் தனது மடிமீது வைத் துக் கொண்டு, 'உனக்கு என்ன செய்கிறது, சகோதர? நீ ஏன் எழுந்திருக்க முடியவில்லை?' என்று கேட்டார். பாகனைப் பார்த்து, 'சந்தகா! இவன் உடலெல்லாம் நடுங்கு கின்றது. வாய் பேசமுடியவில்லை. கைகளும் கால்களும் காய்ந்த குச்சிகளைப்போலத் தொங்குகின்றன. உடலே வெறும் எலும்புக் கூடாக இருக்கிறதே! இவன் யார்?' என்று கேட்டார்.

'இவன் நோயாளி. ஏதோ ஒரு கொடிய நோய் இவ னைப் பற்றிக்கொண்டிருக்கிறது. இவன் அங்கங்களெல் லாம் தளர்ந்து போய்விட்டன. இவன் சாகவேண்டியவன். ஆனால் படவேண்டிய வேதனை எஞ்சியிருப்பதால், குறை யையும் அநுபவிப்பதற்காகவே உயிரோடு இருக்கிருன். கோமகனே! தாங்கள் இவனைத் தீண்டுதலும் ஆகாது. இவனது நோய் தங்களையும் பற்றிக்கொள்ளும்!' என்று கூறினன் சந்தகன்.

'இந்த நோய் இவனுக்கு மட்டும் ஏற்பட்டதா? இல்லையெனில், எல்லோருக்கும் இது இயற்கையா?'

'மனிதர் யாவர்க்கும் நோய் பொதுவானது; அது பல உருவங்களில் தோன்றும். உடல் படைத்தவர் எல்லோரும், எந்த இடத்திலும், இதை எதிர்பார்க்கவேண்டியது தான்!'

'நோய் வருவது முன்னதாக நமக்குத் தெரியாதா?'

'தெரியாது, இளவரசே! மறைந்திருந்து கொத்தும் நாகம் போன்றது நோய்! இடி, எவர்களை விட்டுவிட்டு, எவர்கள் தலைகளில் விழும் என்பதை யாரேனும் அறிந்து கூற முடியுமா?'

'அப்படியானால் எல்லா மக்களும் நோய்களுக்கு அஞ்சியே வாழ்ந்து கொண்டிருக்கின்றனரா?'

'ஆம், அரசே!'

'இந்தத் துயரங்களையெல்லாம் பார்த்த பின்னும், மனித சமூகம் அமைதியாகவே வாழ்ந்து கொண்டிருக்கின்றது. நோயின் கொடூரங்களிலிருந்துகூடத் தப்ப முடியாத மனிதர்கள் புன்னகையோடு திரிவதைக் கவனித்தால், அவர்களுடைய அறிவே சிதறிப் போய்விட்டதாகத் தோன்றுகிறது!'

சித்தார்த்தருடைய மனவேதனையை உணர்ந்து சந்தகனும் வருந்தினன். காணக்கூடாத காட்சி எதிர்ப்பட்டுவிட்டது! உண்மையை ஒளித்துக் கூறும் துணிவும் அவனுக்கு ஏற்படவில்லை. சித்தார்த்தர் நோயாளியின் முகத்தைக் கருணையோடு உற்றுப் பார்த்துக்கொண்டே, 'சந்தக! இந்தப் பிணிக்கு அப்பால் மனிதருக்கு என்ன நேரிடும்?' என்று வினவினர்.

'ஒரே முடிவுதான் — மரணம்!'

'மரணமா?' என்று திடுக்கிட்டுக் கேட்டார் சித்தார்த்தர்.

அந்தக் கேள்விக்கு மறுமொழி கூறுவதுபோல் சிறிது தூரத்தில் ஒரு சங்கின் அலறல் கேட்டது. ஒருவன் தலை

விரி கோலமாகக் கைகளில் தீச்சட்டி ஏந்தி வந்துகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் நான்கு மனிதர்கள் ஒரு பாடையைத் தூக்கிக்கொண்டு வருவதையும் சித்தார்த்தர் கண்டார். சோகம் தேங்கிய முகங்களுடன் கண்ணீர் பெருக்கிக் கொண்டே வேறு சிலரும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தனர்.

'இது என்ன ஊர்வலம்?' என்று சித்தார்த்தர் பாகனைக் கேட்டார்.

'எவனோ ஓர் ஏழை இறந்து போய்விட்டான். அவனுடைய உதிரம் உறைந்து, உடல் பசையற்றுப் போய் விட்டது. அந்த உடலின் கண்களினின்றும் பார்வை ஒழிந்தது; செவிகளினின்றும் கேள்வி ஒழிந்தது: நாசியினின்றும் மோப்ப உணர்ச்சியும் அகன்றுவிட்டது. இப்போது அது மரக் கட்டை மாதிரிதான். ஆற்றோரமாகக் காட்டத்தில் வைத்து எரிப்பதற்காக உறவினர்கள் அதைத் துணியில் சுற்றி எடுத்துச் செல்கிறார்கள். இனி, அந்த உடலுக்குத் துன்பமும் இல்லை, இன்பமும் இல்லை. அதற்கு நீரும் ஒன்றுதான், நெருப்பும் ஒன்றுதான்!'

'சாவு என்பது இவனுக்கு மட்டுந்தானா? அல்லது எல்லோர்க்குமே ஏற்படுவதா?'

'பிறந்தவர் எல்லோரும் இறக்க வேண்டியவர்களே. பலசாலிகள், வாலிபர்கள், வயோதிகர்கள் — யாராயிருந்தாலும் முடிவு இதுதான்!'

இதைக் கேட்டதும் சித்தார்த்தருக்கு மூச்சு விடுவதே கடினமாகிவிட்டது. 'ஆள் பார்த்து உழலும் அருளில் கூற்றின்' தன்மை அவருக்கு வெட்ட வெளிச்சமாகிவிட்டது. ஏற்கனவே துயருற்றிருந்த மனம் மேலும் கலங்கி விட்டது. பதறுகின்ற குரலில் சில வார்த்தைகளே அவருடைய தொண்டையிலிருந்து வெளிவந்தன. 'உலக மக்களே! எவ்வளவு அநியாயமாக நீங்கள் ஏமாறி யிருக்கிறீர்கள்! எந்த உடலும் சாம்பலாகிவிடுவதை எல்லா இடங்

களிலும் கண்ட பின்னரும், கருத்தேயில்லாமல் வாழ்கிறீர்களே! இதயம் என்பது கல்லா, கட்டையா? எல்லாம் மறையும் என்ற உண்மையைப்பற்றி அது ஏன் சிந்திப்பதில்லை?' இவ்வாறு சொல்லிக்கொண்டே, அவர் வானத்தையும் பூமியையும் மாறிமாறிப் பார்வையிட்டார். அந்தப் பார்வையிலிருந்து ஏதோ ஓர் உன்னத லட்சியம் அவர் உள்ளத்தில் உதயமாகி யிருப்பதுபோல் தோன்றியது.

அன்று சித்தார்த்தர் கண்ட காட்சிகளின் முடிவில் நோயும் சாக்காடும் வந்து குறுக்கிட்டதை எண்ணி, எப்படியும் சோலையிலே சிறிது நேரம் தங்கியிருந்தால் அவர் உள்ளம் மாறிவிடும் என்று கருதிச் சந்தகன் அவரை வற்புறுத்தி அங்கே அழைத்துச் சென்றான்.

## சித்தார்த்தரின் சோகம்

இயற்கை அழகு நிறைந்த சோலையிலே மன்னரின் ஆணைப்படி **உதாயி*** என்ற தோழன், ஆடல் பாடல்களில் தேர்ந்த கட்டழகிகள் பலருடன், சித்தார்த்தரின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தான். இளவரசர் அங்கு வந்தவுடன் இசையும் நடனமும் ஆரம்பமாயின. சிறிது நேரத்திற்குப் பின் மாதர்கள் கூட்டங் கூட்டமாக அவரைச் சூழ்ந்து மொய்த்துக் கொண்டனர். ஆனால், வழக்கமாக அவர்கள் பார்த்திருந்த இளவரசர் அன்று இல்லை. மாநிலத்தின் சோகத்தை யெல்லாம் தமது மதிமுகத்தில் தேக்கிக் கொண்டு, ஒரே சிந்தனையில் ஆழ்ந்து நின்றார் சித்தார்த்தர். கை வளையல்களின் ஒலியோ, கால் சிலம்புகளின் சதங்கை ஒலியோ, கிள்ளைகள்போல் கொஞ்சும் சுந்தரிகளின் குரலோ அவரைக் கவர முடியவில்லை.

'மூப்பு, பிணி, சாக்காடு! உலகத்தின் துயரம் கடலை விடப் பெரிது! கடலைவிட ஆழமானது! ஒரே துன்ப

*உதாயி: அரண்மனைப் புரோகிதரின் மைந்தன்.

வெள்ளம்! துக்கத்திற்கும் மரணத்திற்கும் பாலம் அமைத்தது போலவே வாழ்க்கை விளங்குகின்றது! இன்பங்கள் எல்லாம் துன்பங்களிலேயே முடிகின்றன; மோகம் ஊட்டும் இளமை முதுமையிலே முடிகின்றது; காதலெல்லாம் பிரிவிலேயே முடிகின்றது; வாழ்க்கை வெறுக்கத்தகுந்த மரணத்திலேயே முடிகின்றது! இந்த ஏமாற்றத்திலேயே நானும் இவ்வளவு காலமாக ஆழ்ந்திருந்து விட்டேன்! இதோ என் கண்களை மறைத்திருந்த திரை கிழிந்து வீழ்ந்து விட்டது. எனக்கும், என்னைப்போன்ற சடலமெடுத்த சகலருக்கும் உதவியாக நான் உண்மையை உணர்ந்து கொள்வேன்! தெய்வங்களை நினைத்து இரங்கி ஏங்குவதில் பயனில்லை. பிரமனே இவ்வுலகைப் படைத்தான் எனில், இதை ஏன் இவ்வளவு துயரத்தில் ஆழ்த்தி வைக்கவேண்டும்?'— இவ்வாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்த சித்தார்த்தரின் கண்கள் அன்றலர்ந்த தாமரை மலர்களைப் போன்ற ஆயிழையர் முகங்களை ஏறிட்டுப் பார்க்க மறுத்தன.

'சொற்பல பேசித் துதித்து நீங்கள் நச்சிச் செல்லும் நரகவாயில்' என்றோ, 'காதள வோடிய கலகப் பாதகக் கண்ணியர்' என்றோ அவர் அம்மங்கையரை வெறுத்துரைக்க வில்லை. 'மறலி விட்ட தூதுவர்' என்றும், கருவிளை கழனிகள் என்றும், 'காமப் பாழிகள்' என்றும் பொதுவாகத் துறவிகள் பெண்களைப் பழிப்பதுபோல் அவர் பழிக்க வில்லை. ஆனால் அப்பெண்கள், வாழ்க்கையைப்பற்றிய சிந்தனையே யில்லாமல், அறியாமையில் ஆழ்ந்திருப்பதைப் பற்றியே எண்ணிப் பரிதாபப்பட்டார். 'இந்தப் பெண்கள் அனைவரும் இளமை நீங்கி விரைவிலே முதுமையடையப் போகின்றார்கள்; நோயும், மரணமும் இவர்களை எதிர்பார்த்துக் காத்து நிற்கின்றன; இந்த உண்மையைக் கூட உணராமல் இவர்கள் சிரித்து விளையாட எப்படி முடிகின்றது? முதுமை, பிணி, மரணம் மூன்றையும் பார்த்த ஒருவர், பின்னால் அமைதியாக நிற்கவோ, அம

ரவோ, துயிலவோ முடியாதே! ஆனால், இவர்கள் கேளிக்கை களிலே ஈடுபட்டு எப்படிச் சிரிக்கிறார்கள்?' என்று அவர் தமக்குள்ளேயே கேட்டுக்கொண்டார்.

அவருடைய சோகத்தைக் கண்டறிந்த உதாயி அருகே வந்து பல தேறுதல் மொழிகள் கூறினான். இளமை இன்பத்திற்காகவே ஏற்பட்ட பருவம் என்றும், காதல் மிகுதியால் களித்து வந்து அபயம் கேட்கும் அபலைகளை உதறித் தள்ளுதல் மரியாதையன்று என்றும், தான் கட்டி வைத்திருந்த நீதிகளை யெல்லாம் அவர் முன்பு விரித் துரைத்தான்.

சித்தார்த்தர் பொறுமையோடு அவன் சொற்பொழி வைக் கேட்டுவிட்டு, 'நான் உலகப்பொருள்களில் எதையும் உதறித் தள்ளவில்லை. மனித குலம் முழுதும் அவைக ளோடு தொடர்பு கொண்டிருக்கின்றது. ஆயினும் இந்த நெடிய உலகிலே எதுவும் நிலையில்லை. நிலையாமை ஒன்றே இங்கு நிலைத்திருக்கின்றது! அதனால்தான் உலகப்பொருள் களிலே நான் இன்பம் காண முடியவில்லை! உலகமே தீப் பற்றி எரிவதுபோல் எண்ணும் எனக்கு, மனச்சாந்தி எப்படி ஏற்படப் போகிறது!' என்று மறுமொழி கூறினார்.

கதிரவனும் மேற்றிசையிலே மலைவாயை அடையும் தருணமாயிற்று. மாதர்கள் அனைவரும் மனமுடைந்து நகரை நோக்கிச் சென்றுவிட்டனர். அந்தி மாலையை நோக்கிய வண்ணம் அரசிளங் குமரர் உலகின் நிலையாமை யைப் பற்றி நெடுநேரம் சிந்தித்துக் கொண்டிருந்தார். பின்னர் அவரும் தேர்ப்பாகனும் நகருக்குத் திரும்பிச் சென்றனர்.

நகருள் நுழையும்போதே சில தூதுவர்கள் ஓடிவந்து, இளவரசருக்கு ஆண் மகவு பிறந்திருப்பதாக, ஒரு நற் செய்தியைக் கூறினர். அதைக் கேட்ட சித்தார்த்தர், 'மகனா பிறந்திருக்கிறான்! எனக்கு மேலும் ஒரு தளை—

இராகுலன்*—பிறந்திருக்கிறான்!' என்றார். வேதனையில் அவர் கூறிய பெயரே பின்னால் அக்குமாரனுக்கு நிலைத்து விட்டது.

இரவு முழுதும் இளவரசர் உறக்கம் கொள்ளவில்லை. உடலைப் பற்றியோ, வாழ்க்கையைப் பற்றியோ, கருத்தில்லாமல் காலங் கழித்து வரும் கோடிக்கணக்கான மக்களைப் பற்றி அவர் சிந்தித்துக்கொண்டே யிருந்தார்.

நூறு ஆண்டுகள் மனிதன் உலகில் வாழ்ந்தாலும், அவற்றில் பாதி உறக்கத்திலே கழிகின்றது. பதினைந்து ஆண்டுகள் பாலப் பருவத்தில் பறந்தோடுகின்றன. எஞ்சிய நாட்களிலும் பிணி, பசி, மூப்பு, துன்பம் — இதுதான் வாழ்க்கையா? தாள்களில் அணிந்த சிலம்புகள் ஆர்க்கும்படி தவழ்ந்து திரியும் குழந்தைகள் கடைசியில்,

'சொல் தளர்ந்து, கோல் ஊன்றிச்
சோர்ந்த நடையினராய்ப்
பல் கழன்று பண்டம் பழிகாறும்'†

நிலைக்கு வந்து விடுகின்றனர். நெடுமரம்போல ஆறடி உயரம் நிமிர்ந்து வளர்ந்த மனிதர்கள், முதுகு வளைந்து

---

*இராகுலன் முன்னதாகவே பிறந்திருந்தான் என்று அசுவகோஷர் குறித்துள்ளார். பின்னால் சித்தார்த்தர் கானகத்தில் கடுந் தவம் இயற்றி வருகையில், அவர் உடல் மெலிந்து இறந்து போனார் என்ற வதந்தியைக் கேட்டுக் கபிலவாஸ்துவில் மன்னரும் மற்றோரும் சோகத்தில் ஆழ்ந்திருந்த சமயத்தில் அவன் பிறந்தான் என்றும் சில வரலாறுகள் உண்டு.

இராகுலன் என்ற பெயருக்குத் தளை அல்லது விலங்குபோன்றவன் என்று சிலர் பொருள் கூறுவர். இராகு என்னும் பாம்பினால் விழுங்கப் பெற்ற மதி போன்றவன் என்பதால் அவனுக்கு இராகுலன் என்று பெயர் வந்ததாகவும், மதி இராகுவால் பீடிக்கப் பெற்ற சமயம் அவன் பிறந்ததால் அப்பெயர் அமைந்ததாகவும் வேறுசிலர் கூறுவர்.

†நாலடியார்

கூனிக்குறுகி, உடல் தளர்ந்து, தலை நடுங்கி, தண்டு ஊன்றி விழுந்து இறக்கின்றனர்.

உடல் கல்லினும் வலிதாக என்றும் நிலைத்திருப்பது போல எண்ணித் திரிகின்றனர் மக்கள். ஆனால் உடலின் உண்மையான தன்மை என்ன? அது 'மரணப் பஞ்சரம்'†; காற்றிற் பறக்கும் கானப் பட்டம்'* ; 'காமக் கனலிலே கருகிடும் சருகு'*. பாவக்கொடி பற்றிக்கொண்டு வளர்வதற்கு ஏற்ற கொழுகொம்பாக அது விளங்குகின்றது. தோன்றியதிலிருந்து அழியும்வரை அதன் கவலை புலராக் கவலையாகவே உளது.

இந்த உடலில் தோன்றும் நோய்கள் எத்தனை ! தோலில் ஒரு துளி கிழிந்து விட்டாலும், அந்தப் புண்ணை ஆற்றுவதற்கு என்ன பாடு படவேண்டியிருக்கிறது?

> 'ஈச்சிற கன்னதோர் தோல் அறினும் வேண்டுமே
> காக்கை கடிவதோர் கோல்.'

ஆற்றங்கரையிலுள்ள மரம் போன்றது உடல். எப்போதும் அலையடித்து அதன் வேரிலுள்ள மண்ணை நாள் தோறும் கரைத்துக் கொண்டேயிருக்கின்றது.

வாழ்க்கை நிலைப்பதில்லை. 'புல் நுனிமேல் நீர் போல் நிலையாமை'. மணப்பறையைக் கேட்டுக் கொண்டிருக்கும் போது, அதுவே பிணப்பறையாக மாறி விடுகின்றது. தந்தை, தாய், தாரம், தமர், மக்கள் எல்லோரும் சந்தையிலே கூடியுள்ள கூட்டம். எவரும் உயிரைப் பிரியாமல் பிடித்து வைத்துக் கொள்ள முடியாது.

> 'நின்றான், இருந்தான், கிடந்தான், தன்
> கேள் அலறச் சென்றான்........'

என்பதே மனிதனின் சரித்திரம்! ஆகவே, 'இருப்பது பொய், போவது மெய்' என்ற உண்மை சித்தார்த்தரின்

†பஞ்சரம் - கூடு.

*நாலடியார்

உள்ளத்தில் பசுமரத்திற் பதிந்த ஆணிபோல் நிலைத்து விட்டது. இன்பம் துன்பத்திலும், அன்பு பிரிவிலும், வாழ்வு மரணத்திலும், மரணம் புதுப் பிறவிகளிலும் முடிவடைகின்றன. பிறவி தோறும் உயிர்கள் பொய்ம்மை மயக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றன. மரணத்திற்குக் காரணம் எது? மனிதன் மரணமற்ற வாழ்க்கையைப் பெறுவது எப்படி? மனிதன் துக்கம் நீங்கிச் சுகம் பெறுவது எக்காலம்? இத்தகைய கருத்துக்களை அவர் மனம் ஆராய்ந்து கொண்டிருந்தது.

இளவரசர் வெளியே சென்ற பிறகு நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும் மன்னர் உதாயி மூலம் கேட்டறிந்து உள்ளம் துடித்தார். பேரிடிகள் பல ஒரே சமயத்தில் தம்மைத் தாக்கியது போல வருந்தினர். பெரியதொரு விபத்து தம்மை நோக்கி வேகமாக வந்துகொண்டிருப்பதை எண்ணி எண்ணி அவர் இரங்கினர். வைகறை வரையில் அவரும் கண்ணை மூடவேயில்லை.

# நகர் நீங்கு படலம்

---

'நீள்நில மீது நித்தியா னந்த
வாழ்வை அடையும் வழிஇது என்று,
தீவிர மான தியாகத் தாலும்,
ஓய்வில் லாத உழைப்பி னலும்,
அறியலாம் என்னில் அறிந்து வருவேன் !
வாடி வருந்த மன்னுயிர் எல்லாம்
அடையும் துன்பம் அனைத்தும் ஒழிப்பேன் !'

—ஆசிய ஜோதி

**சா**க்கிய சிம்மமாகிய சித்தார்த்தர் ஐம்புலன்களின் இன்பத்தை அறவே வெறுத்திருந்தார். இதயத்திலே விடம் தோய்ந்த கொடிய அம்பு குத்தியிருக்கையில் சீரிய சிங்கம் எவ்வாறு துயருற்று அதே சிந்தனையிலிருக்குமோ, அது போலவே அவர் துடித்துக் கொண்டிருந்தார். மேலும் மேலும் அவருக்கு இன்பமளிப்பதற்காக மன்னர் செய்த முயற்சிகள் யாவும் பாழாயின. இனிய இசைகள் அவர் செவியில் ஏறவில்லை. அவர் கண்கள் நடனத்தை நாட வில்லை. மாதர்களின் மையல் விழிகள் அவரிடம் தம் வல்லமையை இழந்தன. கலைகளில் எதுவும் அவர் கருத்தை மாற்ற முடியவில்லை.

## கடைசிக் காட்சி

அப்போது வசந்த காலம். மாம்பூக்களும் அசோக மலர் களும் எத்திசையிலும் நறுமணம் பரப்பிக்கொண்டிருந்தன. மரங்கள் எல்லாம் பழைய சருகுகளை உதிர்த்து விட்டுப்

புதிய தளிர்களால் புத்தாடை புனைந்து பொலிவுடன் விளங்கிக் கொண்டிருந்தன. தாமரை, தாழை, சண்பகம், மாதவி முதலிய மலர்களின் மகரந்தத்துடன் மலைக் காற்று தவழ்ந்து வீசிக் கொண்டிருந்தது. எனவே ஒரு நாள் சித்தார்த்தார் மீண்டும் வெளியே சென்று அருகே யிருந்த வனங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசை கொண்டார். வண்டுகள் இசை பாடவும், கிளிகள் கொஞ்சவும், குயில்கள் அமுத கீதம் இசைக்கவும், வசந்தம் கொலு வீற்றிருப்பதைக் கண்டு வந்தால், தமது உள்ளத்திற்கு அமைதி ஏற்படும் என்று கருதி, அவர் அருமைத் தந்தையிடம் அநுமதி வேண்டினார். அரசரும் மகிழ்ச்சியடைந்து, இளவயதுள்ள செல்வர் பலரையும், பரிவாரங்களையும் அவருக்குத் துணையாக அனுப்பி வைத்தார். இளவரசர்க்கு உரிய எழிலுடைய **கண்டகம்** என்னும் குதிரையைச் **சந்தகன்** கொணர்ந்து நிறுத்தினான். அதன்மீது தங்கத்தினால் செய்த சேணம் அமைக்கப் பெற்றிருந்தது; கடிவாளமும் தங்கம்; அதன் செவிகளின் அருகே தங்கப் பிடிகளில் அமைந்திருந்த கவரிகள் கட்டப் பெற்றிருந்தன. குதிரைமீது சித்தார்த்தர் ஏறிச் சென்றது இந்திரன் பவனி வருதல் போலிருந்தது.

போகின்ற வழியிலே சாலையின் இருமருங்கிலும் உழவர்கள் கழனிகளில் உழுது கொண்டிருந்தார்கள். நகருக்கு வெளியே காடும் கழனிகளும் அழகாய்த்தான் இருந்தன. ஆனால், கழனிகளைப் பண்படுத்த மக்களும் எருதுகளும் படும்பாடுதான் பெருந் துயரமாகத் தோன்றியது. நீரில் நீந்திச் செல்வது போலவே ஏர்கள் நிலத்தைப் பிளந்து நீந்திக் கொண்டிருந்தன. புற்களும் செடிகளும் முளைத்திருந்த மண் கட்டிகள் உழவுசாலின் இரு பக்கங்களிலும் சிதறி விழுந்திருந்தன. பூமிக்குள் இருந்த பல புழுக்களும் பூச்சிகளும் உழவு சால்களின் பக்கங்களில் வதையுண்டு கிடந்தன. நல்ல வெய்யிலிலே நின்று மெய்வருந்தி வேலை செய்த உழவர்களின் உடல்களில் சேறும் நீரும் தெறித்

திருந்தன. உழைப்பினால் அவர்கள் உலேந்திருந்தார்கள். கதிரவன் உதிக்கு முன்பே கலப்பையில் பூட்டிய மாடுகள் களைத்துப் போயிருந்தன. மக்கள், மாடுகள் ஆகிய எல்லா உயிர்களிடத்திலும் அண்ணலின் செழுங்கருணை ஓடிப் பெருகிக் கொண்டிருந்தது.

வனத்தை அடைந்ததும், இளவரசர் குதிரையிலிருந்து இறங்கி நடந்து சென்றார். அங்கே ஓரிடத்தில் தம் தோழர் அனைவரையும் இருத்திவிட்டுச் சிறிது தூரத்திற்கு அப்பால் சென்று, இலைகள் அடர்ந்த ஒரு நாவல் மரத்தை அடைந்தார். 'இனிது இனிது, ஏகாந்தம் இனிது' என்பதை அவர் அந்த இடத்திலே முதல்முறையாக உணர்ந்தார். இயற்கையில் அமைந்திருந்த சாந்தி அவர் உள்ளத்திலும் நிறைந்திருந்தது.

அங்கே பச்சைப் பட்டு விரித்தது போலப் படர்ந்திருந்த பசும்புல்லின்மீது அமர்ந்து கொண்டு, பிரபஞ்சத்தின் தோற்றத்தையும் மாற்றத்தையும் பற்றி அவர் சிந்திக்கலானார். சிந்தனையில் திளைக்கத் திளைக்க, அவர் உள்ளம் தெளிவும் உறுதியும் பெற ஆரம்பித்தது. உலகப் பற்றுக்கள் நீங்கி, உள்ளம் தூய்மை பெற்று, ஆழ்ந்த தியானமாகிய சமாதி நிலையை அடைந்தது. அந்நிலையில் உலகின் துயரமும் துன்பங்களும், மூப்பு, பிணி, மரணங்களால் விளையும் அழிவும் அவருக்குத் தெளிவாக விளங்கின. 'அன்ன விசாரம், அதுவே விசார'மாக அலைகின்ற மக்கள், பிணி, மூப்பு, சாக்காடுகளிலிருந்து தாங்கள் தப்பித்துக் கொள்ள முடியாத நிலையில், தங்களுக்குள் வயோதிகமடைவாரையும், பிணியாளரையும், மரணமடைவாரையும் வெறுத்து அலட்சியம் செய்யும் அறியாமையைப் பற்றி அவர் வருத்தமடைந்தார். 'இங்கேயுள்ள நான் என்னைப் போன்ற ஒரே தன்மையுள்ள மற்றொருவரை வெறுத்து ஒதுக்குவது எனக்கு அழகாகுமா? அது நியாயமா?' என்று எண்ணினார்.

'பாவச் சரக்கொடு பவக்கடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர்க் கொடு மரக் கலத்தை'*

அவர் நன்கு தெரிந்து கொண்டார். மெல்லிய தோற் போர்வையுடன் விளங்கும் உடல் புண்கள் நிறைந்த கூடு; இதில் ஆயிரம் ஆயிரம் துவாரங்களிலிருந்து, திறந்த புண்ணில் நாற்றம் வீசுதல் போலத் துர்க்கந்தம் வந்துகொண்டேயிருக்கிறது.† இது

'ஐவர் கலகமிட்(டு) அலைக்கும் கானகம்,
சலமலப் பேழை, இருவினைப் பெட்டகம்.'*

இவ்வுடலோடு வாழ்தல் சிறை வாழ்வை ஒத்தது. சிறையில் அடைபட்டுத் துயரில் உழலுவோன் தன் விலங்குகளை உடைத்துக் கொண்டு தப்பிச் செல்லத் துடித்துக் கொண்டிருப்பான். அதே போலப் பிறவி தோறும் எல்லையற்ற துன்பம் நிறைந்த சிறையே மனிதனை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றது; விலங்குகளை உடைத்துக் கொண்டு தப்ப முயல்வதே அறிவுடைய செயலாகும். பிறவிக் கடலிலே வீழ்ந்தவனை 'நான்' என்னும் முதலை வாய் பிளந்து விழுங்க வருகின்றது; இரு வினைகள் என்னும் அலைகள் அவனை அங்கு மிங்கும் அலைக்கின்றன. இந் நிலையில் அறிவு ஒன்றே அவனுக்குத் தெப்பமாக உதவும். அதையும் கைவிட்டு மதி மயங்கித் திரியும் மக்கள் நற்கதி அடைவது எங்ஙனம்?‡

இத்தகைய கருத்துக்களைப் பற்றியெல்லாம் சிந்தனை செய்கையில் சித்தார்த்தருடைய வீரியம், இளமை, வாழ்க்கை ஆகியவற்றால் ஏற்பட்டிருந்த களிப்பெல்லாம் ஒரே கணத்தில் மறைந்து போய்விட்டது.

அவருக்கு எக்களிப்பு இல்லை, துயரமும் அவரைவிட்டு

---

*பட்டினத்தார்.

†'மிலிந்தன் பிரச்னைகள் (மிலிந்த பன்ஹா).'

‡தாயுமானவர்.

அகன்றுவிட்டது. தயக்கமோ, குழப்பமோ இன்றி, அவர் சிந்தனை நேராகச் சென்று கொண்டிருந்தது. விருப்பும் வெறுப்பும் அவர் உள்ளத்தைவிட்டு வெளியேறிவிட்டன. அறிவின் கதிர்களால் அவர் முகம் ஒளி மயமாகத் திகழ்ந்தது.

அந்த நேரத்தில் காவியுடை அணிந்த துறவி ஒருவர் வேறு எவரும் அறியா வண்ணம், மெதுவாக வந்து அவர் முன்பு தோன்றினர்.

சித்தார்த்தர்: தாங்கள் யார்?

துறவி: நான் ஒரு சிரமணன். முதுமை, நோய், மரணம் ஆகியவை பற்றி மனம் வருந்தி, முக்தி வழியை நாடி நான் என் வீட்டைவிட்டு வெளியேறிவிட்டேன். எல்லாப் பொருள்களும் அழிவை நோக்கியே விரைந்து செல்கின்றன; உண்மை ஒன்றுதான் எக்காலத்தும் நிலைத்து நிற்கின்றது. ஒவ்வொரு பொருளும் மாறிவிடுகின்றது; எதுவும் நிலையாத இவ்வுலகில் புத்தர்களின் உபதேசங்கள் மட்டும் நிலைத்து நிற்கின்றன. அழிவில்லாத ஆனந்தத்தை நான் நாடுகிறேன்; அதுவே பெயராத பெருஞ் செல்வம்; அதுவே ஆரம்பமும் அந்தமும் இல்லாத அழியா வாழ்வு. ஆதலால் உலகப் பற்றுள்ள என் சிந்தனையை யெல்லாம் அழித்துவிட்டேன். மக்களின் அரவமில்லாத ஒரு குகையிலே நான் ஏகாந்தத்தில் ஒதுங்கியுள்ளேன்; உணவுக்காகப் பிச்சை யெடுத்துக் கொண்டு, என் ஒரே குறிக்கோளை அடைவதிலேயே நான் ஈடுபட்டிருக்கிறேன்.

சித்தார்த்தர்: சஞ்சலம் மிகுந்த இவ்வுலகில் சாந்தி பெற முடியுமா? இன்பங்களின் வெறுமையை நான் கண்டு கொண்டேன்; அதனால் காமத்தை வெறுத்துவிட்டேன். எல்லாம் எனக்கு வேதனையாகவே உள்ளன, வாழ்க்கைகூட எனக்குத் தாங்க முடியாத துயரமாகிவிட்டது.

துறவி: சூடுள்ள இடத்தில் குளிர்ச்சியும் இருக்கும். உயிர்கள் வேதனைக்கு உட்பட்டிருக்கின்றன என்றால், அவை இன்பம் நுகரவும் ஆற்றல் பெற்றிருக்கின்றன. இவ் விஷயங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. இவ்வாறு,

எங்கே துன்பம் பெருகியுள்ளதோ, அங்கேயே அளவற்ற இன்பமும் விளையக் கூடும். ஆனால் கண்ணைத் திறந்து பார்த்து நாம் அதைக் கண்டு கொள்ளவேண்டும். குப்பைக் குள்ளே விழுந்தவன் அருகேயுள்ள தாமரைத் தடாகத்தைத் தேடவேண்டும்; அதுபோல், பாவத்தைக் கழுவி நீக்குவதற்கு நித்திய ஆனந்தமாகிய நிருவாண நீர்நிலையைத் தேடுவாயாக!

சித்தார்த்தர்: இந்த நேரத்தில் தாங்கள் கூறியது எனக்கு நற்செய்தியாகும்; இனி என் காரியம் கைகூடும். நான் வாழ்க்கையில் ஈடுபட்டு எனக்கும் என் குடும்பத்திற்கும் பெருமையளிக்கும் முறையில் உலக சம்பந்தமான கடமைகளை நிறைவேற்றி வரவேண்டும் என்று என் தந்தையர் எனக்கு அறிவுறுத்தி வருகிறார். நான் மிக்க இளமையாயிருப்பதாயும், எனது நாடித் துடிப்புக்குத் துறவு வாழ்க்கை ஒவ்வாது என்றும் அவர் கூறுகிறார்.

துறவி: உண்மையான ஆன்மிக வாழ்வுக்கு ஒவ்வாத காலம் எதுவுமேயில்லை என்பதை நீ உணர்ந்திருக்க வேண்டும்!

சித்தார்த்தரின் உள்ளத்தில் திடீரென்று உவகை மலர்ந்தது. ‘சத்தியத்தை நாடுவதற்கு இதுவே தருணம்; பூரணமான மெய்ஞ்ஞானம் அடைவதைத் தடைசெய்து நிற்கும் எல்லாப் பாசங்களையும் அறுத்துக் கொள்ள இதுவே தருணம்; ஆரணியத்திலே திரிந்து, ஐயமெடுத்து அரும்பசியை ஆற்றிக் கொண்டு, விடுதலை மார்க்கத்தை அடைவதற்கு இதுவே தருணம்!’ என்று அவர் கூறிக் கொண்டார்.

துறவி வேடம் பூண்டு நின்ற தேவரும், ‘ஆம், உண்மையை நாடுவதற்கு இதுவே தருணம். சித்தார்த்த! வெளியே புறப்பட்டு உன் இலட்சியத்தை நிறைவேற்று. நீ புத்தராகப் போகும் போதிசத்துவன், உலகில் அறிவொளியைப் பரப்ப வேண்டியவன் நீ! நீயே ததாகதன், பூரண மனிதன், தருமம் அனைத்தையும் நிறைவேற்றித் தரும ராஜனாக விளங்க வேண்டியவன் நீ! நீயே பகவன்,

உலகைக் காப்பாற்றத் தோன்றிய இரட்சகன் நீ! எந்தக் காலத்திலும் கதிரவன் தன் வழியிலேயே சென்று கொண்டிருத்தல் போல, நீதி மார்க்கத்திலேயே சென்று கொண்டிருந்தால், நீ புத்தனுவாய்; இடைவிடாமல் உன் கடமையை உறுதியுடன் செய்து வந்தால், நீ தேடுவதை அடைந்தே தீருவாய்' என்று கூறினுர்.

இவ்வாறு சொல்லிவிட்டு அவர் விரைவாக வானத்திலே பறந்து மறைந்து விட்டார். சித்தார்த்தரின் இதயத்தில் அமைதி நிலைத்தது. தருமம் என்பதன் பொருள் முழுதும் அவருக்கு விளக்கமாயிற்று. அவர் முகம் நிறைமதி போல் சுடர்விட்டது. குகையிலிருந்து மிருகேந்திரன் அறிவுற்றுப் பிடரி மயிர் பொங்கி, ஒளி வீசும் கண்களுடன் வெளியேறி நடப்பதுபோல், அவர் அங்கிருந்து எழுந்து சென்று தோழர்கள் தங்கியிருந்த இடத்தை அடைந்தார். மீண்டும் தமது பரியின்மீது அமர்ந்து நகரை நோக்கிச் சென்றுர்.

## மன்னரும் மைந்தரும்

அரண்மனையை அடைந்தவுடன், அவர் நேராக அரசரிடம் சென்றுர். அவரை முறைப்படி வணங்கி, 'மன்னர் மன்ன! பெருந்தன்மையோடு எனக்கு ஒரு வரம் அளிக்க வேண்டுகிறேன். நான் முக்தியை நாடித் துறவியாக விரும்புகிறேன். உலகில் எல்லாப் பொருள்களும் முடிவில் பிரிந்தே செல்கின்றன. பிரிவே எனக்கும் ஏற்பட்ட விதி. ஆதலால் நான் வனம் செல்வதற்கு அன்புடன் விடை தர வேண்டும்!' என்று வேண்டினுர்.

அம்மொழிகளைக் கேட்ட மன்னவர், யானையால் தாக்குண்ட மரம்போல், நிலை கொள்ளாது நடுங்கி ஆடிவிட்டார். கண்களிலே நீர் வழிய, மைந்தரின் தாமரை போன்ற தடக்கைகளைப் பற்றிக் கொண்டு, அவர் மறுமொழி கூறலானுர்: 'என் அருமைக் குமர! இந்த எண்ணம் இப்போது

வேண்டாம், துறவற வாழ்க்கைக்கு இது ஏற்ற பருவமன்று. இளமையிலே மனம் சலனப்பட்டுக் கொண்டிருக்கையில் துறவு வாழ்க்கை தவருக முடியும் என்று பெரியோர் கூறுவர். உலகப் பொருள்களிலே ஆசையுற்ற புலன்களுடன், கருத்தில்லாத இளைஞன் தவத்திற்கேற்ற உறுதியின்றித் திரும்பிவிடுவான். நற்பண்புகள் எல்லாம் நிறைந்த என் நாயகமே! எனக்குத்தான் வயதாகிவிட்டது! நாடாளும் பொறுப்பையும் சிறப்பையும் உன்னிடம் ஒப்படைத்து விட்டு, நான் தவம் புரியச் செல்கிறேன். மதிநலம் படைத்த நீ சிறந்த மன்னனுக விளங்குவாய். வீரமே உனது தருமம்; பெற்ற தந்தையைப் பிரிந்து செல்வது உனக்கு அறமன்று. அரச போகத்தில் ஆழ்ந்திருந்த நானே ஆரண்யம் செல்வேன். நீ உன் எண்ணத்தைக் கைவிட்டுவிடு!'

இனிமையான இசை எழுவது போன்ற குரலில் இளவரசர் பதிலுரைத்தார்: 'அரசே! நான்கு விஷயங்களை நிறைவேற்றிக் கொடுக்கும் பொறுபைத் தாங்கள் ஏற்றுக் கொண்டால், நான் வனம் செல்லமாட்டேன். என் வாழ்க்கையில் மரணம் நேரலாகாது; என் உடல் நலத்தை நோய்கள் கெடுத்தலாகாது; என் இளமையை முதுமை வந்து பாழாக்கக் கூடாது; என் இன்பத்தைப் பீடை எதுவும் குலைத்து விடக் கூடாது.'

வேந்தர், 'வேண்டாம், கண்ணே! வேண்டாம்! நாட்டை விட்டு அகலும் எண்ணத்தை அகற்றிவிடு. இயலாத செயல்களில் முனைந்து நிற்பது ஏளனமாகும்!' என்று கூறிவிட்டு மௌனமாயிருந்தார்.

ஆனால் சித்தார்த்தரோ மேரு கிரி போல் உறுதியுடன் நிமிர்ந்து நின்றார். 'நான் கேட்டதைச் செய்ய இயலாது போனல், என் வழியைத் தடை செய்யலாகாது; தீப்பற்றி எரியும் வீட்டிலிருந்து தப்பி வெளியேறுதல் தீமையா? அப்படிச் செல்லும் ஒருவனைத் தடுத்து நிறுத்துதல் நியாயமன்று!' என்று அவர் எடுத்துரைத்தார். 'உலகில் எல்லோ

ரும் பிரிய வேண்டியவர்களே. முடிவான அந்தப் பிரிவை யாரும் தடைசெய்ய முடியாது. அதற்கு முன்னதாக இப்போது பெரியதோர் இலட்சியத்திற்காக நாகைப் பிரிவை வேண்டுகிறேன்' என்றும் அவர் சுட்டிக் காட்டினார்.

அவருடைய உறுதியை அரசர் கண்டார். அவருடன் மேற்கொண்டு வாதாடுவதில் பயனில்லை என்று கருதி, 'உன் பிரிவு உசிதமில்லை !' என்று மட்டும் கூறி நிறுத்திக்கொண்டார்.

கனிகின்ற துயரோடு கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்த தந்தையைக் காணச் சகியாமல், சித்தார்த்தர் தமது அரண்மனைக்குத் திரும்பினார். சுத்தோதனர் முக்கியமான மந்திரிகள், பிரதானிகளை அழைத்துப் பெற்றோருக்குப் பிள்ளைகள் செய்யவேண்டிய கடமைகளை நீதி நூல்முறைப்படி சித்தார்த்தருக்கு எடுத்துரைக்கும்படி அனுப்பி வைத்தார். வழக்கம்போல, இளவரசரின் அரண்மனைக்கு வெளியேயும், நகர வாயில்களிலும் அதிகக் காவலர்களும் நியமிக்கப் பெற்றனர். மன்னரின் சகோதரர்களும் நேரிலே சென்று காவலைக் கண்காணித்து வந்தனர்.

## பெருந் துறவு

மாலை வந்து அகன்றது. இரவிலே வான வீதியில் முழுமதி தண்ணொளி பரப்பிக்கொண்டிருந்தது. அரண்மனை, தோட்டம், துரவுகள் எல்லாம் வெள்ளியால் செய்தவை போல, ஒரே வெண்மை மயமாகத் திகழ்ந்தன. சித்தார்த்தர் தமது அரண்மனை மாடியில் இசை மண்டபத்திலே உயர்ந்ததோர் பொற்பீடத்தில் அமர்ந்திருந்தார். நந்தவனத்தில் இளமான்கள் கூடியிருப்பதுபோல, நங்கையர் பலர் அவரைச் சூழ்ந்திருந்தனர். மேனகை போன்ற மெல்லியலார் சிலர் நடனமாடினர். குயிலையும் வெற்றிகொள்ளும் குரலில் சிலர் இனிமையாகப் பாடினர். வீணையும், முழவும், பிற

கருவிகளும் காதுக்குக் குளிர்ச்சியான இசையைப் பரப்பிக் கொண்டிருந்தன. கேட்கக் கேட்கத் தெவிட்டாத கீதங்கள், பொன்னிறமான மின்னற் கொடிகள் அசைவது போன்ற ஆடல்கள், ஆராத அமுத மழை பொழிவது போன்ற இசைகள் ஆகியவற்றில் எதுவும் சித்தார்த்தர் கருத்தைக் கவர முடியவில்லை. அவருடைய உடல்தான் அங்கிருந்ததே தவிர, உள்ளம் எங்கோ தொலை தூரத்தில் அருவிகள் பாயும் ஆனந்த வனங்களிலே திரிந்து கொண்டிருந்தது.

இரவு முழுவதும் அங்கே இசை வெள்ளமிட்டுப் பெருகிக் கொண்டிருப்பது வழக்கம். ஆனால் அன்று ஆடலும் பாடலும் திடீரென்று அமர்ந்துவிட்டன. கலாப மயில்களைப் போல் ஆடிக்கொண்டிருந்தவர்களும், பட்டமரம் தளிர்க்கும்படி பாடிக்கொண்டிருந்தவர்களும், யாவர்களும் அவரவர் இருந்த இடங்களிலேயே அயர்ந்து படுத்துவிட்டார்கள். எல்லோரையும் உறக்கம் பற்றிக் கொண்டுவிட்டது. துயில்கொண்ட தோகையர்களைச் சித்தார்த்தர் ஏறிட்டுப் பார்த்தார்.

அழகே உருக்கொண்டு விளங்கிய அணங்குகள் அலங்கோலமான பல நிலைகளில் சிதறிக் கிடந்தார்கள். கருமேகம் போன்ற கரிய கூந்தல்கள் தரைமீது அலையலையாகப் புரண்டு கொண்டிருந்தன. வாடி நொசிந்த கொடிகளைப் போல உடல்கள் நுடங்கிக் கிடந்தன. மீன்களைப் போல மிளிர்ந்துகொண்டிருந்த கருநீலக் கண்கள் முகிழ்த்திருந்தன. சிறிது நேரத்திற்கு முன்னால், வானத்திலேயுள்ள வானவில் போல், பல வண்ணங்களோடு சுடர்விட்டு உலவிக்கொண்டிருந்த அந்த உயிரோவியங்கள் அப்போது உயிரடங்கி ஒடுங்கிக் கிடந்தன. அம்மங்கையர் மூச்சு வாங்கும்போது பொங்கி யெழுந்த மார்புகளையும், கனவுகளால் அவர் முகங்களில் தோன்றும் குறிகளையும் ஆங்கே தொங்கிக்கொண்டிருந்த பொன் விளக்குகளின் ஒளி எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

ஒருத்தி புல்லாங்குழலைப் பற்றிய கையுடன், மார்பை மறைத்துக் கொண்டிருந்த வெண் துகில் அகன்றதை அறியாமலே உறங்கிக்கொண்டிருந்தாள். ஒருத்தி மத்தளத்தைக் காதலனைப் போல் இரு கைகளாலும் அணைத்த வண்ணம் துயின்று கொண்டிருந்தாள். பாடிக்கொண்டிருந்த ஒரு பாவையின் கை இன்னும் வீணைத் தந்திகளிலே மாட்டிக் கொண்டிருந்தது. சாளரத்தருகே நின்றுகொண்டிருந்த ஒரு பெண், அதைப் பிடித்தவண்ணம், வில்லைப்போல் வளைந்து, கவிழ்ந்த தலையுடன் மெய்மறந்திருந்தாள்; அவள் பெண்ணோ, சலவைக் கற்சிலையா என்று தெரியாமலிருந்தது. மானுக்கு உணவளித்துக் கொண்டிருந்த ஒரு மாதரசி அப்படியே சாய்ந்து உறங்குகையில், மானும் அவள் மார்பில் தலை வைத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. ஒருத்தி தன் பொற் சங்கிலிகளும், நகைகளும், உடைகளும் கழன்று வீழ்ந்த நிலையில், யானையால் மிதிக்கப்பட்டவள் போலத் துவண்டு கொண்டிருந்தாள். எவ்வளவோ நாணத்தோடு விளங்கி வந்த நாகரிக நங்கையர் பலர் அப்போது பலமாகக் குறட்டை விட்டுக்கொண்டு, கைகளையும் கால்களையும் தாறுமாறாகப் பரப்பிக்கொண்டு, நெடுந்துயிலில் ஆழ்ந்திருந்தனர். முத்துக்கள் பதித்த செம்பவளச் செப்புக்களைப் போன்று சில பெண்களின் வாய்கள் பிளந்திருந்தன ; சிலருடைய வாய்களிலிருந்து உமிழ்நீர் வழிந்து கொண்டிருந்தது. பூத்தொடுத்துக் கொண்டிருந்த பாவையர் சிலர் தங்கள்மீதும், அருகேயிருந்த தோழியர்மீதும் அம்மாலைகளைப் போட்டுக்கொண்டு உறங்கினர். மொத்தத்தில் உறக்கத்தால் ஒசிந்து வீழ்ந்திருந்த அந்தப் பெண்கள் மத யானை அழித்தெறிந்த மலர்க் கொம்புகள், கொடிகளைப் போலவும், புயலால் தாக்குண்ட பூத்தடங்கள் போலவும் காணப்பட்டனர். இடையிடையே சிலருடைய கால்களின் அசைவினால் சிலம்பொலி கேட்டது. சிலர் இன்பக் கனவுகள் கண்டு நகைத்தனர்; சிலர் தீய கனவுகள் கண்டு புலம்பினர். இவை

களை யெல்லாம் கண்டும் கேட்டும் சித்தார்த்தர் தமக்குள்ளே சிந்தனை செய்து கொண்டிருந்தார்.

'பாவம்! பசும் பொன்னால் செய்த உயிர்ப் பாவைகள் போல் விளங்கிய இப் பெண்கள், உறக்கம் வந்து கண்களை மூடியவுடன், எவ்வளவு அலங்கோலமாகக் காட்சியளிக்கிறார்கள்! அழகிய ஆடைகளிலும், அணியிழைகளிலும் மயங்கி நிற்கும் ஆடவர்கள் இப்போது இவர்களின் எழிலைப் பார்த்தால், உண்மை நிலையை உணர்ந்து கொள்வார்கள்!' என்று அவருக்குத் தோன்றிற்று.

அவர் அமர்ந்திருந்த இசை மண்டபத்தின் அருகே மணவறையில் தேவி யசோதரை மலரணைமீது துயின்றுகொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் கோவேந்தரின் குலக்கொழுந்தாகிய குழந்தை இராகுலன் வாடிய முளரிபோல், கண்ணயர்ந்திருந்தான். அன்னையின் மலர்க்கரம் அவன் தலைமீது கவிந்திருந்தது. சித்தார்த்தர் மெதுவாக அங்கே சென்று அவர்களைப் பார்த்தார். உயரேயிருந்து பொற்சங்கிலிகளில் தொங்கிக்கொண்டிருந்த பொன்விளக்குக்களின் ஒளியோடு, சாளரங்களின் வழியாக நிலவொளியும் வீசிக்கொண்டிருந்தது. சீதளம் மிகுந்த இமயமலைக் காற்று ஜில்லென்று வீசிக்கொண்டிருந்தது. நந்தவனங்களிலிருந்த சண்பகம், முல்லை, மல்லிகை முதலிய மலர்களின் நறுமணமும் அத்துடன் கலந்து வந்தது.

உறங்கிக் கொண்டிருந்த யசோதரை ஏதோ தீக் கனவுகள் கண்டு, துக்கத்துடன் திடுக்கிட்டு எழுந்து, 'நாதா, நாதா!' என்று கூவினள். சித்தார்த்தர் அருகே சென்று, 'என் உயிரே! என்ன நேர்ந்தது? ஏன் துயரப்படுகிறாய்?' என்று கேட்டார். தேவி தான் கண்ட கனவுகளைப் பற்றிப் பதைபதைப்புடன் கூறினள். முதலாவது கனவில், கட்டுக் கடங்காத அழகிய காளை ஒன்று தலைநகரிலிருந்து தப்பி ஓடிவிட்டது; அவளே அதன் கழுத்தைக் கட்டிக்கொண்டு பிடித்து நிறுத்த முயன்றும், அது கட்டுக்கடங்காமல்

பறந்தோடிவிட்டது; அந்தக் காளை போய்விட்டால் நகரின் மங்களச் சிறப்புக்கள் மறைந்துவிடும் என்று இந்திரன் கோயிலிலிருந்து ஒரு சப்தமும் கேட்டது. இரண்டாவது கனவில், இந்திரன் ஆலயத்தில் நாட்டியிருந்த பழைய பொற்கொடி அற்று வீழவும், அழகிய புதுக்கொடி ஒன்று உயரே ஏறிவிட்டது; அதில் பொருள் செறிந்த சில புது மொழிகள் பொறிக்கப் பெற்றிருந்தன; அதன்மீது வானத்திலிருந்து மலர்மழை பொழிந்தது. மூன்றாவது கனவில், தேவியின் அறையிலிருந்த சித்தார்த்தர் திடீரென்று மறைந்து விட்டார்; அவருடைய துகில் ஒன்று மட்டுமே அங்கே கிடந்தது; அத்துடன் தேவியின் காற்சிலம்புகள் கழன்று விழுந்தன; கைக் காப்புக்களும் தறிப்புண்டு சிதறின.

சித்தார்த்தர் அவளுக்கு ஆறுதல் கூறினார். அவள் கனவுகளிலே கண்ட செய்திகள் நன்னிமித்தங்களே என்று எடுத்துக்காட்டினார். ஆனால் யசோதரை சாந்தியடையாமல், 'என் அன்பே! நகருக்கு வெளியே ஓடிவிட்ட காளை அங்கிருந்து கொண்டே உறுமிய ஒலி என் உள்ளத்தைக் கலக்கி விட்டது. மேலும், கோயிலின் கொடி மரத்தில் ஆடிக்கொண்டிருந்த கொடி, காற்றில் வீசியடித்ததும் பயங்கரமாயிருந்தது. காற்றிலே கலந்துவந்த அசரீரியின் ஒலி, "காலம் வந்துவிட்டது! காலம் வந்துவிட்டது!" என்று உரக்க ஒலித்துக் கொண்டேயிருந்தது. இவையெல்லாம் எனக்கு ஏதோ ஆகாத காலம் என்பதையே அறிவுறுத்துவதாக அஞ்சுகிறேன்!' என்று கூறினள்.

ஆசைகளை அவித்து, விருப்பு வெறுப்புக்களைக் களைந்து, எல்லா உயிர்களிடத்தும் சமமாகக் கருணை பொழிந்துகொண்டிருந்த நிலையில் சித்தார்த்தர் தம் அருகே வாடித் துடித்துக் கொண்டிருந்த அருமைக் காதலிக்கு இயன்றவரை ஆறுதல் கூறினார். 'உலகில் நான் அறியாத இடங்களில் எங்கெல்லாமோ சிதறி வாழ்ந்து கொண்டிருக்கும் மக்கள் அனைவரையும், மற்ற உயிர்களையும் என் உற்றார் உறவினராக

நினைத்து யான் அன்பு செலுத்துகிறேன். இந்த நிலையில், இத்தனை நாளும் ஒரே உயிர்போல் என்னுடன் வாழ்ந்து வந்த உன்னிடத்தும் எனக்கு அளவற்ற அன்பு உண்டு. சில நாட்களாக எல்லோருடைய துக்கத்தையும் மாற்றுவதற்கு உரிய வழியைப் பற்றிய சிந்தனையிலேயே நான் ஆழ்ந்திருக்கிறேன். காலம் வரும்போது என் கருத்தும் கைகூடும். எல்லோர்க்குமாக நான் தேடுவது முக்கியமாக உனக்கும் பயன்படும். நீ கண்ட கனவுகள் எதிர்கால நிகழ்ச்சிகளையே குறிப்பிடுவனவாகவும் இருக்கலாம். ஆனால், எது எப்படியாயினும், என் யாசோதரையிடம் நான் கொண்டுள்ள அன்பு என்றும் மாறாது!' என்று பல இனிய மொழிகள் கூறி, அவளை அச்சமின்றி மறுபடி துயில் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார். அவ்வாறே அவள் மைந்தனை ஒரு கையில் அணைத்த வண்ணம் அப்படியே கண்ணயர்ந்துவிட்டாள்.

ஜவந்தி மலர்களும், முல்லையும், பிச்சியும், ரோஜா இதழ்களும் பரப்பியுள்ள மலர் அமளி மீது பள்ளி கொண்டிருந்த தாயையும் சேயையும் நின்று பார்த்தார் சித்தார்த்தர். தம் அருமைக் குழந்தையைக் கையிலெடுத்துக் கடைசி முறையாகப் பார்க்க வேண்டும் என்று அவருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. 'இராணியின் கையைத் தூக்கி வைத்துவிட்டு என் மைந்தனை எடுத்தால், அவள் விழித்துக் கொண்டுவிடுவாள்; நான் வெளியேறுவதற்கு அது இடையூறாகும். நான் புத்தனான பிறகு மீண்டும் வந்து என் செல்வனைப் பார்த்துக் கொள்கிறேன்!' என்று அவர் தமக்குள்ளேயே சொல்லிக்கொண்டு முதலில் எழுந்த எண்ணத்தைக் கைவிட்டார். யசோதரை நித்திரை செய்து கொண்டே, தான் முன்பு கண்ட கனவின் நினைவில், 'காலம் வந்து விட்டது! காலம் வந்துவிட்டது!' என்று புலம்பினாள்.

'காலம் வந்து விட்டது!' என்ற சொற்கள் சித்தார்த்தரின் மௌனத்தைக் கலைத்துவிட்டது. தாம் நாட்டையும்

நகரையும் துறந்து, உற்ருர் உறவினரையெல்லாம் பிரிந்து, வெளியேற வேண்டிய காலம் வந்துவிட்டது என்பதை அவர் உணர்ந்து கொண்டார். மாநில ஆட்சியை அவர் மதிக்க வில்லை. உயர்ந்த ஆடை ஆபரணங்களை அவர் அலட்சியம் செய்தார். பட்டாடைகளுக்கும் பொன்னுடைகளுக்கும் பதிலாகத் தாழ்த்தப் பெற்ற சண்டாளரின் உடைக்கு மேலானது தமக்குத் தேவையில்லை என்று தீர்மானித்தார். அரண்மனையின் அறுசுவை உணவுக்குப் பதிலாகப் பிச்சைச் சோறே இனித் தமது உணவு என்று உறுதி செய்து கொண்டார்.

உலகத்து உயிர்களின் புலம்பலெல்லாம் அவர் திருச் செவிகளில் ஒரே ஒலியாக ஒலித்துக் கொண்டிருந்தன. அத ஞல் அவருடைய ஆருயிர் துன்புற்று உருகியது. உயிர்களின் துக்கத்தை நீக்கும் வழி யாது? அதை அறிய வேண்டும். அது எதுவாயினும், வழி ஒன்று உண்டென்று அவர் நெஞ் சில் உறுதியாகத் தெரிந்தது. ஆறறிவு பெற்ற மனிதரைக் காப்பாற்றும் வழியைக் கண்டுகொண்டால், அதுவே ஏனைய உயிர்த் தொகுதிகளையும் காக்க உதவும் என்ற துணிவு ஏற் பட்டது. அவருடைய அருமைத் தந்தையர் கூறியபடி வயோதிகம் வந்த பிறகு துறவறத்தை மேற்கொள்வதில் பொருளில்லை என்று அவருக்குத் தோன்றிற்று. கைக்கு எட்டிய ஆட்சியையே கைவிட வேண்டும்; இன்பங்களை நுகர்வதற் கேற்ற இளமையும், எழிலும், ஆண்மையும் நிறைந்துள்ள போதே போகங்களை ஒதுக்கிவிட்டுத் துறவு கொள்ள வேண்டும்; சுய நலத்திற்காக அல்லாமல் மண்ண கத்து மக்களுக்காகவே சகல பாக்கியங்களையும் இழக்க வேண் டும்; இவ்வாறு முற்றும் துறந்து முனைந்து தேடினுல், மெய்ப்பொருளை எப்படியும் கண்டு விடலாம் என்று அவர் வைராக்கியம் கொண்டார். ‘இனி மண்ணே எனக்கு மல ரணை, காடுகளே எனக்கு வீடுகள்!’ என்று அவர் சொல்லிக் கொண்டார்.

பங்கயச் செல்விபோல் படுத்துறங்கும் கற்புக்கரசியை மீண்டும் நோக்கி, ‘இன்பக் கனியமுதே! அளப்பரிய அன்பினால் உன்னையும் துறக்கத் துணிந்து விட்டேன்! என் முயற்சியால் உலகம் உய்ய நேர்ந்தால், அதனோடு சேர்ந்த உனக்கும் உய்வுண்டாகும்!’ என்று கூறி, அவள் அரவணைப்பிலிருந்த குழந்தையையும் கண்குளிரக் கண்டுவிட்டு, வெளியே வானத்துத் தாரகைகளை நோக்கினார். நேரமாகி விட்டது என்ற துடிப்புடன், முத்துச் சரங்களால் அலங்கரிக்கப் பெற்ற கட்டிலை வேகமாய்ச் சுற்றி வந்து வெளியேற முயன்றார். மூன்று முறை வெளியேறிய அரசர் பெருமகனார் மீண்டும் மீண்டும் அறைக்குள்ளேயே திரும்பிவிட்டார். அவ்வளவு வலிமை பெற்றிருந்தது தேவியின் அந்தமில்லாத அழகு, ஐயனும் அவள்பால் அவ்வளவு அன்பு கொண்டிருந்தார்! அந்த நேரத்தில், பெற்ற தாயினும் உற்ற தாயாக விளங்கிய உத்தமி கௌதமியையும், அல்லும் பகலும் கவலையுடன் தம்மை வளர்த்துவந்த தந்தையையும், தம்மிடம் தணவாக் காதல் கொண்டிருந்த நாட்டு மக்களையும் மனத்திலே நினைத்துக் கொண்டார். ‘என் பிரிவால் உங்களுக்கு உண்டாகும் சிறு துயரை நீங்கள் அனைவரும் பொறுத்தருள வேண்டும்; ஏனெனில் உங்களுக்காகவே நான் செல்கிறேன்!’ என்று கூறிக்கொண்டு அவர் அங்கிருந்து விரைவாக வெளியே வந்தார்.

வெளி மண்டபத்திலே துயின்றுகொண்டிருந்த பெண்கள் பலரையும் மறுபடி பார்த்தார். பல்லாண்டுகளாக அவருக்குப் பணி செய்வதையே பாக்கியமாகக் கொண்டிருந்தவர்கள் அவர்கள். அவர் மனத்தினால் அவர்களிடமும் விடைபெற்றுக் கொண்டார். ‘இனிமை மிக்க தோழியரே! இப்பொழுது மூச்சோடு உறங்குகின்றீர்கள். இதே போல, அழகும் இனிமையும் இழந்து, கடைசியில் மூச்சில்லாமலே நீங்கள் உறங்குவீர்கள் என்பதை எண்ணியே நான் பிரிகிறேன்! இப்போதே இந்த இடம் மயானம்

போலவே தோன்றுகின்றது!' என்று சொல்லிக் கொண்டு மெதுவாக அவ்விடத்தையும் விட்டு அகன்றார்.

சித்தார்த்தரின் உள்ளக் கருத்தை உணர்ந்த தேவர்கள் அரண்மனை வாயிற் கதவுகள் தாமாகவே திறந்து கொள்ளும் படி செய்தனர். துயிலையே கண்டறியாத காவலர்கள் அனை வரும் அந்நேரத்தில் அயர்ந்து துயில் கொண்டிருந்தனர். கதவுகள் திறந்திருப்பதைக் கண்ட இளவரசர், வேகமாக மாடியிலிருந்து கீழேயிறங்கி, சாரதி சந்தகனை மெதுவாகக் கூவி அழைத்தார். எந்த நேரத்திலும் அவருக்குப் பணி செய்வதற்காக அங்கேயே காத்திருந்த சந்தகன் உடனே எழுந்து ஓடிவந்தான். சித்தார்த்தர் அன்பும் உறுதியும் கலந்த குரலில் அவனிடம் தம் செய்தியைக் கூறினார்.

'சந்தகா! பேரின்பத்தை நாடி நான் வெளியேறிச் செல்லத் தீர்மானித்துள்ளேன். என் கண்டகக் குதிரையை விரைவிலே கொண்டுவா! என் உள்ளத்தில் உறுதி பிறந்து விட்டது. சபதமும் செய்துவிட்டேன்.

'இதுவரை தெய்வ மங்கையர் போல விளங்கிய என் தோழியர் பலரையும் இன்றுதான் நன்றாகக் கண்டு கொண் டேன். அருவருக்கத் தகுந்த சடலங்களாக அனைவரும் தரைமீதுள்ள இரத்தினக் கம்பளங்களிலே உருண்டு கொண்டிருக்கின்றனர்!

'எவ்வளவோ காவலுடன் பூட்டிப் பாதுகாக்கப்பெற்ற அரண்மனை வாயிற் கதவுகள் தாமாகத் திறந்து கிடப்பதைப் பார்! இந்த நாள் என் வாழ்க்கையின் சிகரமான நாள்! என் சங்கற்பம் நிறைவேறும் என்ற நன்னிமித்தங்களே எங்கும் காணப்படுகின்றன. ஆதலால் விரைவிலே பரியைக் கொணர்ந்து தருக!'

சந்தகன் நின்று யோசித்தான். மன்னரின் கட்ட ளையை அவன் மறக்கவில்லை. ஆயினும் இளவரசரை எதிர்த்துரைக்கவும் அவனுக்கு மனம் வரவில்லை. தேவர் களின் உதவியால் அவன் உள்ளம் உறுதி கொண்டது.

உடனே சென்று குதிரையைக் கொணர்ந்து நிறுத்தினன். கண்டகம் அசுவ இலக்கணங்கள் அனைத்தும் ஒருங்கே அமைந்த உயர்ந்த குதிரை. அகன்ற முதுகு, உயர்ந்து வளர்ந்த பிடரி, மானின் வயிற்றைப்போல் முதுகுடன் ஒட்டிய வயிறு, அகன்ற நெற்றி, வட்டமாக விரிந்து விசால மான நாசித் துவாரங்களுடன் விளங்கிய தம் குதிரையைக் கண்டதும், இளவரசர் அதனருகே சென்று, தமது மலர்க் கரங்களால் அதைத் தடவிக் கொடுத்தார்.

'அசுவ திலகமே! எத்தனையோ போர்களில் என் வீரத் தந்தைக்கு வெற்றி தேடிக் கொடுத்தனை! இப்போது நான் அழியா வாழ்வு பெறச் செல்கிறேன். அதற்கு உன் உதவி தேவை. செல்வச் செழிப்பிலும், போர்க்களத்திலும் நண் பர்கள் கூடுவர். ஆனல் தரித்திரத்திலும், தரும மார்க்கத் திலும் துணைவர் கிடைத்தல் அரிது. ஆயினும் இப்போது என் உயிருக்கு உலகிலுள்ள எல்லோருமே துணைவராகி விட்டனர். நன்மையிலும் தின்மையிலும் மக்கள் அனைவ ரும் சகோதரர்களே. ஆகவே எனது உயர்ந்த இலட்சியத் திலும் எல்லோர்க்கும் பங்கு உண்டு, ஆதலால் உலகின் நன்மைக்காகவே நான் போகிறேன். இதில் நீயும் உன் சேவையைச் செம்மையாகச் செய்யவேண்டும்!' என்று அதற்கு உபதேசமும் செய்தார்.

இளவரசர் குதிரைமீது அமர்ந்ததும், சந்தகன் அடர்ந்து வளர்ந்திருந்த அதன் வாலைப் பிடித்துத் தொங்கிக் கொண்டான். வெண் மேகம் வானத்தில் விரைந்து செல் வதுபோல் பாய்ந்து சென்றது கண்டகம். அதன் காலோசை கூட எவருடைய செவியிலும் கேட்கவில்லை. வழியிலே சித்தார்த்தர் தந்தையின் அரண்மனை வாயிலை அடைந்ததும், அத்திசை நோக்கி வணக்கம் செலுத்திவிட்டு, விரைவிலே நகர எல்லையை அடைந்தார். கோட்டை வாயில்களும் தாமாகவே திறந்திருந்தன. அவைகளைக் கடந்ததும், நாட் டைத் துறக்கும் நற்றவ மூர்த்தி, கன்னி மதிலும், காவலும்

கொண்ட கபிலை நகரை ஒரு முறை நன்றாகத் திரும்பிப் பார்த்தார். 'ஜனன மரணங்களின் எல்லையைக் கண்டா லல்லாது இந்த அணி நகருக்கு இனித் திரும்பேன்!' என்ற சொற்கள் அவர் வாயினின்று வெளி வந்தன.

அன்று பூர்ணிமை.* நிறை மதியின் நிறைந்த ஒளியில் குதிரை மின்னல் வேகத்தில் ஓடிக்கொண்டிருந்தது. இரு பத்தொன்பது ஆண்டுகளாகப் பூமியிலே மனிதர் அடையக் கூடிய உயர்ந்த செல்வங்கள் அனைத்தையும் ஒருங்கே பெற்று வாழ்ந்திருந்த சித்தார்த்தர், ஒரு நொடியிலே அனைத் தையும் துறந்து, அந்தக் குதிரை ஒன்றையே துணையாய்க் கொண்டு, நாடும் காடும் கடந்து சென்று கொண்டிருந்தார்.

அன்று முதல் இன்றுவரை சித்தார்த்தரின் இந்தப் பெருந் துறவு 'மகாபிநிஷ்கிரமணம்' என்று போற்றப் படுகிறது. அவருடைய இளமை பற்றியும், இத்துறவு பற்றியும் பிற்காலத்தில் போதி யடைந்தபின் அவர் தம் சீடர்களுக்கு எடுத்துரைத்த சில விவரங்கள் பௌத்தத் திருமுறைகளிலே காணக் கிடைக்கின்றன. இளவயதில் அவர் தந்தையரின் அரண்மனையில் மிகமிக ஆடம்பரமாக வாழ்ந்து வந்ததாயும், தனித்தனியே வெள்ளைத்தாமரை, செந்தாமரை, நீலத் தாமரை மலர்கள் நிறைந்த மூன்று தடாகங்கள் அவருக்காக அமைந்திருந்ததாகவும், காசிச் சந்தனம், காசிப்பட்டு உடைகளைத் தவிர வேறு சந்தனத் தையோ உடைகளையோ அவர் தீண்டியதில்லை என்றும், அவர் இருந்த இடமெல்லாம் இரவும் பகலும் வெண் கொற் றக் குடை பிடிக்கப் பெற்றதாகவும், தூசியோ பனியோ அவர்மீது பட்டுவிடாமலும், வெப்பமும் குளிர்ச்சியும் உட லைத் தாக்கி விடாமலும் அந்தக் கவிகை அவரைப் பாது காத்து வந்ததாகவும், அவர் வசிப்பதற்காக மூன்று அரண்

---

* அன்று ஈசான சகம் 96 (கி- மு. 573) வைகாசி மாதம், 3-ஆம் தேதி, வெள்ளிக்கிழமை.

மனைகள் தனியாக அமைக்கப் பெற்றிருந்ததாகவும், வேலையாட்களுக்கும் அடிமைகளுக்கும் மற்ற மாளிகைகளில் குறுணையும் கஞ்சியும் கொடுத்து வந்தது போலன்றி, மன்னரின் அரண்மனையில் அவர்களுக்கு நல்ல அன்னமும் இறைச்சியும் அளித்து வந்ததாகவும் அவர் கூறியுள்ள சில வாக்கியங்கள் 'அங்குத்தர நிகாய'த்தில் இருக்கின்றன.

துறவைப் பற்றி அந்த நூலிலுள்ள குறிப்புக்களில் சித்தார்த்தர் கிழவன், பிணியாளன், மரித்தவன், துறவி ஆகியோரைச் சந்தித்த விவரங்கள் இல்லை. மனிதன் முதுமையும், நோயும், மரணமும் தனக்கு இயல்பாயிருக்கையில், அந்நிலைமைகளை அடைந்த மற்றவர்களைப் பார்க்கும் போது வெறுப்பும், வேதனையும், வெட்கமும் அடைவது முறையில்லை என்று மட்டும் அவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

'மஜ்ஜிம நிகாயம் - அரிய பரியேசன சூத்திர'த்தில் பின்கண்ட விவரம் உள்ளது :

> 'ஓ சீடர்களே! நான் போதியடைவதற்கு முன்னால், மெய்ஞ்ஞானம் பெறாமல் போதிசத்துவராக இருந்த காலையில், நானே மீண்டும் பிறவியெடுக்கும் நிலையிலிருந்ததால், பிறப்பின் தன்மையை ஆராய முயன்றேன் ; நானே முதுமையடையக் கூடியவனானதால், முதுமையின் தன்மையை ஆராய்ந்தேன் ; இவற்றைப் போலவே, பிணி, மரணம், துன்பம், பாவம் ஆகியவற்றையும் ஆராய நேர்ந்தது. அப்பொழுது, "பிறப்பு, முதுமை, பிணி, மரணம், துன்பம் ஆகியவை எனக்கும் உரியவையாயிருக்கையில், அவைகளைப் பற்றி ஆராய்ந்து பார்த்துப் பிறப்பற்ற பேரின்பமாகிய நிர்வாணத்தை அடைவதற்கு நான் ஏன் முயற்சி செய்யக் கூடாது ?" என்று நான் எண்ணினேன்.'

மேலும், சித்தார்த்தர் மிக்க இளமையிலேயே, சிறுவனாயிருக்கும்போதே, துறவு பூண்டதாயும் இந்நூலில் அவர் கூறியுள்ளார். ஆயினும் அவருக்கு இராகுலன் என்ற

குழந்தை இருந்ததை எல்லா வரலாறுகளும் எடுத்துரைப்ப தால், அவனுடைய தோற்றத்திற்குச் சிலநாள் முந்தியோ பிந்தியோதான் சித்தார்த்தர் துறவு பூண்டிருக்க வேண்டும் என்பது உறுதியாகின்றது.

'புத்த வமிசம்' என்ற நூலில் புத்தரே கூறியதாகக் குறிக்கப் பெற்றிருக்கும் வாக்கியங்கள் இவை :

> 'எனது நகரம் கபிலவாஸ்து. சுத்தோதன மன்னர் என் தந்தையர். மாயா தேவி என் அன்னையர்.
>
> 'இருபத்தொன்பது ஆண்டுகள் நான் இல்லத்தில் இருந் தேன். இராமம், சுராமம், சுபதம் என்னும் பெயருள்ள இணையற்ற மூன்று மாளிகைகள் எனக்கு இருந்தன.
>
> 'ஆபரணங்களால் நன்கு அலங்கரிக்கப்பெற்ற நாற்ப தாயிரம் மகளிர் எனக்குப் பணிவிடை செய்து வந்தனர். பத்த கச்சானு (யசோதரை) எனது மனைவி. இராகுலன் எனது மகன்.
>
> 'நான்கு விதமான நிமித்தங்களைக் கண்டு நான் குதிரை ஏறிப் புறப்பட்டுச் சென்றேன்........'

புத்த பகவருடைய வாக்கியங்களிலிருந்து அவருடைய சுய சரித்திரத்தில் சில பகுதிகள் மட்டுமே தெளிவாய்த் தெரிகின்றன. மற்றைப்படி பின்வந்த ஆசிரியர்களும், கவிஞர்களும் எழுதி வைத்த வரலாறுகள், காவியங்களி லிருந்தே சரித்திர விவரங்களை அறிய வேண்டியிருக்கின் றது. இவைகளுக்குள்ளே சில முரண்பாடுகள் இருப்பதும் இயற்கையேயாம்.

ஆறும் இயல்

# கௌதம பிக்கு

' கறையற்ற பல்லும், கரித்துணி ஆடையும், கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும், பொல்லாத ஊனும், புறந்திண்ணையும்,
தரையில் கிடப்பும், இரந்(து) உண்ணும் ஓடும், சகம்) அறியக்
குறைவற்ற செல்வ(ம்) என்றேகோல மாமறை கூப்பிடுமே!'

—பட்டினத்தடிகள்

காலை இளம் பரிதி கீழ்த்திசையில் பல கோடிக் கதிர்களைப் பரப்பிக்கொண்டு உதயமாகும் நேரத்தில் கண்டகம் அநோம நதிக்கரையை அடைந்துவிட்டது. இரவில் எங்கும் நில்லாது சுமார் இருபது மைல் தூரம் ஒரே பாய்ச்சலாக ஓடிவந்துகொண்டிருந்த அக்குதிரை, அநோம நதிக்கரையில், பிருகு புத்திரரான பார்க்க முனிவரின் ஆசிரமத்திற்கருகே வந்ததும், களைத்து நின்று விட்டது. சித்தார்த்தர் தாம் அடைய வேண்டிய கானகம் அதுதான் என்று கருதினார். குதிரை நின்ற இடத்திலேயே அவரும் சந்தகனும் கீழே இறங்கிவிட்டனர். இறங்கியதும், சித்தார்த்தர் குதிரையைத் தட்டிக்கொடுத்து, ' உன்னால் எல்லாம் இனிதாக முடிந்தது!' என்று அதை வாழ்த்தினார்.

## சந்தகன் துயரம்

சந்தகனை அவர் மிகவும் புகழ்ந்தார். அவரிடம் அவனுக்கு நிறைந்த அன்பு இருந்ததோடு, அவர் நினைக்கும் காரியங்களை உடனுக்குடனே நிறைவேற்றிக்கொடுக்கும் திறனும் அவனிடம் இருந்தது. கடைசியாக அவர் நகரை

நீங்கி வனத்தை அடைவதற்கும் அவன் ஒப்பற்ற உதவி யைச் செய்துவிட்டான். இதற்காக அவனைச் சித்தார்த்தர் பாராட்டினார். 'உற்ற உறவினர் கூட ஒருவனுடைய அதிர்ஷ்டம் குறையும்போது வேற்றாராகி விலகிவிடுவர். நீயோ, பயன் கருதாமல், கடைசிவரை எனக்குப் பணிவிடை செய்து வந்திருக்கிறாய். உனக்கு நான் என்ன கைம்மாறு அளிக்க முடியும்!' என்று கூறினார்.

இனி அவனை ஊருக்கு அனுப்பிவிட வேண்டும் என்று கருதி, 'அன்பா! நீ என்னிடம் பேரன்புகொண்டு உதவி புரிந்தாய்; இந்த உதவி உனக்கும் ஏனைய உயிர்களுக்கும் நன்மைவிளைவிக்கும். இனியும் நீ ஓர் உதவி செய்யவேண்டும். நான் அடைய வேண்டிய வனத்தை அடைந்து விட்டேன். இனி நீ குதிரையை அழைத்துக்கொண்டு நகருக்குத் திரும்பிவிட வேண்டும்!' என்று அவனைக் கேட்டுக்கொண்டார். அவர் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி அவனுக்குப் பரிசாக அளித்தார். அரச உடையையும், மணிகள் இழைத்த அரைக்கச்சையையும், உடைவாளையும் கழற்றிக் கொடுத்தார். பின்னர் மிகவும் ஒளிவீசிக்கொண்டிருந்த தமது முடிமணியையும் எடுத்து அவன் கையில் கொடுத்தார். அப்போது அவர் கூறியதாவது:

'சந்தகா! அரண்மனையிலே மன்னருக்குப் பன்முறை என் வணக்கம் கூறி, இம்மணியையும், மற்றவைகளையும் அவரிடம் எனக்காகச் செலுத்துவாயாக! அவர் துக்கத்தை ஆற்றி, மேற்கொண்டு என் பொருட்டாக வருந்த வேண்டாம் என்று சொல்லவும்.

'சுவர்க்க ஆசையினால் நான் இங்கு வரவில்லை. முதுமையையும், மரணத்தையும் வென்று அழிப்பதற்காகவே வந்துள்ளேன். என் பிரிவுக்காக நீயும் வருந்தலாகாது. சேர்ந்திருப்பவர்கள் அனைவரும் முடிவில் என்றாவது பிரியத்தான் வேண்டும். ஆதலால் விடுதலை வேட்கையோடு வந்துள்ள எனக்காக வருந்துவதை விட்டுப் புலனடக்க

மில்லாது போகங்களில் ஆழ்ந்திருப்பவர்களுக்காக வருந்துவதே முறை!

'இளமையிலேயே நான் துறவுக்கோலத்தை மேற்கொள்ளுவதற்காக அரசர் வருந்த வேண்டாம். என்றுமே மரணம் நம்மை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கையில், நாம் முந்திக்கொள்ளுவதே முறையாகும்.

'இவைகளை யெல்லாம் எந்தையாரிடம் கூறுவதோடு, நீயும் உன் திறமையால் அவருக்கு நய உரைகள் சொல்லி, அவர் என்னை மறந்துவிடும்படி செய்யவேண்டுகிறேன். அன்புக்கு உரியவர் பிரிவதாலேயே துக்கம் வருகிறது. அன்பு அற்றவிடத்திலே துக்கமும் அற்றுப்போகும்.

'உலகைக் காப்பதற்காகவே நான் உலகைத் துறக்கிறேன். என் இலட்சியத்தில் வெற்றிபெற்றால், என் வழியை உலகம் பின்பற்றும்; உலகமே எனதாகும் என்பதையும் அரசரிடம் கூறு!

'அவருடைய அன்புக்கு நான் சிறிதும் பாத்திரமில்லை. அவருடைய பெருந்தன்மையின் முன்னால் என் குணங்களின் ஒளி மங்கிவிடும். அவரது பேரன்பிற்கு நான் சிறிதும் உரியவனில்லை என்பதை அறிவுறுத்த வேண்டியது உன் பொறுப்பு!'

இதுவரை அவர் சொல்லியபடியெல்லாம் சந்தகன் செய்து வந்தான். அவர் கொடுத்த நகைகளையும் வாங்கி வைத்துக்கொண்டான். ஆனால் சித்தார்த்தர் ஒரே உறுதியுடன் முடிவாகக் கூறிய சொற்களை அவனால் தாங்கமுடியவில்லை. அவன் கண்களிலிருந்து நீர் பெருகிக்கொண்டிருந்தது. கைகளைக் கட்டிக்கொண்டு, அவன் மறுமொழி கூறமுற்பட்டான். ஆனால் தொண்டை அடைத்துவிட்டது. சிறிது நேரத்திற்குப்பின் அவன் மெல்லப் பேசலானான்:

'உற்றார் அனைவருக்கும் துக்கத்தை அளித்துத் தாங்கள் செய்யும் காரியத்தால், சேறு நிறைந்த கசத்தில் வீழ்ந்த யானைபோல், என் உள்ளம் தத்தளிக்கிறது. இரும்பு

நெஞ்சு உடையவர்களையும், தங்களுடைய பிடிவாதமான செயல் அழவைத்துவிடும். அப்படியிருக்கையில், அன்பி ைல் துடித்துக்கொண்டிருக்கும் இதயம் இத்துன்பத்தை எவ்வாறு தாங்க முடியும்! .

'அரண்மனையில் இருக்கவேண்டிய உங்களுடைய மலர்போன்ற மெல்லிய உடல் தருப்பைப் புல் நிறைந்த காட்டுத் தரையில் எப்படிப் படுத்திருக்க முடியும்!

'நகரிலே தாங்கள் அழைத்தவுடன் நான் குதிரையைக் கொண்டு வந்தேன். கொண்டு வந்தது நானல்ல—விதிதான் என்னை அப்படிச் செய்யும்படி உந்தியிருக்க வேண்டும். அதற்குப் பின்னல், இப்போது மறுபடி குதிரையைக் கொண்டு நான் நகருக்குள் எப்படித் திருப்பிச் செல்ல முடியும்? கபிலவாஸ்து முழுமைக்குமே சோகம் விளைவிக் கும் செய்தியுடன் திரும்பிச் செல்ல என் மனம் எப்படி இசையும்?

'தேடுதற்கு அரிய திரவியமாக எண்ணித் தங்களைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றி வந்த வயோதிகத் தந்தையின் அன்பை எண்ணிப் பாருங்கள்! முகத்தின் மேல் முகம் வைத்து முத்தாடி உங்களை வளர்த்த சிற்றன் னையைச் சிறிது எண்ணிப் பாருங்கள்! நற்குணங்கள் அனைத்தும் பொருந்திய தங்கள் தேவியை எண்ணிப் பாருங் கள்! அறத்தின் நிலையமாகவும், புகழின் புகலிடமாகவும் விளங்கும் தாங்களே யசோதரையின் இளங்குமரனைக் கைவிடத் துணியலாமா?

'நாட்டையும் நகரத்தையும் உற்ருேரையும் பெற்ருே ரையும் கைவிடத் துணிந்தது ஒருபுறம் இருக்கட்டும். உங்கள் பாதங்களைத் தவிர வேறு சரணில்லாத என்னைக் கைவிடுவது நியாயமா?

'என் உயிரே தீயில் வெந்துகொண்டிருக்கிறது. இந்த நிலையில் உங்களைக் கொடிய கானகத்திலே விட்டுவிட்டு நான் ஊருக்குத் திரும்புதல் இயலாது.

'நான் மட்டும் நகருக்குத் திரும்பினால், அரசர் என்னை என்ன சொல்லுவார்? "என்ன செய்தி?" என்று தங்கள் தேவி என்னிடம் கேட்டால், நான் என்ன சொல்லி வாழப் போகிறேன்!

'என்னிடம் கருணை காட்டுங்கள்; உடனே திரும்பி வாருங்கள்!'

பேரன்பு கொண்டவர்களைப் பிரிவது அரிது என்பதை உணர்ந்த சித்தார்த்தர், அவனுக்கு மேலும் பல நீதிகளை எடுத்துரைக்கலானார்: 'பந்துக்களிடம் பாசம் வைத்து நான் இப்போது மீண்டு வந்தாலும், பின்னாலும் ஆள் பார்த்து உழலும் கூற்று எங்களைப் பிரிப்பது உறுதி. இன்னும் எத்தனை எத்தனையோ பிறவி யெடுக்கவேண்டிய ஜீவன்களுக்கு மரணம் இயற்கையல்லவா? என்னைப் பெற்றெடுத்த தாயை எண்ணிப்பார்! இப்போது அவள் எங்கே, நான் எங்கே இருக்கின்றோம்? எங்களுக்குள் என்ன தொடர்பு இருக்கிறது? பறவைகள் கூடுகளை விட்டுப் பறந்து செல்லுதல்போல, எல்லா உயிர்களும் உடல்களை விட்டுப் பறக்கவேண்டியவைகளே. உயிர்கள் கூடுதலும் பிரிதலும் வானத்திலே மேகங்கள் சேர்ந்து சிதறுவது போலத்தான். "நாம் சேர்ந்திருக்கிறோம்" என்று எண்ணுவதே ஒரு கனவு. அப்படி இருக்கையில் எந்தப் பொருளையும் நமது என்று நினைப்பதும் தவறாகும். உலகமே மாறிவிடுகிறது. இதை உணராமல் நாம் ஒருவரையொருவர் ஏமாற்றிக்கொண்டிருக்கிறோம்.

'ஆதலால் என் உண்மை நண்பனாகிய நீ சோகத்தை விட்டுத் திரும்பிச் செல்வதே முறை. மேற்கொண்டும் உன் அன்பு நிலைத்திருக்குமானால், பின்னால் ஒரு முறை வந்து பார்த்துக்கொள்ளலாம்.'

'கபிலவாஸ்துவின் மக்களுக்கு என் உறுதியை உள்ளபடியே விளக்கிச் சொல்லிவிடு! "நீங்கள் அவரிடம் கொண்டுள்ள அன்பை விட்டு விடுங்கள்! வயோதிகத்தை

யும், சாவையும் அழித்து வெற்றிகொண்டு அவர் விரைவிலே இங்கு திரும்புவார்; இல்லாவிடின், தமது கோரிக்கை நிறைவேருமல், தாமே அழிந்துவிடுவார்!" என்று தெரிவித்துவிடு!'

இந்தச் சொற்களை அருகிலேயிருந்து கேட்டுக் கொண்டிருந்த குதிரை கண்டகம் தன் நாவினுல் அவர் பாதங்களை வருடிக் கண்களிலிருந்து நெருப்புத் துளிகளைப் போன்ற கண்ணீரைப் பெருக்கிக் கொண்டிருந்தது. அதன் உணர்ச்சியைக் கண்ட சித்தார்த்தர் உள்ளன்போடு அதைத் தடவிக் கொடுத்தார். தரும சக்கரம் பொறித்த அவருடைய திருக்கரத்தால் அதைத் தட்டிக்கொடுத்து, 'பரிகளுக்குரிய நன்றியை நீ நன்கு காட்டிவிட்டாய். துயரத்தை ஒழித்துச் சாந்தியோடிருப்பாயாக! நீ செய்த சேவைக்கு விரைவிலே உனக்குப் பயன் கிட்டும்!' என்று கூறினர்.

பின்னர் சந்தகன் கையிலே கொடுத்திருந்த தமது உடைவாளை வாங்கி, உறையிலேயிருந்து அதை வெளியே யெடுத்தார். அக்காட்சி புற்றிலிருந்து பளபளப்பான பாம்பு வெளியேறுவதுபோல் இருந்தது. நவரத்தினங்கள் பதித்துத் தங்கப்பிடியுடன் விளங்கிய அந்த வாளைச் சித்தார்த்தர் தலைக்குமேல் உயர்த்தித் தமது தலைமுடியைத் தலைப்பாகையோடு சேர்த்து அறுத்தெடுத்து, அதனை இடது கையால் ஆகாயத்திலே எறிந்து விட்டார்.*

---

*ஆகாயத்திலே எறியப்பெற்ற முடி தரைக்கு வருமுன்பே தேவர்கள் அதைக் கையில் ஏந்திச் சென்று தேவலோகத்தில் அதற்கு வழிபாடுகள் செய்தனராம்! அதற்கென்று ஒரு சேதியம் கட்டப்பெற்றதென்றும் கூறுவர்.

அன்று அநோம நதிக்கரையிலே சித்தார்த்தர் முடியை அறுத்தெறிந்த பின்பு அடர்ந்துவளர்ந்திருந்த அவருடைய தலை ரோமம் கத்தரித்த அளவிலேயே நின்றுவிட்டது என்றும், பின்னுல் ஐம்பது வருடகாலத்திலும் அது வளரவேயில்லை என்றும், அதனுலேயே புத்தருடைய சிலைகளிலெல்லாம் தலையில் எழுத்தாணிக் கொண்டைகள்

நகைகள் ஒழிந்தன ; முடிமணி ஒழிந்தது; மெல்லிய 'மஸ்லின்' தலைப்பாகையும் காற்றிலே பறந்துவிட்டது; அரசகுமாரரின் அழகுக்கேற்ற இந்திரநீலம்போன்ற குஞ்சியும் வெட்டப்பெற்று விட்டது. மற்ற உடைகளையும் களைந்து விட்டுக் காஷாய உடை அணிய வேண்டியது ஒன்றே எஞ்சியிருந்தது.

அந்த நேரத்தில் அங்கே காவியுடை அணிந்து, வில்லேந்திய வேடன் ஒருவன் வந்து சேர்ந்தான். அவனுடைய உடைக்கும் கையிலேந்தியிருந்த வில்லுக்கும் பொருத்தமில்லையே என்று சித்தார்த்தர் பார்த்துத் திகைத்துக் கொண்டிருந்தார். அந்த விவரத்தை வேடனே விளக்கிச் சொல்லிவிட்டான். சீவர உடையைக் கண்டால் தன்னைத் துறவி என்று எண்ணி வன விலங்குகள் விலகி ஓடாமல் நிற்கின்றன என்றும், அதனால் தான் வேட்டையாட எளிதாகிறது என்றும் அவன் கூறினான். இளவரசரின் வெண்பட்டு உடையைப் பார்த்து, அவர் இந்திரன் போல விளங்குவதாக அவன் எண்ணினான். அவ்வேடனுடைய காவி ஆடையிலேயே அவருடைய கண்கள் பதிந்திருந்தன. 'நாம் இருவரும் உடைகளை மாற்றிக் கொள்வோமா?' என்று இளவரசர் வேடனைக் கேட்டார். உடனே அவனும் அதற்கு இசைந்து, காஷாயத்தைக் கழற்றிக் கொடுத்து விட்டு, அவருடைய உடையை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு மறைந்துவிட்டான். அவன் போகு முன்பு, உயிர் வதை பாவம் என்று சித்தார்த்தர் அவனுக்கு உபதேசம்

---

போன்ற முடிச்சுக்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன என்றும் கூறப் படுகிறது.

சித்தார்த்தர் திருப்பியனுப்பிய நகைகளைப் பின்னால் அவருடைய சிற்றன்னை ஒரு குளத்தில் எறிந்ததாகவும், அந்தக் குளம் 'ஆபரண புஷ்கரணி' என்ற பெயருடன் புண்ணிய தீர்த்தமாகிவிட்டதாகவும் ஒரு வரலாறு உண்டு.

செய்தனுப்பினர். அவ்வேடனும் ஒரு தேவன் என்று வரலாறுகள் கூறுகின்றன.

காவியுடையுடன் சித்தார்த்தர் சந்தகனுக்கு விடை சொல்லிவிட்டு, அருகே யிருந்த ஆசிரமத்தை நோக்கி நடக்கலானார். அவருடைய திருக்கோலத்தைப் பார்த்துக்கொண்டிருந்த சந்தகன், துக்கம் தாங்காமல், தன் கண்களை என்ன செய்யலாம் என்று அறியாமல், அழுது அரற்ற ஆரம்பித்தான். பிறகு குதிரையை அணைத்து அழைத்துக் கொண்டு, அவன் நகரை நோக்கித் திரும்பினன். வழியெங்கும் அழுதல், அழுங்குதல், அரற்றுதல், ஐயனை எண்ணிப் புலம்புதலோடு, அடிக்கடி தவறி விழுந்து கொண்டே அவன் சென்றான். அவனுடைய உடல்தான் நடந்து கொண்டிருந்ததேயன்றி, ஆவி அநோம நதிக்கரையிலேயே இருந்தது. கண்டகமும் கண்ணீர் பெருக்கித் தள்ளாடிக் கொண்டே, மெல்ல மெல்ல நடந்து சென்றது. வழியிலே அது புல்லைத் தீண்டவில்லை, நீரும் பருகவில்லை. அடிக்கடி திரும்பி, வள்ளல் வசிக்கும் வனத்தை எண்ணிக் கனைத்துக் கொண்டிருந்தது.

## பார்க்கவர் தவப் பள்ளி

சந்தகன் அகன்ற பின், சித்தார்த்தர் பார்க்கவரின் ஆசிரமத்திற்குச் சென்று, அங்குள்ள தவமுனிவர்களை வணங்கி, அவர்களுடன் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தார். காவியுடையிலும் அவருடைய கம்பீரம் குன்றவில்லை. அவருடைய முகப் பொலிவைக் கண்டு தாபதர் அனைவரும் அவரிடம் அளவற்ற அன்பு கொண்டு மரியதை செய்தனர்.

தவப் பள்ளியிலே முனிவர்கள் பலப்பல முறைகளில் தவம் புரிவதை அறிய வேண்டும் என்று கருதிச் சித்தார்த்தர் அவர்களைப் பார்த்து, 'இன்றுதான் நான் தவப் பள்ளியை என் வாழ்க்கையில் முதல் முறையாகப் பார்க்

கிறேன். தவமுறைகள் எவையும் எனக்குத் தெரியாத தால், தயை கூர்ந்து தாங்கள் இங்கே புரிந்துவரும் தவத் தைப் பற்றி அடியேனுக்கு விவரமாக எடுத்துரைக்க வேண்டுகிறேன்' என்று விநயமாகக் கேட்டுக் கொண்டார்.

வேதியராகிய பார்க்கவர் தாமும் மற்றவர்களும் மேற் கொண்டுள்ள தவமுறைகளை விளக்கிக் கூறினார். உழுது பயிரிட்டு விளையும் உணவுப் பொருள்களை அவர்கள் தீண்டு வதில்லை. காட்டில் தாமாக விளைந்துள்ள தானியங்களை யும், காய்கள், கனிகள், இலைகள், கிழங்குகளையுமே புசித்து வந்தார்கள். சிலர் மான்களைப் போல் புல்லை மட்டும் உண்டுவந்தனர். சிலர், பாம்புகள் காற்று வாங்குவது போல், வாயுவை மட்டும் பருகிவந்தனர். சிலர் நெருப்பிலே நின்று தவம் செய்து வந்தனர். சிலர் நீரிலே நின்று தவம் செய்து வந்தனர். சடை முடி தாங்கிய வேறு சிலர் வேத கீதங்களுடன் அக்கினியை வழிபட்டு வந்தனர். உடல் களுக்குக் கொடிய துன்பங்களை இழைத்துக் கொள்வதன் மூலம் அவர்கள் எல்லோரும் சுவர்க்கத்தை அடையலாம் என்று நம்பிக் கொண்டிருப்பதாகப் பார்க்கவர் கூறினார்.

கேவலம் சுவர்க்கத்திற்காக மட்டும் அவர்கள் அத்தனை பாடுகள் படுவதைப்பற்றிச் சித்தார்த்தர் சிந்தித்துப் பார்த் தார். எல்லா உலகங்களையும் போல், சுவர்க்கமும் மாறு தலுக்கு உட்பட்டதே என்றும், அந்தத் தாபதர்கள் அடை வது அற்பமான இலாபமே என்றும் அவர் எண்ணினார். அவருடைய பரிசீலனையில் தோன்றிய கருத்துக்களை அவர் தமக்குத் தாமே கூறிக்கொண்டார் : 'வனத்திலிருந்து தவம் செய்து இவர்கள் பெறப் போவது மீண்டும் தவம் புரியத் தக்க வனமே யாகும். உயிர்வாழ்வில் அடங்கியிருக்கும் தீமை களை ஆராய்ந்து அறியாமல், ஆசை காரணமாகத் தவங்கள் என்ற பெயருடன் வேதனைக்குள்ளாக்குதல், வேதனையைக் கொடுத்து வேதனையையே விலைக்கு வாங்குதல் போன்றது. உலக வாழ்வில் ஆசை கொண்டவர்களும், சுவர்க்க போகத்

தில் ஆசை கொண்டவர்களும், எல்லோரும் தம் இலட்சி யத்தை அடைய முடியாமல் துன்பத்திலேயே வீழ்கிறார்கள்.

'பவித்திரமான உணவினால் புண்ணியம் கிடைத்து விடும் என்றால் புல்லைத் தின்னும் மான்களும் புண்ணிய மூர்த்திகளே! வேண்டுமென்றே உடலுக்குத் துன்பம் தேடு தல் புண்ணியம் என்றால், இன்பம் தேடுதலையே இலட்சிய மாய்க் கொள்வது மட்டும் ஏன் புண்ணியமாகாது? தண்ணீரைத் தெளித்து விட்டு, "இது புனிதத்தலம்!" என்று கூறுவதால், ஓர் இடம் புனிதமாகி விடாது. புனிதத் தன்மை இதயத்தைப்பற்றிய உணர்ச்சியே யாகும். தண்ணீரால் பாவத்தைக் கழுவமுடியாது. தண்ணீர் தண்ணீரே தவிர வேறில்லை. நீருள் நின்று தவம் புரிவதால் சுவர்க்கம் கிடைக்கும் என்றால், மீன்களே முதலில் சுவர்க்கத்திற்கு உரியவை.

'மனத்தின் போக்கினாலேயே உடல் இயங்குகின்றது; அல்லது இயக்க மின்றி நின்று விடுகின்றது. ஆதலால் சித்தத்தை அடக்குதலே சிறந்த வழியாக இருத்தல் வேண்டும். சிந்தனையை நீக்கி விட்டால், உடல் வெறும் மரக் கட்டைதான்!'

அன்று மாலைவரை முனிவர்கள் பல இடங்களிலே பரவித் தவம் செய்து கொண்டிருந்தனர். அந்தி மாலையில் எல்லோரும் ஆசிரமத்திற்கு வந்து கூடினர். அக்கினி வளர்த்து அனைவரும் பிரார்த்தனை செய்தனர்.

சித்தார்த்தர் அவர்களோடு சில நாட்கள் தங்கியிருந்து விட்டு, அவர்களுடைய தவமுறைகளை அறிந்து கொண்ட பின், அங்கிருந்து வேறிடம் செல்ல வேண்டும் என்று கருதினார். முனிவர்கள் அவர் பிரிந்து செல்வதைப் பொறுக்க முடியாமல், தங்களுடனேயே இருக்கும்படி வேண்டினர். அவர் பிரிவு 'உடலிலிருந்து ஆவி பிரிவதுபோலிருக்கிறது!' என்று கூறினார் பார்க்கவர்.

சித்தார்த்தர் அவர்களுடைய அன்புக்கும் ஆதரவுக்கும்

நன்றி கூறினார். 'உங்களுடைய உபசார மொழிகள் அன்பினால் என்னை நீராட்டியது போல் இருக்கின்றன. முன்னால் தருமத்தைப் பற்றிய கருத்து எனக்குத் தெளிவாகிய சமயத்தில் எவ்வாறு ஆனந்த முண்டாயிற்றோ, அதே ஆனந்தம் இப்போதும் உண்டாகின்றது. உங்களைப் பிரிவதில் எனக்கும் துக்கந்தான். ஆனால் என் இலட்சியத்தை அடைய வெளியேதான் செல்ல வேண்டியிருக்கின்றது. உங்களுடைய குறிக்கோள் சுவர்க்கம்; எனது குறிக்கோள் பிறப்பை அறுத்தல். இரண்டும் வேறுபட்ட இலட்சியங்கள்!' என்று அவர் தம் கருத்தைத் தெளிவு படுத்திக் கூறினார்.

சடையும் தாடியும் வளர்த்து, மரவுரிகளை அணிந்து, ஊன் வாட வாடத் தவம் செய்து கொண்டிருந்த அம் முனிவர்களைப் பரிவோடு நோக்கி, அவர் தமக்கு விடையளிக்கும்படி வேண்டினார்.

அப்போது அங்கேயிருந்த வேதியர் ஒருவர், சித்தார்த்தரை வாழ்த்தி, அவருடைய குறிக்கோள் மிக்க சிறப்புடையது என்றும், அவர் மேற்கொண்டு விந்திய கோஷ்தானத்தில் பெருந் தவமியற்றி வந்த **ஆலார காலாமரிடம்*** போய் உபதேசம் பெறுமாறு யோசனை கூறிவிட்டு, 'அவருடைய போதனையில் உமக்கு விருப்பமிருந்தால், அதனை நீர் ஏற்றுக்கொள்வீர். ஆனால் பின்னால் அவருடைய தத்துவத்தையும் கடந்து நீர் செல்ல வேண்டியிருக்கும் என்றே எனக்கும் தோன்றுகிறது. இதுவரை, முந்திய யுகங்களிலேயும், மகரிஷிகள் அடையாத மெய்ஞ்ஞானத்தைப் பெற்று, நீர் உலகின் ஞான தேசிகராக விளங்கப் போகிறீர்!' என்றும் சொன்னார்.

---

*ஆராள ராமர், ஆராதர், ஆராட ருத்திர ராமர் முதலிய வேறு பெயர்களாலும் இவர் குறிக்கப் பெற்றிருக்கிறார். ஆனால் புத்தர் பெருமான் 'ஆலார காலாமா' என்றே கூறியுள்ளார்.

'நல்லது, அவ்வாறே செய்கிறேன்!' என்று சொல்லி விட்டுச் சித்தார்த்தர் முனிவர் அனைவரிடமும் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

மகத நாட்டில் பாண்டர மலைக் குகையிலே தவப் பள்ளியில் வைகும் ஆலார காலாமரைச் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு, அவர் காட்டுச் சாலை வழியாக நெடுந் தூரம் நடந்து கொண்டே யிருந்தார். வழியிலே ஓய்வெடுத்துக் கொள்வதற்காக ஒரு மரத்தின் நிழலில் சிறிது நேரம் தங்கினார்.

அந்த இடத்திலே கபிலவாஸ்துவிலிருந்து புறப்பட்டு வந்திருந்த அரசருடைய குலக் குருவும், மந்திரியும் அவரைக் கண்டு, அருகே சென்று அமர்ந்தனர். அவரும் அவர்களை முறைப்படி வரவேற்று வணக்கம் கூறினார். அவர்கள் அரசரின் பிரதிநிதிகளாக வந்திருந்தனர். 'உமது மைந்தரோடும், அவருடைய விதியோடும் போராடி, அவரைத் திரும்ப அழைத்துவர எங்களால் முடிந்தவரை முயற்சி செய்கிறோம்!' என்று அவர்கள் சுத்தோதனருக்கு வாக்குக் கொடுத்துவிட்டு வந்திருந்தனர்.

## கபிலை நிகழ்ச்சிகள்

சந்தகன் குதிரையோடு தனியே தலைநகருக்குத் திரும்பியபோது, நகரமக்கள் அனைவருமே அவனை வெறுத்துப் பேசினர். 'எல்லோரும் திரண்டு வனத்திற்கு ஏகுவோம்!' என்று கிளம்பினர். அரண்மனையில் கண்ணீர் விட்டுக் கதறிக் கொண்டிருந்த ஆடவர், பெண்டிர் அனைவரும் அவனையும் குதிரையையும் பழித்தனர். சந்தகன் தானும் அழுது கொண்டே எல்லோர்க்கும் சமாதானம் கூறினான்.

தேவி யசோதரை துயரத்தால் உளம் நொந்து, கோபத்தால் கொதித்துக் குமுறலானாள்: 'சந்தகா! என் இதய நாதனை எங்கே விட்டு வந்தாய்? நல்லவனைப் போல இங்கே ஏன் அழுகிறாய்? கொடியோய்! இரக்க மின்றி எனக்குத்

துரோகம் செய்து அவரை அழைத்துப் போனதற்கும் இந்தக் கண்ணீருக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இளவரசருக்கு நீ ஏற்ற நண்பன்தான்! சாதுரியமில்லாத மூட நண்பனைப் பார்க்கிலும், புத்திமானுன பகைவனே மேலானவன்! உனது செயலால் அரச வமிசத்திற்கே தாங்க முடியாத துயரம் வந்து சேர்ந்துவிட்டது. அரண்மனைப் பெண்கள் அனைவரும் அழுது அரற்றுகின்றனர். அடுக்கடுக்காக அமைந்துள்ள இந்த அரண்மனைகளே அழுகின்றனவே!......பரிகளிற் சிறந்த கண்டகமுமா என் குடியைக் கெடுக்க வேண்டும்! நள்ளிரவில் திருடர்கள் செல்வத்தைக் கொள்ளையிட்டுச் செல்வதுபோல், அது என் நாயகத்தைக் கொண்டு சென்று விட்டதே! போரிலே வாள்களும், வாளிகளும் தாக்கும்போதெல்லாம் தாங்கிய கண்டகம், எதற்காகப் பயந்து என் கோமானைச் சுமந்து சென்று விட்டது?'

சந்தகன் அழுது தேம்புகின்ற தேவியைக் கண்டு, துயரம் தாங்காமல், நிகழ்ந்த செய்திகளை விவரமாகக் கூறினுன்: 'எல்லாம் தேவர் செயல்! விதியின் கூற்று! என் செயல்களுக்கும் நான் பொறுப்பில்லை. என்னைச் செய்யும்படி தூண்டிய ஏதோ ஒரு சக்தியின் கருவியாக நான் இருந்தேன்! அரண்மனைக் கதவுகளையும், கோட்டைக் கதவுகளையும் திறந்துவிட்டு, அடைத்தது யார்? கண்டகத்தின் குளம்புகள் தரையை மிதித்தால் ஓசை கேட்குமென்று, அவை தரையில் தோயாமலே ஓடும்படி செய்தது யார்? அரசர் நியமித்துள்ள ஆயிரக்கணக்கான காவலாளிகளும் ஒரே சமயத்தில் உறங்கிக் கிடந்ததன் காரணம் என்ன? காட்டுக்குப் போனவுடன் தேவர் உலகிலிருந்து காஷாய உடையைக் கொண்டு மிக வேகமாக ஒருவன் ஓடி வந்து அண்ணலிடம் கொடுத்தற்கு என்ன காரணம்? என்னையும் கண்டகத்தையும் குறை கூறுதல் வீண் பழியேயாகும்!'

இளவரசர் தவம் செய்யப் போகும்போது பண்டைக் காலத்து அரசரைப் போல் தன்னையும் வனத்திற்கு ஏன் அழைத்துப் போகவில்லை என்று யசோதரை ஏங்கினாள். 'சுவர்க்கத்தில் எனக்கு ஆசையில்லை. வைராக்கியத்தோடு முயன்றால், சாதாரண மக்கள்கூட அதை அடைய முடியும். இம்மையிலும் மறுமையிலும் என் நாயகனைப் பிரியாம லிருப்பது ஒன்றையே நான் விரும்பினேன். அவரே எனக் குத் துரோகம் செய்து விட்டாரே?' என்று புலம்பினாள். 'பகைவரையும் பரிவு கொள்ளச் செய்யும் இந்தப் பச்சைக் குழந்தையையும் பரிதவிக்க விட்டுச் சென்ற அவர் உள்ளம், இரும்பாகத்தான் இருக்க வேண்டும்! என் செல்வர் சென்று விட்டார் என்றதைக் கண்ட பின்னும், இன்னும் உடைந்து சிதறாத என் உள்ளமும் பாறையாகவோ, இரும்பாக வோதான் இருக்கவேண்டும்!' என்று தன்னையும் நொந்து கொண்டாள்.

கன்றைப் பிரிந்த கற்றாவைப்போல் அன்னை கௌதமி துடித்துக் கொண்டிருந்தாள்; சீத மதிக் குடையின் கீழே சிம்மாசனத்தில் இருக்க வேண்டிய உடல் வனத்திலே வாடு வதை அவளால் சகிக்க முடியவில்லை; சித்தார்த்தருடைய உடலழகுகளைப்பற்றி எண்ணி எண்ணி உருகினாள். 'அந்தத் தருமமூர்த்தியை அரசனாகப் பெறுவதற்குப் பூமா தேவிக்குப் பாக்கியமில்லை! குடிகளுக்கும் அத்தகைய அரசனை அடையத் தகுதியில்லாமற் போய் விட்டது!' என்று அவள் புலம்பினாள்.

அரசரோ தமது சோகத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டு மைந்தன் திரும்பிவர வேண்டும் என்று ஆலயத் தில் சென்று தவங்கிடந்தார். சந்தகனும் குதிரையும் திரும்பி வந்ததைக் கேள்வியுற்று, அவரும் வெளியே வந்து பார்த்தார். கோமகனைக் காண வில்லை; குதிரை மட்டுமே நின்று கொண்டிருந்தது! சந்தகன் கூறிய விவரங்களைக் கேட்டு, அவர் தாமே குற்றவாளி என்று தீர்மானித்தார்.

மைந்தன் வனம் புகுந்தான் என்றதைக் கேட்டதும், ஆவி பிரிந்த தசரதனைப்போல், தாமும் உயிர் துறக்காமலிருந்தது பெருங்குற்றம் என்று கருதி, அவர் சித்தம் தடுமாற ஆரம்பித்தார். நெஞ்சிலே எவ்வளவு வீரமும், உறுதியும் இருந்த போதிலும், புத்திர சோகத்தின் முன்னால் அவை நிலைத்திருக்க முடியவில்லை.

அந்த நேரத்தில்தான் அரசருடைய குலகுருவும் மந்திரியும் முன்வந்து தாங்கள் போய்க் குரிசிலை அழைத்து வருவதாகக் கூறிவிட்டுப் புறப்பட்டனர்.

## சித்தார்த்தரின் உறுதி

வனத்திலே சித்தார்த்தரைக் கண்ட குருதேவரும் அமைச்சரும் தங்களுக்குத் தெரிந்த நீதிகளையெல்லாம் அவருக்கு எடுத்துச் சொல்லிப் பார்த்தனர். சிறிது காலம் ஆட்சி செய்து விட்டுச் சாத்திரமுறைப்படி பின்னால் கானகத்தை அடையலாம் என்றும், அரசர் முதல் மக்கள் ஈறாக அல்லற்பட்டுத் துடிப்பதை ஆற்ற வேண்டியது அவர் கடன் என்றும், எல்லா உயிர்களுக்கும் அன்பு காட்டுவதே அறம் என்றும், துறவறம் மேற்கொள்ளக் காட்டுக்கு ஓடிச் செல்ல வேண்டியதில்லை என்றும், அரண்மனையிலிருந்து புலனடக்கத்தைக் கைக்கொண்டு உள்ளத்துறவு கொள்வதே சிறந்தது என்றும் குலகுரு வற்புறுத்திச் சொன்னார். மேலும், “நீ மஞ்சன நீராடி, மகுடம் புனைந்தவுடன் வெண் கொற்றக் குடையுடன் உன்னை ஒரு முறை கண்டு, அந்த மகிழ்ச்சியோடு நான் துறவு பூண்டு வனம் செல்ல வேண்டும்!” என்று மன்னர் உனக்குச் செய்தியனுப்பியுள்ளார்!’ என்றும் கூறினார்.

சித்தார்த்தர் அரசரின் சோகத்திற்குத் தாம் காரணரில்லை என்றும், மக்களும் சுற்றமும் துக்க காரணராக இருக்க முடியாது என்றும், அறியாமையாலேயே—மயக்கத்தாலேயே—துக்கம் தோன்றுகிறது என்றும் விரிவாக

விளக்கிக் கூறினர். உலக விஷயங்களில் ஆர்வம் கொண்டவர்களே காலத்தைக் கவனிக்க வேண்டும் என்றும், பேரின்பமாகிய விடுதலைக்கு எக்காலமும் நற்காலந்தான் என்றும், காலத்திலே தோன்றும் பொருள்கள் யாவும் அழிந்தொழியும் இயல்புள்ளவை என்றும், மரணம் காலத்தின் மீது முழு ஆதிக்கியம் பெற்றிருப்பதால், மரணத்தை ஒழித்தால்தான் காலமும் மறையும் என்றும் எடுத்துரைத்தார். முடிவாக அவர் கூறியதாவது: 'பொன் மயமான அரண்மனை தீப்பற்றி எரிவதாக என்க்குத் தோன்றுகிறது; அங்கேயுள்ள அறுசுவை உண்டிகள் நஞ்சு கலந்தவையாகத் தோன்றுகின்றன. மலரணை முதலைகள் நிறைந்த பொய்கையாகக் காட்சி யளிக்கிறது.

'செல்வர்களுடைய வானளாவிய மாளிகைதான் துயரத்திற்கு இருப்பிடம்; புத்திமான்கள் அங்கே வசிக்க மாட்டார்கள்.

'அரசாட்சியையும் புலன் இன்பங்களையும் நான் புறக்கணித்து விட்டேன். சாந்தி நிறைந்த இந்த வனங்களை விட்டு மீண்டும் நாட்டுக்கு வந்து, இரவும் பகலும் என் பாவ மூட்டைகளைப் பெருக்கிக் கொண்டிருக்க நான் விரும்ப வில்லை. மேலும் சாக்கிய மரபிலே தோன்றிய நான் முன்வைத்த காலைப் பின்வாங்குவது ஏளனமான இழி செயலாகும். மேலே துவராடையுடனும், அகத்திலே இன்பங்களில் ஆசையுடனும், நான் அரண்மனையிலே வேடதாரியாக நடித்துக் கொண்டிருக்க இயலாது. வேண்டாம் என்று நான் உமிழ்ந்து விட்ட எச்சிலை மீண்டும் துய்க்க விரும்புவது முறையாகுமா? தீப்பற்றி எரியும் வீட்டிலிருந்து தப்பியவன் மீண்டும் அதன் நெருப்பிடையே புகுவதற்கு விரும்புவானா? பிறப்பு, மூதுமை, இறப்பு ஆகிய தீமைகளைக் கண்டு, அவைகளால் விளையும் துக்கத்திலிருந்து தப்புவதற்காகத் துறவியான நான், மீண்டும் அவைகளுடன் குலாவிக்கொண்டு வாழ முடியுமா?

'அரண்மனையில் இருந்துகொண்டே துக்கம் நீங்கி முக்தி பெற முயல்வது நடவாத காரியம். விடுதலை சாந்தியிலிருந்தே விளையும். அரசனாயிருத்தல் துயரத்தையும் பாவத்தையும் பெருக்கிக் கொள்வதிலேயே முடியும்.*

'துறவறம் பூண்டு வனத்தில் வசிக்கையில் அரச போகங்களில் ஆர்வம் கொள்ளலும் இயலாத காரியம். இவ்விரண்டும் முரண்பாடானவை; நீரும் நெருப்பும், ஓய்வும் இயக்கமும் போல, இவை சேர்ந்திருக்க முடியாது. நிலைமை இவ்வாறிருக்கையில் நான் ஏன் நாட்டுக்குத் திரும்பவேண்டும்?'

'சித்தார்த்தர் கூறிய காரணங்களைக் குருதேவரோடு அமைச்சரும் நன்கு செவிமடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தார். அவை பொருத்தமானவை என்றே அவருக்குத்

---

*ஜலா லுத்தீன் ரூமி என்ற பாரசீகக் கவிஞர் இதே கருத்தை அமைத்து ஒரு பாடல் இயற்றியுள்ளார். அவர் கூறும் விவரம் பின் வருமாறு:

இப்ராஹிம் மன்னர் ஆட்சி புரிந்த காலத்தில், ஒருநாள் அவர் அரண்மனையிலே அரியாசனத்தில் அமர்ந்திருந்த போது, மாடியில் பல மனிதர்கள் ஓடிச் சாடும் அடியோசைகளும், கூக்குரல்களும் கேட்டன. அவர் ஆசனத்திலிருந்து இறங்கி ஒரு சாளரத்தின் வழியாக உயரே யிருந்தவர்கள் எவர்கள் என்று விசாரித்தார். உயரே யிருந்த அரண்மனைக் காவலர்கள் நடுக்க முற்று, அரசருக்குத் தலைவணங்கி, 'நாங்கள் தாம்—காவலர்கள்—தேடிக் கொண்டிருக்கிறோம்!' என்று கூறினர்.

'என்ன தேடுகிறீர்கள்?'

'எங்கள் ஒட்டகைகளை!'

'அரண்மனை மாடியில் ஒட்டகைகள் இருக்குமென்று எவர்களேனும் தேடுவார்களா?'

'தங்களைப் பின்பற்றியே இவ்வாறு செய்கிறோம். சிம்மாசனத்தில் இருந்து கொண்டே தாங்கள் சுவர்க்கத்திற்குச் செல்ல முயல்வதைப் போலவே, நாங்களும் முயற்சி செய்கிறோம்!'

தோன்றின. ஆயினும் வந்த காரியம் முடிய வேண்டுமே என்பதற்காக, அவரும் சில நீதிகளையும், தத்துவ நூல் முடிபுகளையும் எடுத்துச் சொன்னார். காணமுடியாத பயனைக் கருதிக் கண் முன்பு கிடைக்கும் பயனைக் கைவிடுதல் ஆராய்ச்சிக்குப் பொருத்தமில்லை என்றும், சிலர் மறு பிறப்பு உண்டென்றும், சிலர் இல்லையென்றும் கூறுவதால் எல்லாம் குழப்பமாகவே இருக்கிறது என்றும், சிலர் எல்லாப் பொருள்களும் அதனதன் சுபாவத்தினாலே தாமாகவே தோன்றியுள்ளதாகக் கூறுகின்றனர் என்றும், அவர் தத்துவ முரண்பாடுகளை எடுத்துக் காட்டினார். பொருள்களின் இயல்பை மனிதர் மாற்ற முடியாதென்றால், வேதனைகளையும், வயோதிகத்தையும், மரணத்தையும் ஒழித்து விட முயல்வது வீண் வேலையாகும் என்றும் அவர் கூறினார். 'முள்ளைக் கூர்மையாக்கியது யார்? மானின் இனங்களுக்கும், பறவை இனங்களுக்கும் அவைகளின் பல வகைப் பட்ட உருவங்கள், நிறங்கள், பழக்கங்களை அளித்தது யார்? சுபாவமே! எவருடைய இச்சை காரணமாகவும் இவை ஏற்படவில்லை; இச்சையோ, கருத்தோ இல்லாத போது, இச்சைப் படுவானோ, கருதுவோனோ இல்லாமற் போகிறான்' என்று கூறுவோருடைய கருத்தையும், 'ஈசுவரனிடத்திலிருந்தே சிருஷ்டி ஏற்படுவதால், ஜீவான்மா என்ன முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது? உலகத்தை இயங்க வைப்பவனே அந்த இயக்கம் நிற்க வேண்டியதையும் கவனித்துக் கொள்வான்' என்று கூறுவோருடைய கருத்தையும் அவர் விளக்கி யுரைத்தார்.

சித்தார்த்தர் ஏதோ ஒரு தத்துவத்தை எண்ணிக் கொண்டு உறுதியாகத் துறவு பூண்டிருப்பதில் அசைவு கொடுக்கும்படி அவர் பல திறப்பட்ட கொள்கைகளையும் கூறிவிட்டு, முடிவாகத் தாம் எடுத்துக் கொண்ட விஷயத்தையும் மெதுவாக உணர்த்த முயன்றார். மனிதனுக்கு மூன்று கடமைகள் உண்டென்றும், தெய்வங்களுக்காக

யாகங்கள் செய்தலும், இருடிகளுக்காக வேதங்கள் முதலிய வற்றைப் பாராயணம் செய்தலும், பிதிர்க்களுக்காக வமிச விருத்தி செய்தலுமே அக்கடமைகள் என்றும் கூறினர். தவிரவும் முற்காலத்து மன்னர்கள் சிலர் துறவறம் பூண்ட பின்பு, அதைக் கைவிட்டுத் திரும்பிய கதைகளையும் எடுத் துக் காட்டினர். 'ஆதலால் தவப்பள்ளியிலிருந்து ஒருவன் தன் கடமையை நிறைவேற்றுவதற்காக இல்லத்திற்குத் திரும்புவதில் பாவம் எதுவுமில்லை!' என்று கூறி அவர் தமது சொற்பொழிவுக்கு முத்தாய்ப்பும் வைத் தார்.

அன்போடும் ஆதரவோடும் அமைச்சர் அறிவுறுத்திய கூற்றுக்களை யெல்லாம் அமைதியாகக் கேட்டுக் கொண் டிருந்த சித்தார்த்தர், தமது இலட்சியத்தை அவர் அறியும் படி உள்ளம் திறந்து பேசினர்:

'உண்மையாக உள்ளது எது என்பதைப்பற்றி நான் பிறருடைய கூற்றுக்களை நம்பியிருக்க முடியாது; தவத்தி ஞலோ, தியானத்திஞலோ அதைப்பற்றி அறியக்கூடியது அனைத்தையும் நானே அறிந்து கொள்ள வேண்டும். யாரும் அறிந்திராத ஒன்றை நான் ஆராய்ச்சியில்லாமல் ஏற்றுக் கொள்வதற்கில்லை. உளது என்றும், இலது என்றும், ஒன்று என்றும், பல என்றும் முரண்பாடான கருத்துக் களைப் பிறருடைய நம்பிக்கையைக் கொண்டு எந்த அறிஞன் ஏற்றுக் கொள்வான்? மனிதர்கள் அனைவரும் இருளிலே குருடர் குருடருக்கு வழிகாட்டுவதுபோலக் குருட்டாட்டம் ஆடி கொண்டிருக்கின்றனர்.

'பரம்பரையாக வந்த புனிதமான சாத்திரங்களை எதையும் உறுதிப் படுத்திக் கூற முடியவில்லை. நம்பிக் கைக்கு உரியவர்கள் கூறியுள்ளதே நன்மையானதா யிருக் கும். நம்பிக்கை என்பது மாசுகளற்ற நிலையிலேயே தோன் றும். மாசற்றவர் அசத்தியம் கூற மாட்டார்.

'நீங்கள் சொல்லிய மன்னர்கள் பலரும் தங்கள் வி

தத்தை முறித்து நாடு திரும்பியவர்கள். கடமையை உணர் வதற்கு அவர்கள் எப்படி வழிகாட்டிகளாக விளங்க முடியும்?

'ஆதலால் என் உறுதியை எதுவும் கலைக்க முடியாது. கதிரவனே வானத்திலிருந்து மண் மீது வீழ்ந்து விட்டா டாலும், இமயமலையே அசைந்து ஆடி விட்டாலும், மெய்ப் பொருளை அறியாமல், வெளிப் பொருள்களிலே நாட்டம் செலுத்தும் புலன்களோடு, நான் என் மாளிகைக்குத் திரும் பப் போவதில்லை!

'என் இலட்சியத்தை அடையாமல் நான் என் மாளி கைக்குத் திரும்புவதைவிட, எரிகின்ற தழலிலே மூழ்கி விடுவேன்!'

இவ்வாறு கூறிவிட்டுச் சித்தார்த்தர், தம் சொற்களைச் செயலிலே காட்டுவது போல, அங்கிருந்து எழுந்து வழி நடைக் கொண்டு விட்டார்.

அமைச்சரும், குலகுருவும் அண்ணல் சென்ற திசை யைப் பார்த்துக் கொண்டே, தங்கள் வழியே திரும்பினர். இருவர் கண்களிலும் மழை நீர் பொழிவது போலக் கண் ணீர் வழிந்து கொண்டேயிருந்தது.

தருமத்தைத் தவிர வேறு துணையின்றி, மன்னுயிர் முதல்வரான போதி சத்துவர் காட்டு வழியாகத் தமது புனித யாத்திரையை மேற்கொண்டார். இளவரசர் சித் தார்த்தராக அவ்வனத்தில் நுழைந்தவர் கௌதம பிக்கு வாக வெளியேறி நடந்து கொண்டிருந்தார்.

சித்தார்த்தருடைய இந்தத் துறவுபற்றி 'மஜ்ஜிம நிகா யம்—அரிய பரியேசன' சூத்திரத்தில் அவரே கூறியுள்ள வாசகம் வருமாறு :

> 'பின்னர், சீடர்களே! சிறிது காலம் கழித்து, நான் மேலும் இளமையோடு, கறுப்புக் கேசமும் வாலிபப் பருவ மும் கொண்டிருக்கும் போதே, மானிட வாழ்வின் நல்ல நடு

வயதிலேயே, என்னுடைய தாய் தந்தையரின் விருப்பத்திற்கு மாறாக, அவர்கள் கண்ணீர் விட்டு அழுவதையும் பாராமல், நான் என்னுடைய தலை முடியையும், தாடி மீசைகளையும் அழித்து விட்டு, காஷாய ஆடையை அணிந்து, மனை வாழ்க்கையை விட்டு மனையற்ற வாழ்க்கையில் புகுந்தேன்.'*

*பிக்கு சோமானந்தருடைய 'புத்தர் சரித்திரம்' பார்க்கவும்.

ஏழாம் இயல்

# பிம்பிசாரர்

'பாக சாலையில் பக்குவம் செய்தும்,
யாக சாலையில் எரிவாய் ஊட்டியும்
பலவா(ம்) உயிரின் குலவே(ர்) அறுத்தல்
பழியும் பாவமும் பயக்கும் செயலாம்.'

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

செல்வ நெடு மாடங்கள் நிறைந்த இராஜகிருக நகரைச் சுற்றி ஐந்து பெருங்குன்றுகள் அரண்களாக அமைந்திருந்தன. அந்நகர் மகத நாட்டின் தலைநகர். சிரேணிய* பிம்பிசாரர் அங்கிருந்துகொண்டு தமது நல்லரசாட்சியை நடத்தி வந்தார்.

அடவி, மலை, ஆறுகளை யெல்லாம் கடந்து கௌதமர் செய்துவந்த யாத்திரையில் கடைசியாக இராஜகிருக நகரை அடுத்த இரத்தினகிரி என்ற குன்றில் வந்து சிறிது காலம் தங்கியிருந்தார். அங்கேயுள்ள சோலைகளில், பல தபசிகள் தங்கள் உடல்களை மிகவும் வருத்திக் கோரமான தவங்களைச் செய்து கொண்டிருந்தனர். கூர்மையான கற்களின்மீது படுத்தும், சுடலையில் தங்கியும், சருகுகளைப் புசித்தும், ஒற்றைக் காலால் நின்றும் அவர்கள் பல முறைகளில் தங்கள் சடலங்களை வதைத்துக்கொண்டிருந்தார்கள். அவைகளை யெல்லாம் பார்த்த கௌதமர், வாழ்வின் துயரங்களே தாங்கமுடியாமல் இருக்கையில், அவர்கள் மேற்

*சிரேணியர் - போர்த்திறல் வாய்ந்தவர் என்பதைக் குறிக்கும் பட்டம்.

கொண்டும் தாமாக உடல்களை வதைத்துக்கொள்வதற்காகப் பெரிதும் இரங்கினர். உடலை வதைத்தால் சுவர்க்கம் பெற லாம் என்று அவர்கள் நம்பிக் கொண்டிருந்தனர். கௌதம முனிவர் அவர்களுக்குத் தமது கருத்தை எடுத்துக் கூறினர். உடல் உயிரின் வீடு என்றும், அந்த வீட்டை உள்ளிருந்தே இடித்துத் தகர்ப்பது அறிவுடைமை ஆகாது என்றும் அவர் கூறினர். ஆயினும் அவர்கள் கேட்பதாயில்லை.

## ஆட்டு மந்தை

இரத்தினகிரியின் சாரலிலே ஒரு நாள் முற்பகலில் கௌதமர் சோலைகளையும், அங்கே பாடித் திரிந்துகொண் டிருந்த பறவைகளையும் பார்த்துச் சிந்தனை செய்துகொண் டிருந்தார். கதிரவன் ஒளியைப் பருகி இன்பத்தில் திளைத் துக் கொண்டு ஆயிரம் ஆயிரமாகப் பூங்கொத்துக்கள் மலர்ந்திருந்தன. வானளாவி வளர்ந்திருந்த மரங்கள் இலை களும் தழைகளும் நிறைந்து இன்பமயமாகக் காட்சியளித் தன. புள்ளினங்களும் யாதொரு கவலையுமின்றி அங்கு மிங்கும் பறந்து கொண்டிருந்தன. அவைகளின் மகிழ்ச்சி கீதமாய்ப் பெருகிப் பரவிக் கொண்டிருந்தது. தாவரங் களும், பிராணிகளும், தங்களுக்கு அன்றன்று தேவையுள்ள வைகளை வெறுக்காமலும், அடைதற்கரிய பேறுகளை எண் ணிக்கொண்டு அவதிப்படாமலும் இருப்பதன் காரணம் என்ன? மானிடன் மட்டும் கைக்கு எட்டிய வாழ்வையும் கைவிட்டுக் காணுத ஒன்றுக்காகக் கவலை கொண்டு தன்னையே சித்திரவதை செய்து கொண்டிருப்பது ஏன்? மனிதன் பகுத்தறிவைப் பெற்று ஜீவராசிகளுக்குத் தலைமை வகித்திருக்கிறன்; தாவரங்களையும், விலங்குகளையும், பறவைகளையும் வதைத்து, உதிரத்தில் தோய்ந்து வளர்ந்த தன் அறிவினுல் அவன் தன்னையும் வதைத்துக் கொள்ளு கிருன் என்று கருதினர் கௌதமர்.

அவர் சிந்தனை செய்துகொண்டிருக்கும் வேளையில்,

கொடூரமாகக் காய்ந்துகொண்டிருக்கும் வெய்யிலிலே, மலை களிலிருந்து ஓர் ஆட்டுமந்தை வந்துகொண்டிருந்தது. இரு நூறு ஆடுகள் இருக்கும்; அவைகள் புதர்களை நாடி ஓடாமல் இரண்டு ஆயர்கள் அவைகளை ஓட்டிக்கொண்டு வந்து கொண்டிருந்தனர். வழக்கமாக ஆடுகள் மாலை நேரத்திலேயே மலையிலிருந்து திரும்புவது வழக்கம். நண்பகலிலே அவைகள் கூட்டமாகச் செல்வதைக் கண்ட கௌதமர், அவைகள் எங்குச் செல்லுகின்றன என்று ஆயர்களிடம் கேட்டார்.

பிம்பிசார மன்னர் அன்று நடத்தும் வேள்விக்காக அந்த ஆடுகளை யெல்லாம் அழைத்துச் செல்வதாக ஆயர்கள் கூறினர். அன்று மாலையோடு யாகம் முடிவடைவதாயும் தெரிவித்தனர்.

அஜமேதம், அசுவமேதம், நரமேதம் முதலிய எத்தனை வித யாகங்கள்! மனிதன் தான் செய்த பாவங்களை யெல்லாம் வேறு ஜீவன்களின்மீது ஏற்றி, அவைகளின் தலைகளை வெட்டித் தெய்வங்களுக்குப் பலியளித்தால், தன் பாவங்கள் ஒழிந்து பேரின்பம் கிடைக்கும் என்று நம்பிக்கொண்டிருந்தான். அந்தக் காலத்திலே அவரவர் பாவ புண்ணியங்களை அவரவர் அனுபவித்துத் தீரவேண்டும் என்று நம்பிக் கொண்டிருந்த கௌதமர், வாயில்லாப் பிராணிகளான ஆடுகளைக் கண்டு பெரிதும் மனம் வருந்தினுர். அவைகள் தங்கள் தலைகளைக் கொலை வாளுக்கு இரையாகக் கொடுப்பதற்காகக் காட்டு வழியாக விரைந்து சென்று கொண்டிருந்தன. உயிரில் அவைகளுக்கு எவ்வளவு ஆசையிருந்தது! சாலையின் இருபுறத்தும் இருந்த செடிகளையும் தழைகளையும் உண்டு பசியாறுவதற்கு அவைகளுக்கு எவ்வளவு ஆசையிருந்தது! அவைகளுக்குள்ளே பெரிய ஆடுகள் குட்டிகளை அழைத்துச் செல்லும் அன்புக்கு ஓர் அவதியில்லாதிருந்தது.

ஆட்டு மந்தைக்குப் பின்னுல் ஒரு பெண் ஆடு ஒரு குட்டி

யுடன் மெல்ல மெல்ல வந்துகொண்டிருந்தது. அதனுடைய மற்ஞெருகுட்டி கால் நொண்டியாயிருந்ததால் வெய்யிலில் நடக்க முடியாமல் தள்ளாடி வந்துகொண்டிருந்தது. தாய் ஆடு அதை விட்டுப் பிரிய மனமின்றித் தயங்கித் தயங்கித் திரும்பிப் பார்த்துக்கொண்டே யிருந்தது. கருணையின் நிலையமாகிய கௌதமர் அந்தக் காட்சியைக் கண்டதும், ஓடிச் சென்று நொண்டிக் குட்டியைப் பரிவோடு தூக்கித் தமது தோளிலே வைத்துக்கொண்டார். 'நானும் வேள்வி காண வருகிறேன்!' என்று கூறி, அவரும் ஆயர்களோடு தலைநகருக்குப் புறப்பட்டார்.

## யாகம் தடுத்தல்

'மனேந்தும் ஈச(ன்) உளம் நாண, ஆட்டின்
மறியேந்து பெருங்கருணைப் புனித வள்ளல்'

மாலை நேரத்திலே மாநகரின் திருவாயிலை அடைந்தார். கருணையே உருவெடுத்துக் கால், கரங்களோடு நடப்பது போல் விளங்கிய அருளரசைக் கண்ட மக்கள், அவர் முகப் பொலிவையும், தவக் கோலத்தையும் கண்டு சொக்கிப் போய்விட்டனர். வீதிகளிலே பெண்டுகள் வீடுகளைத் திறந்து போட்டுவிட்டு, அவர் பேரெழிலைக் கண்களால் முகந்து பருகிக்கொண்டு, மெய்மறந்து நின்றனர். நகரின் சந்தடியே அடங்கி, நாலு பக்கங்களிலிருந்தும் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்து ஆடு சுமந்து செல்லும் ஐயனைத் தரிசித்துக்கொண்டிருந்தார்கள். வீதிகளை யெல்லாம் தாண்டிச் சென்று ஐயனும் ஆயர்களும் வேள்விச் சாலையை அடைந்தார்கள்.

வேள்விச் சாலையின் நடுவே மகத நாட்டு மன்னர் பிம்பிசாரர் நின்று கொண்டிருந்தார். வேத முறைப்படி வேதியர் மந்திரம் ஓதி, அக்கினி வளர்த்து, அதில் ஆகுதிகளைப் பெய்து கொண்டிருந்தனர். தரையிலே முன்னல்

வெட்டிய ஆடுகளின் உதிரம் பாய்ந்திருந்தது. மற்ருெரு புறத்திலே யாகத் தறியிலே ஒரு வெள்ளாடு கட்டப்பெற்றிருந்தது. தீட்சிதர் ஒருவர் வாளேந்தி அதை வெட்டப் போகும் தருணத்திலே, கௌதமர் ஓடிச்சென்று, அக் கொலையினைத் தடுத்து, அரசரைப் பார்த்து, 'ஆட்டினைக் கொல்லாது அருள் புரியவேண்டும்!' என்று கேட்டுக் கொண்டார். ஆட்டின் காலிலும், வாலிலும், கண்டத்திலும் கட்டியிறுக்கியிருந்த கட்டுக்களை அவிழ்த்து, அதை அவரே விடுதலை செய்துவிட்டார். வேள்வித் தீயின் ஒளியைப் பார்க்கிலும் விரிந்த சோதியோடு விளங்கிய அவர் திருமுகத்தை நோக்கிய வண்ணம் யாவரும் திடுக்கிட்டு நின்றனர்.

'பாவத்தைத் தொலைப்பதற்காகக் கொலையுடன்கூடிய யாகம் செய்தல் புதிய பாவத்தையே விளைவிக்கும். பிராணிகளின் உதிரத்தால் எவனும் தன்னைப் பரிசுத்தமாக்க முடியாது. தேவர்கள் நல்லவராயின், கொலையுடன் கூடிய ஊனுடை வேள்வியால் உள்ளம் களிக்க மாட்டார்கள். அவர்கள் தீயோராயின், அத்தீயோரிடமிருந்து நமக்கு என்ன நன்மை கிடைக்கும்?' என்று வினவினுர் விமலர்.

> 'வாழும் உயிரினை வாங்கிவிடல்—இந்த
> மண்ணில் எவர்க்கும் எளிதாகும்;
> வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
> வேந்தன் நினைக்கினும் ஆகாதையா!
>
> 'பிள்ளையைக் கொன்று கறிசமைத்தீர்—அதன்
> பெற்ருேரை உண்ண அழைத்துநின்றீர்;
> வள்ளலே, உள்ளந் தெளிந்தவரே—இது
> வாழ்வை யளிக்கும் செயலாமோ?
>
> 'கன்று பசுவை மறந்திடினும்—செய்த
> கருமங்கள் உம்மை விடுமோ, ஐயா?
> கொன்று பழிதேட வேண்டாமையா—இனிக்
> கொல்லா விரதம்மேற் கொள்ளுமையா!'

இவ்வாறு கருணை வள்ளல் உயிர்க்கொலை தவிர்த்து, உள்ளத்தால் ஊனமில் வேள்வியை நடத்தி வரும்படி மன்னர்க்கும் மறையோர்க்கும் பலவாறு உபதேசித்தார். 'யாகங்களால் மன்னர்க்குப் பெருமை என்றும், மறையோர்க்குப் புண்ணியம் என்றும், பலியிடப் பெறும் உயிர்களுக்குச் சொர்க்கம் என்றும் கூறுவர். பலியிடும் உயிர் உடனே சுவர்க்கம் செல்வதானால், ஒருவன் முதலில் தன் தந்தையையே பலியிட்டுச் சுவர்க்கத்திற்கு அனுப்பிவிடலாமே! அவரைவிடச் சிறந்த உயிர்தான் வேறு ஏது? ஆதலால் உயிர்ப்பலி வேண்டாம்! அவசியமானால், என்னையே பலியிடுங்கள்—ஏழை ஆட்டின் உயிரை வாங்க வேண்டாம்!' என்று அவர் முரசு முழங்கியதுபோல் முழக்கம் செய்தார்.

அருகே வந்து பணிவுடன் கேட்டுக்கொண்டிருந்த மகத மன்னர், களங்கமற்ற மூர்த்தியைக் கண்குளிரக் கண்டு வணங்கி, செய்த பிழையைப் பொறுத்தருளும்படி வேண்டினார். 'இனி நாடெங்கும் கொலை தவிர்க்கும்படி நாளையே பறையறைவிப்பேன்!' என்று சபதமும் செய்துகொண்டார். வேதியர்களும் ஓமகுண்டத்தீயை அவித்துவிட்டு வேள்வியை நிறுத்திக் கொண்டனர்.*

---

*இந்த வேள்வியைப் பற்றியோ, கௌதமர் வந்து தடை செய்தது பற்றியோ அசுவகோஷர் முதலியோர் கூறியுள்ள வரலாறுகளில் செய்தி யொன்றுமில்லை. மலையடிவாரத்திலே கௌதமர் பிச்சைச் சோற்றை உண்டு கொண்டிருப்பதையும், ஒரு குகையில் வாழ்வதையும் ஒற்றர் மூலம் கேள்வியுற்ற பிம்பிசாரர், அங்கே சென்று அவரை வணங்கி வரவேற்றதை அவ்வரலாறுகள் கூறுகின்றன. மன்னருக்கும் கௌதமருக்கும் நிகழ்ந்த நீண்ட சம்பாஷணையில், பிம்பிசாரர் யாகத்தின் பெருமைகளைக் கூறும்போது, கௌதமர் ஊனுடை வேள்வியை வன்மையாகக் கண்டித்துக் கூறியிருக்கிறார்.

இங்கே குறித்துள்ள வரலாறு எட்வின் ஆர்னல்ட் எழுதிய 'ஆசிய ஜோதி—Light of Asia' என்ற நூலில் உள்ளது.

'ஆண்டால் தரணியை ஆள்வார், இல்லையெனில் அகில உலகுக்கும் ஞானகுருவாக விளங்குவார்!' என்று ஆதியில் வேதியர்கள் சாக்கிய மன்னர்க்குக் கூறிய சாக்கிய இளவரசரே தவக்கோலத்தில் அங்கு எழுந்தருளியுள்ளார் என்பதை அதிகாரிகள் மூலம் அறிந்துகொண்டதும், இந்திரன் பிரமனை வணங்கச் செல்வதுபோலப் பிம்பிசாரர் அவர் அண்டையில் சென்றார். உடல் நலம் பற்றி விசாரித்தார். கௌதமரும், இனிய முகத்துடன், தம் உள்ளமும் உடலும் செம்மையுற்றிருப்பதாக மறுமொழி கூறினார். பின்னர் மன்னர் அவருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களை யெல்லாம் முறை தவறாமல் செய்து, அவரைத் தம்மோடு இருக்கும்படி வேண்டினார். ஆனால் கௌதம பிக்கு, தாம் வந்த காரியம் முடிந்ததென்று சொல்லிவிட்டு, மீண்டும் மலையருகே தாம் வாழ்ந்துவந்த குகையை நோக்கிச் சென்றுவிட்டார்.

சிரேணிய மன்னர் சித்தார்த்தருடைய துறவை எண்ணிக் கவலைப்பட்டார். இளம் வயதிலேயே, மணிமுடி துறந்து, காவியுடுத்து முண்டிதமான தலையுடன் ஒளியுடன் விளங்கிய உருவத்தை அவர் சிறிது நேரம் கூட மறக்க முடியவில்லை. மறு நாட் காலை, அவர் மந்திர மறையோர்களையும், மந்திரிகளையும் அழைத்துக் கொண்டு கௌதமரைத் தரிசித்து வருவதற்காக வனத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## பிம்பிசாரரின் வேண்டுகோள்

மலையின்மீது ஒரு மரத்தின் நிழலில் அசலம்* போல அசைவில்லாமல் அமர்ந்திருந்த கௌதமரைக் கண்டு அவர் வணங்கி விட்டு, அருகே யிருந்த ஒரு பாறை மீது அமர்ந்து

* அசலம்—சலனமில்லாத மலை.

கொண்டு, தம் உள்ளத்தில் தோன்றிய உணர்ச்சிகளை அவரிடம் வெளியிட்டுப் பேச ஆரம்பித்தார்.

'சாக்கிய குல தீபமே! தங்கள் மரபுக்கும் எனக்கும் நெருங்கிய உறவு உண்டு. தங்கள் சூரிய வமிசத்தின் பெருமையை நான் அறிவேன். அந்த வமிசத்திலே உதித்து, இளமையும் எழிலும் கொண்ட தாங்கள், நாட்டை ஆளும் கடமையை விட்டுத் துறவு பூண்டு வந்திருப்பது எனக்கு வியப்பாகவே இருக்கிறது. இந்த விரக்தி தங்களுக்கு எப்படி வந்தது? முரட்டுத் துணிகளைத் தாங்கள் எப்படி அணிய முடிகிறது? பல வீடுகளில் வாங்கும் கேவலமான பிச்சை உணவைத் தாங்கள் எப்படி வெறுப்பின்றி உண்ண முடிகிறது?' எனக் கேட்டார்.

கௌதமர் பதில் கூறினார்: 'முதன் முதலில் எனக்கும் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் இப்போது இவைகள் எனக்குக் கஷ்டமாகத் தோன்றவில்லை. பழகப் பழக எல்லாம் சரியாகப் போய்விடும். ஒரு பிக்குவினுடைய மாசற்ற உடையிலிருந்து மேலாடைக்கும் மனிதனுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதை நான் அறிந்து கொண்டேன். களங்கமற்ற மனம் இருந்தால் போதும். புசிக்கும் உணவில் என்ன இருகிறது? மாசற்ற மனமே மனிதருக்கு இருக்கவேண்டும். தேன் மிகவும் தித்திப்பாய்த் தான் இருக்கிறது. ஆனால் அது கொலையினாலும் களவினாலும் சேர்க்கப்பட்ட வஸ்துவானதால், இனிப்பாயிருந்து என்ன பயன்? அதைவிட ஆற்றில் ஓடும் பரிசுத்தமான தண்ணீரே அதிக இனிப்பு வாய்ந்த தென்று கருத வேண்டும். ஏனெனில் அத்தண்ணீர் கள்ளத்தனமாகச் சம்பாதிக்கப்பட்ட வஸ்துவல்ல.'*

மீண்டும் பிம்பிசாரர் தொடர்ந்து பேசினார். 'செங்கோல்

---

*பழைய நீதிக்கதைகள்— பாகம் I—திரு. ஏ.எஸ். பஞ்சாபகேச ஐயர், ஐ. ஸி. எஸ்.

பிடிக்க வேண்டிய தங்கள் கரம் பிச்சையெடுக்க ஏற்ற தன்று. அண்டினேர்க்கு அபயமளிக்க வேண்டிய கையில் திருவோட்டை ஏந்துவது பொருத்தமாகத் தோன்றவில்லை.

'தந்தை ஆளும் இராஜ்யத்தைத் தாம் ஆள விரும்புதல் கூடாது என்று தாங்கள் அன்பினுலே அகற்றிவிட்டு வந்திருந்தால், இங்கே என் இராஜ்யம் இருக்கின்றது. இதில் பாதியை நீங்கள் ஆளலாம். நல்லாரின் இணக்கம் நன்மையானது என்பதால், எனக்கும் என் நாட்டுக்கும் நலமே விளையும். இப்போதே என் கடமையை நிறைவேற்றச் சித்தமாயுள்ளேன். தாங்கள் மனமுவந்து சம்மதிக்க வேண்டும்.

'சாக்கிய குல திலகமாகிய நீங்கள் பிறருடைய இராஜ்யத்தை ஏற்றல் இழுக்கு என்று கருதினுல், எண்ணற்ற படைகளைத் திரட்டிப் போர்த்தொழிலில் இறங்குங்கள். அதற்கும் உதவியளிக்க நான் சித்தமாயுள்ளேன்.

'இன்பம், செல்வம், அறம் மூன்றுமே இம்மையில் நாம் அடையத்தக்க பயன்கள். அறம், பொருள், இன்பங்களை அநுபவித்தவரே நிறைந்த மனிதர்; வீட்டுப் பேற்றை விரும்பி முயலவேண்டியவர்கள் அவர்களே.

'வில்லேந்த வேண்டிய தங்கள் கைகள் வீணுகச் சோம்பியிருக்க வேண்டாம். இந்த உலகம் கிடக்கட்டும்—மூவுலகையும் வெற்றிகொண்டு ஆள முற்படுங்கள்!

'உங்களிடம் விளைந்த அன்பினுல் நான் இதைக் கூறுகிறேன்; ஆதிக்கிய ஆசையாலன்று. உங்கள் துவராடையைக் கண்ட பிறகு, அன்பினுல் என் உள்ளம் உருகிக் கண்களில் நீர் பெருகுகிறது.

'இப்போது இன்பங்களை நுகர வேண்டிய பருவம். பின்னுல் கொள்ள வேண்டியதே பெருந்துறவு. இளமைக்கு ஏற்றவை இன்பங்கள்; நடுவயதுக்கு ஏற்றது செல்வம்; முதுமைக்கு ஏற்றது துறவு என்றே ஆன்றோர் வகுத்துள்ளனர்.

'இளமையிலே புலன்கள் விரும்பிய திசையெல்லாம் பாயக்கூடியவை. இன்பங்கள் எங்கெங்கு கிடைக்குமோ அங்கெல்லாம் அவைகளைப் பற்றிக்கொள்ள வேண்டும். செல்வமும் துறவும் இளமையின் இலட்சியங்கள் அல்ல.'

மகத மன்னரின் அன்பும் ஆர்வமும் கௌதமர் உள்ளத்தைக் கவர்ந்தன. ஆயினும் அவருடைய உரைமட்டும் தமது கொள்கைக்குப் புறம்பாக விளங்குவதை உணர்ந்தார். நட்பு உரிமையோடு அவர் கூறிய கூற்றுக்களை நயமான உரைகளாலேயே மறுத்துரைக்க வேண்டும் என்று கருதி, அவர் மறுமொழி புகல ஆரம்பித்தார் :

'முதுமையையும் மரணத்தையும் கண்டு அஞ்சி, விடுதலை நாட்டத்தோடு நான் துறவு பூண்டு வந்துள்ளேன். கண்ணீரும் கம்பலையுமாக நின்ற உற்றார், உறவினர் யாவரையும் துறந்து வெளியேறியவன் நான்.

'உலக இன்பங்களைக் கண்டு வெறுத்து விட்டேன். விடங்கொண்ட நாகங்களைப் பார்க்கினும், வானத்திலிருந்து வீழும் இடிகளைப் பார்க்கினும், காற்றோடு கலந்து பரவும் பெரு நெருப்பைப் பார்க்கினும் நான் இந்த இன்பங்களைக் கண்டு அதிகமாக அஞ்சுகிறேன்.

'நிலையற்ற இன்பங்களே நமது உண்மையான இன்பத்தையும், செல்வத்தையும் கொள்ளை கொள்ளும் சோரர்கள்! இவைகள் யாவும் கானல் நீரே.

'விறகிட்ட தீயைப்போல, இன்பத் தேட்டம் பெருகிக் கொண்டே யிருக்கும். அதற்கு ஓய்வுமில்லை; ஒழிவுமில்லை. அதற்கு அடிமைப்பட்டவர்களுக்கு இம்மையிலும் இன்பமில்லை ; மறுமையிலும் இன்பமில்லை.

'மயக்கத்தினாலேயே மக்கள் இந்த இன்பங்களின் வலையில் வீழ்கின்றனர். உண்மையை உணர்ந்தவன், சித்தத் தெளிவுடையவன், தீமையைக் கண்டு ஒதுங்கியவன், தானாக மறுபடி இந்த இன்பங்களிலே எங்ஙனம் நாட்டம் கொள்வான்?

'வையமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆண்டாலும், இன்னும் கடலுக்கு அப்பால் கண்டம் எதுவும் இருக்கிறதா என்று ஆசை கொள்ளல் இயல்பு. ஆசைக்கு ஓர் அளவில்லை! கடல் முழுவதும் நீர் நிறைந்திருப்பினும், அதற்கு அமைதியில்லை. அதுபோல், எத்தனை எத்தனை இன்பங்கள் இருப்பினும், மனித குலத்திற்குத் தெவிட்டுதல் இல்லை!

'ஆதலால் இன்பங்கள் என்ற இந்தக் கொடிய பகைவர்களோடு உறவாட எவர்கள் விரும்புவார்கள்? கந்தை அணிந்து, கந்த மூலங்களையே உண்டு, நாகங்களைப்போல நீண்டு தொங்கும் சடை முடிகளோடு விளங்கிய மகரிஷிகள்கூட இவைகளைக் கண்டு மயங்கினார்கள் என்றால், மற்றவர் நிலையைக் கூறுவானேன்! இன்பங்கள் யாவும் நஞ்சுகள். ஆழ்ந்த அறிவுடையோர் இவைகளை அமுதம் என்று விரும்பலாகாது. இன்பங்கள் சீறிப் பாய்கின்ற சர்ப்பங்கள்! இவைகளை அண்டலாகாது.

'இன்பங்களின் உண்மையான தன்மைகளை உணர்ந்தவர்கள் அவைகளைப் பரிகாரங்களாகவே எண்ணுவார்கள். தாகவிடாய்க்குத் தண்ணீர், பசிப்பிணிக்கு உணவு, வாடைக்கும் வெயிலுக்கும் வீடு, அம்மணத்தை மறைக்க ஆடை—இவ்வாறு ஏற்பட்டுள்ள பரிகாரங்களே நமக்கு இன்பங்களாகத் தோன்றுகின்றன.

'இன்பங்கள் நிலையற்றவை. முடிவில் இவற்றால் துன்பங்களே வருகின்றன. ஒருகாலத்தில் இன்பங்களாயுள்ளவை, மற்றொரு சமயம் துன்பங்களாக மாறுகின்றன.

'உலகில் இன்பமும் துன்பமும் இணைந்தே இருக்கின்றன. எந்த நேரமும் புன்னகை புரிந்து கொண்டிருக்கும் அரசனும் இங்கில்லை; எந்த நேரமும் வேதனையில் வாடிக் கொண்டிருக்கும் அடிமையும் இங்கில்லை.

'உலகத்தையெல்லாம் வென்ற மன்னனுக்கும் தங்குவதற்கு ஒரு நகரமே தேவை; வசிப்பதற்கு ஒரு மாளிகை

தான் தேவை ; உணவும் உடுக்கையும் அவ்வாறே அற்பத் தேவையில் அடங்கிவிடுகின்றன. மற்றைப்படி மன்னர்க் குரிய வரிசைகள் யாவும் வெறும் ஆடம்பரங்களே! ஆதலால் அரசாட்சி என்பது பிறருக்காக நாம் மேற்கொள்ளும் உழைப்பேயாகும்.

'இராஜ்யம் இல்லாமலே எனக்குத் திருப்தி ஏற்பட்டுள்ளது. திருப்தியுள்ள இடத்தில் பேதங்கள் மறையும். உண்மையான இன்பத்தை அடையும் நெடுந் தருமப் பாதையிலே செல்பவனை அற்ப இன்பங்கள் ஏமாற்ற முடியாது.

'நண்பரே! பிச்சையெடுத்து வாழும் துறவியைக் கண்டு இரங்குதல் வேண்டாம். அவனே பாக்கியசாலி! முதுமையையும் மரணத்தையும் வெற்றி கொள்ளும் பாதையிலே செல்லும் அவனே, இவ்வுலகில் இணையற்ற ஆனந்தத்தையும் சாந்தியையும் அனுபவிப்பான். மறுமையிலும் அவனுக்குத் துன்பங்களில்லை.

' இம்மையிலே பெருஞ் செல்வத்தின் நடுவிலும் ஆசை அடங்காமல், சாந்தியில்லாது சஞ்சலப் படுவோனுக்கே நாம் இரங்கவேண்டும். மறுமையிலும் அவனுக்கு வேதனையே காத்து நிற்கும்.

' தாங்கள் கூறிய கூற்றுக்கள் தங்கள் பெருமைக்கும், பண்புக்கும், வாழ்க்கைக்கும், தங்களுடைய மாண்புடைய மரபுக்கும் ஏற்புடையவை ; என் தீர்மானத்தை நிறைவேற்றுவதே என் பெருமைக்கும், பண்புக்கும், வாழ்க்கைக்கும், மரபுக்கும் ஏற்புடையவை.

'ஆதலால் இந்திர லோகத்தை ஆளும் பேற்றினைக் கூட நான் ஏற்றுக்கொள்ள இயலாது. முதுமையும், பயமும், பிறப்பும், இறப்பும், சோகமும், துயரமும் இல்லாத உலகத்தை அடைவதே மனிதனின் மகோன்னதமான இலட்சியம். நமக்கு மரணம் எப்போது வரும் என்பதை அறியாத நிலையில், முதுமை வரட்டும் என்று காத்திருத்தல் ஆகாது.

'சத்தியத்தை நாடி நான் செல்லும் யாத்திரையில் அடுத்தபடியாக ஞான குருவான ஆலார காலாமரை நான் சந்திக்கவேண்டும். அவரைத் தேடியே நான் இங்கு வந்தேன். இன்றே நான் புறப்படவேண்டும். தங்களுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும். வான மண்டலத்தில் இருந்துகொண்டு கதிரவன் உலகனைத்திலும் ஒளிபரப்புதல் போல, உங்கள் மேன்மைக் குணங்களால் மக்களுக்கு இன்பம் பெருகுவதாக !'

பிம்பிசாரப் பெருந்தகை எழுந்து நின்று, அவரைச் சுற்றி வலம் வந்து, இருகையும் கூப்பி வணக்கம் கூறினார். 'தங்கள் கோரிக்கை நிச்சயம் நிறைவேறும்! விரும்பிய சித்தியெல்லாம் பெற்றபின்பு, தாங்கள் என்னை மறவாது மறுபடி என் நாட்டுக்கு எழுந்தருளவேண்டும்!' என்று வேண்டிக் கொண்டார்.

அறத்தகை முதல்வரும் அவ்வாறே வருவதாக உறுதி சொல்லி விட்டு, ஆங்கிருந்து சென்றார்.

# ஆறு ஆண்டுகளின் அருந்தவம்

'ஓடிஓடி ஓடிஓடி
உட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி
நாட்களும் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி
மாண்டுபோன மானிடர்
கோடிகோடி கோடிகோடி
எண்ணிறந்த கோடியே!'

—பட்டினத்தார்

வைசுவந்தரத் தவப் பள்ளியிலே கௌதமர் பெருந்தவ முனிவரான ஆலார காலாமரையும், பிறகு உருத்திரகரையும்* கண்டு, அவர்களிடம் உபதேசம் பெற்ருர். அக்காலத்தில் இவ்விரு வேதியர்களுமே ஞானத்திலும் தவத்திலும் பெரும் புகழ் பெற்றிருந்தனர். கௌதமர் இவர்களைச் சந்தித்த விவரங்கள் 'மஜ்ஜிம நிகாயம்—மகா சச்சக சூத்திர'த்திலும், 'அரிய பரியேசன சூத்திர'த்திலும் குறிக்கப் பெற்றிருக்கின்றன.

## ஆலார காலாமர்

ஆலார காலாமரும், அவருடைய சீடர்களும் கௌதமரை நன்கு வரவேற்றனர். காலாமர் தாம் அறிந்திருந்த

*இவருடைய தந்தையின் பெயர் இராமர் என்பதால், இவரை உருத்திரக ராமபுத்திரர் என்று கூறுவதுண்டு; பாலியில் உத்தக ராம புத்தா என்பர்.

தத்துவங்களை அவருக்குக் கூறினர். 'அறிவாளராகிய ஒரு வர் தம் உள்ளுணர்வினாலே தமது ஆசிரியருடைய சித்தாந் தத்தை விரைவிலே தெரிந்துகொண்டு, அந்த நிலையில் நிலைத்து நிற்கும்படி என் சித்தாந்தம் எளிதாக இருக்கிறது' என்று சொல்லி, அவருக்கு வேண்டிய விளக்கங்களை யெல் லாம் விரிவாக எடுத்துக் கூறினர். கௌதமரும் மிகவும் விரைவிலே அந்தச் சித்தாந்தத்தைக் கற்று மனப்பாடம் செய்து ஓதிய பிறகு, அதன்படி நடக்கவும் ஆரம்பித்தார். அநுபவ பூர்வமாகக் குருவின் உபதேசங்களை அவர் கடைப் பிடித்து வந்தார்.

காலாமர் கூறியதாவது : 'ஐம்பொறிகளின் மூலங்க ளாகிய ஐம்புலன்களின் செயல்களையும் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவைகளையும்), மனத்தின் செயலையும் உய்த்துணரும் "**நான்**" என்பது எது? கைகளாலும், கால்க ளாலும் இயக்கம் ஏற்படக் காரணமானது எது? "**நான்** சொல்லுகிறேன்", "**நான்** அறிகிறேன்; உணர்கிறேன்", "**நான்** வருகிறேன்", "**நான்** செல்கிறேன்," "**நான்** இங்கே தங்குகிறேன்" என்ற கூற்றுக்களில் ஆன்மா குறிக்கப் பெறுகின்றது. உன் உடல் ஆன்மா அன்று; கண், காது, நாசி, நாக்கு, மனம் ஆகியவை ஆன்மா ஆகமாட்டா. உடலின் தீண்டுகையை உணர்வது "**நான்.**" நாசியில் வாசத்தையும், நாவில் சுவையையும், கண்ணில் பார்வையை யும், காதில் கேள்வியையும், மனத்தில் உணர்வையும் உணர் வது "**நான்.**" "**நான்**" என்பதே கைகளையும், கால்களையும் இயக்குவது. அந்த "**நான்**"தான் ஆன்மா. ஆன்மாவின் உண்மையைச் சந்தேகித்தல் மத சம்பிரதாயத்திற்கு விரோ தம்; ஆன்மாவின் உண்மையை உணராமல் முக்தி யில்லை. அநுமானத்தால் ஆழ்ந்த ஆராய்ச்சியில் இறங்கினால், உள் ளம் கலங்கி அவநம்பிக்கையே ஏற்படும். ஆனால், ஆன்மா வைப் பரிசுத்தமாக்குவதன்மூலம் விடுதலைக்கு வழி கிடைக் கும். ஜனக் கூட்டத்தைவிட்டு விலகித் துறவு வாழ்க்கையை

மேற்கொண்டு, பிச்சை யெடுத்து உண்டு வந்தால், உண்மை யான விடுதலையை அடையலாம். ஆசைகள் அனைத்தையும் அகற்றிவிட்டு, சடப் பொருள் உண்மையன்று என்பதைத் தெளிவாக அறிந்தால், கூண்டிலிருந்து தப்பும் பறவையைப் போல, அகங்காரம் தன் தளைகளிலிருந்து விடுதலை அடையும். இதுவே உண்மை முக்தி; ஆழ்ந்த நம்பிக்கையுடையவர்களே இதைக் கற்று அறிந்துகொள்ள முடியும்.'

கௌதமருக்கு இந்தப் போதனையில் திருப்தி ஏற்படவில்லை. 'நான் என்னும் அகங்காரத்தை அகற்றாததாலேயே மக்கள் பந்தங்களிலே சிக்கியிருக்கின்றனர்' என்று மறுத்துக் கூற ஆரம்பித்தார் :

'ஒரு பொருளையும் அதன் குணத்தையும் நாம் நம் கருத்திலே பிரித்துப் பார்க்க முடிகிறது. ஆனால், பிரத்தியட்சத்தில் அவ்வாறில்லை. நம் கருத்தில் நெருப்பிலிருந்து வெப்பத்தைப் பிரித்துக் காணலாம். ஆனால், நடைமுறையில் வெப்பத்தை நெருப்பிலிருந்து வேறுபடுத்த முடியாது. தாங்கள் குணங்களைப் பிரித்துவிட்டுப் பொருளைத் தனியேவிட்டு விடலாம் என்று கூறுகிறீர்கள். இந்தத் தத்துவத்தை முடிவுவரை ஆராய்ந்து பார்த்தால், உண்மை அப்படியில்லை என்பதைக் காணலாம்.

'மனிதன் பல ஸ்கந்தங்களின் சேர்க்கை அல்லவா? நம் முனிவர்கள் கூறுவது போல நாம் பல ஸ்கந்தங்களின் சேர்க்கையாகவே இருக்கிறோம் அல்லவா? தூல உருவம், புலனுணர்ச்சி, சிந்தனை, சுபாவங்கள், அறிவு ஆகியவற்றின் தொகுதியாகவே மனிதன் விளங்குகிறான். "நான் இருக்கிறேன்" என்று சொல்லும் போது மனிதரால் குறிக்கப் பெறும் அகங்காரம் ஸ்கந்தங்களுக்கு அப்பாற்பட்ட ஒரு தனிப் பொருளன்று; ஸ்கந்தங்களின் கூட்டுறவினாலேயே அந்த அகங்காரம் தோன்றுகிறது. மனம் இருக்கின்றது; உணர்ச்சியும் சிந்தனையும் இருக்கின்றன; உண்மையும் இருக்கின்றது; அறவழியில் செல்லும் மனமே

உண்மையானது. மானிடனின் சிந்தனைக்கு அப்பாற்பட்டுத் தனியான ஆன்மா என்னும் அகம் இல்லை. அகங்காரம் தனிப்பட்ட ஆன்மா என்று நம்புவோன் பொருள்களின் தன்மையைத் தெளிவாக உணர்ந்தவன் ஆகான். 'ஆன்மாவைத் தேடிக் கொண்டு அலைவதே தவறு; ஆரம்பமே தவருயிருப்பதால், வழியும் தவருகவே முடியும்.*

'அகத்தில் நாம் கொள்ளும் ஆசையாலும், "நான் பெரியவன்", "வியக்கத் தகுந்த இச் செயலை நான் புரிந்தேன்" என்று நாம் கருதும் செருக்கினாலும் சிந்தனையிலே எவ்வளவு குழப்பம் ஏற்பட்டுள்ளது? "நான்" என்ற சிந்தனை நம் பகுத்தறிவு இயற்கைக்கும் உண்மைக்கும் நடுவிலே நிற்கின்றது; அதை ஒழித்து விட்டால், பொருள்களின் உண்மை நிலை புலனாகும். சரியான முறையில் சிந்திப்பவன் அறியாமையை நீக்கி, ஞானத்தை அடைவான். "நான் இருக்கிறேன்", "நான் இருப்பேன்", "நான் இருக்க மாட்டேன்" என்ற எண்ணங்கள் தெளிவான சித்தனையாளனுக்கு ஏற்படுவதில்லை.

'மேலும், அகங்காரம் நிலைத்திருக்கும் என்றால், உண்மையான விடுதலையைப் பெறுவது எங்ஙனம்? சுவர்க்கம், மத்தியம், பாதாளம் ஆகிய மூவுலகங்களில் எங்கேனும் அகங்காரம் புனர்ஜன்மம் எடுக்கும் என்றால், திரும்பத் திம்பப் பிறப்பும் வாழ்க்கையுமாகவே இருக்கும். அகங்காரமும், பாவமுமாகிய சுழலிலேயே நாம் சிக்குண்டிருப்போம்.

'கலப்புற்ற பொருள்கள் பிரிந்துவிடும்; நாம் பிறப்பு, பிணி, முதுமை, மரணங்களிலிருந்து தப்பவே முடியாமற் போகும். இது எப்படி முடிவான விடுதலையாகும்?'

காலாமர் அநுபவ பூர்வமாக எவ்வளவு அறிந்திருந்தாரோ, அந்த அளவுக்குக் கௌதமரும் அறிந்து கொண்

*'மகா வக்கம்.'

டார். அவர் மூலம் ஏழு சமாபத்திகளையே அறிந்து கொள்ள முடிந்தது. அவை அனைத்தும் வெகு விரைவிலே கைவரப் பெற்றுக் கௌதமர் அவற்றிலே நிலைத்து நின்றார். பிறகு குருவை அடைந்து, 'காலாம நண்பரே, தாங்கள் தங்கள் உள்ளுணர்வு அறிவினால் தெரிந்து நிலைத்து நிற்கும் தங்கள் சித்தாந்தத்தின் தன்மை இவ்வளவுதானா?' என்று வினவினார். காலாமரும், 'ஆம், இவ்வளவுதான்!' என்றார்.

கௌதமர் தமக்கும் அந்தச் சித்தாந்தம் முழுதும் அநுபவத்தில் கைவந்து விட்டதாகக் கூறினார். காலாமர் மிக்க மகிழ்ச்சியடைந்து, 'நான் அறிந்த சித்தாந்தத்தை நீர் அறிவீர்; நீர் அறிந்த சித்தாந்தத்தை நான் அறிவேன். என்னைப் போலவே நீர் இருக்கிறீர்; உம்மைப் போலவே நான் இருக்கிறேன். எனவே, நண்பரே, நாம் இருவரும் சேர்ந்து நம் சீடர்களாகிய முனிவர்களுக்குத் தலைவர்களாக இருப்போம்!' என்று கூறினார். சீடராக வந்தவரை அவர் தமக்குச் சமமான குருவாக ஏற்றுக் கொண்டார்.

ஆனால் கௌதமர் அதற்கு இணங்கவில்லை. 'இந்தச் சித்தாந்தம் என்னைத் துறவு வழியில் செலுத்தி, ஏகாந்த நிலையில் மனத்திற்கு அமைதியைக் கொடுத்து, உள்ளுணர்வைப் பெருக்கி, ஞானத்தை அளித்து, நிர்வாண முத்திக்குச் செலுத்தவில்லை. வெறும் ஏழு சமாபத்திகளையே அளிக்கின்றது!' என்று கருதி, அவர் திருப்தி கொள்ளாமல், சத்தியத்தை நாடி வெளியேறிச் செல்ல விடை கொண்டார்.

## உருத்திரகர்

அடுத்தாற் போல் அவர் உருத்திரக முனிவரிடம் சென்று உபதேசம் கேட்டார். உருத்திரகரும் அன்போடு அழைத்து அருகே யிருத்திக்கொண்டு, தமக்குத் தெரிந்த விஷயங்களை யெல்லாம் எடுத்துச் சொன்னார்.

கருமத்தைப் பற்றி அவர் வற்புறுத்திக் கூறினர். மக்களின் குண வேறுபாடுகளுக்கும், ஏற்றத் தாழ்வுகளுக்கும், செல்வ நிலைக்கும், விதிக்கும் அவர்களுடைய கருமமே காரணம் என்றும், அவரவர் கருமத்திற்கு ஏற்ப நன்மையும் தீமையும் ஏற்படுகின்றன என்றும், ஆன்மா புனர்ஜன்மங்கள் எடுப்பதும் கருமத்தின் விளைவு என்றும் அவர் விளக்கிக் கூறினர்.

கௌதமர் மறுபிறப்புப் பற்றியும் கருமத்தைப் பற்றியும் நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தார். அவற்றின் உண்மையை அலசி உணர்ந்து கொண்டார். 'கரும விதி மறுக்க முடியாததே ; ஆனல் அகங்காரம்—ஆன்மா—பற்றிய கொள்கைக்கு அடிப்படையில்லை' என்று கருதினர். குருவிடம் அவர் கூறியதாவது :

'இயற்கையிலே எல்லாம் காரண - காரியத் தொடர்புடன் இருப்பதுபோலவே மனிதனின் வாழ்க்கையும் அவ்விதிக்கு உட்பட்டிருக்கிறது. முந்தி விதைத்ததை நிகழ் காலத்தில் அறுவடை செய்கிறோம்; எதிர்காலம் நிகழ் காலத்தின் விளைவேயாகும். ஆயினும் மாற்றமில்லாத அகங்காரமாகிய ஆன்மா ஒன்று உளது என்பதற்கும், அது ஒரே படித்தாக இருந்துகொண்டு உடல்கள் தோறும் தங்கி வருகின்றது என்பதற்கும் ஆதாரம் எதுவுமில்லை.

'நான் என்று கருதும் தனிப்பான்மை பொருள்களின் சேர்க்கையாலேயே எனக்கு ஏற்பட்டிருக்கின்றது ; என் தூல உடலும், மன ஆற்றல்களும் அந்தச் சேர்க்கையின் விளைவுகளே. படிப்படியான பரிணும வளர்ச்சியால் தோன்றியுள்ள குணங்களைக் கொண்டு அவை ஏற்பட்டிருக்கின்றன. பொறிகளின் தொழில்களுக்கு மூலமாயுள்ள ஐம்புலன்களும் இத்தொழில்களைச் செய்துவந்த முன்னோர்களிடத்திலிருந்து எனக்கு வந்துள்ளன. என் சிந்தனைகள் அவைகளைச் சிந்தித்த மற்றையோரிடமிருந்தும், என் மனத்தில் எழும் சிந்தனைகளோடு அவைகள் கலந்தும் ஏற்

படுகின்றன. பல ஸ்கந்தகளின் சேர்க்கையால் நான் தோன்றுவதற்கு முன்பு, இதே புலன்களைப் பயன்படுத்திக் கொண்டும், இதே சிந்தனைகளைச் சிந்தித்துக் கொண்டும் இருந்தவர்கள் எவர்கள்? முந்திய பிறவிகளில் தோன்றிய நானே அவர்கள்; நேற்றைய நான் இன்றுள்ள நானுக்குத் தந்தையாவது போல, அவர்களே என் முன்னோர்கள்; என் முந்திய செயல்களின் கருமம் இப்போதுள்ள என் வாழ்க்கையின் விதியை நிர்ணயிக்கின்றது.*

'புலன்களின் செயல்களை இயக்கி வரும் ஆன்மா ஒன்று இருப்பதாக வைத்துக் கொண்டால், பார்வையின் வழியாக உள்ள கண்களைப் பறித்து எடுத்து விட்டால், அந்த ஆன்மா உலகத்தில் தெளிவாகத் தடையின்றிப் பார்க்க முடியுமோ? செவிகளைப் பிய்த்து எடுத்துவிட்ட பிறகு, அது ஒலிகளை மேலும் தெளிவாகக் கேட்க முடியுமோ? நாசியை வெட்டிய பிறகு, அது நாற்றங்களை மேலும் தெளிவாக முகர முடியுமோ? நாவை வெளியே இழுத்துவிட்டால், அது மேலும் தெளிவாகச் சுவையை உணரமுடியுமோ? உடலை அழித்துவிட்டால், அது மேலும் சுகத்தை அடைய முடியுமோ?*

'குணம் (பண்பு) நிலைத்து நிற்பதோடு, பின் எடுக்கும் ஜன்மங்களிலும் தொடர்ந்து செல்வதை நான் காண்கிறேன்; கரும விதியின் உண்மையையும் நான் காண்கிறேன்; ஆனால் உங்கள் கொள்கைப்படி சகல செயல்களுக்கும் காரணமாக விளங்கும் ஆன்மாவை மட்டும் நான் காண முடியவில்லை. "நான்" என்ற அகம் இல்லாமலே மறு பிறப்பு ஏற்படுகிறது. "நான் கூறுகிறேன்," "நான் செய்வேன்" என்ற சொற்றொடர்களிலுள்ள இந்த ஆன்மா, இந்த அகம், இந்த அகங்காரம் ஒரு மாயை. அந்த அகம் உண்மையாக உளதென்றால், அகங்காரத்திலிருந்து விடு

---

*' மிலிந்தன் பிரச்னைகள் (மிலிந்த பன்ஹா)'

தலையடைதல் எப்படி இயலும்? நரக வேதனையின் பயமே எல்லையற்றிருக்கும்; விடுதலை என்பதும் இல்லாமற்போகும். உயிர் வாழ்வில் ஏற்படும் தீமைகள் நம் அறியாமையிலிருந்தும், பாவத்திலிருந்தும் ஏற்படுகின்றன என்ற நிலை மாறி நம் வாழ்வின் இயல்பே—இயற்கையே—அவைகள் என்று ஏற்பட்டுவிடும்.'*

கௌதமர் உருத்திரக ராமபுத்திரரிடம் எட்டாவது சமாபத்தியை மட்டும் உபதேசம் பெற்றார். அந்த உபதேசப்படி நடந்த பிறகு, ஆசிரியர் சீடரும் தம் நிலைக்கு வந்து விட்டதை எண்ணிப் பெருமகிழ்ச்சி யடைந்து, கௌதமரையும் தம்மோடு இருந்து விடும்படி கேட்டுக் கொண்டார். ஆனால் கௌதமர் சீடராகிய தம்மைக் குரு நிலையில் அமரச் செய்ததற்காக வந்தனம் கூறி, அவருடைய சித்தாந்தத்திலும் திருப்தியடையாமல், மேலும் சத்திய சோதனை செய்வதற்காக அங்கிருந்து புறப்பட்டுச் சென்றார்.

ஆலயங்களிலுள்ள குருக்கள் முதலியோர்களிடம் போய்த் தம் சந்தேகங்களை நீக்கும்படி வேண்டினார். ஆனால் எங்கும் அவர் தெளிவு காண முடியவில்லை. உயிர்ப் பலிகளால் தேவர்களைத் திருப்தி செய்யும் வழியிலே மக்கள் சென்றுகொண்டிருந்ததைக் கண்டு அவர் வருந்தினார். இதனால் ஒழுக்கம் அறவே கைவிடப்படுவதை எண்ணி அவர் மனம் புழுங்கினார். 'மந்திர தந்திரங்கள் பயனற்றவை; பிரார்த்தனைகள் வெறும் சொற்குவியல்கள்; தொழுது வரம் கேட்டுக் கிடைப்பதும் ஒன்றுமில்லை. காமத்தையும் பேராசையையும் கைவிட்டுத் தீய உணர்ச்சிகளிலிருந்து விடுதலை பெற்று, வெறுப்பையும் துவேஷத்தையும் நீக்கி வாழ்வதே சரியான வேள்வி; சரியான வணக்கம்' என்று அவர் சிந்தனை செய்தார்.

---

*'மிலிந்தன் பிரச்னைகள் (மிலிந்த பன்ஹா)'

உண்மையான ஞானத்தை அடைவதற்காகக் கௌதமர் ஒரே வைராக்கியத்துடன் அலைந்து கொண்டிருந்தார். ஆசிரியர்களிடம் உபதேசம் கேட்டாகி விட்டது. ஆயினும் மனத்தில் அமைதியில்லை. எனவே அவர் தாமாகப் பெரு முயற்சி செய்து, தவத்தில் எத்தனை வகையுண்டோ அத்தனையையும் கைக்கொண்டு, இயன்றவரை சமாதியில் அமர்ந்து, மெய்யறிவைப் பெறவேண்டும் என்று தீர்மானித்தார். தாமே தமக்கு வழிகாட்டி என்ற முடிவுக்கு வந்தார்.

## உருவேலா வனம்

அங்கிலேயில், மகத நாட்டில் நைரஞ்சரை*நதியின் கரையிலேயுள்ள உருவேலா† வனத்தை அடைந்தார். கௌதமருடைய சரித்திரத்தில் இந்த ஆரணியம் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. இதிலேதான் ஆறு வருடம் அவர் அருந்தவம் செய்ய நேர்ந்தது. மனத்தினுல் எண்ணுவதற்கே, பயங்கரமான கோரமான தவமுறைகளையெல்லாம் அவர் மேற்கொண்டது இங்கேதான்; முடிவில் அவர் மெய்யறிவு பெற்றுப் புத்தரானதும் இவ்வனத்திலே தான். இவ்வனத்தை முதலில் அவர் பார்த்துத் தேர்ந்தெடுத்த முறையைப் பற்றி அவரே கூறியுள்ள விவரம் வருமாறு:

> 'நன்மையானதை நாடித் தன்னிகரற்ற சாந்தியைத் தேடி அலைந்து கொண்டிருந்த நான், மகத நாட்டு மக்களிடையே சுற்றிக் கொண்டிருக்கும்போது, **சேனுனி** நகரத்தின் அருகேயிருந்த உருவேலாவுக்கு வந்து சேர்ந்தேன். அங்கே இரமணீயமான ஓர் இடத்தைக் கண்டேன்; வனத்திலே அது ஓர் இன்பகரமான சோலை; பரிசுத்தமான

---

*இக்காலத்தில் பல்குனி ஆறு என்று அழைக்கப்பெறுகின்றது; இந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் புனிதத் தலமாகிய கயை நகரம் இதன் கரையிலுள்ளது.

†இதை ஞான ஆரணியம் என்பர்.

நீருடன் ஆறு ஒன்று அருகே ஓடிக்கொண்டிருந்தது. அச் சோலையுள் எளிதாகப் போய் வரலாம்; அது மனோரம்ய மான இடம்; பிச்சையெடுப்பதற்கும் அருகே ஒரு கிராமமும் இருந்தது. அப்போது நான் இவ்வாறு எண்ணினேன்:

"'உண்மையிலேயே இந்த இடம் மனோகரமாயுள்ளது; வனத்திலே அடர்ந்த அழகிய சோலையாகவும் இருக்கிறது; அருகே தெளிந்த நீருள்ள ஆறு ஓடுகின்றது; அருகேயுள்ள இந்தக் கிராமத்தில் நான் உணவுக்குப் பிச்சை ஏற்றுக் கொள்ளலாம்! கடைத்தேற்றத்தில் நாட்டம் கொண்டு பெரு முயற்சி செய்ய விரும்பும் ஒருவனுக்கு இதுவே தகுதியான தலம்!"

'ஆதலால், சகோதரர்களே, உடனேயே நான், "தவம் முயலுவதற்கு ஏற்ற தலம் இதுவே!" என்று எனக்குள்ளே கூறிக் கொண்டு அங்கேயே அமர்ந்துவிட்டேன்.'*

அங்கே அமர்ந்து கொண்டு சாக்கிய முனிவர், மக்களின் துக்கத்தையும், வானவில்லைப்போல் பல வண்ணங்களுடன் பொய்மையாக விளங்கும் வாழ்க்கையையும் பற்றிச் சிந்தனை செய்து நியம நிஷ்டைகளுடன் தனியே தவம் புரிந்து வந்தார். அப்போது அவரைப்போல மெய்யறிவில் நாட்டம் கொண்ட ஐந்து தாபதர்கள் அங்கு வந்து அவரோடு சேர்ந்துகொண்டனர். அவர்களிலே தீர்க்கமான அறிவுள்ள **கௌண்டிந்ய குலபுத்திரர்** முதன்மையானவர்; **தசபால காசியபர், பாஷ்பர், அசுவஜித், பத்திரகர்** என்போர் மற்ற நால்வர். அந்த ஐவரோடும் சேர்ந்து கொண்டு, கௌதமர் படிப்படியாகக் கடுமையான தவ முறைகளை மேற்கொள்ளலானார்.

அம்முறைகளில் சிலவற்றைப் பற்றிப் பிற்காலத்தில் **சாரீபுத்திரர்** என்ற தமது பிரதம சீடர் ஒருவருக்குக் கூறிய விவரத்திலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

தவத்திலே அவர் தம்மோடிருந்த அனைவருக்கும் முன்

* 'மஜ்ஜிம நிகாயம்—அரியபரியேசன சூத்திரம்'

னணியிலே இருந்தார். கரடு முரடான வாழ்க்கையையே அவர் மேற்கொண்டார். நியமங்களில் அவர் தவறியதே யில்லை. உடைகளே இல்லாமல் அவர் பலநாட்கள் இருந்தார். 'அடிகளே, வாருங்கள் !' என்று அழைத்த இடங்களுக்கும் போவதில்லை. தமக்கென்று கொண்டுவந்து அளித்த உணவைப் புசிப்பதில்லை. வாயிற்படியில் வைத்து அளிக்கும் உணவையும், சாளரங்களின் வழியே நீட்டிய உணவையும் அவர் ஏற்பதில்லை. உணவிலும் எத்தனையோ கட்டுப்பாடுகளை அமைத்துக் கொண்டார். சில சமயங்களில் ஒரே வீட்டில் மட்டும் பிச்சை ஏற்பார்; அதுவும் ஒரு பிடிச் சோறுதான். சில சமயங்களில் இரண்டு முதல் ஏழு வீடுகள் வரை பிச்சை ஏற்பினும், வீட்டுக்கு ஒரு பிடியே பெற்றுக் கொள்ளுவார். சில சமயங்களில் ஒரு நாளைக்கு ஒரு வேளையும், இரண்டு நாட்களுக்கு ஒரு வேளையும், ஏழு நாட்களுக்கு ஒரு வேளையுமே அவர் உண்பது வழக்கம். மாதத்திற்கு இரண்டே வேளைகள் மட்டும் உணவருந்துவதும் உண்டு. இவ்வாறு குறித்த காலங்களுக்கு இடையில் உணவில்லாமலிருக்கப் பழகினர். காய்கள், காட்டுத் தானியங்கள், உமி, குறுணை, எள், புல் முதலியவற்ருேடு, பசுவின் சாணத்தைக் கூட உணவாக உண்டு வந்தார். பல நாள் பட்டினியிருந்த பின்பு, ஓர் இலந்தைப் பழம், எள், அரிசி முதலியவற்றை மட்டும் புசித்து வந்திருக்கிருர்.

## ஆயன் காட்டிய அன்பு

ஒரு நாள் அவர் மிகுந்த களைப்பினுல் மூர்ச்சித்துக் காட்டு வழியிலே, மாண்டவர் போல, விழுந்து கிடந்தார். வெய்யிலிலே வாடிக் கொண்டிருந்த அவ்வுடலைக் கண்டு அந்த வழியிலே வந்து கொண்டிருந்த ஆயன் ஒருவன், மரக் கிளைகளை ஒடித்து அவரைச் சுற்றிலும் நட்டு நிழலுண்டாக்கி, ஒரு வெள்ளாட்டின் மடிக் காம்பைக் கறந்து அவர் வாயிலே சில துளிகள் பால் விழும்படி செய்தான். அந்தப்

பால் தொண்டையுள் இறங்கியதும், கௌதமர் கண் விழித்து, ஒரு கலத்தில் கொஞ்சம் பால் கறந்து கொடுக்கும்படி ஆயனை வேண்டினர். அருளோடு உதவிபுரிய வந்த அந்த ஆயன் மறுத்தான். அவன் தான் தீண்டத்தகாத இடையன் என்பதால், அவன் தீண்டிய பாலை அண்ணல் பருக முடியாது என்பதாலேயே அவன் தயங்கினன்.

காட்டிலும் மேட்டிலும் கூடச் சாதிவேற்றுமை உணர்ச்சி தாண்டவமாடுவதை எண்ணிக் கௌதமர் வருந்திப் பின்வருவாறு கூறினர்:

‘இடர் வரும்போதும்—உள்ளம்
இரங்கிடும் போதும்,
உடன் பிறந்தவர்போல்—மாந்தர்
உறவு கொள்வரப்பா!

‘ஓடும் உதிரத்தில்—வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவதுண்டோ, அப்பா!

‘நெற்றியில் நீறும்—மார்பில்
நீண்ட பூணூலும்
பெற்றிவ் வுலகுதனில்—எவரும்
பிறந்ததுண்டோ, அப்பா?

‘பிறப்பினல் எவர்க்கும்—உலகில்
பெருமை வாராதப்பா!
சிறப்பு வேண்டுமெனில்—நல்ல
செய்கை வேண்டுமப்பா!’

பின்னர் ஆயன் மனமுவந்து அளித்த பாலைப் பருகிப் பகவர் தளர்ச்சி நீங்கினர்.

## கடுந்தவ முறைகள்

உடைகள் விஷயத்தில், கௌதமர் கிடைத்தவைகளையெல்லாம் உடுத்த ஆரம்பித்தார். சணல் முதலியவற்றால்

நெய்த உடைகளையும், பிணங்கள்மீது போர்த்திய துணிகளையும் குப்பை மேடுகளில் கண்டெடுத்த துணிகளையும், மரவுரிகளையும், கிழிந்த மான் தோல்களையும், புற்களையும், தலை ரோமம், குதிரை மயிர், ஆந்தையின் இறகுகள் முதலியவற்றால் செய்த உடைகளையும் வெவ்வேறு காலங்களில் அவர் அணிந்து வந்தார்.

அவர் தலை ரோமங்களையும் தாடி ரோமங்களையும் கையாலேயே முளையோடு பறித்தெடுத்து விடுவது வழக்கம். பல நாட்களாக உட்காராமல் நின்று கொண்டேயிருந்து பழகினார். முட்களைப் பரப்பி அவற்றின் மீது படுத்துப் பழகினார். நாள்தோறும் மூன்று வேளை குளித்துத் தண்ணீர்க்குள்ளேயே நெடுநேரம் இருப்பதும் வழக்கமாயிற்று.

உடலைப் பொருட்படுத்தாமல் வதைப்பதில் எத்தனை முறைகள் உண்டோ அத்தனையையும் அவர் செய்து பார்த்தார். மாதக்கணக்காக அவர் குளியாமலேயே இருந்தார். மரப்பட்டை போல உடலில் அழுக்கு அடையாக ஏறியிருப்பினும், அதைக் கைகளால் நீக்க வேண்டும் என்ற சிந்தனைகூட இல்லாமலே இருந்தார். பிறர் அவ்வுதவியை செய்யவேண்டும் என்றும் அவர் நாடவில்லை.

உடலுக்கு என்ன மாற்றங்கள் ஏற்படினும் அவர் எப்பொழுதும் போல் கருணையை மட்டும் கைவிடவேயில்லை. ஈ, எறும்பு, புழு, பூச்சிகள் கூடத் தம்மால் துயருறாமல் இருப்பதில் அவர் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார்.

ஏகாந்தமாக இருக்கவேண்டும் என்று தோன்றிய காலங்களில், அவர் இரவும் பகலும் புதர்களுக்குள்ளே போய் மறைந்திருப்பது வழக்கம். பழக்கமில்லாதவர்கள் அந்தப் புதர்களைக் கண்டாலே மயிர்க் கூச்செறியும் என்று அவரே கூறியுள்ளார். புல்லறுக்கவும், மரம் வெட்டவும், மாடுகள் மேய்க்கவும் வரக்கூடிய மனிதர்கள் தம்மைப் பார்த்துவிடாமலும், தாம் அவர்களைப் பார்த்துவிடாமலும்

இருப்பதற்காக, அவர் காலோசை கேட்டதுமே தொலை தூரங்களுக்கு ஓடிப்போய் விடுவார். கோடை காலத்தில் வெய்யிலிலே காய்ந்தும், குளிர், மழை காலங்களில் திறந்த வெளியில் கிடந்தும், வெயிலால் உலர்ந்தும், பனியால் வாடியும் அவர் உடலைச் சித்திரவதை செய்துகொண்டிருந்தார்.

சில சமயங்களிலே கௌதமர் மயானங்களிலே பிணங்களின் எலும்புகளின்மீது படுத்துக் கொள்வார். அவ்வாறு இருக்கும் சமயங்களிலே அவ்வழியாகச் செல்லும் ஆயர்கள் அவர்மீது உமிழ்ந்தும், களிமண்ணை வீசியும், அசுத்தப் படுத்தியதோடு, அவர் செவித்துளைகளில் வைக்கோற் குச்சிகளை நுழைத்து அவர் என்ன செய்கிறார் என்று பார்ப்பதும் வழக்கம். அப்படியிருந்தும், 'சாரீபுத்திரா, அவர்களுக்கு எதிராக ஒரு தீய சிந்தனையேனும் எனக்குத் தோன்றியதான நினைவே இல்லை. அவ்வளவு தூரம் நான் பொறுமையைக் கைக்கொண்டிருந்தேன், சாரீபுத்திரா!' என்று அவரே பின்னால் குறிப்பிட்டிருக்கிறார்.

'பேய்போல் திரிந்து, பிணம்போல் கிடந்து,
இட்ட பிச்சையெல்லாம்
நாய்போல் அருந்தி, நரிபோல் உழன்று,
நன் மங்கையரைத்
தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும்
தாழ்மை சொல்லிச்
சேய்போல் இருப்பர்கண் டீர்,உண்மை
ஞானம் தெளிந்தவரே!'

என்று பட்டினத்தடிகள் பாடிய வண்ணம் கௌதம அடிகளும் நடந்து வந்தார்.

மேலே கூறிய பரீட்சைகளுக்குப் பின்னால், இன்னும் பயங்கரமான திட்டங்களையும் நிறைவேற்றிப் பார்க்க வேண்டும் என்று அவர் முனைந்தார். மூச்சை அடக்கவும், உள்ளுவையே தீண்டாமல் விரதமிருக்கவும் அவர் செய்த

முயற்சிகளையும், அவற்றின் முடிவுகளையும் பற்றிப் பிற் காலத்தில் **சச்சகர்** என்ற ஜைனருக்கு அவர் கூறிய வர லாறுகளிலிருந்து தெரிகிறது.*

சினேந்திரராகிய கௌதமர் பற்களை இறுகக் கடித்து, மேல் வாயோடு நாவை அழுத்திக்கொண்டு, மனத்திலே தீய எண்ணங்கள் தோன்றாமல், நல்ல எண்ணங்களை நினைத்துக் கொண்டிருந்தார். அப்போது அவருடைய அக்குள்களிலிருந்து வியர்வை பெருகி வழிந்துகொண்டிருந் தது. பலமுள்ள ஒருவன் மெலிந்தவன் ஒருவனைத் தோள் களையும் தலையையும் பிடித்துக் கீழே தள்ளி அழுத்துவது போல், அவரும் இந்த முறையில் மனத்தோடு போராடிக் கொண்டிருந்தார். அந்நிலையிலும் அவருடைய சக்தி குன் றாமலும், பணிந்து விடாமலும் இருந்து வந்தது. ஆயினும் உடல் களைப்புற்றுச் சோர்ந்துபோய்விட்டது. எவ்வளவு வேதனை ஏற்பட்ட போதிலும், அவர் மனம் நிலைகுலையா மல் நின்றது.

பின்னர் மூச்சை அடக்கப் பயிற்சி செய்தார். வாயா லும் நாசியாலும் மூச்சு வாங்கி விடுவதை அறவே நிறுத்தி விட்டார். காற்று வெளியேறுவதற்காகக் காதுகளின் வழி யாகப் பெரிய இரைச்சலுடன் கிளம்பி வந்தது. கொல்லன் உலையிலே துருத்தி ஊதுவதுபோல் செவிகளில் ஓசை யுண்டாயிற்று. அப்போதும் அவர் ஆற்றல் குன்றவில்லை; மன உணர்வும் கலங்கவில்லை. பின்னர் அவர் மூச்சை அறவே நிறுத்திப் பழகினார். மூக்கு, வாய், செவி எல்லா வற்றையும் அடைத்துவிட்டதால், உடலின் உள்ளே யிருந்த வாயு வெளியேற மார்க்கமில்லாமல் ஒரேயடியாக மூளையைப் போய்த் தாக்க ஆரம்பித்தது. பலசாலி ஒருவன் கூர்மையான முனையுள்ள வாளைக்கொண்டு குடைவது போல் மண்டையில் வேதனை உண்டாயிற்று. அப்போதும்

---

*'மஜ்ஜிம நிகாயம் - மகா சச்சக சூத்திரம்'

வேதனைகளால் மனம் சலிப்படையவில்லை. மேலும் மேலும் மூச்சையடக்கிப் பழகியதால், அவர் தலையில் தாங்கமுடியாத வேதனை உண்டாயிற்று; வாயு வயிற்றைத் துளைத்தது; கசாப்புக்காரன் கூர்மையான கத்தியால் எருதின் வயிற்றைக் கிழிப்பது போன்ற வலி ஏற்பட்டது. மேலும் மூச்சை அடக்கியதில் தீக் கங்குகளிலே உடலைப்போட்டு வதக்குவதுபோன்ற கொடிய எரிச்சல் உண்டாயிற்று. அந்த நிலையிலும் அவர் மன உறுதியைக் கைவிடவில்லை.

அப்போது தேவர்கள் சிலர், 'துறவி கௌதமர் மாண்டு போனார்!' என்றனர். சிலர், 'இறக்கவில்லை; இறக்கும் நிலையை அடைந்து கொண்டிருக்கிறார்!' என்றனர். ஆனால் மற்றைத் தேவர்கள், 'கௌதமர் இறக்கவுமில்லை; இறக்கும் நிலையை அடையவுமில்லை. துறவி கௌதமர் ஓர் அருகத்து. அருகத்தின் நிலை இதுதான்!' என்றனர்.

இதன் பிறகு கௌதமர் உண்ணா விரதத்தை ஆரம்பித்தார். முதலில் சொற்ப ஆகாரத்துடன் ஆரம்பித்துப் பின்பு அறவே நிறுத்திவிட்டார். அந்தக் கொடிய விரதத்தினால் விளைந்த பயனை அவர் மொழிகளிலேயே கூறிவிடுதல் நலமாகும்:

> 'என் உடல் முற்றிலும் தளர்ந்து போகும் நிலையை அடைந்தது. போஷிப்பு இல்லாததால் அங்கங்கள் நாணல் குச்சிகளைப்போல் ஆகிவிட்டன. பின்புறத்துச் சதைகள் வற்றி எருதின் குளம்புபோல் ஆகிவிட்டன. முதுகெலும்பும் போஷிப்பின்றி முடிச்சு முடிச்சாக வெளியே துருத்திக் கொண்டிருந்தது. வளர்ச்சிக்கு இடமில்லாமல், என் விலா எலும்புகள், இடிந்துபோன வீட்டுக் கூரையின் குச்சிகள் இங்கொன்று அங்கொன்றாகக் குறுக்கிலும் நெடுக்கிலும் வீழ்ந்து கிடப்பதுபோலக் காணப்பட்டன. போஷிப்பு இல்லாததால் கண்கள் குழி விழுந்து போயின. ஆழமான கிணற்

றின் அடியில் தண்ணீர் தெரிவதுபோல் அவைகள் பள்ளத்தில் வீழ்ந்திருந்தன. காற்றிலும் வெயிலிலும் காய்ந்த கும்மட்டிக்காய் சுருங்குவதுபோல், என் தலையின் தோல் வாடிச் சுருங்கி விட்டது. போஷிப்பில்லாததாலேயே இப்படி நேர்ந்தது.

'வயிற்றின் தோலைத் தொட்டுப் பார்க்கலாம் என்று பார்த்ததில், கையில் என் முதுகெலும்பு தட்டுப்பட்டது. முதுகெலும்பைத் தொட்டுப் பார்க்கலாம் என்று பார்த்தால், என் வயிற்றின் தோல் அகப்பட்டது. வயிறும் முதுகும் அப்படி ஒன்றோடொன்று ஒட்டிப்போய்விட்டன.

'மல மூத்திரம் கழிக்கலாம் என்று எழுந்திருந்தபோது, அப்படியே அதேயிடத்தில் நான் சுருண்டு விழுந்துவிட்டேன். அங்கங்களைத் தடவிக் கொடுக்கலாம் என்று தடவுகையில், உடலின் ரோமங்கள் முளையோடு கிளம்பி உதிர்ந்து விட்டன. இவையெல்லாம் போஷிப்பின்மையால் ஏற்பட்டன.'

பொன்மயமான அவருடைய நிறமும் மாறிக் கறுத்து விட்டது. உடலின் பரிசுத்தமும் பளபளப்பும் நீங்கி விட்டன.

அப்போது கௌதமர் எண்ணியவதாவது: 'பழங் காலத்துத் தபசிகளும், பிராமணர்களும் அநுபவித்த கூர்மையான, வேதனையான, துக்ககரமான, கொடூரமான துன்ப உணர்ச்சிகளைப் பார்க்கிலும் எனக்கு ஏற்பட்ட வேதனைகள் எவ்வளவோ அதிகமாகவே இருக்கவேண்டும். எதிர்காலத்தில் மற்றவர்கள் தாங்கக்கூடிய வேதனை உணர்ச்சிகளைக் காட்டினும் என் வேதனை உணர்ச்சிகள் மிக அதிகமாகவே இருக்கவேண்டும். இப்போது பிறர் தாங்கும் உணர்ச்சிகளைக் காட்டிலும் என்னுடையவை மிக அதிகமாகவே இருக்கும். ஆயினும், இத்தகைய கொடூரமான, துக்ககரமான வழியிலும், அழியும் வாழ்வுக்கு மேற்பட்ட உண்மையான ஆரிய மெய்ஞ்ஞானத்தை

யும், உள்ளொளியையும் நான் பெறமுடியவில்லை. மெய்ஞ் ஞானம் பெறுவதற்கு இதைத் தவிர வேறு வழி இருக்க லாம் என்றே தோன்றுகிறது.'*

கௌதமருக்குத் தம்முடைய சிறு வயதிலே நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்று ஞாபகத்திற்கு வந்தது. கபிலவாஸ்துவில் அவர் தந்தையாகிய சாக்கிய மன்னர் மற்றைப் பரிவாரங்க ளோடு பொன் ஏர் கட்டி உழுதுகொண்டிருக்கையில், அவர் நாவல் மரத்தடியில் தனியே தியானத்தில் அமர்ந்திருந்ததை இப்போது எண்ணிப் பார்த்தார். அந்தச் சமயத்தில் அவர் அறிவு தெளிவாயிருந்தது; உடலும் களைப்பின்றி ஊக்கமா யிருந்தது. அதை எண்ணிப் பார்க்கையில், உண்ணா நோன்பினுல் உடல் தளர்ந்து, உள்ளமும் தளர்ந்து போவ தால், அற்ப ஆகாரமேனும் உட்கொள்ளவேண்டியது அவ சியம் என்று அவருக்குத் தோன்றிற்று. சதைகளெல்லாம் கரைந்து, உதிரம் சுண்டி, உடல் வெறும் எலும்புக் கூடாக இருந்த நிலையில், அவர் பட்டினித் தவத்தைக் கைவிட வேண்டும் என்றும், அரிசிக் கஞ்சியேனும் அருந்த வேண் டும் என்றும் தீர்மானித்தார்.

'ஆசைகளை அடக்கிப் பூரண ஞானம் பெறுவதற்கு இது வழியன்று; ஜம்பு மரத்தடியில் சிறு வயதில் நான் கண்ட முறையே சரியான முறை. உடல் வலியை இழந் தவன் உண்மை ஞானத்தைப் பெறமுடியாது. பசியாலும், தாகத்தாலும், களைப்பாலும் வாடிய ஒருவன் மனநிலை குலைந்து பின் சாந்தியோடிருக்க முடியாது; பூரணமான அமைதியைப் பெற்ருலன்றி, மனத்தினுலேயே அடைய வேண்டியதாயுள்ள முடிவை அவன் எப்படி அடைய முடி யும்? புலன்களை இடைவிடாமல் திருப்தி செய்யத்தான் வேண்டியிருக்கிறது; அவைகளை அமைதியாக வைத்துக் கொண்டாலே சித்தமும் தன்னிலையில் நிற்கும். அமைதி

* 'மஜ்ஜிம நிகாயம்—மகா சச்சக சூத்திரம்'

யுற்ற மனமே தியானத்திற்கு ஏற்றது; தியானத்தின் மூலமே அடைவதற்கு அரிய, அழிவற்ற, நிலையான சாந்தியை அடைய முடியும்!'* என்று அவர் முடிவு செய்தார்.

வீணையின் தந்திகள் அதிகமாக முறுக்கேறினால் அறுந்துபோம்; அதிகமாக நெகிழ்ந்திருந்தால் அவற்றில் இசை பிறக்காது; ஆதலால் அவற்றை முறுக்கேற்றாமலும், நெகிழவிடாமலும் நடுநிலையில் வைத்திருக்கவேண்டும் என்பதுபோல், உடலாகிய வீணையையும் நிதான நிலையில் வைத்துக் கொண்டாலே அறிவாகிய இன்னிசை பிறக்கும் என்பது அவருக்குத் தெளிவாகிவிட்டது. இந்தத் தெளிவே பிற்காலத்தில் அவருடைய பௌத்த தருமத்திற்கு அடிப்படையான தத்துவமாக அமைந்தது. இதனாலேயே அவருடைய தருமத்திற்கு 'நடுநிலையான மார்க்கம்' என்ற கருத்துள்ள 'மஜ்ஜிம படிபதா' என்ற பெயருண்டாயிற்று.

மெல்ல மெல்ல நடந்து அவர் நைரஞ்சரை நதியை அடைந்து நீரில் குளித்தார். ஆனால் உடல் நைந்து துவண்டிருந்ததால், அவர் நீரைவிட்டு வெளியே கரையேற முடியவில்லை. அருகே யிருந்த மரக் கொப்புக்களைப் பிடித்துக் கொண்டு ஒருவாறு கரையேறினார். பின்பு பக்கத்திலிருந்த ஓர் அரசமரத்தடிக்குச் சென்று அங்கே சிறிது நேரம் வீற்றிருந்தார்.

## சுஜாதை அளித்த உணவு

அந்த நேரத்தில் அழகும் குணமும் ஒருங்கே அமைந்த 'நந்தபாலா' என்ற சுஜாதை ஆனந்தத்தோடும் ஆச்சரியத்தோடும் அவ்விடத்திற்கு வந்து அமலரைக் கண்டாள். ஒரு கையால் தன் குழந்தையை மார்போடு அணைத்துக்கொண்டு, மற்றொரு கையில் ஒரு பொற் கிண்ணத்தில் பாலில் வெந்த

---

*அசுவகோஷரின் 'புத்த சரிதை'

பொங்கலை ஏந்திக்கொண்டிருந்தாள். மரத்தின் அடியில் பணிப்பெண் ஒருத்தி களம் மெழுகிக் கோலமிட்டு வைத்திருந்தாள்.

சுஜாதை என்ற சுகுண சுந்தரி அருகேயிருந்த **சேனனி** கிராமத்துத் தலைவனின் மனைவி. செல்வமும் சிறப்பும் பெற்று அவ்விருவரும் இல்வாழ்க்கை நடத்தி வருகையில், எளிமையும், பொறுமையும், இரக்கமுமுடைய அம்மாதரசி தனக்குக் குழந்தை யில்லையே என்று கவலையடைந்து, பல தெய்வங்களுக்கும் நேர்ந்துகொண்டாள். ஆண் குழந்தை பிறந்தால் தங்கக் கிண்ணத்தில் பாலமுது படைத்து வணங்குவதாக அருகேயிருந்த காட்டின் தெய்வத்தையும் வேண்டிக்கொண்டாள். அவளுக்குப் பொற்சிலை போன்ற புத்திரன் பிறந்து மூன்று மாதமாயிற்று. உடனே முன் நேர்ந்துகொண்டபடியே அவள் இனிய அமுது தயாரித்துக் கொண்டு, காட்டுத் தெய்வத்திற்கு அதைப் படைப்பதற்காகக் குழந்தையுடன் புறப்பட்டு வந்தாள். அவளுடைய பணிப்பெண் முன்னாலேயே வந்து இடத்தைச் சுத்தம் செய்கையில், மரத்தினடியில் மெய்ம்மறந்து அமர்ந்திருந்த மாதவரைக் கண்டு, அவர் முகத்தில் தோன்றிய சோதியில் மயங்கி, அங்கிருந்து ஓடிச் சென்று, சுஜாதையை எதிர் கொண்டு அழைத்து, 'வனத்தில் வாழும் தெய்வமே அருள் வடிவாக மரத்தடியில் அமர்ந்திருக்கிறது!' என்று அதிசயத்தோடு கூவினாள். அதைக் கேட்டுத்தான் சுஜாதை ஆவலோடு ஓடிவந்தாள்.

வந்தவள் வள்ளலைக் கண்டாள்; கண்கள் குளிர்ந்து, உள்ளமும் குளிர்ந்தாள். 'பகவன்! இந்த இன்னமுதை அருந்தி அருள் செய்யவேண்டும்!' என்று கூறி, பொற்கிண்ணத்தை அவர் அடியில் வைத்து, உள்ளம் குழைந்து வணங்கி நின்றாள். அன்பும் அறிவும் நிறைந்த அந்த அழகுச் செல்வி அருகேயிருந்து பார்த்து அகம் மகிழும் வண்ணம், அகளங்க மூர்த்தியும் அவள் படைத்த அமுதை

அருந்தி இன்புற்ருர்.* வாடி இளைத்து அவர் வருந்திய களைப்பெல்லாம் மாறிவிட்டது ; ஊக்கமும் ஒளியும் தோன்றின. அழகு பொலியும் திருவதனத்தோடு, அவர் சுஜாதையை வாழ்த்தியருளினர். அவள் மார்போடு அணைத்திருந்த மதலையின் உச்சியில் கைவைத்து, 'செல்வ! நீ நெடுநாள் இன்புற்று வாழ்வாயாக!' என்று ஆசி கூறினர். அதன் பின் தாம் யார் என்பதையும் சுஜாதைக்கு விளக்கிக் கூறினர்.

'காணுதற் கரிய கடவுள் யானலன் ;
மண்ணிற் பிறந்த ஓர் மனிதனே, அம்மா!
ஆதியில் உலகாள் அரசிளங் குமரன் ;
இந்நாள்,
வையக மாந்தர் மனஇருள் போக்கும்
உண்மை ஞான ஒளியினைத் தேடி
ஆருண் டாக, அல்லும் பகலும்
அலைந்து திரியும் ஆண்டியும் ஆவேன்!
.... .... .... ....
ஒப்பிலாச் சுத்த உணவாம் இதனை
உண்டு தெளிந்த உடலைக் கண்டபின்
உண்மையை அறிவதும் உறுதி யாம் எனச்
சிந்தையில் நன்கு தெரிந்து கொண்டனன்!'

பிறகு அவர் அம்மங்கையின் வாழ்க்கை வரலாற்றைக் கேட்டுத் தெரிந்து கொண்டார். கோடி கோடியான இந்தி

* சுஜாதை அளித்த பொற்கிண்ணத்தை அப்படியே ஆற்றுக்கு எடுத்துச் சென்று, அங்கே அமுது செய்துவிட்டு, அந்தக் கிண்ணத்தைக் கௌதமர் ஆற்றில் மிதக்கவிட்டதாயும், 'இன்று நான் புத்தர் ஆக முடிந்தால், இந்தக் கிண்ணம் வெள்ளத்தை எதிர்த்துச் செல்லட்டும்!' என்று கூறியதாயும், அவ்வாறே அந்தக் கிண்ணம் எண்பது பாக நீளம் வரை நீரை எதிர்த்துச் சென்று, ஒரு பெரிய சுழியில் தங்கி, நீருள் ஆழ்ந்து நாக உலக மன்னன் காலா என்பவன் இருக்குமிடத்தை அடைந்ததாயும் புத்த ஜாதகக் கதை ஒன்றில் கூறப்பட்டிருக்கிறது.

யப் பெண்களைப் போலவே, தானம், தருமம் முதலியவற்றில் நம்பிக்கை கொண்டு, கொழுநனையே தெய்வமாக வணங்கி; தூய சிந்தையுடன் வாழ்க்கையின் துயரங்களை மறந்து, நன்மை செய்தார்க்கு நன்மையே விளையும் என்ற நம்பிக்கையுடன் அவள் வாழ்ந்து கொண்டிருந்தாள். அவள் கதையைக் கேட்ட கௌதமர்,

'அறிவிற் பெரிய ஆசிரி யர்க்கும்
அறிவு புகட்டும்நல் அறிவுடை யவள்நீ!'

என்று பாராட்டிப் புகழ்ந்தார். அவளைப் போன்ற மெல்லிய மலர்கள் நிழலிலேயே பூத்து மலர வேண்டும் என்றும், சத்தியத்தின் பேரொளி அவளைப் போன்ற இளந்தளிர்களை வாடச் செய்துவிடும் என்றும் அவர் எண்ணினார். 'உன் எண்ணம் நிறைவேறியது போலவே, விரைவிலே நானும் என் சித்தியை அடைவேன் என்ற நம்பிக்கை எனக்குப் பிறந்து விட்டது! என் கருத்து நிறைவேற வேண்டும் என்று நீயும் என்னை வாழ்த்திவிட்டுச் செல்வாயாக!' என்று அவர் கேட்டுக் கொண்டார். அவளும் அவர் சிந்தையின் எண்ணம் சித்தியடையும்படி வாழ்த்திவிட்டு, அவரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றாள்.

கௌதமருடைய வாழ்க்கையில் அவர் எண்பது ஆண்டுகள் உண்ட உணவுகளில், இரண்டு உணவுகளையே அவர் மிகவும் பாராட்டிப் போற்றியிருக்கிறார். அவ்விரண்டில் ஒன்று அன்று சுஜாதை அளித்த அமுதமாகும். அதன் பெருமை சொல்லுந் தரமன்று. கௌதமர் ஞானமடையு முன் அருந்திய கடைசி உணவு அதுவேயாகும்.

## கடைசி முயற்சி

தெளிந்த அறிவும், திடமான மனமும் பெற்று அவர் அந்த இடத்தை விட்டு எழுந்து சென்று, அன்று பகற் பொழுதைச் சால மரங்கள் அடர்ந்திருந்த ஒரு சோலையிலே

கழித்து விட்டு, மாலை நேரத்தில் ஆற்றோரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த மற்றொரு பெரிய அரச மரத்தின் அடியை அடைந்தார். அந்த மரமே 'பணை ஐந் தோங்கிய பாசிலைப் போதி'* என்றும், 'மகாபோதி' என்றும் பின்னால் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக உலகப் புகழ் பெற்று வரும் அசுவத்த மரம். பசும்புல் படர்ந்திருந்த அதனடியிலே அமர்ந்து கொண்டு கௌதமர் தமது முடிவான பெருந் தவத்தை மேற்கொள்ளத் தீர்மானித்தார். அப்போது புல் அறுக்கும் **சுவஸ்திகா** (பாலியில் சோத்தியா) என்பவன் அவ் வழியாக வந்து, அவரைச் சந்தித்து, எட்டுக் கைப்பிடி அளவு புல்லை அவருக்கு அளித்தான். அவர் அப்புல்லை மரத்தடியில் பரப்பிக் கொண்டு அதன் மீது கிழக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டார்.

அவரோடு வாழ்ந்து வந்த ஐந்து தபசிகளும், அவர் தவத்தின் மூலம் காணும் உண்மையைத் தமக்கும் உரைத் தருளுவார் என்று அதுவரை நம்பிக்கொண்டிருந்தனர். ஆனால் அவர் பட்டினித் தவத்தை முறித்து, உணவு உண்டு விட்டார் என்பதை அறிந்ததும், அவர்கள் அவர் மீது வெறுப்புற்று, அவரைத் தனியே விட்டுவிட்டு வேறிடத் திற்குப் போய்விட்டனர்.

* 'சிலப்பதிகாரம்'

ஒன்பதாம் இயல்

# போதி மாதவன்

'போதி மேவினை! புன்மை அகற்றினை!
சோதி வானவர் தொழஎழுந் தருளினை!
ஆதி நாத,நின் அடியிணை பரவுதும்!'

—வீரசோழியம்

மெய்யறிவு மனிதனுக்கு எட்டும்படி மிக அருகிலேயே உள்ளது. ஆயினும் அதை அடைய எவ்வளவு துன்பப்பட வேண்டியிருக்கிறது! அவனுகப்படைத்துக்கொண்ட 'தான்' என்னும் அகங்காரம், பெரும் பூதமாக வளர்ந்து, அவனையே ஆட்கொண்டு விடுகின்றது. அதனுல் ஆசைகள் அவனைப் பற்றிக்கொள்கின்றன.

இன்பம் வேண்டி அவன் துடிக்கிருன்; அதனுல் துன்பமே விளைகின்றது. மரணம் அவனுடைய தனித் தன்மையை அழித்துவிடுகின்றது. ஆயினும் அவனுக்கு அமைதியில்லை. உயிர் வாழும் ஆசை அவனைவிட்டு அகலுவதில்லை. மீண்டும் தனித் தன்மை பெற்று, அவன் புதுப் பிறவிகளை மேற்கொள்கிருன்.

உலகில் பாவமும் துக்கமும் பரவி நிற்கின்றன. மக்கள் உண்மையைப் பார்க்கிலும் மயக்கமே மேல் என்று கருதி வழி தவறிச் செல்கின்றனர். பாவமே பார்வைக்கு இனியதாய்த் தெரிகின்றது. ஏதோ 'செயல், செயல்' என்று அவர்கள் கருமங்களைச் செய்துகொண்டேயிருக்கின்றனர். அவர்களுடைய செயல்களும், அவர்கள் அடையும் இன்பங்

களும் நீர்க்குமிழிகளாகவே இருக்கின்றன. குமிழிகள் உடைந்தவுடன் அவற்றினுள்ளே எதுவும் இல்லை!

கௌதம முனி ஆறு ஆண்டுகள் அருந்தவம் செய்த பிறகும் அவர் கொண்ட குறிக்கோளை அடைய முடியவில்லை. உடலை வருத்துதல் வீண் வேலை என்று அவர் பிறருக்கெல்லாம் போதனை செய்தும், கடைசியில், 'அதையும் செய்து பார்ப்போம்' என்று தாமே தமது திருமேனியை வதைத்துக் கொண்டார்!

அதன் முடிவில் ஒரு வேளை அவருக்கே சந்தேகம் எழுந்திருக்கும். கண் முன்பு கண்ட நாடு, சுற்றம் எல்லாம் துறந்து, காட்டில் கிடந்து வாடியும் இலட்சியம் கைகூடவில்லை. அது எட்டாத தாரகையாய், மேலும் மேலும் உயரே தள்ளிப் போய்க் கொண்டேயிருந்தது. ஒரு வேளை எரிநட்சத்திரத்தையே உண்மைத் தாரகையாக எண்ணினாரா? கானலை நீர் என்று கருதி, அதன் பின்னே அலைந்து கொண்டிருக்கிறாரா? அவர் யாத்திரை முடிவற்ற நீண்ட யாத்திரையாகவே இருந்தது! அவர் மனத்தில் தோன்றிய ஐயப்பாடுகளை யாரே அளவிட்டுரைக்க முடியும்? அதில் நடந்த போராட்டங்களை யாரே புனைந்துரைக்க முடியும்?

## ஞான உதயம்

ஆனால் அவர் கலங்கவில்லை. அவர் சித்தம் தெளிவாகவே யிருந்தது. மன உறுதிதான் அவருடைய மாசற்ற நண்பனாக விளங்கியது. அரச மரத்தின் அடியில் அமரும் போதே அவர் உறுதியுடன் சபதம் செய்து கொண்டுவிட்டார்: 'எனது இலட்சியம் கைகூடும்வரை நான் பூமியில் இந்த இடத்தைவிட்டு எழப்போவதில்லை!' அந்தச் சூளுரை கேட்டு வன விலங்குகளும் பறவைகளும் வாயடங்கி அயர்ந்துவிட்டன. காற்றில் ஆடிய மரங்களும் அசைவற்று அமைதியாக நின்றன. வானத்திலே மட்டும் மகிழ்ச்சி ஒலிகள் எழுந்தன.

மக்களுக்கு ஆசையூட்டி மயக்கும் சீல விரோதியாகிய மாரன் சாக்கிய முனிவரின் கொடிய உறுதியைக் கண்டு கலக்கமடைந்தான். அவர் எடுத்த காரியத்தில் வெற்றி பெற்றுவிட்டால், பின்னர் அவர் உபதேசம் கேட்டு மக்கள் அனைவரும் நன்னெறிகளில் நின்றுவிடுவர். அதனால் அவனுக்கு வேலையில்லாமற் போகும். ஆதலால் அவருடைய முயற்சியை ஆரம்பத்திலேயே தடுத்துவிட வேண்டும் என்ற முடிவுடன் அவன் அரச மரத்தை அணுகி வந்தான்.

'மரணத்தைக் கண்டு அஞ்சும் க்ஷத்திரிய வீர! எழுவாய், எழுவாய்! முக்தி வழியைக் கைவிட்டு எழுவாய்! எழுந்து, இவ்வுலகையும், இந்திரன் உலகையும் வெற்றி கொள்வாய்! ஆண்டியாக வாழ்தல், உன் உன்னத மரபுக்கே இழுக்காகும்; குல தர்மத்தைக் கடைப்பிடித்தலே உன் கடன்!' என்று முழக்கிக் கொண்டு, அவன் முனிவர் முன்பு தோன்றினன்.

கௌதமர் நிலையில் மாற்றம் காணமையால், அவன் கையிலிருந்த மலர் அம்பினைத் தொடுத்து அவர்மீது எய்தான். அவர் அசையவில்லை.

அதன் பின்னர் அவன் தன் படையினங்களை அவர் மீது ஏவினன். கரடிகள், திமிங்கிலங்கள், குதிரைகள், கழுதைகள், ஒட்டைகள், புலிகள், சிங்கங்கள், யானைகள், ஒற்றைக் கண்ணும் பல தலைகளுமுள்ள விலங்குகள், பல நிற அரக்கர்கள் முதலிய படையினங்கள் வனத்தில் வந்து சூழ்ந்து கொண்டு பயங்கரமாகக் கர்ஜனை செய்தன. வானம் இருண்டது. திசைகள் கறுத்தன. புயல் எழும்பிற்று. ஆனால் பாறைகளையும் மரங்களையும் பறித்தெடுத்த அரக்கர்கள் அவர்மீது அவைகளை வீசமுடியாமல் கைகள் முடங்கி நின்றனர். வானத்திலிருந்து அவர்மீது பொழியப் பட்ட அனற் கங்குகள் அரசமரத்தடியில் செந்தாமரை இதழ்களாகச் சிதறிக்கிடந்தன. போதிசத்துவர் அவைகளையெல்லாம் குழந்தைகளின் விளையாட்டாக எண்ணிப்

பார்த்துக்கொண்டிருந்தார். காகங்களின் நடுவே கருடன் அமைதியோடு அமர்ந்திருத்தல் போல, அவர் விளங்கினார்.

மாரனுடைய குமாரர்களான **கலக்கம்,செருக்கு, கேளிக்கை** ஆகிய மூவரும், அவனுடைய குமாரிகளான **காமம், களிப்பு, வேட்கை** ஆகிய மூவரும் போதிசத்துவரை அசைக்க முடியவில்லை. கௌதமர் மாரனைப் பார்த்து, 'மேரு மலையைக் காற்று அசைக்க முடிந்தாலும், நீ என்னை அசைக்கமுடியாது! நெருப்பு குளிரலாம்; நீரின் நெகிழ்ச்சி குன்றலாம்; பூமியே உருகி ஓடலாம். ஆனால் பல்லாண்டுகளாகப் பல பிறவிகளிலே தேடிய தவ வலிமையுள்ள நான் என் தீர்மானத்தைக் கைவிடப் போவதில்லை! இரு கட்டைகளை வைத்துக் கடைந்து கொண்டே யிருப்பவன் நெருப்பைக் காண்பான். பூமியை அகழ்ந்து கொண்டே செல்பவன் கடைசியில் தண்ணீரைக் காண்பான். அதேபோல் விடா முயற்சி யுள்ளவன் வெற்றி கொண்டே தீருவான்!' என்று கூறினார். முடிவில் மாரன் தோல்வியுற்று ஓட ஆரம்பித்தான்.

ஓடும்போது, 'ஏழு வருடம் படிப்படியாக இவ்வண்ணலைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தேன். பேரறிவும், பெருவிழிப்புமுள்ள இவரை அண்டுவதற்கே வழிகிடைக்கவில்லை. கல்லைக் கண்டு மாமிசத்துண்டு என்று கருதி, "இந்த இறைச்சி இனிப்புள்ளதாக இருக்கும்!" என்று சொல்லும் காகத்தைப்போல் இருக்கிறது என் நிலைமை. அங்கே இனிப்புமில்லை, இறைச்சியுமில்லை என்று தெரிந்ததும், காகம் பறந்து செல்கிறது. இவ்வாறு பாறையைக் கொத்திப் பார்த்த காகம்போல், நானும் வெறுப்படைந்து கௌதமரை விட்டுச் செல்கிறேன்!' என்று அவன் புலம்பினான்.*

வானத்திலேயிருந்து பூமழை பொழிந்தது. 'அவர் உறுதி

---

*'லலிதவிஸ்தரம்'

யுள்ள முனிவர்! விரைவிலே சத்தியத்தைக் கண்டு, அதன் ஒளியால், கதிரவனைப்போல, உலகின் இருளைக் கடிவார்!' என்று தேவர்கள் ஆர்த்தனர்.

மாரனுடைய போராட்டங்களெல்லாம் மனத்துள் நடக்கும் போராட்டங்களே. காமம், குரோதம் முதலிய தீயகுணங்களோடு போராடி வெற்றி கொள்வதையே இவை உருவகப்படுத்திக் கூறுகின்றன.

கௌதமர் அமர்ந்திருந்த புனிதத் தலத்தை* நிலமகள் முகம் அல்லது திலகத்திற்கு ஒப்பிடலாம். அது உலகின் நடுநாயகமான க்ஷேத்திரம். அங்கே அரசமரத்தின் நிழலிலே அறிவு துளிர்த்து மரமாக வளர்ந்துகொண்டிருந்தது. அம்மரம், உறுதியாகிய பூமியில் வேரோடி பொறுமை என்னும் நீர் பெற்று, நினைவு, சிந்தனையாகிய கிளைகள் பரப்பிக் கொண்டிருந்தது. அதிலே விரைவிலே தருமம் என்னும் கனி பழுக்கும் நேரம் வந்துவிட்டது.

அன்று பூர்ணிமை,† புன்னகையுடன் விளங்கும் பூவையைப் போன்று, சந்திரன் வானத்திலிருந்து தண்ணொளி பரப்பிக் கொண்டிருந்தான். அகிலமெங்கும் அமைதி பரவியிருந்தது.

---

*இந்தத் தலம் பின்னால் புத்தகயை என்று பெயர் பெற்றது. போதிமரத்தின் அருகே கிழக்குப் பக்கத்தில் பிற்காலத்தில் அசோக சக்கிரவர்த்தி ஓர் ஆலயம் அமைத்தார். இப்போது அங்குள்ள ஆலயம் 160 அடி உயரம் உள்ளது. ஆலயத்தில் போதியடைந்த புத்தருடைய சிலை வைக்கப்பெற்றிருக்கிறது. இந்தத் தலத்திற்கு நம் நாட்டிலிருந்தும், இலங்கை, பர்மா, சீனு, சயாம், ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்தும் தினந்தோறும் யாத்திரிகர்கள் வணக்கத்திற்காகச் சென்று வருகின்றனர். பௌத்தர்கள் இதைப் பௌத்த தருமம் வளர்ந்த தொட்டில் என்று கருதி முதன்மையாகப் போற்றி வருகின்றனர்.

†கி. மு. 538, வைகாசி மாதம், 6-ஆம் தேதி, புதன்கிழமை.

'மதிநாள் முற்றிய மங்கலத் திருநாள்'

—மணிமேகலை

கௌதமர் ஆசைகளையும் பாசங்களையும் அறவே களைந்துவிட்டு, ஆழ்ந்த சிந்தனையும் ஆராய்ச்சியும் கூடிய மனத்துடன் முதலாவது தியானத்தில்* அமர்ந்திருந்தார். அப்போது ஏற்பட்ட ஆனந்த உணர்ச்சியால் அவர் மன நிலை மாறவில்லை.

பிறகு சிந்தனையும் ஆராய்ச்சியும் நிகழாமல் தடுத்து உள்ளத்தை ஒரு நிலைப்படுத்தி, ஆனந்த உணர்ச்சியோடு, இரண்டாவது தியானத்தில் அமர்ந்தார்.

பூரண அமைதியுடன் விழிப்பு நிலையிலே இருந்து கொண்டு, மூன்றாவது தியானத்தில் அமர்ந்திருக்கையில், அவருக்குப் பேரானந்த உணர்ச்சி ஏற்பட்டது.

பழைமையை யெல்லாம் மறந்து, இன்ப துன்பங்களை யெல்லாம் விலக்கி, அமைதியோடும் விழிப்போடும் அவர் நான்காவது தியானத்தையும் அடைந்தார்.

அப்போது அவர் தமது முற்பிறப்புக்களைப் பற்றி அறிய முடிந்தது. ஒவ்வொரு பிறவியிலும் அவருக்கு ஏற்

*பௌத்த தரும முறைப்படி தியானம் என்பது சாந்தமான இடத்தில் சமாதியில் அமர்ந்து உள்ளறிவும் உண்மை ஆனந்தமும் பெறும் நிலை. தியானத்தில் மன உணர்வை இழந்து இன்பத்தில் இலயித்து விடுவதைப் புத்தர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவருடைய திட்டப்படி, நான்கு வாய்மைகளையும் ஒப்புக்கொண்டு, அஷ்டாங்க மார்க்கத்தில் விவரிக்கப்பட்டுள்ள எட்டு வழிகளிலும் முறை தவறாமல் வாழ்ந்து வந்தாலே நிர்வாண முக்தி கிடைக்கும். ஆயினும் அத்தகைய வாழ்க்கைக்குத் தியானம் உதவியாயிருப்பதால், அதை அவர் மறுத்துத் தள்ளவில்லை. தியானங்கள் நான்கு வகை: ஏகாந்தமாக இருந்து, ஆராய்ச்சி செய்து, சிந்தித்து இன்ப நிலையில் இருத்தல் முதலாவது தியானம். ஆராய்ச்சியோ, சிந்தனையோ யின்றி, ஆழ்ந்த அமைதி பெற்றிருத்தல் இரண்டாவது தியானம். மன விகாரங்களை யெல்லாம் அடக்கியிருத்தல் மூன்றாவது தியானம். துக்கத்தை அறவே ஒழித்து, சமநிலையான மனத்துடன் இன்ப நிலை பெறுதல் நான்காவது தியானம். தியானங்களில் ஏற்படும் ஆனந்தத்தால் மனநிலை மாறாமல் இருக்கவேண்டும்.

பட்ட அநுபவங்கள் எல்லாம் தெளிவாகத் தெரிந்தன. இரவின் முற்பகுதியிலேயே இவைகளை அவர் அறிந்து கொண்டார். அந்நிலையில் அஞ்ஞானம் தொலைந்து அறிவு துலங்கிற்று ; இருள் மறைந்து ஒளி விளங்கலாயிற்று.

அதன் பிறகு உயிர்கள் தோன்றி மறைவதைப் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். நல்வினை, தீவினைகளுக்குத் தக்கபடி, உயிர்கள் பின்னால் நன்மையையும் தீமையையும் அடைவதை அவர் கண்டார். ஞானதிருஷ்டியால் அவருக்கு எல்லாம் விளக்கமாகத் தெரிந்தன. இவையெல்லாம் நள்ளிரவிலே ஏற்பட்ட அநுபவங்கள்.

## நான்கு வாய்மைகள்

பின்னர் பிறவிக்குக் காரணமான குற்றங்களை நீக்கும் வழியைப் பற்றிச் சிந்தனை செய்தார். அப்போது பின் கண்ட நான்கு சிறந்த வாய்மைகளும் அவருக்குத் தெளிவாக விளங்கின: துக்கம், துக்க உற்பத்தி, துக்க நீக்கம், துக்க நீக்க வழி.

முதலாவது வாய்மை துக்கம் நிலைத்திருத்தல். பிறப்பு துக்கம், வளர்ச்சி துக்கம், பிணி துக்கம், மரண துக்கம். நாம் விரும்பாதவைகளோடு இணக்கம் ஏற்படுவது துக்கம். நாம் விரும்பியவற்றிலிருந்து விலக நேர்வது அதிகத் துக்கம். பெறமுடியாதவற்றில் ஏற்படும் ஆசை பெருந் துக்கம்.

இரண்டாவது வாய்மை துக்க உற்பத்தி. துக்கத்தின் காரணம் அவா. நம்மைச் சூழ்ந்துள்ள உலகம் புலன்களின் உணர்ச்சிகளைத் தாக்கி ஆசையாகிய வேட்கையை எழுப்புகின்றது. ஆசை உடனே நிறைவேற வேண்டும் என்ற ஆத்திரம் எழுகின்றது. 'நான்' என்ற உணர்வோடு இன்புற்று வாழ விருப்பம் ஏற்படுவதால், துக்க வலையில் வீழ நேருகின்றது. இன்பங்களே தூண்டில்கள்; முடிவு துன்பமே.

மூன்றாவது வாய்மை துக்க நீக்கம். 'நான்' என்ற அகங்காரத்தை வென்றவனுக்கு ஆசை அற்றுவிடும். எதிலும் அவா இல்லாமற் போகையில் ஆசைத் தீ பற்றிக் கொண்டு எரிவதற்கு ஒரு பொருளும் அகப்படாமற் போகிறது. இவ்வாறு ஆசை அவிந்துபோகும்.

## அஷ்டாங்க மார்க்கம்

நான்காவது வாய்மை துக்க நீக்க வழி. இந்த வழி எட்டுப் பிரிவுகளையுடைய அஷ்டாங்க மார்க்கம். சத்தியத்தின் முன்பு அகங்காரம் ஒழிந்து, செய்ய வேண்டியதை அறிந்து நிறைவேற்றுவதற்குச் சித்த 1உறுதி கொண்டு, தன் கடமையைச் செய்யவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் இருப்பவன் விடுதலை அடைவான். அறிவுள்ளவன் இந்த வழியைப் பின்பற்றி, தானமும் சீலமும் மேற்கொண்டு, துக்கத்தை ஒழித்து விடுவான்.

அஷ்டாங்க மார்க்கத்தின் பிரிவுகள் இவை :

நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நல்லூக்கம், நற்கடைப்பிடி, நல்லமைதி.

## பன்னிரண்டு நிதானங்கள்

இறப்பு பிறப்புக்களின் ஆரம்பத்தைப் பற்றிச் சிந்திக்கையில் கௌதமர் சகல தீமைகளுக்கும் பேதைமையே அடிப்படையாக இருப்பதை அறிந்து கொண்டார். பிறபுப் ஏற்படுவதற்குக் காரணமான பேதைமை முதலிய பன்னிரண்டு சார்புகள் ( நிதானங்கள் ) இவை :

பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப் பயன். இவை, சங்கிலிக் கோவை போல், ஒன்றோடொன்று தொடர்புடையவை.

வாழ்க்கை ஏற்படு முன்பு ஜீவன்களின் ஆரம்பத்தில்

(அறிவின்மையாகிய) பேதைமையே நிறைந்துள்ளது. அந்தப் பேதைமை வெள்ளத்தில், பின்னால் நாமமும் உருவும் கொள்ளத் தக்க நுண்மையான தேட்டங்களின் கருக்கள் அல்லது விதைகள் அடங்கிக்கிடக்கின்றன. அவைகள் பக்குவமடைந்து பரிணமிக்கும்போது (ஸம்ஸ்காரங்களாகிய) செய்கைகள் எழுகின்றன. இச்செய்கைகளின் தொழிலால் ஆரம்ப நிலையிலுள்ள உணர்வு செயற்பட ஆரம்பிக்கின்றது. உணர்வைத் துணைக்கொண்டு உருவமும் குணமும் (தனி ஜீவன்கள்—நாம ரூபங்களாகிய அருவுருக்கள்) அமைகின்றன. அருவுருக்களிலிருந்து ஆறு களன்களாக விளங்கும் மனமும் ஐம்பொறிகளும் தொழிற்பட ஆரம்பிக்கின்றன. இந்த ஆறு வாயில்களும் (ஞானேந்திரியங்களும்) வெளிப் பொருள்களோடு தொடர்பு கொள்ளும்போது ஸ்பரிசம் அல்லது ஊறு ஏற்படுகின்றது. ஊறு காரணமாக, எல்லா நுகர்வுகளும் உண்டாகின்றன. காய்ந்த புல்லில் கனல் பற்றுவதுபோல், நுகர்வு தனிவாழ்வில் ஆசை கொள்ளும்படி வேட்கையை எழுப்புகின்றது. வேட்கையிலிருந்து, பொருள்களையும் வாழ்வையும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற பற்று உண்டாகின்றது. இது சிறு நெருப்புப் பொறி காட்டையே பற்றிக் கொள்வது போன்றது. இந்தப் பற்றினால் 'நான்' என்னும் தனி உணர்ச்சி—அகங்காரம்—தோன்றி வளர்ந்து, பிறப்புக்கு மூலமாயுள்ள பவம் என்னும் கருமக் கூட்டம் விளைகின்றது. பவத்திலிருந்து பிறப்பு (திரும்பத் திரும்ப எடுக்கும் பிறவி) உண்டாகின்றது. பிறவிதோறும் 'நான்' என்ற அகங்காரமும் தொடர்ந்து நிலைக்கின்றது. பிறப்பினால் மீண்டும் (மீண்டும் பிறவி யெடுப்பதால்) துக்கம், முதுமை, பிணி, மரணம் ஆகிய வினைப்பயன்கள் விளைகின்றன. துக்கத்தின் பரம்பரை இதுவேயாகும்.

துக்கத்திற்கெல்லாம் மூல காரணம் முதலிலேயே அமைந்துள்ளது. ஜீவனின் தோற்றத்திற்குக் காரணமான

பேதைமையிலேயே துக்க காரணம் மறைந்திருக்கின்றது. அப்பேதைமையை நீக்குவது எங்ஙனம்?

முதுமை, பிணிகளை நீக்கினால், மரணம் நீங்கும்; பிறப்பை (தோற்றத்தை) நிறுத்தினால் முதுமை, பிணிகள் நீங்கும். 'நான்' என்னும் தனித் தன்மையின் சுயநலமாகிய பவத்தைப் போக்கினால், பிறப்பு நீங்கும். பற்று நீங்கினால் தான் பவம் ஒழியும். பற்றுக்குக் காரணமான வேட்கை அழிந்தால், பற்றும் ஒழிந்துவிடும். தவறான நுகர்வினா லேயே வேட்கை உண்டாவதால், நுகர்வை ஒழிக்கவேண் டும். அதனால் வேட்கை ஒழியும். உலகப் பொருள்களோடு ஏற்படும் தொடர்பால் தோன்றும் நுகர்வு ஒழியவேண்டு மானால், ஆறுவாயில்களாகிய பொறிகளின் மூலம் ஏற் படும் மயக்கங்கள் நீங்கவேண்டும். அருவுரு ஆகிய நாம ரூபங்கள் ஒழிந்தால்தான் ஆறு பொறிகளும் வெளிப் பொருள்களோடு கொள்ளும் தொடர்பு (ஊறு) அற்றுப் போய் அடங்கிவிடும். அருவுரு ஒழிய உணர்வு நீங்க வேண்டும். செய்கைகளாகிய ஸம்ஸ்காரங்கள் நீங்கினால் தான் உணர்வு நீங்கும். ஆகவே செய்கைகள் நீங்க முதற் கண் பேதைமையை ஒழிக்க வேண்டும். பேதைமை ஒழியும் போது அதனுள் அடங்கிக்கிடந்த நுண்மையான தேட்டக் கருக்கள்—அவாவின் ரேகைகள்—சக்தியின்றிப் போகின் றன.

ஆதலால் ஆசையை அடியுடன் துறக்கவேண்டும். ஆசை அகன்றால், அறியாமை அகலும். அதனால் செய்கை கள் ஒழியும். செய்கைகள் ஒழியவே, உணர்வு நீங்கும். உணர்வு நீங்கினால், அருவுரு நீங்கும். அருவுரு நீங்கினால், ஆறு வாயில்களும் நீங்கும். வாயில்கள் செயற்படாத போது, ஊறு ஒழியும். ஊறு ஒழிந்தால், நுகர்வு இல்லா மற் போகும். நுகர்வு நின்றுபோன இடத்தில் வேட்கை யில்லை. வேட்கை நீங்கவே பற்றும் ஒழிகின்றது. பற்றற்ற இடத்தில் கருமங்களின் தொகுதியாகிய பவம் தோன்ற

முடியாது. பவம் இல்லாது ஒழியும்போது, தோற்றமாகிய பிறப்பில்லை, வினைப் பயன்களான மூப்பு, பிணி, மரணங்களும் இல்லை. துக்கத்தை அடியோடு நீக்க இதுவே வழி.

## புத்தர்!

இவ்வாறு அறிய வேண்டிய விஷயங்கள் அனைத்தும் கௌதமருக்குப் புலனாகிக் கொண்டிருந்தன. திரைமேல் திரையாக அறியாமைத் திரைகள் அற்றொழிந்தன. அவித்தையின் தோடு உடைந்து சிதறி, கோடிக் கிரணங்களுடன் பொன் மயமான மெய்யறிவுச் சூரியன் அவர் அகத்திலே உதயமாகி விட்டான். அவர் இனி அறியவேண்டியது எதுவுமில்லை. அன்றிரவு பொழுது விடியுமுன்பே, கௌதமபிக்கு போதியடைந்து, புத்தராகி விட்டார்! அவர் திருமுகத்தில் பூரண ஞானம் பொலிந்து விளங்கிற்று. அவர் பவம் ஒழிந்த பகவராகி விட்டார்! அகங்கார மற்ற தவ ராஜராகி விட்டார்! அறமுணர்ந்த தரும ராஜராகி விட்டார்! அவரே ததாகதர்!

தேவர்கள் மலர் மழை பொழிந்தனர். தென்றல் இனிமையாக வீசிற்று. மண்ணக மெல்லாம் மகிழ்ச்சி யடைந்தது. தேவர்கள், நாகர்கள் அனைவரும், தத்தம் உலகிலிருந்து போதி மரத்தடியில் வந்து சினேந்திரரை வணங்கிச் சென்றனர். மாரன் ஒருவனே மனத்துயர் கொண்டான்.

புத்தர் கூறினார்:

'ஆசைத் தளையால் கட்டுண்டு நெடுங்காலம் அலைந்து திரிந்து, இதுவரை எத்தனையோ பிறவிகளெடுத்துக் களைத்து விட்டேன்!

'பலவிதமான பிறவிகளை நான் எடுத்தாயிற்று—இந்த (உடலாகிய) குடிலைக் கட்டியவனை நான் இரவும் பகலும் தேடியும் காணவில்லை. மீண்டும் மீண்டும் பிறப்பது துக்கமாயுள்ளது.*

---

*தம்மபதம், 153-ஆவது சூத்திரம்.

'குடிலைக் கட்டிய கொற்றனே!* இப்போது உன்னைக் கண்டு கொண்டேன்! குடிலை மறுபடி நீ கட்ட முடியாது. உன்னுடைய உத்திரங்கள் எல்லாம் உடைந்துவிட்டன; குடிலின் முகடும் குலைந்துவிட்டது. என் சித்தம் நிருவாணப் பேற்றில் இலயித்துவிட்டது; (அதனால்) ஆசைகள் அவிந்தொழிந்துவிட்டன.'†

போதியடைந்த புத்தர் பெருமான் ஏழு வாரங்கள் போதி மரத்தின் அடியிலும், அதன் பக்கங்களிலுமாகக் கழித்தார். அங்கயற் கண்ணி சுஜாதை அளித்த இன்னமுதுக்குப் பின்னால் அத்தனை வாரங்களிலும் அவர் உணவு கொள்ளவில்லை. நாள்தோறும் நெடுநேரம் அவர் சமாதியில் அமர்ந்திருந்து, உலக நிகழ்ச்சிகளையும், ஜீவன்கள் படும் அவதிகளையும் அறிவுக் கண்ணால் பார்வையிட்டு வந்தார். அவர் உள்ளத்திலே இன்பம் தேங்கி நின்று திளைத்துக் கொண்டிருந்தது. போக்கு வரவற்ற பூரண நிலையை அவர் பெற்றிருந்தார். அவருடைய பனிமதி முகத்திலே புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

## முதற் சீடர்கள்

அந்த நிலையில் அவ்வழியாகச் சென்றுகொண்டிருந்த செல்வம் மிகுந்த திரிபுஷன், பல்லிகன் என்ற இரு வர்த்தகரும் போதியடியில் ஒளி மயமாக விளங்கிக்கொண்டிருந்த சுகதரைக்‡ கண்டனர். அவர்கள் வடக்கு உத்கல§ நாட்டினர். ஐந்நூறு வண்டிகளில் சரக்குக்கள் ஏற்றிக்கொண்டு சென்ற பாதையில், அவர்கள் ததாகதரைத் தரிசித்து,

---

*ஆசையே உடலாகிய குடிலைக் கட்டிய கொற்றனாக உருவகப் படுத்திக் கூறப்படுகின்றது.

†தம்மபதம், 154-ஆவது சூத்திரம்.

‡சுகதர்—நல்ல ஞானம் பெற்றவர்.

§வடக்கு உத்கலம்—வடக்கு ஒரிஸா.

தேனும், சக்கரையும், நெய்யும் அளித்து வணங்கினா. அவரும் அவைகளை அன்போடு பெற்றுக்கொண்டு உண்டார். போதியடைந்த பின்பு அவர் உட்கொண்ட முதல் உணவுகள் அவையே.

புத்தர் அவர்களுக்கு நிருவாண முக்தியை அடையும் மார்க்கத்தை உபதேசித்தார். அவர்களும் அவரிடம் முழு நம்பிக்கைகொண்டு, அவரையும் தருமத்தையும் சரணலய மாக ஏற்றுக்கொண்டனர். இல்லறத்தில் இருந்துகொண்டு புத்தருக்கு முதன் முதல் சீடர்களாகச் சேர்ந்தவர்கள் அந்த இருவர்களே.

## பிரும்மாவின் வேண்டுகோள்

உலகில் மக்கள் அடையும் துக்கங்களைக் கண்டு புத்தரின் மனம் உருகிக்கொண்டிருந்தது. தாம் பெற்ற இன்பத்தை அவர்களும் பெறவேண்டும் என்று அவர் விரும்பினர். அதற்காகவே அவர் ஆதியில் சபதம் செய்துகொண்டு நாடுவிட்டுக் காடு அடைந்ததை எண்ணினர். ஆனல் ஜனங்கள் அவருடைய அமுத மொழிகளைக் கேட்பார்களா என்ற சந்தேகம் அவருக்கு இருந்தது.*

'மாகா உன்னதமான உண்மையை நான் உணர்ந்திருக்கிறேன். அது உள்ளத்தை உருக்குவதாயும் சாந்தியளிப்பதாயும் உள்ளது. ஆனல் தெரிந்துகொள்ளக் கடினமானது:

---

*பிற்காலத்துச் சீன அறிஞர் 'சுவாங்த்ஸ' என்பவர் பொது மக்கள் சம்பந்தமாக இதேபோன்ற கருத்தைக் கூறியுள்ளார்: 'பேருண்மைகள் பொதுமக்களின் மனத்தைக் கவர்வதில்லை. இப்போது உலகம் முழுவதும் தவருன பாதையில் போய்க்கொண்டிருக்கிறது. எனக்கு உண்மையான பாதை தெரிந்திருந்தும், நான் எப்படி வழி காட்ட முடியும்? நான் வெற்றியடைய முடியாது என்று தெரிந்திருந்தும், வெற்றியடையப் பிடிவாதம் செய்தால் அதுவும் தவருகும். ஆதலால் நான் தலையிடாமல் பேசாதிருத்தலே சரி. ஆனல் நான் முயற்சி செய்யவில்லையானல், வேறு யார் முயற்சி செய்யப் போகின்றனர்?'

ஏனெனில் பெரும்பாலான மக்கள் உலகியல் விஷயங்களி லேயே ஈடுபட்டு அவைகளிலேயே இன்பம் காண்கின்றனர்.

'உலகப் பற்றுள்ளவன் எனது தருமத்தை உணர்ந்து கொள்ளமாட்டான். ஏனெனில் "நான்" என்னும் அகங் காரத்திலேயே அவனுக்கு இன்பம் இருக்கிறது. சத்தியத் தோடு முற்றிலும் அடிபணிந்து சரணடைவதிலுள்ள இன் பத்தை அவன் உணர முடியாது.

'போதி பெற்றவர் பேரின்பம் என்று கூறுவதை, அவன் துறவு என்பான். நிறைவு பெற்ற பெரியோர் நித் திய வாழ்வு என்று கண்டதை, அவன் அழிவு என்பான். தம்மையே வென்று கொண்டு அகங்காரத்தை அகற்றிய வெற்றியாளர் அழியாவாழ்வு என்று அறிந்ததை, அவன் மரணம் என்று கருதுவான்.

'வெறுப்புக்கும் விருப்புக்கும் அடிமைப்பட்டுள்ள வனுக்கு உண்மை மறைந்தே நிற்கும். மேகங்கள் சூழ்ந்தது போல், உலக ஆசைகள் அடர்ந்துள்ள, பேதைமையுள்ள மனத்திற்கு நிருவாண முக்தி உணர்ந்துகொள்ள முடியாத மர்மமாகவே யிருக்கும்.

'நான் தரும உபதேசம் செய்து, மனிதகுலம் அதைப் புரிந்துகொள்ளாவிடில், எனக்குக் களைப்பும் சிரமமுமே மிச்சமாகும்.'*

அந்த நிலையில் மகாபிரும்மா தேவருலகிலிருந்து இறங்கி வந்து, மனித குலத்திற்காக மனம் இரங்கித் தமது தரு மத்தை உபதேசிக்க வேண்டும் என்றும், இல்லையெனில் மக்கள் வீணாக அழிந்துவிடுவர் என்றும் புத்தர்பிரானை வேண்டிக் கொண்டார்.

'உலகில் சிலர் இருக்கின்றனர். அவர்கள் உலக பாசங் களைக் கடந்தவர்கள். அவர்களுக்குத் தரும உபதேசம் செய்யாவிடில், அவர்களை நாம் இழக்க நேரும். அவர்கள்

*'மகாவக்கம்'

அறவுரையைக் கேட்டால், அதை நம்பி உய்ந்து கொள்வார்கள்!' என்றும் அவர் கூறினர்.

பகவரும் அங்கிருந்தபடியே உலக மக்களை அறிவுக் கண்ணால் நோக்கிக் கவனித்தார். சிலருடைய உள்ளங்களை உலகப் பற்றுக்கள் கவராமல் இருந்ததைக் கண்டார். காமம், பாவம் முதலியவற்றின் துயரங்களை அறிந்த சிலர் இருந்தனர்.

அப்போது அவர், 'கேள்விக்கு ஏற்ற செவிகளையுடையவர்களுக்கு நித்திய வாழ்வின் கதவை விசாலமாகத் திறந்து வைக்கிறேன். தருமத்தை அவர்கள் நம்பிக்கையுடன் ஏற்றுக் கொள்ளட்டும்!' என்று கூறினர்.

அதைக் கேட்டுப் பிரும்மா தம் கருத்து நிறைவேறி விட்டது என்று மகிழ்ச்சி யடைந்தார்.

'தருமத்தை நான் முதலில் யாருக்குப் பிரசாரம் செய்யலாம்?' என்று புத்தர்பிரான் எண்ணும்போது, ஆலார காலாமர், உருத்திரகர் இருவரைப் பற்றியும் கருதினர். இவ்விருவரும் ஆனந்தத்தோடு தமது தருமத்தை ஏற்றுக் கொள்வர் என்று அவர் எண்ணினர். ஆலார காலாமர் ஏழு நாட்களுக்கு முன்பு இறந்து போனதாயும், உருத்திரகர் முந்திய நாள் மாலையில் மரித்து விட்டதாயும் பிரும்மா கூறினர்.

அடுத்தாற்போல் பகவர் உருவேலா வனத்தில் தம்மோடு இருந்த ஐந்து தாபதர்களைப் பற்றி எண்ணமிட்டார். 'அவர்களைத் தேடிச்சென்று, என் விடுதலை மார்க்கத்தை முதன் முறையாக அவர்களுக்கே உபதேசம் செய்கிறேன்!' என்று அவர் கூறிக்கொண்டார்.

## காசி யாத்திரை

அக்காலத்தில் அந்த ஐந்து சீடர்களும் கங்கை நதிக் கரையிலிருந்த காசிமாநகரில், சாரநாத்* என்னுமிடத்தில்

*இதற்கு இஸிபதனம் என்றும் பெயருண்டு.

'மிருகதாவனம்' என்ற மான் தோட்டத்தில் தங்கியிருந்தனர். புத்தர் தாம் ஜீவ-மரணப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த வேளையில் அவர்கள் தம்மைக் கைவிட்டுச் சென்றதை எண்ணுமல், அவர்கள் முன்னுல் செய்த உதவிகளையும், அவர்கள் நோற்ற கடுமையான நோன்புகள் பயனற்றுப் போவதையும் எண்ணினுர். அவர் உள்ளத்தில் அவர்கள் மீது கருணையே நிறைந்திருந்தது. எனவே அவர் காசியை நோக்கிப் புறப்பட்டுச் சென்றுர்.

போதிமரத்திலிருந்து கயை நகருக்குச் செல்லும் பாதையில் உபாகர் என்ற ஆஜீவக சமயத் துறவி* அவரைச் சந்தித்தார். உபாகர் வாலிபர்; வேதியர்; புத்தருக்கு அவர் முன்பு தெரிந்தவர். அவர் புத்தரின் முகத்தில் பொலிந்த தேசையும்† அமைதியையும் கண்டு, 'நண்பரே, உமது தோற்றம் சாந்தி நிறைந்திருக்கின்றது. பரிசுத்தமும் பேரின்பமும் பெற்ற மகா புருடர்களின் கண்களைப் போல, உமது கண்கள் சுடர் விடுகின்றனவே!' என்று கூறினுர்.

புத்த பகவர், 'நான் அகங்காரத்தை அழித்து விடுதலை அடைந்துள்ளேன். எனது உடல் புனிதமாகியுள்ளது. எனது உள்ளம் ஆசையற்றுள்ளது. எனது இதயத்தில் உண்மை உறைந்துள்ளது. நான் நிருவாண முக்தியைப் பெற்றுள்ளேன். அதனுல்தான் என் தோற்றம் சாந்தி நிறைந்திருக்கின்றது; என் கண்கள் பிரகாசிக்கின்றன. இப்போது பூமியிலே எனது சத்திய இராஜ்யத்தை அமைக்க விரும்புகிறேன். இருளால் சூழப்பட்டவர்களுக்கு ஒளியளித்து, மக்களுக்கு நித்திய வாழ்வின் வாயிலைத் திறந்து வைக்க விரும்புகிறேன்!' என்று பதிலுரைத்தார்.

'அப்படியானுல் நீர் உலகத்தை வென்ற சினேந்திரர் என்றே உம்மைக் கருதுகிறீரா?' என்று கேட்டார் உபாகர்.

---

*உபாகர் ஜைனர் என்றும் கூறுவர்.

†தேசு-ஒளி

'தங்களைத் தாங்களே வெற்றிகொண்டு, அகங்காரத்தால் வரும் உணர்ச்சிகளை அடக்குவோர் அனைவரும் சினேந்திரர்களே. மனத்தை அடக்கிப் பாவத்திலிருந்து விலகியவர்களே வெற்றியாளர்கள். ஆதலால் உபாக, நான் ஒரு சினேந்திரனே!' என்றார் வள்ளலும்.

'தங்களுடைய குரு யாரோ?'

'நான் யாவற்றையும் வென்றவன்; நான் யாவற்றையும் அறிந்தவன்; வாழ்வின் நிலைகள் யாவற்றிலும் நான் ஒட்டுப் பற்றில்லாதவன். எல்லாவற்றையும் நான் துறந்தாயிற்று; அவாவை அழித்ததால் நான் முக்தியடைந்தவன். எல்லாவற்றையும் நானே கற்றுக் கொண்டபின், எவரை என் குரு என்று காட்டுவேன்?'*

உபாகர் தலையை அசைத்துக்கொண்டு, 'புனித கௌதமரே! நீர் செல்ல வேண்டிய வழி அதோ இருக்கிறது!' என்று புனித மூர்த்திக்கு, வழிகாட்டிவிட்டுத் தாம் தம் வழியே சென்றார். போகும் வழியிலே சாலையின் ஒவ்வொரு திருப்பத்திலும் அவர் சற்றுநின்று, ததாகதரின் புதிய தருமத்தைப்பற்றிச் சிந்தனை செய்துகொண்டே சென்றார்.

ததாகதரும், மெல்ல மெல்ல நடந்து, கங்கையைக் கடந்து, காசிமாநகரை அடைந்தார்.

---

*தம்மபதம், 353-ஆவது சூத்திரம்.

பத்தாம் இயல்

# அற ஆழி உருட்டுதல்

---

'தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
இன்பச் செவ்வி மன்பதை எய்த
அருளறம் பூண்ட ஒருபெரும் பூட்கையின்*
அறக்கதிர் ஆழி திறப்பட உருட்டிக்
காமற் கடந்த வாமன்..........'

—மணிமேகலை

**பெ**ரும் புகழ் பெற்ற பார்த்திபர் பிரசேனஜித்தின் கோசல இராஜ்யத்திலே தலைநகர் சிராவஸ்தியும், சாகேதம் என்ற அயோத்தியும், வாரணசி என்ற காசி மாநகரும் செல்வமும் செழிப்புமுள்ள பெருநகரங்களா யிருந்தன. இவற்றில் காசி மாநகர், செல்வமும் தொழில்களும் சிறந் திருந்ததோடு, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பாரத நாட்டின் ஒப்புயர்வற்ற புனிதத் தலமாகவும், பூவுலகின் புராதன நகரங்களுள் ஒன்றாகவும் விளங்குவது. புராதன காலத்தில் தோன்றிய புத்தர்கள் ஒவ்வொருவரும் அங்கே தான் முதல்முதல் அறவுரை புகன்றதாயும் கூறுவர். காசி யில் வசித்தாலே கைலாயம் கிட்டிவிடும் என்பது தொன்று தொட்டே இந்துக்களின் நம்பிக்கையாகும். கங்கைக் கரை யிலே மங்கலம் ஓங்கும் மணிமண்டபங்களும், ஆலயங் களும், அரண்மனைகளும் நிறைந்திருந்த அந்நகரில் எந்த நேரமும் வேத கீதங்களும், வேத பாராயணமும் ஒலித்துக் கொண்டே யிருக்கும். சாதுக்களும், சந்நியாசிகளும், யாத்

*பூட்கையின் - கொள்கையின்.

திரிகர்களும், பிச்சைக்காரர்களும் கங்கைக் கரையின் கட்டங்களில் பல்லாயிரக்கணக்காகக் குழுமி யிருப்பார்கள். கங்கை புனிதமான நதி. அதில் ஒருமுறை நீராடினாலே முன்செய்த பாபங்களெல்லாம் போகும் என்று மக்கள் அதில் குளிப்பதுடன், செம்புகளில் கங்கைநீரைத் தத்தம் ஊர்களுக்கும் எடுத்து செல்வார்கள். காசி எப்பொழுதுமே கலைகளின் இருப்பிடமாயும், கல்வியின் நிலையமாயும், தத்துவ ஞானக் களஞ்சியமாயும் விளங்கி வந்திருக்கின்றது.

பிறவிப்பிணி மருத்துவரான புத்ததேவரும் காசியை நோக்கிச் சென்றதில் வியப்பொன்றும் இல்லை. காசியிலே செய்த உபதேசம் காசினியெல்லாம் பரவிவிடும் என்ற நம்பிக்கையோடு, அவர் தமது தருமம்பற்றிய முதல் உபதேசத்தை அங்கேயே நிகழ்த்தத் தீர்மானித்திருந்தார். காசியை அடைந்த அன்று மாலையிலும் இரவிலும் ஒரு தோட்டத்தில் தங்கியிருந்துவிட்டு, மறுநாள் காலையில் அவர் தம் பழைய சீடர்கள் ஐவரையும் தேடிக்கொண்டு அருகேயிருந்த சாரநாத்தை* அடைந்தார். அங்கே கௌண்டின்யர் முதலிய ஐந்து சீடர்களும், தூரத்திலிருந்தே கௌதம புத்தரின் வருகையைக் கண்டுகொண்டனர்.

## மான்சோலை

தமது ஞான ஆசிரியர் தம்மைத் தேடிவருவதைப் பொருட்படுத்தாமல், அவரை வரவேற்று உபசரிக்காமல் இருக்கவேண்டும் என்று அவர்கள் தங்களுக்குள் முடிவு செய்துகொண்டனர். அத்தகைய சீடர்களைத் தேடி அண்ணல் தம் அடிகள் வருந்தும்படி நடந்துவந்தது ஏன்? அத்தகைய சீடர்களே அவருக்குத் தேவையா யிருந்தனர். ஆசிரியரே தவறு செய்வதாகத் தெரிந்தால், அவரைக் கண்டித்து ஒதுக்கிவிட்டுத் தமது இலட்சியத்தை அடைய

*சாரநாத் பனாரஸ் கண்டோன்மென்டு ரயில் நிலையத்திலிருந்து ஆறு மைல் தூரத்திலிருக்கிறது.

வேண்டும் என்று பிடிவாதத்துடன் தவம் புரிந்த தவசிகள் அல்லவா அவர்கள்! உண்மையை உணர்ந்துகொண்டால், அவர்கள் தமக்கும், தமது தருமத்திற்கும் உறுதுணையாக விளங்குவார்கள் என்று பெருமான் எண்ணியது முற்றிலும் பொருத்தமே!

உடலிலிருந்து ஒளிவீசிய வண்ணம் போதிவேந்தர், ஒரு கையிலே திருவோடும், மறுகையிலே ஒரு தண்டும் ஏந்திப் புன்னகை செய்துகொண்டே, மெல்ல மெல்ல நடந்து, மான் சோலையில் அமைந்திருந்த அவர்களுடைய தவப்பள்ளியுள் நுழைந்தார். அதுவரை ஐவரும் எழுந்திருக்கவே யில்லை. ஆனால், விரைவிலே அவர்கள் சித்தம் மாறிவிட்டது ; ஒவ்வொருவரும் அவரை வணங்கி உபசரிப்பதில் போட்டியிட்டனர். ஒருவர் அவருடைய கழியையும், திருவோட்டையும் வாங்கி வைத்தார் ; ஒருவர் அவருடைய திருப்பாதங்களைச் சுத்தி செய்ய நீர் அணிவித்தார் ; மற்றவர்கள் ஆசனம் அமைத்தும், உடைகள் எடுத்துவந்தும் மரியாதை செய்தனர். அவர்களால் வேறு முறையில் நடந்து கொள்ள முடியவில்லை. 'ஐய, தங்கள் உடல்நலம் எப்படியுளது?'. என்று அவர்கள் கேட்டனர்.

புத்தர், 'எல்லாம் நலமே! எல்லா விதத்திலும் நாம் நன்மையை அடைந்துள்ளோம்—அடைதற்கு அரிதான ஞானத்தை அடைந்தாயிற்று!' என்றார். பின்னும் அவர் சீடர்களை நோக்கி, 'ஆனால், நீங்கள் ததாகதரைப் பெயர் சொல்லியோ, நண்பர் என்றோ அழைத்தல் தகாது ; ஏனெனில் அவர் புத்தர்; போதியடைந்த புனிதர்! புத்தர் எல்லா உயிர்களிடத்தும் ஒரே தகைமையான அன்புடன் விளங்குவதால், அவர் அனைவர்க்கும் தந்தையாக விளங்குகின்றார். தந்தையை இழிவுபடுத்தல் தகாது. அவரை வெறுத்தல் பாவம்!' என்று கூறினார்.

பிறகு, உடலை வருத்திக் கொடுமையான தவங்கள் செய்யாமலும், உடலின் இன்பங்களில் ஆழ்ந்திராமலும்,

முக்தியடைவதற்குரிய நடுநிலை வழியைத் தாம் கண்டு கொண்டிருப்பதாக அவர் கூறினார்.

மனிதன் மயக்கங்களிலிருந்து விடுதலைபெற வேண்டும் என்றும், மீன், புலால் முதலிய உணவுகளை விலக்குவதாலோ, அம்மணமாக அலைவதாலோ, தலையை மழிப்பதாலோ, சடை வளர்ப்பதாலோ, உடலில் அசுத்தமான பொருளைப் பூசிக்கொள்வதாலோ, அக்கினிக்கு ஆகுதிகள் செய்வதாலோ அவன் பரிசுத்தமாகிவிட முடியாது என்றும் அவர் பல நீதிகளை விளக்கிச் சொல்லிவிட்டுத் தாம் மெய்யறிவு பெற்றுக் கண்டுள்ள 'மத்திமவழி'யாகிய தரும மார்க்கத்தை அவர்களுக்கு உபதேசம் செய்யப் போவதாக உரைத்தார்.

## தரும சக்கரப் பிரவர்த்தனம்

ஐந்து சீடர்களும் அமைதியோடு ஆயத்தமாக அமர்ந்திருந்தனர். தேவர்களும், நாகர்களும் உருக் கரந்து வந்து, மான்சோலையிலே மறைந்து நின்று, செவிமடுத்துக் கொண்டிருந்தனர். பூதல மக்கள் செய்த புண்ணிய வசத்தால் புத்தர் திருவாய் மலர்ந்து போதிக்கலானார் :

'ஓ பிக்குக்களே! அமிதமான இரண்டு வழிகள் இருக்கின்றன; உலகப்பற்றை விட்டவன் அவைகளைப் பின்பற்றலாகாது. உணர்ச்சி காரணமாகவும், முக்கியமாகப் புலனுணர்ச்சி காரணமாகவும், விரும்புதற்குரிய பொருள்களால் திருப்தியடையும் இழிவான பாமர வழி ஒரு பக்கத்தில் இருக்கின்றது—அது வழக்கமாக இருந்துவரினும், தகுதியற்றது; பயனற்றது; உலகப்பற்றுள்ளவர்களுக்கே பொருத்தமானது. மற்றொரு வழி (உடலைத் துன்புறுத்திக்கொள்ளும்) கடுமையான நோன்புகளை மேற்கொள்ளும் வழி—இதுவும்வழக்கமாயிருந்துவருகிறது ; இதுவும் வேதனை தருவது; பயனற்றது.

'ஓ பிக்குக்களே ! ததாகதரால் கைவிடப்பட்ட அமிதமான இரண்டு வழிகளையும் நீக்கி, கண்களைத் திறந்து

(உண்மையை) உணரச் செய்து, மனச் சாந்தியையும், பேரறிவையும், பூரணமான மெய்ஞ்ஞானத்தையும், நிர்வாண முக்தியையும் அடைவதற்கு அழைத்துச் செல்லும் அந்த மத்திய வழி எது? அதுவே உயர்ந்த அஷ்டாங்க மார்க்கமாகும். அதாவது:

நற்காட்சி—(ஸம்மாதிட்டி)
நல்லூற்றம்—(ஸம்மாஸங்கல்ப)
நல்வாய்மை—(ஸம்மா வாசா)
நற்செய்கை—(ஸம்மா கம்மந்த)
நல்வாழ்க்கை—(ஸம்மா ஜீவ)
நல்லூக்கம்—(ஸம்மா வாயாம)
நற்கடைப்பிடி—(ஸம்மா ஸதி)
நல்லமைதி—(ஸம்மா ஸம்மதி)

ஓ பிக்குக்களே! ததாகதரால் கைவிடப்பட்ட அமிதமான இரண்டு வழிகளையும் நீக்கிக் கண்களைத் திறந்து, (உண்மையை) உணரச் செய்து, மனச்சாந்தியையும், பேரறிவையும், பூரணமான மெய்ஞ்ஞானத்தையும், நிர்வாண முக்தியையும் அடைவதற்கு அழைத்துச் செல்லும் அந்த மத்திய வழி இதுவேயாகும்!'

* * *

'ஓ பிக்குக்களே! துக்கத்தைப்பற்றிய உயரிய வாய்மை இது:

'பிறப்பிலே வேதனை இருக்கின்றது: தளர்ச்சி வேதனை, பிணி வேதனை, மரண வேதனை, இன்பகரமாயில்லாதவைகளின் சேர்க்கை வேதனை, இன்பகரமானவைகளிலிருந்து பிரிதல் வேதனை; நிறைவேறாத ஆசையும் வேதனையானது. சுருங்கக் கூறினால், பற்றுக் காரணமாக எழும் ஐந்து உபதான ஸ்கந்தங்களுமே* வேதனையாயுள்ளவை.

*அறிவுள்ள பிராணிகள் யாவும் ஐந்து ஸ்கந்தங்களின் சேர்க்கையால் உண்டானவை. அவை உருவு (ரூபம்), நுகர்ச்சி (வேதனை), குறி (ஸம்ஜ்ஞை), பாவனை (ஸம்ஸ்காரம்), உள்ள அறிவு (விஞ்ஞானம்). இங்கு ஸ்கந்தங்கள் என்றது ஐந்து ஸ்கந்தங்களின் சேர்க்கையால் ஏற்படும் நிலைமைகளையும் அவைகளின் காரணங்களையும்.

'ஓ பிக்குக்களே! துக்கத்தைப் பற்றிய உயரிய வாய்மை இது.

'ஓ பிக்குக்களே! துக்க உற்பத்திபற்றிய உயரிய வாய்மை இது :

'உண்மையில் இதுதான் வேட்கை—புதுப் பிறவிக்குக் காரணமானதும், புலன்கள் இன்பத்தோடு அங்கும் இங்குமாக அலைந்து இன்பத் தேட்டத்தை நிறைவேற்றிக்கொள்ளத் தூண்டும் வேட்கை. அதாவது, (காமம் முதலிய) உணர்ச்சிகளைத் திருப்தி செய்யவோ, (எதிர்கால) வாழ்வில் ஆசைகொள்ளவோ, அல்லது (இந்த வாழ்வில்) வெற்றியடையவோ, கொள்ளும் பேராவல்.

'ஓ பிக்குக்களே! துக்க உற்பத்திபற்றிய உயரிய வாய்மை இது.

'ஓ பிக்குக்களே! துக்க நீக்கத்தைப்பற்றிய உயரிய வாய்மை இது :

'உண்மையில், எனது வேட்கை சம்பந்தமான காமிய உணர்ச்சி எதுவும் எஞ்சியிராமல் அழித்துவிடுதலே இது (துக்க நீக்கம்). இந்த வேட்கையை ஒதுக்கி உதறித் தள்ளிவிட்டு, இதிலிருந்து அறவே விடுதலையாகி, (உள்ளத்தில்) இது தங்குவதற்கு இடமேயில்லாமற் செய்தலாகும்.

'ஓ பிக்குக்களே! இதுவே துக்கநீக்கம் பற்றிய உயரிய வாய்மையாகும்.

ஓ பிக்குக்களே! துக்க நீக்கத்திற்கு உரிய மார்க்கம் பற்றிய உயரிய வாய்மை இது. உண்மையில், இது அஷ்டாங்க மார்க்கமே : அதாவது :

| | |
|---|---|
| நற்காட்சி | நல்வாழ்க்கை |
| நல்லூற்றம் | நல்லூக்கம் |
| நல்வாய்மை | நற்கடைப்பிடி |
| நற்செய்கை | நல்லமைதி |

ஆகிய எட்டுப் படிகள் உள்ள வழி.

'ஓ பிக்குக்களே! துக்கநீக்க மார்க்கம் பற்றிய உயரிய வாய்மை இது.

'ஓ பிக்குக்களே! துக்கம்பற்றிய உயரிய வாய்மை இது என்பது பரம்பரையாக (நமக்கு) வந்துள்ள தத்துவங்களில் (ஒன்ருக) அமைந்திருக்கவில்லை; ஆனல் (அதைக் கண்டு கொள்ளக்கூடிய ஞானமாகிய) கண் என்னுள்ளே தோன்றியது; (அதன் இயல்புபற்றிய) அறிவு எழுந்தது; (அதன் காரணம்பற்றிய) தெளிவு ஏற்பட்டது; (சாந்தியடையும் மார்க்கத்திற்கு வழி காட்டும்) பேரறிவு உண்டாயிற்று; (அதைச் சூழ்ந்துள்ள இருளை அகற்றும்) ஒளியும் உதயமாயிற்று.

'ஓ பிக்குக்களே! துக்கம்பற்றிய உயரிய வாய்மை இது என்பதை—இது பரம்பரையாக (நமக்கு) வந்துள்ள தத்துவங்களில் (ஒன்ருக) அமைந்திருக்கவில்லை எனினும்—நான் தெளிவாக உணர்ந்துகொள்வதற்காக, (அதைக் கண்டு கொள்ளக்கூடிய—ஞானமாகிய) கண் என்னுள்ளே தோன்றியது, (அதன் இயல்பு பற்றிய) அறிவு எழுந்தது, (அதன் காரணம் பற்றிய) தெளிவு ஏற்பட்டது (சாந்தியடையும் மார்க்கத்திற்கு வழி காட்டும்) பேரறிவு உண்டாயிற்று, (அதைச் சூழ்ந்துள்ள இருளை அகற்றும்) ஒளியும் உதயமாயிற்று.

'ஓ பிக்குக்களே! துக்கம் பற்றிய உயரிய வாய்மை இது என்பதை—இது பரம்பரையாக (நமக்கு) வந்துள்ள தத்துவங்களில் (ஒன்ருக) அமைந்திருக்கவில்லை எனினும்—நான் தெளிவாக உணர்ந்துகொண்டேன்; (அதைக் கண்டுகொள்ளக்கூடிய ஞானமாகிய) கண் என்னுள்ளே தோன்றியது; (அதன் இயல்புபற்றிய) அறிவு எழுந்தது; (அதன் காரணம் பற்றிய) தெளிவு ஏற்பட்டது; (சாந்தி யடையும் மார்க்கத்திற்கு வழிகாட்டும்) பேரறிவு உண்டாயிற்று; (அதைச் சூழ்ந்துள்ள இருளை அகற்றும்) ஒளியும் உதயமாயிற்று.

'துக்க உற்பத்தியைப் பற்றிய உயரிய வாய்மை இது என்பதை—இது பரம்பரையாக (நமக்கு) வந்துள்ள தத்துவங்களில் (ஒன்ருக) அமைந்திருக்கவில்லை எனினும்—நான் தெளிவாக உணர்ந்து கொண்டேன்......

'ஓ பிக்குக்களே! துக்கஉற்பத்தியை நீக்கித் தள்ளுதற்குரிய வாய்மையை....நான் தெளிவாக உணந்துகொண்டேன்.......

ஓ பிக்குக்களே! துக்க உற்பத்தியை நான் முற்றிலும் நீக்கித் தள்ள முடிந்தது.......

'ஓ பிக்குக்களே! துக்க நீக்கம் பற்றிய உயரிய வாய்மை இது என்பதை நான் உணர்ந்துகொண்டேன்........

'ஓ பிக்குக்களே! துக்க நீக்கத்தை நான் பூரணமாக உணர்ந்துகொள்ள முடிந்தது.......

'ஓ பிக்குக்களே! துக்க நீக்கத்தை நான் பூரணமாக நிறைவேற்றிக்கொள்ள முடிந்தது.......

'ஓ பிக்குக்களே! துக்க நீக்க மார்க்கம் பற்றிய உயரிய வாய்மை இது என்பதை நான் உணர்ந்துகொள்ள முடிந்தது.......

'ஓ பிக்குக்களே! துக்க நீக்க மார்க்கத்தை நான் அடைந்து விட்டேன்.......

'ஓ பிக்குக்களே! இந்த மூன்று வரிசைகளாக, இந்தப் பன்னிரண்டு வகைகளில் உயரிய வாய்மைகள் நான்கினில் ஒவ்வொன்றைப் பற்றியும் எனது அறிவும் உள்ளுணர்வும் முற்றும் தெளிவு கொள்ளும்வரை, (எனக்குச் சந்தேகந்தான்;)—வான மண்டலங்களிலும், அல்லது பூமியிலும், சிரமணர்கள், பிரமாணர்களுடைய குலம் முழுவதிலும் தன்னிகரற்று விளங்கக்கூடிய அந்த மெய்ஞ்ஞானம் பற்றிய உள்ளுணர்வை நான் பூரணமாகப் பெற்றேனோ என்பது எனக்குச் சந்தேகந்தான்.

'ஓ பிக்குக்களே! இந்த மூன்று வரிசைகளாக நான்கினில் ஒவ்வொன்றைப் பற்றியும், எனது அறிவும், உள்ளுணர்வும் தெளிவு கொண்டவுடனே, வான மண்டலங்களிலும் அல்லது பூமியிலும், சிரமணர்கள், பிராமணர்களுடைய குலம் முழுவதிலும், அல்லது தெய்வங்கள், மனிதர்களிடத்திலும் தன்னிகரற்று விளங்கக்கூடிய அந்த மெய்ஞ்ஞானம் பற்றிய உள்ளுணர்வை நான் பூரணமாகப் பெற்றுவிட்டேன் என்பது எனக்கு நிச்சயமாயிற்று.

'ஆகவே இப்பொழுது இந்த அறிவு — இந்த உள்ளுணர்வு—என்னுள்ளே எழுந்துள்ளது. என் இதயத்தின்

விடுதலை அசைக்க முடியாதது. இதுவே எனது இறுதிப் பிறவி. இனி எனக்குப் பிறவியில்லை!'*

'பிறப்பின் துன்பமும் பிறவா இன்பமும்
அறந்தகை முதல்வன் அருளிய வாய்மை'†

மேலே கூறப்பட்டுள்ளது. இதுவே 'தரும சக்கரப் பிரவர்த்தனம்' என்று புகழப் பெறும் புத்த பகவர் அற ஆழி உருட்டிய வைபவம்! சத்திய சாம்ராஜ்யத்தின் தர்ம சக்கரம்—அற ஆழி—இனி நில்லாது சுழன்றுகொண்டேயிருக்கும்!

## தரும சக்கர மகிமை

பரிசுத்தமான ஒழுக்க விதிகளே அந்தச் சக்கரத்தின் ஆயக்கால்கள்; அவைகள் ஒரே நீளமுள்ளவையா யிருத்தலே நீதி; ஞானமே சக்கரத்தைச் சுற்றியுள்ள இருப்புப்

---

*புத்தர் பெருமான் மெய்ஞ்ஞானம் பெற்றபின் நிகழ்த்திய இந்த முதற் சொற்பொழிவு 'அங்குத்தர நிகாயம்—தர்ம சக்ரப் பிரவர்த்தன சூத்திர'த்திலுள்ளது. இதன் எளிமையும், தெளிவும், திட்பநுட்பமும் கருத்து ஊன்றிக் கவனிக்கத் தக்கவை. ஒரு முறை பார்த்ததும் சிலர்க்கு, 'இது இவ்வளவு தானா!' என்றுகூடத் தோன்றலாம் எதிரேயிருந்து உபதேசம் கேட்டுக்கொண்டிருந்த ஐந்து சீடர்களும் சகல சாத்திரங்களையும் கற்றுப் பல்லாண்டுகளாகத் துறவறத்தில் நிலைத்திருந்தவர்கள், குறிப்பால் விஷயங்களைத் தெளிவுறத் தெரிந்து கொள்ளக் கூடியவர்கள்; புத்தர் மெய்ஞ்ஞானம் பெறும்வரை ஆறு ஆண்டுகள் அவர் அருகில் அவருடனேயே இருந்தவர்கள். ஆதலால் இந்த உபதேசத்தில் அதிக விளக்கங்களோ, உபமானங்களோ, விவாதத்திற்குரிய விஷயங்களோ கூறப்படவில்லை. இந்த உபதேசமே புத்தர் போதித்த பௌத்த தருமத்தின் வித்து எனலாம். பின்னால் புத்தர் தருமப் பிரசாரம் செய்துவந்த 45 ஆண்டுகளிலும் இதையே கூறிவந்ததோடு கேட்போரின் தன்மைக்கு ஏற்றபடி விளக்கங்கள், கதைகள், உபதேசக் கதைகள், கேள்விகள் முதலியவைகளைச் சேர்த்தும் கூறிவந்தார்.

†'மணிமேகலை'

பட்டை; அடக்கமும் கருத்துடைமையும் சேர்ந்து அமைந்த குடத்தில் அசைவில்லாத சத்தியமாகிய அச்சு பொருத்தப் பட்டிருக்கிறது.

தரும சக்கரம் பளபளப்பாக ஒளிமயமாயுள்ளது. அதற்கு நடுவுமில்லை, முடிவுமில்லை. போலித் தத்துவங்கள் அதன் அடியில் நசுக்குண்டு நசித்துப்போய் விடுவன.

> 'ஆதி முதல்வன், அறவாழி ஆள்வோன்
> மாதுயர் எவ்வம் மக்களை நீக்கி,
> விலங்கும் தம்முள் வெரூஉம்பகை நீக்கி,
> உடங்குயிர் வாழ்க என்(று) உள்ளம் கசிந்துக்
> தொன்று காலந்து நின்(று)அறம் உரைத்த' *

[மாதுயர் எவ்வம்—மிகுந்த துன்பம். விலங்கு—மிருகங்கள். வெரூஉம்—பயப்படும். உடங்குயிர் வாழ்க—உயிர் உடங்கு வாழ்க—உயிர்கள் யாவும் தம்முள் வேற்றுமையில்லாமல் ஒத்து வாழட்டும். கசிந்துக—இரங்கிக் கரைய.]

இந்தப் பெருமையைப் பின்னால் எழுந்த சரிதைகளும் காவியங்களும் விரிவாக விளக்கிக் கூறுகின்றன.

பிறவிக் கடலில் விழுந்து தவிக்கும் மக்களுக்கு அப் பெருங்கடலைத் தாண்டிச் செல்வதற்கு ஏற்ற 'அறவி நாவாய்'—தருமமாகிய ஓடம்—கிடைத்து விட்டது!

## தருமத் தேர்

பிறவிக் காட்டினுள் சிக்கி அலையும் மக்களுக்குத் தரு மத் தேர் கிடைத்து விட்டது! காசி நகரிலே, இஸிபதனச் சோலையிலிருந்து அந்த இரதம் புறப்பட்டுவிட்டது! தரும இரதம்! ஞானமடைந்து நம்பிக்கை கொண்டவர் உள் ளத்தை ஒருநிலைப்படுத்தி ஏறிச் செல்லும் இரதம் அது. அது நீதி நெறி முறைகள் என்னும் பலகைகளால் செய் யப் பெற்றது. அதன் ஏர்க்காலாக விளங்குவது அந்தக்

* 'மணிமேகலை'.

கரணம் அல்லது மனச்சான்று; உள்ளமே அதன் நுகத் தடி; ஆனந்தமே அதன் அச்சு; சக்தியே அதன் சக்க ரங்கள்; உள்ள நிறைவும் அமைதியுமே இழுத்துச் செல் லும் குதிரைகள்; கருத்துடைமையே கவனமுள்ள சாரதி; அவாவின்மையே இரதத்தின் அலங்காரங்கள்; பற்றற்ற உள்ளத்தில் விளையும் அன்பும் அஹிம்சையுமே பாதுகாப்புக் கான ஆயுதங்கள். பொறுமையே தருமத்தின் கவசம். சாந்தி நிலையத்தை நாடி இரதம் உருண்டு ஓடுகின்றது. அந்த இரதம் ஒருவர் தாமே தமக்காகச் செய்து கொள்வது— அதற்கு ஈடும் இல்லை; எடுப்பும் இல்லை. அதிலே அமர்ந்து கொண்டு முனிவர்கள் உலகை விட்டுச் செல்லுகிறார்கள்; உண்மையிலேயே அவர்கள் குறித்த வெற்றியை அடைகி றார்கள்.*

தரும இரதத்திலே செல்வோர்க்கு வழிகாட்டும் சோதி நற்காட்சி என்ற நல்லறிவு; நல்லூற்ற மென்ற நல்ல சிந்தனையே வழிகாட்டி; வழியிலே தங்கும் இடம் நல் வாய்மை; நற்செய்கை அவர் நிமிர்ந்து நிற்க வலிமையளிக் கும்; நல்வாழ்க்கையில் நியாயமான தொழிலைச் செய்து தேடும் பொருள்களே வழிக்கு உணவாம்; நல்லூக்கமே அவர் நடை; நற்கடைப்பிடியாகிய நினைவோடு கூடிய சிந்தனைகளே அவருடைய மூச்சு; நல்லமைதி தியானத்தால் வரும் சாந்தி—அவர் செல்லும் இடமெல்லாம் தொடர்ந்து செல்லும்.†

## மற்ற உபதேசங்கள்

அற ஆழியை உருட்டிப் புத்தர்பெருமான் செய்த முதல் உபதேசம் ஆணித்தரமான ஒரு சொற்பொழிவு. உலக சரித்திரத்தில் முக்தி மார்க்கத்திற்கு இதுபோன்ற எளிமை

* 'சம்யுக்த நிகாயம்'

† அசுவகோஷரின் 'புத்த சரிதை'

யுள்ள ஒரு திட்டம் கூறப்பட்டதில்லை என்றும், ஆன்மா என்ற ஒன்றைக் குறிப்பிடாமலும், அதை மறுத்தும், மனித இயல்புக்கு மேற்பட்ட எதிலும் நம்பிக்கை வைக்காமலும், இறை நம்பிக்கையையும், எதிர்கால சுவர்க்கத்தையும் மறுத்தும், அத்திட்டம் ஆரம்பம் செய்யப்பெற்றது என்றும் பல பௌத்த நூல்களின் புகழ் பெற்ற ஆசிரியரான அறிஞர் **ரைஸ் டேவிட்ஸ்** ஆச்சரியப்பட்டிருக்கிறார்.* புத்தர் பெருமானின் போதனையை ஒருவர் ஏற்றுக் கொள்ளலோ, எதிர்த்தலோ வேறு விஷயம். ஆனால் அவருடைய உபதேசம் உலகம் தோன்றிய நாள் முதல் அன்று வரை சமய வாழ்க்கையில் மனிதன் சென்று கொண்டிருந்த பாதையை நேர்மாறாகத் திருப்புவதாக அமைந்திருந்தது வியக்கத் தகுந்த விஷயமேயாகும். எண்ணிலடங்காத சாத்திரங்கள்; எண்ணிலடங்காத தத்துவங்கள் நிறைந்திருந்த நாட்டிலே, அவைகளை எல்லாம் ஐயம் திரிபு அறக் கற்றுணர்ந்து, தாமாகச் சிந்தனை செய்த ஒரு **மனிதர்** கூறிய அறமே அது! அவரை எதிர்த்து நின்ற பெருங் கூட்டத்தை அவர் அறிவார். ஆயினும், சிறிதும் துளங்காமல் சிறிதும் அஞ்சாமல், அவர் தாம் கண்ட மெய்ப்பொருளை உலகுக்கு அறிவித்துவிட்டார்! உள்ளத்தைப் புனிதமாக்கிக்கொண்டு, உண்மையை உணர்ந்து, இந்தப் பிறவியிலேயே, இவ் உலகிலேயே மனிதன் தானாக முக்தி பெறமுடியும் என்று அவர் போதித்தார். 'இனியேது எமக்கு உன்னருள் வருமோ?' என்று மனிதன் இரங்கி ஏங்கவேண்டியதில்லை! இடைவிடாத தற்பயிற்சியால் இதயம் மாற வேண்டும்; தன்னடக்கம் வேண்டும்; ஆசைக்காட்டை அழித்துக் கணமேனும் நேரம் வீணாகாதபடி கருத்தோடு முயல வேண்டும்—இவைகளால் மாரனை வெல்லலாம்; கூற்றையும் ஆடல்

---

*'தரும சக்கரப் பிரவர்த்தன சூத்திர'த்திற்கு அவர் எழுதியுள்ள முகவுரை பார்க்கவும். (Sacred Books of the East, Vol. XI.)

கொண்டு அழியா வாழ்வு பெறலாம் என்பதே அவர் சித்தாந்தம்.

'பிறவி ஏற்படக் காரணமாகிய விதிகளைப் பற்றி விவாதம் செய்யக்கூடிய அறிவாளர் அனேகர் இங்கே இருக்கின்றனர்; ஆனால் பிறப்பை நிறுத்தும் வழியை அறிந்தவர் ஒருவர்கூட இல்லை!' என்று புத்தர் சீடர்களுக்குக் கூறினார்.

'உலக வாழ்வாகிய பெரிய விஷ விருட்சத்திற்கு வேராக அமைந்துள்ளது பேதைமை......' என்று அவர் எடுத்துக் காட்டினார்.

தம்முடைய தருமத்தைப் பரிசுத்தமான உள்ளத்தோடு செவிமடுப்பவனே மக்களுக்குத் தலைசிறந்த வழி காட்டி என்றும், அவனுக்கு நிகரில்லை என்றும், அவன் அழியாத சோதிமயமான ஆபரணம் என்றும் அவர் கூறினார். சகல ஜீவர்களிடத்தும் அருள் சுரந்து புத்தர்கள் உபதேசித்த ஒப்பற்ற தருமம் எந்த வீட்டில் நிலைத்திருக்கிறதோ, அந்த வீட்டிலே வசிப்பவன்கூட அதனால் ததாகதனாகி விடுவான் என்றும் அவர் அருளினார்.

அண்ணலின் அறவுரையைக் கேட்ட சீடர் ஐவரில் கௌண்டின்யர் என்ற முதியோர், தருமத்தை அறிந்து, அதிலே ஆழ்ந்து நிலைத்து நின்று ஐயம், திரிபு, மயக்கம் நீங்கித் தவத்திறம் பூண்டு, பவத்திறம் அறுத்து, உய்வு பெறவேண்டும் என்று உறுதி யடைந்து, புத்தர் முன்பு சென்று அடிபணிந்து நின்றார். 'இறைவ! என்னைப் பகவர் ஆட்கொண்டு தருமத்தில் சேர்த்துக்கொண்டு அருள்புரிய இயலுமோ?' என்று வேண்டினார்.

'வருக, என் சகோதர! தருமம் நன்கு உபதேசிக்கப் பெற்றிருக்கிறது. துக்கத்தை அறவே ஒழிப்பதற்காகப் புனித வாழ்வு வாழ்வாயாக!' என்று கூறிப் பகவரும் அவரை ஏற்றுக்கொண்டார். பௌத்த தருமத்தில் சரணடைந்து முதல் பிக்குவாகச் சேர்ந்தவர் கௌண்டின்யரே.

முதன் முதலாக ஒரே உபதேசத்திலேயே தருமத்தை உணர்ந்து கொண்டதால் அவருக்கு அஜ்ஞாத* கௌண்டின்யர் என்று புத்தரே பெயர் கொடுத்தார். அப் பெயரே பின்னும் நிலைத்துவிட்டது.

மற்ற நான்கு சீடர்களும் பின்னால் புத்தரையும் தருமத்தையும் சரணடைந்து பிக்குக்களாயினர். சீடர்கள் காசிமா நகரில் பிச்சை யெடுத்து வரும் உணவை அருந்திக் கொண்டு புத்தரும் சிலநாள் அங்கேயே தங்கி அற உரைகள் பகர்ந்து கொண்டிருந்தார்.

## ஆன்மாவின் இலக்கணம்

ஆன்மாவீன் இலக்கணம் பற்றிப் போதிநாதர் ஐந்து சீடர்களுக்கும் செய்த உபதேசம் வருமாறு :

'பிக்குக்களே! உடல் ஆன்மாவற்றது. பிக்குக்களே, உடலே ஆன்மாவாயிருந்தால், இந்த உடல் நோய்க்கு உட்படாது. உடல் சம்பந்தமாக, "என் உடல் இப்படியிருக்கட்டும், என் உடல் அப்படியிருக்கட்டும்," என்று சொல்லக்கூடியதாக இருக்கும். பிக்குக்களே, உடல் ஆன்மாவற்றதாக இருப்பதாலேயே உடல் நோய்க்கு உள்ளாகின்றது, "என் உடல் இப்படியிருக்கட்டும். என் உடல் அப்படியிருக்கட்டும்" என்று சொல்ல முடியவில்லை.

'உணர்வும் ஆன்மாவற்றது. பிரக்ஞையே ஆன்மாவாக இருந்தால், அது பிணிக்கு உட்படக்கூடாது. பிரக்ஞை சம்பந்தமாக, "என் பிரக்ஞை இப்படியிருக்கட்டும், என் பிரக்ஞை அப்படியிருக்கட்டும்" என்று சொல்லக்கூடியதாக இருக்கும். பிரக்ஞை ஆன்மாவற்றிருப்பதால், பிரக்ஞை பிணிக்கு உட்பட்டிருக்கின்றது, அது சம்பந்தமாக, "என் உணர்வு இப்படியிருக்கட்டும், என் உணர்வு அப்படியிருக்கட்டும்" என்று சொல்ல முடியவில்லை.

'பிக்குக்களே! உடல் நித்தியமானதா, அநித்தியமானதா, நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?'

*அஜ்ஞாத - அறிந்தவர்.

'வேதனையுள்ளது, பகவன்!'

'ஆனால் அநித்தியமாயும், வேதனையுள்ளதாயும், மாறும் இயல்புள்ளதாயும் உள்ள ஒன்றை, "இது எனது, இது நான், இது எனது ஆன்மா" என்று கருதுதல் தகுமா?'

'தகாது பகவன்!'

[உடலைப் போலவே உணர்வு, புலனறிவு, ஸ்கந்தங்கள், பிரக்ஞை முதலியவையும் அநித்தியமாயும் வேதனையுள்ளவையாயும் மாறுவனவாயும் உள்ளன என்பதை விளக்கி விட்டுப் புத்தர் மேலும் கூறினார்:]

'ஆதலால் பிக்குக்களே, இறந்தகாலம், எதிர்காலம், நிகழ் காலம் ஆகிய எந்தக் காலத்திலும் உள்ள எந்த உடலையும் உணர்ந்து கொண்டவன் — அதன் தோற்றத்தைக் கொண்டோ, உள் அமைப்பைக் கொண்டோ, அதன் தூல உருவைக் கொண்டோ, சூக்கும உருவைக் கொண்டோ, அது தாழ்ந்திருந்தாலும், உயர்ந்திருந்தாலும், அது அருகிலிருந்தாலும், தொலைவிலிருந்தாலும், அதை முறையாகவும் சரியாகவும் உணர்ந்து கொண்டவன், "இந்த உடலெல்லாம் என்னுடையதன்று, இது நான் அன்று, ஆன்மா என்னுடையது அன்று!" என்று கருதவேண்டும்.'

[இதைப் போலவே உணர்வு, புலனறிவு, ஸ்கந்தங்கள், பிரக்ஞை முதலியவையும் "நான் அன்று" என்று கருத வேண்டும்.]

'பிக்குக்களே! இவ்வாறு கண்டுகொண்டு கற்றறிந்த கண்யமுள்ள சீடன் உடலிடத்தும், உணர்விடத்தும், புலனறிவிடத்தும், ஸ்கந்தங்களிடத்தும், பிரக்ஞையிடத்தும் அருவருப்படைகிறான். அருவருப்படைந்து அவன் காமம் முதலிய உணர்ச்சிகளைக் கடக்கிறான். உணர்ச்சிகளைக் கடந்து செல்வதால் அவன் விடுதலை யடைகிறான்; விடுதலை யடைந்தவனிடம் அவ்விடுதலை பற்றிய அறிவு தோன்றுகிறது. அவன் தனக்கு மறுபிறப்பு இல்லை என்பதையும், தான் தரும முறைப்படி வாழ்ந்தாயிற்று என்பதையும், செய்ய வேண்டியதைச் செய்தாயிற்று என்பதையும், (தனக்கு) இந்த உல

குக்கு அப்பால் (இனி) எதுவும் இல்லை என்பதையும் தெரிந்து கொள்ளுகிறான்.'*

இந்தச் சொற்பொழிவைக் கேட்டபின் சீடர்கள் ஐவருடைய உள்ளங்களும் தெளிவடைந்து, ஆஸவங்கள் அழிந்து, வாழ்க்கையில் பற்றற்று நின்றன. அவர்களும் பூரண ஞானம் பெற்று அருகத்துக்களாயினர்.

---

*'அனந்த லக்கண சூத்திரம்' அல்லது 'பஞ்ச சூத்திரம்'.

ஆன்மா இல்லை என்று புத்தர் கூறுவதில், சாதாரணமாக உலகியல் முறையில் 'உயிர்' என்றும் 'ஆன்மா' என்றும் கூறுவதை அவர் மறுக்கவில்லை; ஆனால் உடலுக்குள்ளே, உடலோடு ஒட்டாமல், கண்ணினால் காண்பவனும், காதினால் கேட்பவனும், மற்றைப் புலன்களால் உணர்பவனும், 'நான்' என்ற உண்மைப் பொருளாயும், அழியாத் தன்மை யுள்ளவனும் உள்ள தனி ஆன்மா இல்லை—அதாவது உடலின் தோற்றத்தின்போது அதனுள் புகுந்துகொண்டு, அது மடியும்போது வெளியேறும் ஆன்மா ஒன்று இல்லை என்றே அவர் மறுத்துள்ளார்.

'Buddhism denies the reality of the selfhood of the soul. It denies the existence of a soul—substratum, of a metaphysical soul—entity behind the soul; but not of the feeling, thinking, aspiring soul, such as we know from experience ourselves to be.'

—DR. PAUL CARUS in '*The Gospel of Buddha*'.

'The soul (*atman*) which is denied is not the self of actual experience, but a theory of the permanent nature of the soul, a reality held to be behind all the physical phenomena. The argument is that whatever part of the individual is taken, bodily or mental, we cannot point to any one element in it as permanent, and when the individual is free from any passion (*rāga*) or cracking (*taṇhā*), which impel these elements to rebirth, he is emancipated.'

—EDWARD J. THOMAS, M.A., D. Litt.
in '*The Life of Buddha as legend and History*'

## சங்கம்

மான்சோலையிலே இருந்துகொண்டு புத்தர் அங்கு வந்தோர் அனைவருக்கும் தமது சித்தாந்தத்தை உபதேசம் செய்து வந்தார். நாள்தோறும் ஆண்களும், பெண்களும் அதிகமாக வந்து உபதேசம் கேட்டுச் சென்றனர்.

> 'பிறப்பின் துன்பமும் பிறவா இன்பமும்
> அறந்தகை முதல்வன் அருளிய வாய்மை'*

மக்கள் உள்ளத்தைக் கவர்ந்து வந்தது.

கோபம், குடி, மூடப் பிடிவாதம், துவேஷம், ஏமாற்று, பொறாமை, தற்புகழ்ச்சி, பிறரைப் பழித்தல், இறுமாப்பு, தீய சிந்தனைகள் ஆகியவையெல்லாம் மனிதனின் பரிசுத்தத்தைக் கெடுக்கின்றன என்று காட்டி, அவர் நல்லொழுக்கத்தை விளக்கிக் கூறினார். தீவினைகள் இவை, நல்வினைகள் இவை என்று பிரித்துக் காட்டி, அவற்றால் உள்ளத்திற்கு ஏற்படும் நன்மை தீமைகளை எடுத்துரைத்தார். உலக வாழ்வின் போகங்களில் ஆழ்ந்துகொண்டு ஒருவன் துன்பக்கடலைத் தாண்ட முடியாது என்பதை, 'ஒருவன் தன் விளக்கில் தண்ணீரை ஊற்றி நிரப்பினால், இருளை நீக்கமுடியாது. உளுத்துப்போன கட்டையைக் கொண்டு தீக்கடைந்து நெருப்பை உண்டாக்க முடியாது!' என்ற உபமானத்தின் மூலம் அவர் விளக்கினார்.

உலக வாழ்விலே உடலின் தேவைக்குத் தக்கபடி உண்ணவும் பருகவும் வேண்டியது அவசியம் என்றும், அவை பாவமல்ல என்றும், உடலைப் பாதுகாப்பது கடமை என்றும், உடல் நலம் இல்லாமல் ஞானச்சுடரை ஏற்ற முடியாது என்றும் அவர் எடுத்துக் காட்டினார்.

ஆனால் புலன்களின் போக்குப்படி இன்பங்களைத்

*'மணி மேகலை'

துய்த்தல் உடலுக்கும் உள்ளத்திற்கும் சோர்வு உண்டாக்கும் என்றும், அப்படி வாழ்பவன் தன் உணர்ச்சிகளின் அடிமை என்றும், இன்ப வேட்டையாடிக் கொண்டிருத்தல் மனிதனை இழிநிலைக்குத் தள்ளிப் பாமரனாக்கிவிடும் என்றும் எளிய முறையிலேயே அவர் தமது தருமத்தை உபதேசித்து வந்தார்.

அந்நிலையில், தமது தருமம் நிலைத்து நிற்பதற்கும், எங்கும் பரவுதற்கும், தம் சீடர்கள் தனித்தனியாகப் பிரிந்து முயன்று கொண்டிருப்பதைவிட ஒன்றுசேர்ந்து சங்கமாக ஐக்கியப்படவேண்டும் என்றும் அவர் கருதினர். அதன்படி முதலில் சேர்ந்த ஐந்து சீடர்களையும் சங்கமாகக் கூடச் செய்தார். அப்போது அவர் கூறியவதாவது:

'சத்திய மார்க்கத்திலே செல்லத் தீர்மானிக்கும் ஒரு மனிதன் தனித்து நின்றால், அவன் வலிமை குன்றித் தன் பழைய பழக்கங்களுக்கே திரும்பிவிடக்கூடும். ஆதலால் நீங்கள் ஒன்று சேர்ந்து இருங்கள். ஒருவருக்கொருவர் உதவி புரிந்து கொள்ளுங்கள், ஒருவர் முயற்சிகளை மற்றவர்கள் பலப்படுத்துங்கள்.

'சகோதரர்களைப் போலிருங்கள்; அன்பில் ஒன்றாகவும், துறவறத்தில் ஒன்றாகவும், சத்தியத்தை நாடும் ஆர்வத்தில் ஒன்றாகவும் இருங்கள்.

'உலகின் திசைகளிளெல்லாம் சத்தியத்தையும் தருமத்தையும் பரப்புங்கள்; முடிவில் சகல ஜீவன்களும் தரும இராஜ்யத்தின் குடிகளாக இருக்கும்படி செய்யுங்கள்.

'இதுவே புனிதமான சங்கம்; இதுவே புத்தரின் சங்கம்; புத்தரைச் சரணடைந்துள்ளவர் அனைவருக்கும் ஒருமைப்பாட்டை அமைக்கும் சங்கம் இதுவே!'

அஜ்ஞாத கௌண்டின்யர் முதலிய ஐந்து சீடர்களும் பௌத்த மும்மணிகளாகிய சரணங்களைக் கூறிக் கொண்டு சங்கத்தில் சேர்ந்தனர்:

நமோ தஸ்ஸ பகவதோ அரஹதோ
ஸம்மா ஸம்புத்தஸ்ஸ

'புத்தம் சரணம் கச்சாமி,
தம்மம் சரணம் கச்சாமி,
சங்கம் சரணம் கச்சாமி!

'துதியம்பி புத்தம் சரணம் கச்சாமி,
துதியம்பி தம்மம் சரணம் கச்சாமி,
துதியம்பி சங்கம் சரணம் கச்சாமி!

'ததியம்பி புத்தம் சரணம் கச்சாமி,
ததியம்பி தம்மம் சரணம் கச்சாமி,
ததியம்பி சங்கம் சரணம் கச்சாமி!'

மான்சோலையில் தங்கியிருக்கையில் புத்தர் காசி நகரத்தைச் சேர்ந்த சில வேதியர்களுக்கும் குருக்களுக்கும் உபதேசம் செய்து தமது சங்கத்தில் சேர்த்துக்கொண்டார். **காசிகை** என்னும் தாசி ஒருத்தி அவரைச் சரணடைந்து தன் குமாரர்களைச் சங்கத்தில் சேர்த்துவிட்டு முக்தியடைந்தாள். **அஜயன்**, அவன் குமரன் **நாலகன்**, **சஞ்சயன்** முதலிய விந்தியப் பிரதேசத்து வேதியர்களும் சில வணிகர்களும் சங்கத்தில் சேர்ந்தனர்.

## யசன்

அந்தக் காலத்தில் காசியில் அளப்பருஞ் செல்வமுள்ள ஒரு வணிகரின் மைந்தனை **யசன்** வசித்திருந்தான். ஒரு நாள் இரவு, அவன் தன் அரண்மனையிலிருந்த ஆண்களும் பெண்களும் அலங்கோலமான நிலையில் துயில் கொண்டிருந்த காட்சியைக் கண்டு, சித்தார்த்தரைப் போலவே வெறுப்படைந்து, இரகசியமாக வெளியேறிவிட்டான். அவன் வெளியே வரும்போது உயர்ந்த உடைகளையும் நகைகளையும் அணிந்திருந்தான். சோகமயமான வாழ்க்கையில்

மக்கள் மோகங்கொண்டு மூழ்கியிருக்கும் பரிதாபத்தைப் பற்றி எண்ணியவண்ணம் அவன் நடந்து சென்றுகொண்டிருந்தான். வழியில் இஸிபதனத்தில் மான்சோலையருகே செல்லுகையில், பொழுது விடியும் நேரமாயிற்று.

'அந்தோ! அந்தோ! எத்தனை துன்பங்கள்! எத்தனை துக்கங்கள்!' என்று அவன் தனக்குள்ளேயே உரக்கக் கூவிக் கொண்டான்.

அங்கே இரவிலிருந்தே உலாவிக்கொண்டிருந்த ததாகதர் அதைக் கேட்டு, 'என்ன துக்கம்! இங்கே துக்கமுமில்லை, துயரமுமில்லை. உனக்கு நல்வரவு! இங்கே வந்தால் மன அமைதி பெறலாம். உனக்குத் தருமத்தை உபதேசிக்கிறேன், தருமமே துக்கத்தை நீக்கும்!' என்று அன்போடு அழைத்தார்.

யசன் ஞானம் பெறும் வேளை வந்துவிட்டது. அவன் உள்ளே சென்று, வள்ளலை வணங்கி, அருகே அமர்ந்து உபதேசம் கேட்டான். அவனுக்கு மெய்யறிவு தோன்றிற்று. அந்நிலையில் அவன் ஆடை ஆபரணங்களால் அலங்கரித்திருந்த தன் உடலை உற்று நோக்கி வெட்கமடைந்தான். முத்துக்களும், நவரத்தினங்களும் அவனைப் பரிகசித்துக்கொண்டிருந்தன.

அருள் நிறைந்த அண்ணல் அவனுடைய உள்ளக்கிடையை உணர்ந்து பேசினர்: 'அன்ப! ஒருவன் புறத்திலே நகைகள் அணிந்திருந்தாலும், அவன் மனம் புலன்களை வெற்றி கொண்டிருக்க முடியும். வெளித்தோற்றம் தரும வாழ்க்கை அன்று, அது உள்ளத்தைத் தீண்டாது. சிரமணன் சீவர ஆடையைப் புனைந்துகொண்டே, உலகப் பற்றுக்களில் ஆழ்ந்திருக்கவும் முடியும்.

'ஏகாந்தமான வனங்களிலே தங்கியிருந்தும் ஒருவன் வையகத்தின் ஆடம்பரங்களை விரும்பினால், அவன் உலகப் பற்றில் ஆழ்ந்தவனாவான்; உலகத்தாரைப்போல உடைகள் அணிந்த ஒருவன், தன் இதயத்தை வானமண்டலத்

திலே பறக்கவிட்டு, உன்னதமான சிந்தனைகளை மேற்கொள்ளவும் கூடும்.

'துறவியும் இல்வாழ்வோனும் "நான்" என்ற அகங்காரத்தை அகற்றிவிட்டால், இருவர்க்குள்ளும் பேதமேயில்லை.

'பகைவனை வென்று வீரத்தை நிலைநிறுத்திய போர்வீரன் வீரச்சின்னங்களை அணிவான்—அதே போலத் துறவி துக்கம் என்ற பகைவனை வீழ்த்தித் துவராடை என்னும் வீரச்சின்னத்தை அணிவான்!'

'மாண்பொடு தோன்றி மயக்கம் களைந்து
பிறர்க்(கு) அறம் அருளும் பெரியோன்....'

கூறிய அறிவுரைகள் யசனுடைய உள்ளத்தை உருக்கிவிட்டன. ஊசி காந்தத்திடம் அணுகல்போல, அவன் பகவரிடம் ஐக்கியமாகித் திளைத்துப் பெருகும் இன்பத்தோடு இருந்தனன். அவனுக்குப் பக்குவம் வந்துவிட்டது என்பதை அறிந்த அண்ணலும், 'சங்கத்தில் சேர்ந்து, ததாகதரைப் பின்பற்றுவாயாக!' என்றார். என்றலுமே, யசனுடைய அணிகளும் உடைகளும் மாறி, அவன் காவியுடையுடன், கனிந்த பிக்குவாகத் தோன்றினன்.

மருளுடைய மாக்களின் மனமாசு கழுவும் மருத்துவரான புத்தர்பிரான் பின்னல் யசனைத் தேடிவந்த அவன் தந்தைக்கும் உபதேசம் செய்து, அவர்களுடைய அரண்மனைக்குச் சென்று, யசனுடைய மனைவியையும், அன்னையையும் தருமத்தை மேற்கொள்ளச் செய்தார். யசனுடைய தந்தை இல்லறத்தில் இருந்துகொண்டே தருமத்தை ஏற்றார். இல்வாழ்வில் இருந்துகொண்டே பௌத்த தருமத்தை மேற்கொண்ட முதற் பெண்டிர் அவர் மனைவியும், மருமகளுமே. பிறகு யசனுடைய நண்பர்கள் ஐம்பத்து நால்வர், அவன் முண்டிதமாகித் துறவு பூண்டதை அறிந்து, தாங்களும் புத்தம், தருமம், சங்கத்திடம் அடைக்கலம் புகுந்தனர்.

## தருமப் பிரசாரகர்கள்

நாள்தோறும் அறம் கேட்க வந்தவர்களின் தொகை பெருகிக்கொண்டிருந்தது. மக்களுக்கு உபதேசம் செய்யவும், துறவிகளைச் சங்கத்தில் சேர்க்கவும் பிக்குக்களை வெளியே அனுப்பவேண்டிய காலம் வந்து விட்டதைத் ததாகதர் உணர்ந்தார். அப்போது அறுபத்தொரு அருகத்துக்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர். அவர் அவர்களைப் பார்த்துக் கூறியதாவது :

'சோதரர்களே! நான் சகல பந்தங்களிலிருந்தும் விடுதலை பெற்றுள்ளேன். மானிட இயல்புக்கு மேற்பட்ட பந்தங்கள், மானிட பந்தங்கள் யாவற்றிலிருந்தும் விடுதலையடைந்துள்ளேன். சோதரர்களே, நீங்களும், அமானுஷ்யமான பந்தங்கள், மானிட பந்தங்கள்—யாவற்றிலிருந்தும் விடுதலை பெற்றிருக்கிறீர்கள். சோதரர்களே, பல்லோருடைய நன்மைக்காகவும், பல்லோருடைய பேரின்பத்திற்காகவும், உலகின்மீது கருணைகொண்டு, தேவர்கள், மனிதர்கள் (யாவருடைய) சுகத்திற்காகவும், நன்மைக்காகவும், இன்பத்திற்காகவும் நீங்கள் வெளியே புறப்பட்டுச் செல்லுங்கள்!

'எந்த இருவரும் சேர்ந்து செல்லாதீர்கள். சோதரர்களே, தொடக்கத்தில் இனிதாயும், நடுவில் இனிதாயும், முடிவில் இனிதாயும் உள்ள தருமத்தைப் பிரகடனம் செய்யுங்கள். பூரணமாக நிறைவு பெற்றுள்ள பரிசுத்தமான தரும வாழ்வின் அமிசங்களையும், அவற்றின் உட்பொருளையும் நீங்கள் தெரியப்படுத்துங்கள். காமவெறி முதலிய மண்ணினால் அதிகம் மறைக்கப் பெறாத கண்களையுடைய மக்கள் இருக்கின்றனர். தரும உபதேசத்தைச் செவியுறாமல் அவர்கள் நசித்துக்கொண்டிருக்கின்றனர். சிலராவது புரிந்துகொள்வர். அறவழியைப் போதிக்க நான் நேரில் உருவேலாவுக்குச் செல்கிறேன்.'*

பிக்குக்கள் வெளியேறும்போது, பெருமான் அவர்களுக்கு மேலும் கூறவேண்டிய ஆலோசனைகளையெல்லாம்

*'விநயபிடகம்'

கூறினார். தருமமும் விநய ஒழுக்கமும் மறைத்து வைக்கப் பெறுமல் உலகிலே நன்கு துலங்கும்படி செய்யவேண்டும் என்றார். சத்தியம் நிறைந்த உன்னதமான தருமம் அதற்குத் தகுதியற்ற இழிதகை மாக்களிடம் சிக்கிவிடாமல் கவனிக்க வேண்டும் என்றார். அத்தகையோர், மார்க்கத்தை ஏளனம் செய்து, வெறுத்துக் கண்டித்து, இழிவுபடுத்தக் கூடும் என்று எச்சரிக்கை செய்தார். அதுவரை தாமே துறவிகளுக்குத் தீக்கை அளித்து வந்ததுபோல், அவர்களே மேற்கொண்டு சங்கத்தில் சேரும் துறவிகளுக்குத் தீக்கை அளிக்கவும் அனுமதி அளித்தார்.

உடைகள், பாதரட்சைகள், உணவு முதலிய ஒவ்வொரு விஷயம் பற்றியும் பிக்குக்களுக்குக் கண்டிப்பான விதிகள் அமைத்து, அவைகளை அவர்கள் நன்கு உணர்ந்துகொள்ளும்படியும் செய்யப் பெற்றது.

அக்காலம் முதல் பிக்குக்கள் நாடெங்கும் சுற்றி அறவுரை புகன்று, மாரிக்காலத்தில் திரும்பி வந்து மூன்று மாதங்கள் மட்டும் ததாகதருடன் தங்கியிருந்து உபதேசம் கேட்பது வழக்கமாயிற்று.

## சாரநாத்

ஞானசிரியரான புத்தர் இஸிபதனம் என்று பெயர் பெற்ற சாரநாத்திலிருந்து முதன் முதல் தரும சக்கரப் பிரவர்த்தனம் செய்ததால், அந்த இடம் பௌத்தர்களுக்கும் உலகுக்குமே முக்கியமான தலமாகிவிட்டது. பிற்காலத்தில், ஆயிரக்கணக்கான பௌத்த பிக்குக்கள் தங்கியிருக்கத் தக்க மடாலயங்களும் விகாரையும் அங்கே அமைந்திருந்தன. கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் அங்குச் சென்று பார்வையிட்ட சீன யாத்திரிகரான பாஹியான் அங்கேயிருந்த இருநூறு அடி உயரமுள்ள விகாரையில் புத்தர் அற ஆழியை உருட்டுவது போன்ற கற்சிலை ஒன்று இருந்ததாகவும், ஆயிரம் துறவிகள் அங்கே இருந்ததாகவும் குறித்துள்ளார்.

ஏழாம் நூற்றுண்டில் மற்ெருரு சீன யாத்திரிகரான ஹுயன்-சாங்கும் அங்கு விஜயம் செய்து குறிப்பு எழுதியுள்ளார்.

இப்போது சாரநாத்திலே முக்கியமாக உள்ளது மூலகந்தகுடி விகாரை. ஆசிய மகாபோதிக் கழகத்தார் பெரிய கோபுரத்துடன் இந்த அழகிய விகாரையை அமைத்திருக்கின்றனர். உள்ளே தரையெல்லாம் சலவைக்கல்; சுவர்களிலே புத்தருடைய சரித்திர நிகழ்ச்சிகள் பல கண்கவரும் வருணச் சித்திரங்களாகத் தீட்டப் பெற்றுள்ளன. புத்தருடைய புனித அஸ்தியும் அங்கே உள்ளது. மூலகந்தகுடி விகாரைக்கு அருகிலேயே சீனப் பெருமக்கள் நிறுவியுள்ள அழகு நிறைந்த புத்தர் கோயிலும் இருக்கின்றது.

மௌரிய சக்கரவர்த்தியாகிய அசோகர், ததாகதர் அமர்ந்து அறம் உணர்த்திய இடத்தில், அழகிய கல் தூண் ஒன்றை நிறுத்தியிருந்தார். இந்தத் தூண் பின்னுல் உடைந்து போய்விட்டது. இதன் உச்சியில் அமைந்திருந்த சிங்க உருவம் இன்றும் பார்த்தவர்களைப் பரவசப்படுத்துவதாக விளங்குகின்றது. உபதேசம் செய்யும் பாவனையில் கை முத்திரையுடன் புத்தர் தாமரை மலரில் அமர்ந்திருக்கும் கற்சிலை ஒன்றும், நிற்கின்ற பாவனையிலுள்ள போதி சத்துவரின் உடைந்த சிலை ஒன்றும் சாரநாத்திலே இருக்கின்றன. மண்ணுள் புதைந்து கிடந்த வேறு பல கல்வெட்டுக்களும், சிலைகளும் அங்குள்ள பொருட்காட்சிச் சாலையிலே எடுத்து வைக்கப் பெற்றிருக்கின்றன.

# வேணு வனம்

' எண்ணிறந்த குணத்தோய் நீ!
யாவர்க்கும் அரியோய் நீ!
உள்நிறைந்த அருளோய் நீ!
உயர்பார நிறைத்தோய் நீ!
மெய்ப்பொருளை அறிந்தோய் நீ!
மெய்அறமிங்(கு) அளித்தோய் நீ!
செப்பரிய தவத்தோய் நீ!
சேர்வார்க்குச் சார்வு நீ!'

—வீரசோழியம்

**பொ**து அறிவை இகழ்ந்து புலமுறு மாதவரான*புத்தர் உருவேலா என்ற கயையை அடைய வேண்டும் என்று கங்கையைக் கடந்து சென்றார். அங்கே அக்கினியை வழி படும் ஜடிலர்கள்† என்று அழைக்கப் பெற்ற சடைமுடி தரித்த முனிவர்கள் நூற்றுக்கணக்காக இருந்தனர். அவர்க ளுடைய தலைவரான அக்கினி காசியபர் அகில பாரதத்திலும் புகழ்பெற்றிருந்த மகரிஷி. ஐந்நூறு சீடர்களோடு அவர் வானப் பிரஸ்தராக இருந்து தவம் செய்துகொண்டிருந்தார். அவருடைய சகோதரர்களான நதீ காசியபரிடம் முந்நூறு சீடர்களும், கயை காசியபரிடம் இருநூறு சீடர்களும் இருந் தனர். மகா ஞானியாயும், புகழ்பெற்ற முனிவராயும் விளங்

*சாமானிய அறிவைத் தள்ளி மெய்ஞ்ஞானத்தால் விளங்கும் தவ சீலரான.

†ஜடிலம் — சடைமுடி.

கிய அக்கினி காசியபருக்கு முதலில் தரும உபதேசம் செய்ய வேண்டும் என்று பகவர் திருவுளம் கொண்டிருந்தார்.

## அக்கினி காசியபர்

உருவேலாவில் காசியபருடைய தவப்பள்ளியை அடைந்து, ததாகதர் அம்முனிவரைச் சந்தித்தார். அன்று தாம் அங்கு தங்க விழைவதாகவும், முனிவர் அக்கினி வழிபாடு செய்யும் குகையிலேயிருந்து கங்குற்பொழுதைக் கழிக்க இடம் வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டார். முனிவரும் அதற்கு இசைந்தார். ஆனால் அங்கே ஒரு கொடிய விடநாகம் தங்கியிருப்பதாயும், அது எந்த மனிதரையும் கொன்றுவிடும் என்று தாம் அஞ்சுவதாயும் கூறினார். அதைக்கேட்ட பின்னும் ததாகதர் அங்கேயே தங்க விரும்பியதால், முனிவரும் அநுமதியளித்துவிட்டார்.

அந்தக் குகையுள் சென்றதும், ததாகதர் நிமிர்ந்து அமர்ந்து, விழிப்புடன் நாலு புறத்திலும் அறிவைச் செலுத்திக் கொண்டிருந்தார்.

இரவிலே நாகம் வெளிப்பட்டு, நஞ்சைக் கக்கிக் கொண்டு சீறிவந்தது. குகை முழுவதும் விஷப்புகையும் அனலும் நிறைந்தன. ததாகதர், எதுவும் நிகழ்ந்திராதது போல, அமைதியோடு அமர்ந்திருந்தார். அனலே அனல் விழுங்கிற்று; புகையைப் புகையே தீர்த்துவிட்டது! நாகம் கடும் சீற்றமடைந்து, தான் தன் சீற்றத்திற்கே இரையாகி மடிந்தது.

இரவிலே கண்விழித்துப் பார்த்த காசியபர் குகையுள் வெளிச்சத்தைக் கண்டு, 'அந்தோ! சுந்தரவதனத்துடன் விளங்கும் சாக்கியமுனி சர்ப்பத்துக்கு இரையாகி விடுவாரே!' என்று வருந்தினார்.

மறுநாள் காலையில் அவரும் சீடர்களும் குகையுள் சென்று பார்க்கையில், ததாகதர் உதய சூரியனைப் போன்ற ஒளியுடன் அமர்ந்திருக்கக் கண்டனர். மடிந்து கிடந்த பாம்

பின் உடலைப் பார்த்து அவர்கள் பெருவியப்படைந்தனர். ‘அதனுடைய அனலை எனது நெருப்பு வென்று விட்டது!’ என்று ததாகதர் கூறினார்.

சாக்கிய முனிவரின் தவவலிமையையும், இருத்தி ஆற்றலையும் கண்டு காசியபர் வியந்தார். ஆயினும் போதிநாதர் தம்மைப் போன்ற புனிதர் அல்லர் என்று அவர் தம் மனத்துள் எண்ணிக் கொண்டார்.

பின்னர் அந்தப் பகுதியில் திருவிழா ஒன்று நடந்தது. அதற்கு ஏராளமான மக்கள் வருவர் என்றும், அப்போது சாக்கிய முனிவர் அங்கே யிருந்தால், அவர்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்டுத் தம்மைக் கைவிட்டுவிடக் கூடும் என்றும், தமது செல்வாக்குக் குறையும் என்றும் காசியபருக்குப் பொறாமை தோன்றிற்று. அதைத் தாமாகவே உணர்ந்து கொண்ட ததாகதர், திருவிழாக் காலத்தில் மெதுவாக வெளியே சென்று விட்டு, அது முடிந்த பின்பு திரும்பினார்.

காசியபர் அதைப்பற்றி விசாரிக்கையில், சாக்கிய முனிவர், ‘தாங்கள் விரும்பிய படியே நான் நடந்து கொண்டேன்!’ என்றார். அவர் விருப்பம் இவருக்கு எப்படித் தெரிந்தது? இதைப் பற்றிக் காசியபர் மிகவும் ஆச்சரியம் அடைந்தார். ஆயினும் அவர் செருக்குமட்டும் அழியவில்லை.

ததாகதர் அவரை நோக்கி, ‘நீர் உண்மையைக் காண்கிறீர். ஆனால் உமது உள்ளத்திலுள்ள பொறாமையால் அதை ஏற்றுக் கொள்ள மறுக்கிறீர். பொறாமையும் புனிதமுள்ளதா? அதுவே அகங்காரத்தின் கடைசிச் சின்னமாக உமது இதயத்தில் உறைந்துள்ளது. நீர் இன்னும் பரிசுத்தமடையவில்லை; தரும மார்க்கத்தை நீர் இன்னும் மேற்கொள்ள வில்லை!’ என்று கூறினார்.

‘உடனே காசியபரின் உள்ளம் திருந்தியது, பொறாமை மறைந்தது. பகவரின் பொன்னடிகளைப் போற்றி வணங்கி

நின்று 'ஐயனே, எனக்கும் அறவுரை புகன்று, என்னை ஆட்கொள்ள வேண்டும்!' என்று வேண்டிக் கொண்டார்.

பகவர் முதலில் அவர் தம் அடியார்களைக் கலந்து கொண்டு வருமாறு சொல்லி அனுப்பினர். காசியபரின் கருத்தை அறிந்த அவருடைய சீடர்கள், 'நாங்களும் சாக்கிய முனிவரைச் சரணடைய வேண்டும் என்றே ஆர்வம் கொண்டுள்ளோம். தாங்கள் அவருடைய சங்கத்தில் சேர்ந்தும், நாங்களும் சேர்கிறோம்!' என்று சொன்னார்கள்.

அக்கினி காசியபரும், அவருடைய அடியார்களும், அக்கினி வழிபாட்டுக்கு உரிய தங்கள் சாமக்கிரியைகளை யெல்லாம் ஆற்றிலே மிதக்க விட்டுவிட்டுப் போதி வேந்தரிடம் சென்று, சங்கத்திலே சேர்ந்து பிக்குக்களாயினர்.

அக்கினி காசியபருடைய சகோதர்களான நதீ காசியபரும், கயை காசியபரும் நதியிலே மிதந்துவந்த சாமக்கிரியைகளைக் கண்டு, தங்கள் சகோதரருக்கு என்ன நேர்ந்ததோ என்று கவலையுற்று, அவர் தவப் பள்ளிக்குச் சென்று பார்த்தனர். அவரும் சீடர்களும் மஞ்சள் உடை பூண்டு பௌத்த தருமத்தை மேற்கொண்டிருந்ததைக் கண்டு, தாங்களும் அவ்வாறே அவ்வறத்தைத் தழுவினர். அவர்களுடைய அடியார்களும் தங்கள் தலைவர்களைப் பின்பற்றினர். இவ்வாறு புத்தரைச் சுற்றி ஒரே சமயத்தில் ஆயிரம் துறவிகள் சேர்ந்து விட்டனர். அவர்களுக்கும், காசியப சகோதரர்களுக்கும் அச்சமயத்தில் அவர் அக்கினியை உபமானமாகக் கொண்டே ஓர் அரிய உபதேசம் செய்தார். அது வருமாறு:

'ஓ பிக்குக்களே! எல்லாப் பொருள்களும் அனல் பற்றி எரிகின்றன. பிக்குக்களே, அனல் பற்றி எரியும் இந்தப் பொருள்கள் யாவை?

'பிக்குக்களே, கண் பற்றி எரிகின்றது; உருவங்கள் எரிகின்றன; கட்புலனும் எரிகின்றது; கண்ணால் பார்த்த பொருள்களின் கருத்துக்களும் எரிகின்றன; புலன்களின்

மூலம் உணரும் நல்லன, தீயன, அல்லாதன ஆகிய எல்லா உணர்வுகளும் எரிகின்றன.

'எதைப் பற்றிக்கொண்டு இவைகள் எரிகின்றன?

'ஆசைத் தீயிலும், துவேஷத் தீயிலும், வெறி கொண்ட பற்றுத் தீயிலும், ஜனனம், மூதுமை, மரணம், துக்கம், புலம்பல், துயரம், சோகம், அவநம்பிக்கை ஆகியவற்றால் தோன்றும் தீயிலும் எரிகின்றன.

'ஆசாபாசங்கள், வெகுளி, பேதைமை, வெறுப்பு முதலியவை இருக்கும் வரை—நெருப்பு தான் பற்றி எரிவதற்குரிய பொருள்கள் இருக்கும் வரை—தீ எரிந்துகொண்டே யிருக்கும். அதனால் ஜனன மரணங்களும், அவைகளைச் சார்ந்த துயரங்களும் நேர்ந்து கொண்டே யிருக்கும்.

'இவைகளை யெல்லாம் சிந்தித்துப் பார்த்துச் சத்திய மார்க்கத்தில் செல்லும் சீடன், நான்கு உயரிய வாய்மைகளையும் உணர்ந்துகொண்டு, அஷ்டாங்க மார்க்கத்தைப் பின்பற்றி ஒழுகுவான். கண், காது முதலிய பொறிகளிலும், புலன்களிலும், அவைகளால் உணரப் பெறும் பொருள்கள், உருவங்களிலும், மனத்திலும், அதில் தோன்றும் கருத்துக்களிலும், மன உணர்விலும் அருவருப்படைவான். இந்த அருவருப்புக் காரணமாகக் காமம் முதலிய உணர்ச்சிகளை நீக்குவான்; அதனால் விடுதலை பெறுவான். விடுதலை பெற்றதும் அந்நிலையை உணர்வான்; தனக்கு மேற்கொண்டு பிறப்பில்லை என்றும், தான் செய்ய வேண்டியதைச் செய்து புனித வாழ்வு வாழ்ந்தாயிற்று என்றும், இவ்வுலகில் தன் வேலை முடிந்தது என்றும் அவன் அறிந்து கொள்வான்.'*

சீடர்கள் யாவரும் இப் புனித உரையைக் கேட்டு உள மகிழ்ந்து, புத்த, தரும, சங்கத்தில் நிலைத்து நின்றனர்.

உருவேலாவில் சிறிது காலம் தங்கியிருந்து, பின்னர் புத்ததேவர் முன்னால் பிம்பிசார மன்னர்க்குத் தாம் அளித்திருந்த வாக்கை நிறைவேற்றுவதற்காக இராஜகிருக

---

*'மகாவக்கம்'

நகரை நோக்கிப் புறப்பட்டார். அவரோடு அக்கினி காசியபரும், நூற்றுக்கணக்கான பிக்குக்களும் சென்றனர்.

## இராஜகிருகம்

போதி நாதரும் பிக்குக்களும் தமது தலை நகருக்கு வருவதை அறிந்த மகத மன்னர் பிம்பிசாரர், மந்திரிகள், சேனுபதிகள் புடைசூழ, எதிர்கொண்டு சென்று வரவேற்றூர். அப்போது போதி நாதர் நகரின் அருகேயிருந்த யஷ்டி வனத்தில் தங்கியிருந்தார். அவரோடு அமர்ந்திருந்த பிக்குக்களிலே பலர் முன் காலத்தில் சடைவளர்த்துக் கொண்டிருந்த ஜடிலர்கள். அவர்களையும், அவர்களுடைய தலைவராக விளங்கிய அக்கினி காசியபரையும் கண்ட சிரேணிய மன்னர் திகைத்து விட்டார். போதிநாதர் காசியபருடைய சீடராகிவிட்டாரா, அல்லது காசியபர் அவருடைய சீடராகி விட்டாரா என்று அவர் உள்ளம் திகைத்தது. அதை உணர்ந்த புத்தர்பெருமான், காசியபரை நோக்கித் தாம் பௌத்த தருமத்தை மேற்கொண்டதால் பெற்ற நன்மைகள் என்ன என்று வினவினுர். காசியபர், தாம் முன்னுல் அக்கினி வணக்கம் செய்து வந்ததில், அகங்காரம் அழியாமல் பிறவிச் சுழலிலேயே சிக்கி யிருந்ததாகவும், பௌத்த தருமத்தால் தமக்கு ஞானம் பிறந்து சாந்தி நிறைந்த நிர்வாணத்தை அடையும் மார்க்கம் தெரிந்ததாகவும் கூறினுர். அவரைப் போன்ற மகானே போதிநாதரிடம் அடைக்கலம் புகுந்து விட்டதைப் பார்த்துப் பெருமானுடைய ஏற்றத்தை மன்னர் தெளிவாக உணர்ந்து மகிழ்ந்தார். அவரும் பெருமானும் ஒருவரையொருவர் குசலம் விசாரித்து அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தனர்.

பின்னர் புத்தர் பெருமான், அங்குக் கூடியிருந்த கூட்டத்தினர் யாவரும் தமது தருமத்தைக் கேட்டுப் பக்குவ நிலையை அடைந்திருப்பதைக் கண்டு, மதிமுகம் மலர்ந்து

மன்னரை நோக்கிக் குயில் போன்ற தமது இசைக்குரலில் உபதேசிக்கலானார் :

'மனம், சிந்தனைகள், பொறிகள் யாவும் ஜனன மரண விதிக்கு உட்பட்டவை. ஜனன மரணத் துக்கத்தின் காரணத்தை ஒரு முறை புரிந்துகொண்டால், பின்னர் எல்லாம் தெளிவாகி விடும்.

'ஒருவன் தன் உண்மை இயல்பை அறிந்து, தன் பொறிகள் எவ்வாறு இயங்குகின்றன என்பதை உணர்ந்து கொண்டால், பிறகு ' நான் " என்று சொல்லிக் கொள்வதற்கு இடமில்லாமற் போவதை அறிவான். அதன் மூலம் அந்தமில்லாத அமைதியைப் பெறுவான். உலகம் "நான்" என்பதைப் பற்றிக்கொண் டிருப்பதாலேயே தவறான காட்சிகள் ஏற்படுகின்றன.

'சிலர், மரணத்திற்குப் பின்னும் "நான்" நிலைத்து நிற்பதாயும், சிலர், அதுவும் மரித்து விடுவதாயும் கூறுவர். இருதிறத்தாருடைய கருத்தும் தவறானது; அவர்களுடைய தவறு பெருந் தவறாகும்.

'ஏனெனில், "நான்" அற்றுப்போகும் என்று அவர்கள் சொன்னால், அவர்கள் அடையவேண்டும் என்று கருதி முயன்ற பயனும் அத்துடன் அழிந்து விடுகின்றது; பின்னால் தொடர்பில்லாமற் போகின்றது.

'மற்றொரு புறத்தில், "நான்" அழிவதில்லை என்று சொல்லுபவர்களுடைய கூற்றின்படி, வாழ்விலும் மரணத்திலும் மாறுதலில்லாத ஒரே தன்மை நிலைத்திருப்பதாகும்— அதற்குத் தோற்றமுமில்லை; முடிவு மில்லை. அவர்களுடைய "நான்" இத்தகையது என்றால், அதுவே நிறைவுள்ளதாயிருக்கும். கருமங்களின் மூலம் அதைச் செம்மைப்படுத்த முடியாது. நிரந்தரமான, அழிவற்ற "நான்" என்பதை ஒருக்காலும் மாற்றவே முடியாது. அதுவே தலைவனாகத் தலைமையில் நிற்கும்; அத்தகைய பூரணமானதை மேலும் பூரணமாக்குதல் பயனற்ற வேலை; எனவே ஒழுக்க விதிகளும், முக்தியுமே தேவை யில்லாமற் போகின்றன..

'ஆனல் (வாழ்க்கையில்) நாம் இன்பங்களையும் துன்பங்களையும் காண்கிறோம். நம் செயல்களையெல்லாம் "நான்" என்பதே செய்வதாயிருக்கவேண்டும்; இல்லையெனில் "நான்" என்பதும் இல்லை; செயலுக்குப் பின்னல் அதைப் புரிந்தவன் இல்லை; அறிவுக்குப் பின்னல் அறிந்தவனில்லை. வாழ்வைத் தலைமையில் நின்று நடத்துவோனும் இல்லை.

'கவனமாய்க் கேளுங்கள்! பொறிகள் ஒரு பொருளைச் சந்திக்கின்றன. அந்தச் சம்பந்தத்தினல் உணர்வு தோன்றுகிறது; அதிலிருந்து நினைவு எழுகின்றது; பூதக் கண்ணுடியைக் கதிர் ஒளியில் காட்டினல், ஒளியின் சக்தியால் தீ உண்டாதல் போலப் பொறியும் பொருளும் கொள்ளும் சம்பந்தத்தில் ஏற்படும் அறிவினல் "நான்" என்று அழைக்கப் பெறும் அகங்காரம் தோன்றுகின்றது. விதையிலிருந்துதான் முளை உண்டாகின்றது, விதை முளையன்று; இரண்டும் ஒன்றல்ல, எனினும் இரண்டும் வேறுபட்டவையும் அல்ல! இவ்வாறே தோன்றுகின்றது ஜீவன்.

'"நான்" என்னும் அகங்காரத்திற்கு அடிமைகளாகிக் காலையிலிருந்து இரவுவரை அதற்கே ஊழியம் செய்துகொண்டிருப்பவர்களே! பிறப்பு, முதுமை, பிணி, மரணம் ஆகியவற்றைப்பற்றி ஓயாது அச்சம் கொண்டவர்களே! "நான்" என்ற கொடிய தலைவன் இல்லை என்ற நற்செய்தியைக் கூறுகிறேன், கேண்மின்!

'"நான்" என்பது ஒரு தவறு; ஒரு மயக்கம்; ஒரு கனவு. கண்களைத் திறந்து விழித்து எழுங்கள். விஷயங்களை உள்ளபடியே பாருங்கள். உங்களுக்குச் சாந்தி ஏற்படும்.

'விழித்திருப்பவன் கனவுகளுக்கு அஞ்சமாட்டான். கயிற்றைக்கண்டு அரவு என்று கருதியவன், (கயிறு கயிறுதான் என்று) அதன் தன்மையைக் கண்ட பின்பு பயத்தை ஒழித்துவிடுவான்.

'"நான்" இல்லை என்பதைக் கண்டுகொண்டவன் சுயநல ஆசைகள், உணர்ச்சிகளை யெல்லாம் துறந்து விடுவான்.

'பொருள்களில் கொள்ளும் பற்று, பேராசை, புலன்களின் உணர்ச்சி வசப்படுதல் ஆகியவை 'முற்பிறவிகளி

லிருந்து தொடர்ந்து வந்தவை; உலகின் துயரங்களுக்கும் செருக்குக்கும் அவைகளே காரணமானவை.

'சுயநலத்தால் (பொருள்களில்) கொள்ளும் பற்றை (உபாதானத்தை)க் கைவிடுங்கள்; பாவமற்ற, அமைதி நிறைந்த மனநிலையை நீங்கள் அடைவீர்கள்; அதனால் சாந்தியும், நலனும், ஞானமும் பெறமுடியும்.

'இந்த மனநிலையே உலகிலே தலைசிறந்தது. இதுவே நிர்வாணம்!'*

பரமார்த்தர் பரிவுடன் அருளிய அறவுரையைக் கேட்டு மக்களும் மன்னரும் பெருமகிழ்வுற்றனர். பிம்பிசாரர் அதை மனத்தில் பதிய வைத்துக்கொண்டு, ஐயம் நீங்கித் தெளிவு பெற்று, எழுந்து நின்று ஐயனை வணங்கினார். தாம் இளவரசராயிருந்த காலையில் ஐந்து ஆசைகள் கொண்டிருந்ததாயும், தாம் மகிபராக வேண்டும் என்றும், தமது ஆட்சிக்காலத்தில் வையகத்தில் புத்தர் அவதரித்தால், அவர் தமது இராஜ்யத்திற்கு எழுந்தருள வேண்டும் என்றும், தாம் அவரை வணங்கவேண்டும் என்றும், பகவர் தமக்கு அறத்தினைப் போதிக்கவேண்டும் என்றும் எல்லாவற்றிற்கும் மேலாக, அவருடைய தருமத்தைத் தாம் புரிந்து கொள்ளவேண்டும் என்றும் கருதியிருந்த அந்த ஐந்து விருப்பங்களும் நிறைவேறிவிட்டன என்றும் அவர் கூறி மகிழ்ந்தார்.

அறவாழி அந்தணர் கூறிய அறமே அனைத்தினும் சிறந்த அறம் என்று அவர் போற்றினார். இருளிடையே இடர்ப்பட்டுத் திரிபவர்களுக்குப் பகவர் அளித்த விளக்கின் ஒளி வழிகாட்டும் என்றும், கண்ணுடையோர் அனைவரும் அதன் பயனை அடையலாம் என்றும் கூறிவிட்டு, அவர், நான் புத்தரிடம் சரணடைகிறேன்! நான் தருமத்

---

*'ஃபோ-ஷோ-ஷிங்-த்ஸாங்-கிங்' என்ற சீன நாட்டுப் புத்த சரிதை.

திடம் சரணடைகிறேன்! நான் சங்கத்திடம் சரணடைகிறேன்!' என்று மும்மைச் சரணங்களையும் மொழிந்து புத்தரின் சீடரானார், அருள் வள்ளல் மறு நாள் தமது அரண்மனையில் அமுது செய்ய வேண்டும் என்றும் அவர் வேண்டிக் கொண்டார்.

ததாகதர் தமது தவமகிமையாலும், மாசிலாத சீலத்தாலும் யாவருடைய மனங்களையும் கவர்ந்து தம்பால் ஈர்த்துக்கொண்டு, உண்மையை அவர்கள் உணரும்படி செய்தார். இராஜ்யம் முழுவதும் இன்னருளின் விதைகள் பரவி வேரூன்ற வழி கோலப்பெற்றது.

பிக்குக்கள் பலரும் பின் தொடர, முன்னும் பின்னும் சாந்தி நிலவும் படி, கையிலே திருவோடு ஏந்தி, இராஜ கிருக வீதிகளின் வழியாகத் தருமராஜர் நடந்து சென்று அரண்மனையை அடைந்தார். அவருடைய மகிமைக்கு ஏற்ற உணவு வகைகளை மன்னர் தயாரித்தார். எல்லோரும் அமுது செய்தபின், பெருமானின் அருகே அமர்ந்திருந்த அரசர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அவருக்குக் கிடைத்தற்கரிய பெரும் பேறு கிடைத்திருந்தது. போதியடைந்ததும் போதி வேந்தர் அங்கு விஜயம் செய்திருந்தார். இராஜகிருகம் செய்த எல்லையற்ற தவத்தால் அது பௌத்த தருமத்தின் வளர்ப்புப் பண்ணையாக விளங்கப் போகிறது! எனவே போதிநாதர் எப்போது வந்தாலும் தங்கியிருந்து தருமம் போதிப்பதற்கு ஏற்ற தவப்பள்ளி ஒன்றை அமைக்கவேண்டும். அதற்கு ஏற்ற சோலை ஒன்று வேண்டும்; அது நகருக்கு வெளியே இருக்க வேண்டும். அத்தகைய பெரிய சோலை எது என்பதைப் பற்றியே அரசர் சிந்தித்துக் கொண்டிருந்தார். கடைசியில் தாம் அருமையுடன் போற்றிவந்த தமது வேணு வனத்தையே* பௌத்த சங்கத்திற்கு அளித்துவிடவேண்டும் என்று முடிவு செய்

*வேணுவனம் - மூங்கில் அடர்ந்த சோலை; (வேணு - மூங்கில்).

தார். உடனே பெருமானிடம் விவரத்தைக் கூறி, தமது எழில் மிகுந்த சோலையை ஏற்றருளுமாறு வேண்டினர். பெருமானும் அன்புடன் அதை ஏற்றுக்கொண்டு அரசருக்கு ஆசிகள் கூறினர்; மேலும் அவருக்குக் கூற வேண்டிய நீதிகள் பலவும், எடுத்துச் சொல்லி அவர் உள்ளத்தைப் பவித்திரமாக்கினர். பிறகு விடை பெற்றுக்கொண்டு, அரண்மனையிலிருந்து வெளியே சென்றார்.

## மன்னரின் நீதி

பிம்பிசாரப் பெருந்தகைபற்றியும், வேணு வனத்தைப் பற்றியும் பல இனிய கதைகள் உண்டு. அவர் பல போர்களில் வெற்றிபெற்ற வென்றி வீரர். அக்காலத்தில் மக்கள் அவரை மானிட மடங்கல்* என்று கருதி வந்தனர். ஆயினும் அவர் அன்பும் பெருந்தன்மையுமுள்ள பேரரசர். அவருடைய மகத நாட்டின் பெருமை இந்திய சரித்திரத்திலே பொன் ஏடுகளில் பொறிக்கத்தக்கதாகும். பிற்காலத்தில் பாரதநாடே மகத சாம்ராஜ்யமாக விளங்கிற்று.

மன்னரின் தலைநகரான இராஜகிருகம் குளிர்ச்சியான காவுகளும் சோலைகளும் நிறைந்து எழிலுடன் விளங்கிக் கொண்டிருந்தது. ஒருசமயம் கோதாவரி நதிக்கரையில் ஆண்டுகொண்டிருந்த இராஜஸ்ரீ என்ற மன்னன் அந்நகரைப் பார்வையிடச் சென்றிருந்தான். அங்கு அழகே குடி கொண்டிருந்ததைக் கண்டு அவன் ஆச்சரியமுற்றான். அரண்மனையும் அதைச் சேர்ந்த நந்தவனங்களும் அவனைப் பரவசமாக்கின. ஒருநாள் மாலை அவன் பிம்பிசாரருடன் பிரியமாகப் பேசிக்கொண்டே, அவருடைய உபவனத்தில் உலாவிக் கொண்டிருந்தான். தளிர்களும், கொடிகளும், செடிகளும், பூங்கொத்துக்களும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்துக்கொண்டிருந்தன. அப்போது அங்கே ஒரு மூலையில் பண்படுத்தப் பெறாத மண்மேடு ஒன்று

*மடங்கல் - சிங்கம்.

இருந்தது. அதைக்கண்ட விருந்தினனான மன்னன், அதையும் வெட்டித் திருத்தி யிருந்தால் சோலையின் அழகு அதிகமாயிருக்கும் என்று கூறினான்.

'அது என்னுடைய இடமன்று!' என்றார் மகதமன்னர். அது ஏழையான ஒரு விதவையின் உடைமை என்றும், அவள் அதைத் தமக்கு விற்கவோ, அளிக்கவோ விரும்பவில்லை என்றும் அவர் கூறினார்.

'அரசர் என்ற முறையில் தாங்கள் விரும்பினால் அதை எடுத்துக்கொள்ள இயலாதா?

'உபவனத்தின் அழகு குன்றிப்போனாலும் கவலையில்லை; அந்த இடத்தை அபகரிக்க நான் விரும்பவில்லை!'

கோதாவரி-மன்னன் உண்மையை உணர்ந்து உவகை வெள்ளத்தில் ஆழ்ந்தான். பேரரசர் பிம்பிசாரர் விரும்பவில்லை! அம்மன்னன், 'அந்த மேடுதான் தங்கள் பூந்தோட்டத்தின் அழகைத் துலக்கமாக எடுத்துக் காட்டுகின்றது!' என்று புகழ்ந்து பாராட்டினான். மகத மன்னரின் நீதி அவ்வளவு உயர்வாக இருந்தது!

ஆனால் பிம்பிசாரர் பௌத்த தருமத்தை மேற்கொள்ளு முன்னால், வேணு வனத்தைப் பெருங்குடியிலே தோன்றிய ஒரு தனிகரிடமிருந்து அபகரித்திருந்தார். சிறுவயதிலேயே, அவர் இளவரசாயிருந்த காலத்திலேயே, அந்த வனத்தில் அவருக்கு ஆசை பாய்ந்தது. தாம் மணிமுடி புனைந்ததும், அதை ஆர்ச்சிதம் செய்துகொள்ளவேண்டும் என்று அவர் கருதியிருந்தார். பின்னால் அவ்வாறே வேணு வனத்தை அரசர்க்குரிய உரிமையில் எடுத்துக்கொண்டார். அவ்வனத்திற்கு உரியவரும் மாண்டுபோய்ப் பின்னால் ஒரு சர்ப்பமாகப் பிறந்திருந்தார். அவர் மன்னரிடம் தமக்குள்ள பகையை மறவாமல், வேணு வனத்திலேயே பாம்பாகச் சுற்றிக்கொண்டிருந்தார். மன்னர் அங்கே வந்து அயர்ந்துள்ள வேளையில் அவரைத் தீண்டிவிடவேண்டும் என்று அவர் காலம் கருதியிருந்தார்.

ஒருநாள் மாலை அரசரும் அவருடைய தேவியர்களும் அங்குவந்து இளைப்பாறுகையில் மன்னர் உறங்கிவிட்டார். தேவியரில் ஒருத்தி தவிர மற்றையோர் தூரத்திலே உலாவிக்கொண்டிருந்தனர். அவளும் கண்ணயர்ந்து போனாள். அந்த நேரத்தில் நாகம் அவ்வழியாக மன்னர் அருகில் ஊர்ந்து வந்தது. அதைக் கண்ட பறவைகள் யாவும் கூக்குரலிட்டுக் கூவின என்றும், உடனே தேவி கண்விழித்துப் பாம்பைக் கொன்றனள் என்றும் சொல்லப்படுகிறது. மன்னர் விழிப்படைந்தபின், பறவைகள் காலத்திலே செய்த உதவிக்காக, அவ்வனத்தில் அவைகள் பிரியமாக வந்து தங்குவதற்காக ஏராளமான மூங்கில்களை வைத்து வளர்த்தார். மூங்கில் நிறைந்திருந்ததால் அவ்வனத்திற்கு 'வேணு வனம்' என்ற பெயர் உண்டாயிற்றாம்.

வேணு வனத்தில் பிம்பிசாரர் விரைவாக ஒரு விகாரையைக் கட்டி, அதிலேயே பிக்குக்கள் அனைவரும் தங்கியிருக்க வசதிகள் செய்துகொடுத்தார். வேணு வனத்தில் புத்தர் பெருமான் இரண்டு மாதங்கள் தங்கியிருந்து அறவுரை புகன்று வந்தார். தொள்ளாயிரம் பிக்குக்களும் ஆயிரக் கணக்கான பௌத்த உபாசகர்களும்* அக்காலத்திலே சேர்ந்திருந்ததாகச் சொல்லப்படுகின்றது.

## முதன்மையான மூன்று சீடர்கள்

அக்காலத்தில் பிக்குக்களாகச் சேர்ந்தவர்களில் முதன்மையானவர் மூவர். அவர்களே **சாரீபுத்திரரும், மௌத்கல்யாயனர்** என்ற **மொக்கலன்னுவும், காசியபர் அக்கினி தத்த**ரும். இவர்களில் சாரீபுத்திரரும், மௌத்கல்யாயனரும் இளமையிலிருந்தே நகமும் சதையும்போல் நெருங்கிய நண்பர்களாயிருந்தவர்கள். பின்னாலும் அவர்கள் ஈருடலும் ஓருயிருமாக வாழ்ந்து வந்தனர்.

*உபாசகர்கள் - குடும்பத்தில் இருந்துகொண்டு தருமத்தை மேற்கொள்பவர்கள்.

இராஜகிருகத்திற்கு அருகே **நாலந்தா*** என்ற நகரத்தில் **மாதரா** என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். அவருக்குக் **கோஷ்திலா** என்ற குமரனும், **சாரீ** என்ற ஒரு பெண்ணும் இருந்தனர். கோஷ்திலா உலகாயத தத்துவநூல் கற்பதற்காகச் சிறு வயதிலேயே தென்னிந்தியாவுக்கு வந்துவிட்டார். இங்கே சகல சாத்திரங்களையும் கற்றுணரும்வரை நகங்களை எடுப்பதில்லை என்ற வைராக்கியத்துடன் இருந்ததால், அவருக்கு 'தீர்க்கநகா'† என்ற காரணப் பெயரும் உண்டாயிற்று.

சாரீ என்ற மாதரசி தென்னிந்தியாவிலிருந்து அங்கு சென்றிருந்த **திஷ்யர்** என்ற பிராமணரை மணந்து இல்வாழ்க்கை நடத்தி வருகையில், அவர்களுக்கு ஓர் ஆண் மகன் பிறந்தான். திஷ்யருடைய குமரன் என்பதால் அவனை **உபதிஷ்யன்** (பாலியில் **உபதிஸ்ஸா**) என்றும் தாயின் பெயரை வைத்து **சாரீபுத்திரன்** என்றும், குடும்பப் பெயரை வைத்து **சாரத்வதி புத்திரன்** என்றும் அழைத்து வந்தனர். ஆயினும் பௌத்த இலக்கியத்திலே சாரீபுத்திரன் என்ற பெயரே பெரும்பாலும் வழங்கிவருகின்றது.

சாரீபுத்திரர் இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினார். அக்காலத்து அந்தணர் அறிய வேண்டிய சாத்திரங்கள் பலவற்றையும் அவர் பயின்றிருந்தார்.

மௌத்கல்யாயனரும் அருகேயிருந்த ஒரு கிராமத்தைச் சேர்ந்தவர். அவருடைய தந்தையார் **கௌண்டின்யபோதாலர்** என்ற மன்னரின் புரோகிதராயிருந்தவர். அவருடைய அன்னையின் பெயர் **மோத்கலி**. அவருக்கு மௌத்கல்யாயனர் என்பது குடும்பப் பெயராக அமைந்தது; அவருடைய

---

*நாலந்தாவிலே புகழ்பெற்ற சர்வகலாசாலை ஒன்று இருந்து வந்தது. பின்னால் பல நூற்றாண்டுகள்வரை அது பௌத்த தருமத்திற்கு உறைவிடமாக இருந்தது.

†தீர்க்கநகா - நீண்ட நாகமுள்ளவர்.

இயற்பெயர் **கோலிதர்.** அவரும் இளமையிலிருந்தே சாரீ புத்திரருடன் சேர்ந்து கல்வி கற்றுச் சகலகலா வல்லவராக விளங்கினார்.

இவ்விருவரும் பள்ளித் தோழர்களாகப் பழகிவந்ததில், பின்னால் மௌத்கல்யாயனர் துறவறம் மேற்கொள்ளத் தீர்மானிக்கையில் சாரீபுத்திரரும் துறவியாகிவிட்டார். இருவரும் இராஜகிருக நகரிலிருந்த சஞ்சயர்* என்ற புகழ் பெற்ற குருவிடம் உபதேசம் பெற்று வந்தனர். சஞ்சயர் காலமான பின்னர், அவருடைய சீடர்கள் இருநூற்றைம்பது பேர்களுக்கும் அவர்கள் இருவருமே தலைவராக விளங்கி வந்தனர். அவர்களைப்பற்றி இங்கே விரிவாகக் குறிப்பிட வேண்டிய காரணம் யாதெனில், அவர்களே பின்னால் பௌத்த தருமத்தின் இரு தூண்களாக விளங்கி வந்தார்கள். புத்தர் பெருமானுக்கு அவர்கள் இரு கரங்களைப் போல உதவி வந்தனர். அவர்கள் புத்தரைச் சரணடைந்த வரலாறே அவர்களது இயல்பை நன்கு உணர்த்துவதாயுள்ளது.

ஒருநாள் இராஜகிருக வீதியிலே புத்தருடைய ஆரம்பச் சீடர்கள் ஐவருள் ஒருவராகிய அசுவஜித், கையிலே திருவோடு தாங்கிப் பிச்சை யேற்று வருகையில், சாரீபுத்திரர் அவருடைய ஒளி நிறைந்த முகத்தையும், அமைதியையும் கண்டு திகைத்து நின்றார். அவர் அண்டையில் சென்று அவர் யார் என்றும், அவர் சீடர்களைச் சேர்த்துக்கொண்டு உபதேசம் செய்கிறாரா என்றும் வினவினார். அசுவஜித் தாமே ஒரு குருவுக்குச் சீடர் என்று கூறினார்.

'தங்களுடைய குரு யாவர்? அவர் திருநாமம் என்ன?'

'சாக்கிய மரபிலே தோன்றிய புகழ்பெற்ற முதன்மையான சிரமணரே எனது குரு!'

*சஞ்சயருக்குப் பதிலாகக் கபிலர் என்றும் கூறுவதுண்டு.

'அவர் உங்களைப்போன்ற பெருமையும் கம்பீரமும் பெற்று விளங்குபவரா?'

'கடுகுக்கும் மேரு மலைக்கும், பசுவின் குழம்பு பதிந்த பள்ளத்தில் தேங்கும் தண்ணீருக்கும் கடலுக்கும், கொசுவுக்கும் 'கருடனுக்கும் எவ்வளவு வேற்றுமை யுண்டோ அவ்வளவு எனக்கும் என் குருநாதருக்கும் உண்டு!'

'நான் எப்போதுமே அறிவுக்குப் பொருத்தமான உண்மையையே விரும்புபவன்; சொற்களையும் வாக்கியக் குவியல்களையும் பற்றி நான் கவனிப்பதில்லை; ஏனெனில் ஞானி தீர்க்கமான அறிவைக்கொண்டே தன் வாழ்வை அமைத்துக்கொள்கிறான். தங்களுடைய குருநாதருடைய கொள்கையைத் தாங்கள் விளக்கிச் சொல்ல வேண்டுகிறேன்.'

'நானே சமீபத்தில்தான் அவரிடம் உபதேசம் பெற்றவன். கேட்கவேண்டியதை அவருடைய திருவாயிலிருந்தே நேரில் கேட்பது நலம். சுருக்கமாய்ச் சொன்னால்,

"யேதர்மா ஹேதுப்ரபாவா: தேஷாம்ஹேதும் ததாகத;
ஆஹதேஷா யோநிரோத: ஏவம்வாதீ மஹாஸமண:"*

["காரணம் ஒன்றிலிருந்து எந்தத் தன்மைகள் ஏற்படுகின்றனவோ, அவைகளின் காரணத்தைத் ததாகதர் கூறினார்; அதை அடக்கும் முறையையும் அந்த மகாசிரமணர் கற்பித்துள்ளார்."]

என்று சொல்லிவிடலாம்'

இதைக் கேட்ட சாரீபுத்திரர், 'போதுமே! இந்த ஒரு

---

* பௌத்த தருமத்தின் சாரத்தை உணர்த்தும் சுலோகமாக இது கருதப்படுகிறது. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பு வருமாறு:

'Of those conditions which spring from a cause
The cause has been told by Tathagata;
And the manner of Suppression
The great Samana has like wise taught.'

சுலோகமே தங்களுடைய குருவின் மேன்மையை எடுத்துக் காட்டப் போதுமானது! ஆம், உலகிலே எல்லாம் காரணத் தாலேயே—ஏதுவாலேயே—தோன்றுகின்றன. காரணத்தை அறிந்து நீக்கிவிட்டால், காரியமும் இராது!' என்று தமக்குள் பாராட்டிப் பேசிக்கொண்டார்.

'கதிரவன் ஒளிவந்த பிறகு எவரேனும் விளக்கினைத் தேடுவரோ? புத்தரின் போதனை துக்கத்தின் வேரையே அறுத்து விடுவதாகும்!' என்று கருதி அவர் பிக்குவை வணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

அவர் நேராக வீட்டுக்குத் திரும்பிச் சென்றார். அவருடைய அகமும் முகமும் மலர்ந்து விளங்கின. வழியிலே அவரைக் கண்ட மௌத்கல்யாயனர், அவருடைய பெருமகிழ்ச்சிக்கு உரிய காரணம் இருக்கும் என்று கருதினார். சாரீபுத்திரர் தாம் கேட்டறிந்த சுலோகத்தைக் கூறி, 'இதுவரை எவரும் வெளியிட்டிராத வார்த்தைகளையே (செய்தியையே) ததாகதர் சொல்லியுள்ளார்!' என்று பாராட்டியுரைத்தார்.

இருவரும் அங்கிருந்து வேணுவன விகாரையை நோக்கிப் புறப்பட்டனர். அவர்களுடன் இருநூற்றைம்பது சீடர்களும் தொடர்ந்து சென்றனர்.

அந்தணர் இருவரும் தம்மை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கண்ட ததாகதர், தம்முடன் அமர்ந்திருந்த பிக்குக்களைப் பார்த்து, 'இதோ வருகிற இந்த இருவரும் என் சீடர்களில் முதன்மையான இருவராக இருப்பார்கள்; ஒருவன் ஞானத்தில் நிகரற்று விளங்குவான், மற்றவன் சித்திகளில் (இருத்தி ஆற்றல்களில்) நிகரற்று விளங்குவான்!' என்று கூறி அருளினார்.

பின்னர், உள்ளங்கனிந்த இனிமையுடன், அவ்விருவரையும் முகம் நோக்கி, 'வருக!' என்றார்.

உடனே, அவர்கள் கைகளிலே ஏந்தியிருந்த முக்கோல்களும், கமண்டலங்களும், சடைமுடியும் எல்லாம் மாறி,

அவர்கள் துவராடை தரித்த முண்டிதமான பிக்குக்களாகக் காட்சியளித்தனர். அவ்வாறே அவர்களுடைய அடியார் களும் மாறிவிட்டனர். எல்லோரும் தரையில் வீழ்ந்து பகவரின் பாதங்களை வணங்கி எழுந்து, அவர் அருகிலே சூழ்ந்து அமர்ந்துகொண்டனர்.

சாரீபுத்திரர் அறிவுக்களஞ்சியமாக விளங்கியபோதி லும், சிறிதளவும் செருக்கில்லாமல், அடியார்க்கு அடிய ராக நடக்கும் இயல்புடையவர். விகாரையிலே பெருமானு டன் தங்கியிருக்கும் காலங்களில், அவரே அறைகளை யெல்லாம் சுத்தம் செய்து, பானைகளிலே நீர் ஊற்றிவைத்து, நோயாளருக்குச் சிகிச்சை செய்வது வழக்கம். பிற்காலத் தில் அவரே பல நகரங்களுக்கும் சென்று, பொதுமக்களின் பெருங்கூட்டங்களில் சொற்பொழிவாற்றியும், அரசர்கள், பிரபுக்கள், தலைவர்கள் முதலியோரைச் சந்தித்து அற நிலையங்கள் அமைத்தும், எதிர்ப் பிரசாரங்களுக்கு மறுப் புக் கூறியும் அரும்பெருந் தொண்டுகள் செய்துவந்தார். 'நான் இல்லையென்றால் என் ஸ்தானத்தில் இருக்கக்கூடிய வன் சாரீபுத்திரன்!' என்று பெருமானே அவரைப் பாராட்டியுள்ளார். இத்தகைய அருங்குணங்கள் அனைத் தும் வாய்ந்த அந்த அந்தணரே பௌத்த தருமத்தின் 'சேனாபதி' என்ற பட்டமும் பெற்று விளங்கினார்.

மௌத்கல்யாயனர் தருமத்தின் உட்பொருளை நன்கு உணர்ந்துகொண்டு அதன்படி ஒழுகிவந்தவர். பிற சமயத் தார்களுக்கு அவர் பெயரைக் கேட்டாலே பயமுண்டாகும். அவரை யாரும் எதிர்த்து வெல்ல முடியாது; பகைவர்கள் அவர்மீது பாய்ந்து சென்றாலும், அவர் அமைதியோடு உயரே பறந்து ஆகாயத்திலேயே அமர்ந்துகொள்வார். அவருக்கு அவ்வளவு இருத்தி ஆற்றல் அமைந்திருந்தது!

சாரீபுத்திரருடைய தாய்மாமனாரான கோஷ்திலாவும் சிலநாட்களுக்குப் பிறகு புத்தரைத் தரிசித்துச் சங்கத்தில் சேர்ந்துகொண்டார்.

வேணு வனத்திலே தயாவீர தருமராஜர் தங்கியிருந்த காலத்திலே அவருடைய அருட் சமயத்திற்குக் கிடைத்த மும்மணிகளில் மூன்றுமவர் **காசியபர் அக்கினிதத்தர்** என்பவர். அவர் கல்விச் செல்வமும், பொருட் செல்வமும் மிக்க தபோதனர். அவர் மனைவி அருங்குணங்க ளெல்லாம் அமைந்த கற்புக்கரசி. அவர் முக்தியை நாடி, வீடு செல்வம் அனைத்தையும் நீத்துத் துறவறம் மேற்கொண்டிருந்தார். ஒரு சமயம் அவர் வைசாலி நகருக்குப் புறப்பட்டுச் செல்லும் பாதையிலே, கண் பிறர்க்கு அளிக்கும் கண்ணோரான புத்தரைக் கண்ணுற்றதும், அவரை அடி வணங்கி, 'பெருந்தகை வள்ளலே! நீரே எமது குரு; யான் உம் அடியாருள் ஒருவன்!' என்று கூறினர்.

துறவறத்தாலே உழன்று பெரும் பாடுபட்டு உண்மை நெறியை அறிந்துகொள்ள உள்ளன்போடு முயன்றுகொண்டிருந்த அந்த அந்தணரையும் அறவோர் தமது சங்கத்திலே சேர்த்துக்கொண்டு, அவர் உய்யும் பொருட்டு அருளுரைகள் வழங்கினர். இந்தக் காசியபரே பிற்காலத்தில் 'மகா காசியபர்' என்று பெரும்புகழ் பெற்று விளங்கிய மேதை. ஐயனுக்கு அவரிடம் அளவற்ற அன்பு இருந்து வந்துதது. புத்தருக்குப் பின்னல் அவருடைய அறிவுரைகளைத் தொகுத்துத் திரிபிடங்களாக அமைத்து வைத்த பெருமையிலே பெரும்பகுதி மகா காசியபரையே சேரும். இத்தகைய மகான்களும், மதிவாணர்களும், ஆறுகள் அலை கடலை நாடி அடைவதுபோல், அருள்நெறி காக்கும் ஐயனை அடைந்து, அருளறத்தை வளர்த்துக் கொண்டிருந்தனர்.

நாள்தோறும் இளைஞர்களும் பெரியோர்களும் பகவரைச் சரணடைந்து துறவிகளாகி வந்ததைக் கண்ட இராஜகிருக மக்கள் கவலை கொண்டனர். திடீர் திடீரென்று பல ஆடவர்கள் வீடு வாசல்களையும், மனைவி மக்களையும் விட்டுப் பிரிந்து, தலைகளை மழித்துக்கொண்டு, வேணு வனத்திற்கு ஓடிவிடுவதைக் கண்டு சிலர் பிக்குக்களையே

வெறுத்துப் பேசினர். இவ்வாறு பேசிய பேச்சுக்களைப் பற்றிப் பிக்குக்கள் பகவரிடம் தெரிவித்தபோது அவர் அவர்களுக்கு ஆறுதல் கூறினர்:

'ஓ பிக்குக்களே! இந்தக் கூச்சல் நீடித்து நிற்காது. ஏழு நாட்களில் இதெல்லாம் அடங்கிவிடும். உங்களை அவர்கள் ஏசினால், பிக்குக்களே, நீங்கள் இவ்வாறு மறுமொழி கூறுங்கள்: "சத்தியத்தைப் பிரசாரம் செய்தே ததாகதர்கள் மக்களுக்கு வழிகாட்டுகிறார்கள். அறிவாளரைக் கண்டு எவர்கள் கூச்சலிடுவார்கள்? சீலம் நிறைந்தவர்களை எவர்கள் நிந்திப்பார்கள்? தன்னடக்கம், நியாயம், பரிசுத்தமான உள்ளம் ஆகியவற்றோடு விளங்க வேண்டும் என்பதே எங்கள் குருவின் போதனை!"

பன்னிரண்டாம் இயல்

# அநாத பிண்டிகர்

---

‘அருளாழி நயந்தோய் நீஇ !
அறவாழி பயந்தோய் நீஇ !
மருளாழி துறந்தோய் நீஇ !
மாதவரில் மாதவன் நீஇ !
வானவருள் வானவன் நீஇ !
போதனரில் போதனன் நீஇ !
புண்ணியருள் புண்ணியன் நீஇ !’

—வீரசோழியம் உரை

**செல்வம்** கொழித்துக் கொண்டிருந்த சிராவஸ்தி நகரில் திரைகடலோடித் திரவியம் தேடிய பெருந்தனிகர்கள் சிலர் இருந்தனர். **சுதத்தர், மிருகாரர்** முதலிய இந்த வணிகர்கள் இந்திய நாடு மட்டுமின்றி, வெளிநாடுகளுக்கும் பொருள்களை அனுப்பி வாணிபம் செய்து வந்ததில், பொன்னும், வெள்ளியும், மணிகளும் அந்நகரிலே குவிந்துகொண்டிருந்தன. சமுதாயத்திலே பிராமணர்களுக்கும், படைத் தலைவர்களுக்கும் அடுத்தபடியாக, அக்காலத்தில் இத்தனிகர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இவர்களில் சுதத்தர் கோடீச்வரர். இராஜகிருகத்திலிருந்த **சூலர்*** என்ற கோடீச்வரரின் சகோதரியை அவர் மணந்திருந்தார். அதனாலும், தொழில் காரணமாகவும் அவர் அடிக்கடி மைத்துனர்

---

* இவர் பெயர் உறுதியாகத் தெரியவில்லை. விநய பிடகத்தில் ‘இராஜகிருகத்து இலட்சப் பிரபு’ என்றே கூறப்பட்டுள்ளது.

ஊருக்குச் சென்று வருவார். அங்கே அவருக்கு அரசர்க்கு உரிய உபசாரங்கள் நடப்பது வழக்கம்.

அவருடைய இயற்பெயர் சுதத்தர் என்றிருந்த போதிலும், எல்லோரும் அவரை **அநாத பிண்டிகர்*** என்றே அழைத்து வந்தனர். அநாதைகளை ஆதரித்து அமுதளித்தும், ஏழைகளுக்கு எண்ணிறந்த உதவிகள் செய்தும், அவர் வரையாது அளிக்கும் வள்ளலாக விளங்கியதால், அவர் வாழ்க்கை முழுவதும் இந்தப் பெயரே நிலைத்திருந்தது. திருமுறைகளிலும் இலக்கியங்களிலும் இப்பெயரே பொறிக்கப் பெற்றுவிட்டது.

அவர் புத்தரை முதல் முறை சந்தித்த விவரம் 'விநய பிடக'த்தில் அழகாக விவரிக்கப் பெற்றுள்ளது.

அநாத பிண்டிகர் ஒரு சமயம் இராஜகிருகத்திற்குச் சென்றிருக்கையில், அவர் மைத்துனர் மாளிகையில் பணியாளர்களும் அடிமைகளும், ஓய்வொழிவு இல்லாமல், ஓடியும் சாடியும் வேலை செய்து கொண்டிருந்தனர். மைத்துனரான கோடீச்வரர் அவர்களுக்கு ஆணைகளிட்டு, 'நாளை அதிகாலையில் எல்லோரும் எழுந்திருந்து பக்குவமான உணவுகளும், கறிகளும், இனிப்புப் பண்டங்களும் விரைவாகத் தயாரிக்கவேண்டும்!' என்று எச்சரிக்கை செய்து கொண்டிருந்தார். அநாத பிண்டிகரை யாரும் கவனித்து வரவேற்கக்கூட முடியவில்லை. அந்த மாளிகையில் திருமணம் ஏதேனும் நடக்கப் போகின்றதா, அல்லது ஒரு வேளை பிம்பிசார மகாராஜருக்கு விருந்து ஏற்பாடாகின்றதோ என்று அவர் எண்ணினார்.

அவருடைய மைத்துனர் பணியாட்களுக்கு வேண்டிய ஆலோசனைகளை யெல்லாம் கூறிவிட்டு, வெகு நேரத்திற்குப் பிறகு, அவரிடம் வந்து அமர்ந்து கொண்டு, அவர்

---

*இவர் அநாதபிண்டிதா, அநாத பரிபாலகா என்றும் கூறப்படுவர்.

உடல்நலம் முதலியவைபற்றி விசாரிக்கலானார். பேச்சின் நடுவில் அவர், 'இங்கு திருமணம் எதுவும் நடக்கவில்லை ; மகாராஜரும் வரவில்லை. இந்நகரில் வேணு வனத்திலே தங்கியிருக்கும் புத்தர் பெருமான் பிக்குக்களுடன் நாளை இங்கே அமுது செய்ய இசைந்திருக்கிறார். அதற்காகவே ஏற்பாடுகள் நடக்கின்றன !' என்று கூறினார்.

'புத்தரா? புத்தர் என்றுதானே சொன்னீர் ?' என்று வியப்புடன் வினவினார் அநாத பிண்டிகர்.

'ஆம், புத்தரே !'

அப்பொழுதும் அநாத பிண்டிகர் நம்பாமல், மீண்டும் இருமுறை தமது கேள்வியைக் கேட்டு, உண்மையைத் தெரிந்துகொண்டார். சாட்சாத் புத்தரே !

'உலகத்திலே "புத்தர்" என்ற திருப் பெயரின் ஒலி கூடக் கேட்பதில்லையே ! புத்தர் ! இப்பொழுது நான் உடனே சென்று போதியடைந்த அந்தப் புனிதரை—புத்தரை— நேரில் தரிசனம் செய்ய முடியுமா?'

'இப்பொழுது சரியான சமயமில்லை. நாளை அதிகாலையில் சென்று தரிசிக்கலாம் !'

அநாத பிண்டிகர் உணவருந்திவிட்டுப் படுத்துக்கொண்டார். இரவெல்லாம் மறுநாள் காலையில் கலைகட்கெல்லாம் நாதரான கருணைவள்ளலைக் கண்களால் கண்டுகளிப்பதைப் பற்றியே அவர் எண்ணமிட்டுக்கொண்டிருந்தார். இடையில், இரவிலேயே பொழுது விடிந்துவிட்டது என்று கருதி, இரண்டு முறை எழுந்திருந்து பார்த்தார். மாளிகையைச் சூழ்ந்து இருட்போர்வையே போர்த்தியிருந்தது. ஆயினும் மூன்றாவது முறை எழுந்ததும், இருளிலேயே அவர் நேராக வள்ளல் வசித்து வந்த வனத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## புத்த தரிசனம்

நகரின் கோட்டையைத் தாண்டி வெளியே செல்கையில், திடீரென்று தாரகைகளின் ஒளியும் மங்கி விட்டன.

முன்னும், பின்னும், நாலு புறத்திலும், ஒரே இருட் பிழம்பாக இருந்தது. கங்குலில் தோன்றும் கலவரங்கள் அவர் உள்ளத்தைக் கலக்கின; மயிர்க்கூச்செறிந்து அவர் திகிலுடன் நின்றுவிட்டார்.

அப்போது அசரீரியின் இனிய ஒலி ஒன்று கேட்டது:

'நாலு யானைகள், நூறு குதிரைகள், நாலு காளைகள் பூட்டிய நூறு தேர்கள், நகைகள் அணிந்த நூறாயிரம் நங்கையர் ஆகிய அனைத்தையும் ஒருவன் பெறுவதாகவைத்துக்கொண்டால், இலட்சியத்தை அடையும் பாதையில் ஓர் அடி எடுத்துவைப்பதில் கால் பகுதியில் கால்பகுதிக்குக் கூட அவை அனைத்தும் இணையாகா!.........தொடர்ந்து நடந்து முன்னே செல்வீராக!'

அநாத பிண்டிகர் மன உறுதிகொண்டு மேலும் நடக்கலானார். உடனே எங்கணும் ஒளி உண்டாயிற்று. அவரும் விரைவிலே வேணு வனத்தை அடைந்தார்.

## பொருள் வள்ளலும் அருள் வள்ளலும்

பகவர் பொழுது விடியுமுன்பே எழுந்திருந்து, திறந்த வெளியிலே உலாவிக்கொண்டிருந்தார். சாந்தி தவழும் சோலையிலே சாந்தி நிறைந்த உள்ளத்துடன் நடந்த வண்ணம் ஐயன் தொலையில் வரும் வள்ளலைக் கண்டு, அருகே தமக்கென்று அமைக்கப்பெற்றிருந்த ஆசனத்தில் போய் அமர்ந்துகொண்டார். அநாத பிண்டிகரும் அருகே வந்தார். 'வருக, சுதத்தா! வருக!' என்று அண்ணல் அன்போடு அழைத்தார்.

அண்ணல் தமது இயற்பெயரை அறிந்து கூறியதைக் கண்டு அநாத பிண்டிகர் ஆச்சரியமடைந்தார். உடனே தமது நெடிய உருவத்தை நிலத்தின்மீது கிடத்தி வணங்கியெழுந்து, 'ஐய, கங்குற்பொழுது இனிதாய்க் கழிந்ததோ?' என்று குசலம் விசாரித்தார்.

'ஞானி எப்போதுமே இன்புற்றிருக்கிறான். ஞானி

இருள்வழியை நீக்கி ஒளி வழியில் செல்பவன். வீட்டை விட்டு, விரும்புதற்கு அரிய விவேகத்தை நாடித் துறவு வாழ்க்கையின் ஏகாந்த இன்பத்தில் அவன் திளைத்துக் கொண்டிருப்பான். அவன் உள்ளம் வேதனை நீங்கி எப் போதும் சாந்தி பெற்றுத் தழைத்து நிற்கின்றது!' என்று பகவர் பதிலுரைத்தார்.

பகவர் அவருடன் வெகுநேரம் பேசிக்கொண்டிருந் தார். தானம், தருமம், சுவர்க்கம், ஒழுக்கம், துறவு, ஆசா பாசங்கள் முதலிய பல விஷயங்களைப் பற்றித் தேன்மழை பொழிவதுபோல அவர் பொழிந்துகொண்டிருந்த இன் சொற்களைச் சிராவஸ்தி வள்ளல் இன்னமுது என்று பரு கிக்கொண்டிருந்தார்.

'புத்தர் என்ற பெயரைக் கேட்டதும் நீ உள்ளம் களித்து ஓடி வந்தாய். ஏனெனில், முந்திய பிறவிகளிலே நீ செய்த புண்ணியத்தின் பலனால், உன் உள்ளம் பண் பட்டிருக்கிறது. உள்ளே பணிவு, வெளியே வரையில்லா மல் அள்ளிக்கொடுக்கும் கொடை—இவற்றால் உன்னிடம் தருமம் பெருகி நிலைத்திருக்கின்றது!' என்று புத்தர் பாராட்டினார்.

அநாத பிண்டிகர் தம் வரலாற்றையும் அவருக்கு எடுத் துரைத்தார். சிராவஸ்தி பற்றியும், பார்த்திபர் பிரசேனஜித் தைப் பற்றியும், ஏழைகளுக்குத் தாம் செய்துவரும் ஊழி யம் பற்றியும் அவர் கூறினார்.

புத்தர் பெருமான் அவருடைய தூய சிந்தையையும், வள்ளண்மையால் அவர் தருமத்தைக் கொள்ளை கொள்ளை யாகச் சேர்த்து வருவதையும் அறிந்து, அவர் செய்து வரு வதே உண்மையான ஈகை என்று புகழ்ந்துரைத்தார். பயன் கருதாமல், புகழை விரும்பாமல், அவர் செய்துவரும் தருமத் தால், பயனும் புகழும் பெருகி நிற்பதைச் சுட்டிக் காட்டினார்.

'நெருப்புப் பற்றிய பொக்கிஷத்தில் மிஞ்சியிருப்பவை

களை அள்ளி யெடுப்பதுபோல், பிறருக்குச் செல்வத்தை அள்ளிக் கொடுக்கவேண்டும்!' என்றும், 'செல்வத்தைச் சேர்த்து வைக்கும் கருமி பாவத்தையே மூட்டை கட்டிச் சேர்த்து வைத்து, முடிவில் எல்லாவற்றையும் இழக்கிறான்!' என்றும், 'தானம் செய்பவன் உள்ளக் களிப்புடன் அமைதி பெறுகிறான்; அவனுக்குக் கவலையுமில்லை, சஞ்சலமுமில்லை' என்றும், அவர் ஈகையின் பெருமைகளை வியந்துரைத்தார்.

பிறகு, தமது விருந்தினரின் உள்ளம் கனிந்து பக்குவமாயிருக்கும் நிலையை அறிந்து, பகவர், 'எல்லோர்க்கும் செல்வத்தை அளிக்கும் உனக்கு நான் அருளறத்தை அளிக்கிறேன்!' என்று சொல்லி, அவருக்குத் தரும உபதேசம் செய்தார். நான்கு உயரிய உண்மைகள்பற்றியும், ஆசைகளை அகற்றி மனச்சாந்தி பெறும் மார்க்கம்பற்றியும் உபதேசித்து, சுவர்க்கம் கிடைப்பதாயினும் அதை விரும்பாமல், பிறவியற்ற பெருவாழ்வாகிய நிருவாண முக்தியையே நாடவேண்டும் என்று வழி காட்டினார். எல்லாம் வல்ல ஆண்டவன் உலகையும் உயிர்களையும் படைத்துவிட்டார் என்றால், உலகும் உயிர்களும் செய்யும் செயல்களுக்கும், அநுபவிக்கும் துயர்களுக்கும் அவனே பொறுப்பாளியாகிறான் என்றும், அதனால் தனி மனிதர்கள் கடமையோ, ஒழுக்கமோ, முயற்சியோ இல்லாமல், "எல்லாம் அவன் செயல்!' என்று இருந்துவிட நேரும் என்றும், சொந்த இயற்கையினாலே ஜீவன்கள் தாமாகத் தோன்றின என்றால், உலகில் ஒவ்வொரு விஷயமும் காரண—காரியத் தொடர்புடன் நிகழ்ந்து வருகையில், அவை மட்டும் காரணமின்றித் தாமாகத் தோன்றின என்று கருதல் தவறு என்றும் பல தத்துவங்கள்பற்றியும் பகவர் விரிவாக எடுத்து விளக்கினார்.

அநாத பிண்டிகரின் அகத்தில் ஞானவிளக்கு நன்கு ஒளிவிட ஆரம்பித்தது. அவர் பௌத்த தருமத்தின்

இயல்பை அறிந்துகொண்டார். தூய்மையான வெள்ளைத் துகிலில் சாயம் உடனே பற்றிக்கொள்வதுபோல், அறவுரை அவர் இதயத்தைப் பற்றிக் கொண்டதாம்! ஆயினும் அவர் அடையவேண்டிய ஞானம் ஒரு துளிமட்டும் எஞ்சி யிருந்த தாயும், அது அவர் பின்னல் புத்தருக்கும் பிக்குக்களுக்கும் விகாரை அமைத்து அர்ப்பணம் செய்யும்போது பூர்த்தி யாயிற்று என்றும் நூல்கள் கூறுகின்றன.

> 'போதிமூலம் பொருந்திய சிறப்பின்
> நாதன்பாதம் நவைகெட ஏத்துதல்
> பிறவிதோறும் மறவேன்'*

என்ற முறையில் உறுதிபூண்டு, அநாத பிண்டிகர் அருள் நெறி காக்கும் செல்வரை வணங்கி, புத்த, தரும, சங்கம் என்னும் மும்மைச் சரணங்களையும் மொழிந்து, தம்மை ஏற்றருளுமாறு ஐயனை வேண்டிக்கொண்டார். அவ்வாறே ஐயனும் மனமிசைந்து, அவருக்கு ஆசி கூறினர்.

பின்னர் அநாத பிண்டிகர், போதிநாதரும் அடியார் திருக்கூட்டமும் மறுநாள் தாம் அளிக்கும் அமுதை ஏற் றருள வேண்டும் என்று வேண்டினர்.

பகவரும் மௌனத்தால் தமது இசைவை உணர்த்திய பின், அவர் விடைபெற்றுச் சென்றார்.

அன்று பகலில் அண்ணலுக்கும் அடியார்களுக்கும் விருந்தளித்த இராஜகிருக வள்ளல் தமது சகோதரியின் கணவரைப் பார்த்து, அவர் வந்த இடத்தில் என்ன செய்ய முடியும் என்றும், தாமே மறுநாள் விருந்துக்கும் ஏற்பாடு கள் செய்வதாயும் கூறினர். அநாத பிண்டிகர் தாமே எல்லா வற்றையும் கவனித்துக்கொள்வதாகச் சொல்லிவிட்டார்.

அதேபோல மறுநாள் விருந்து முறையாக ஏற்பாடா யிற்று. எல்லாம் தயாராயிருப்பதாகப் பகவருக்கும் காலை யில் செய்தி கூறப்பட்டது. பகவரும் துவராடை பூண்டு,

---

*'மணிமேகலை'

பிக்குக்கள் புடைசூழ, இராஜகிருகத்துக் கோடீச்வரரின் மாளிகைக்கு விஜயம் செய்தார். அநாத பிண்டிகர் அவர்களை அன்புடன் வரவேற்று, அனைவருக்கும் தாமே தம் கரங்களால் உணவு பரிமாறினார். எல்லோரும் அமுது செய்தபின், அவர் மருளறுத்த மாதவர் பக்கத்திலேபோய் அமர்ந்துகொண்டு, 'வருகிற மாரிக்காலத்தை ஐயன் சங்கத்தாருடன் சிராவஸ்தியிலே கழிக்க அருள்புரிய முடியுமா?' என்று கேட்டார்.

பகவர், 'ததாகதர்கள் தனிமையான இடத்தையே விரும்புவார்கள்!' என்றார்; 'அங்கே விகாரை எதுவும் இருக்கிறதா?' என்றும் கேட்டார்.

**அநாத பிண்டிகர்:** இல்லையே, பெரும!

**புத்தர்:** அத்தகைய இடம் இருந்தால் பிக்குக்கள் வரவும், போகவும், தங்கியிருக்கவும் வசதியாயிருக்கும்.

**அநாத பிண்டிகர்:** தாங்கள் வர இசைந்தாற் போதும்; நானேவிகாரையை அமைத்துத்தயாராகவைத்திருப்பேன்!*

பின்னர் விகாரையின் அமைப்புப் பற்றிப் புத்தரிடம் கேட்டுக்கொள்ள வேண்டிய நுணுக்கமான விஷயங்களையும் அவர் கேட்டுத் தெரிந்து கொண்டார். பகவரும் மனமுவந்து விபரங்களைக் கூறினார். வர்ணச் சித்திரங்கள் எங்கெங்கு எப்படியிருக்கவேண்டும் என்பது பற்றி விளக்கினார். விகாரைக்கு வரும் பிணியாளருக்குச் சிகிச்சை செய்யும் அறைக்கு வெளிப்புறத்தில் ததாகதர் நோயாளருக்குத் தொண்டு செய்வதுபோன்ற சித்திரம் எழுத வேண்டும் என்றும், தாம் வந்து தங்கியிருக்கக்கூடிய 'கந்தகுடி' அறையின் முன்புறம், கையில் மாலை ஏந்திய ஓர் இயக்கனுடைய உருவம் எழுதவேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

---

* இந்த உரையாடல் திபேத்திய 'துல்வா' என்ற நூலில் உள்ளது.

அநாத பிண்டிகர், விரைவாக விகாரை கட்டுவதற்குத் தமக்கு ஆலோசனை கூறி உதவி புரிவதற்காக, சாரீபுத்திரரையும் அழைத்துக்கொண்டு செல்ல ஐயனின் அனுமதியைப் பெற்றுக் கொண்டார்.

புறப்படுவதற்கு முன்பு, 'மேற்கொண்டு நான் செல்வங்களை வைத்திருக்கவேண்டுமா, அல்லது நானும் துறவு பூணவேண்டுமா? தாங்கள் இராஜ்யத்தையும் அரசுரிமையையும் துறந்து உலகுக்கு வழி காட்டியுள்ளீர்களே!' என்று அவர் பகவரிடம் கேட்டார். பகவர், செல்வம் தானகத் தீமை பயப்பதில்லை; அதிலே பற்று வைத்து அதனுடன் ஒட்டிக்கொள்வதுதான் கூடாது! பற்றுக்கொண்டு உள்ளத்தை விஷமாக்குவதை விட, அதை உதறி விடுவதே நலம்!' என்று கூறினர்.*

அவர் ஊருக்குத் திரும்புகையில் வழியெங்கும், 'போதி, மாதவர் சிராவஸ்திக்கு வருகிறர்!' என்று ஊர் ஊராகத் தகவல் சொல்லி, சாலையில் முக்கியமான இடங்களிலெல்லாம் பிக்குக்கள் தங்கி இளைப்பாறுவதற்கு ஏற்ற நிலையங்கள் அமைக்கவும், மற்ற வசதிகள் செய்யவும் ஏற்பாடுகள் செய்துகொண்டே சென்றுர்.

## சுத்தோதனரின் அழைப்பு

இராஜகிருகத்திலேயே புத்த பகவர் தங்கியிருந்த காலையில் அவருடைய அருமைத் தந்தையார் சுத்தோதன மன்னர் பல தூதர்களை அவரிடம் அனுப்பியிருந்தார். வந்தவர்கள் அனைவரும், அவரிடம் அறம் கேட்டுப் பிக்குக்களாகி, வேணுவனத்தின் மரங்களின் அடியிலே தியானத்தில் அமர்ந்துகொண்டிருந்தனர். இவ்வாறு ஒன்பது முறை தூதர்களை அனுப்பி ஏமாந்துபோன மன்னர், கடைசியாக உதாயி என்ற புத்தருடைய வாலிபத்தோழனைத் தக்க பரிவாரங்களுடன் அனுப்பத் தீர்மானித்திருந்தார். புத்தர்

*'The Gospel of Buddha' — by Dr. Paul carus.

ஞானமடைந்தவுடன் அவரைத் தரிசித்த திரிபுஷன், பல்லி கன் என்ற இரு வணிகர்களும் கபிலவாஸ்துவுக்குச் சென்ற சமயம் அவரைப் பற்றிய விவரங்களையெல்லாம் அரண் மனையிலேயே அரசருக்கும், யசோதரை முதலியோருக்கும் கூறியிருந்தனர். அதிலிருந்து எல்லோருக்கும் ஐயனின் திருமுகத்தை எப்போது காணலாம் என்ற ஆர்வம் துடித்துக்கொண்டிருந்தது. மன்னரும் தாம் உலகை விட்டுப் பிரியுமுன் தமது மைந்தரை ஒருமுறையாவது காண வேண்டும் என்று கருதினர். எனவே, 'மற்றவர்கள் அவ ருடைய போதனையைக் கேட்டு நலம் பெறுகிறார்கள்; ஆனால், பெற்ற தந்தையும், உற்ற உறவினரும் அந்தப் பாக்கியத்தைப் பெறவில்லை!' என்ற செய்தியுடன் அவர் உதாயியை இராஜகிருகத்திற்கு அனுப்பி வைத்தார்.

உதாயி புத்தர் பிறந்த அன்றே பிறந்தவன்; அவ ருடைய இணைபிரியாத் தோழன். ஆகவே, பகவருடைய அறவுரைகளைக் கேட்டு மனம் மாறிய தூதர்களைப்போல் ஏமாறாமல், அவன் அவ்வுரைகள் தன் செவிகளுள் நுழை யாதபடி பஞ்சு வைத்து அடைத்துக்கொண்டு வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஐயனைக் கண்டு, வந்த செய்தி யைக் கூறிய பிறகு, அவனும் பிக்குவானான்.

சாலைகளிலும் சோலைகளிலும் மரங்களெல்லாம் வண்ண வண்ணமான மலர்களோடு ஒளி மயமாகத் திகழ்வ தால், அந்த வசந்த காலத்திலேயே கபிலவாஸ்துவுக்குச் செல்லவேண்டுமென்று அவன் ஐயனுக்கு நினைவுறுத்தி னான். அவரும் அவ்வாறே செல்வதற்கு இணங்கினார். உதாயி அண்ணலின் வரவை அறிவிப்பதற்காக முன்ன தாகச் சென்றான்.

## விடை பெறுதல்

பெருமான் இராஜகிருகத்தை விட்டுப் புறப்படுமுன்பு, பிம்பிசாரர் தமது மைந்தன் **அஜாத சத்துரு** என்ற இளவரசனை

யும் அழைத்துக்கொண்டுபோய், அவரைத் தரிசித்தார். இளவரசன் பிற்காலத்தில் தனது தந்தைக்கும், புத்தருக்கும், சங்கத்திற்கும் பல கொடுமைகள் செய்ய நேர்ந்தது. அவனுடைய குணத்தை முன்னதாகவே அறிந்து கூறுவது போல், பகவர் அவனுக்குப் பல நீதிகள் புகன்று, தந்திரமும் ஒழுங்கீனமும் எக்காலத்திலும் வெற்றியளித்துக் கொண்டிருக்கமாட்டா என்பதை வற்புறுத்திச் சொன்னார்.

மன்னர் ஐயனைச் சிலநாள்கூடப் பிரிந்திருக்க மனம் வருந்தி, அவருடைய சிகையில் கொஞ்சமும், அவர் கிள்ளியெறிந்த நகங்களையும் கேட்டு வாங்கி வைத்துக்கொண்டாராம். அரண்மனைக் கோயிலில் அவைகளுக்குத் தூபதீபங்கள் காட்டி மரியாதை செலுத்தவேண்டும் என்று அவர் விரும்பினார். அப்போது பகவர், 'இவைகளை ஆலயத்திலே வைத்துவிட்டு, உள்ளத்திலே என் போதனையைப் பதிய வைத்துக்கொள்ளவும்' என்று கூறினாராம். பின்னர் மன்னர் தமது மாளிகைக்குச் சென்றார்; ஐயனும் ஆயிரம் பிக்குக்களுடன் கபிலவாஸ்துவுக்குப் புறப்பட்டார்.

# கபிலையம்பதி

'மாற்றரும் கூற்றம் வருவதன் முன்னம்
போற்றுமின் அறம்!........'

—மணிமேகலை

'மத யானையின் முதுகிலே அமர்ந்து இன்புறக்கூடிய செல்வமும், இவ்வரசும் நான் வேண்டேன்' என்று வெறுத்துச் சென்ற சித்தார்த்தர், புத்தராகி, மீண்டும் கபிலையம் பதிக்கு வருகிறார் என்ற செய்தியை அறிந்து, அந்நகர மக்கள் மட்டில்லாத மகிழ்ச்சி யடைந்தனர். வீதிகளிலே வெண் மணல் விரித்தனர்; வீடுதோறும் மகர தோரணங்கள் கட்டினர்; மாடங்களிலே மணிக்கொடிகளைப் பறக்கவிட்டனர். வயல்களிலும் வயற்புறங்களிலுமுள்ள வாழைகள், கமுகுகள் எல்லாம் வீதிகளுக்கு வந்துவிட்டன. தங்கப் பூண் கட்டிய தந்தங்களுடனும், வெள்ளி அம்பாரிகளுடனும் யானைகள் தயாராக நின்றன. பிரபுக்களும் அதிகாரிகளும் ஆங்காங்கே நின்று வரவேற்கக் காத்திருந்தனர். கீதவாத்தியங்கள் பல ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

நகருக்கு அருகே அமைந்திருந்த அரசருடைய நெடிய சோலையான **நியக்குரோத வனத்திலே*** பெருந்தவ முனிவர் தங்குவதற்கு ஏற்ற அழகிய மண்டபம் ஒன்று அமைக்கப் பட்டிருந்தது. அச்சோலையிலே பசுமையான மரங்களும், மலர்ச் செடிகளும், கொடிகளும் மிகுதியாக இருந்தன.

*நியக்குரோத வனம்—ஆலமரங்கள் அடர்ந்த சோலை.

புத்தர் பெருமான் வருகின்ற தினத்திலே உரோகிணி நதிக்கரையிலிருந்தே ஆடவர், பெண்டிர், குழந்தைகள் யாவரும் ஆயிரக்கணக்கில் அவரைச் சூழ்ந்து வந்துகொண்டிருந்தனர். அவருடைய முகவிலாசத்தையும், அமைதியையும், அருட்பொலிவையும் கண்டு, 'இப்படியும் ஒரு துறவி இவ்வுலகில் உள்ளாரோ!' என்று மக்கள் அதிசயித்தனர்.

நியக்குரோத வனத்தை நண்ணி வரும்போது அவரை எதிர்கொண்டு அழைப்பதற்காக அரசர் தேர்மீது அமர்ந்து கொண்டு காத்திருந்தார். அவருடன் அமைச்சர்களும், சேனைத் தலைவர்களும், செல்வச் சீமான்களும் கூடியிருந்தனர். எள்ளும் விழுவதற்கு இடமின்றி ஜனக்கூட்டங்களும் திரள் திரளாகத் திரண்டு நின்றன.

அந்நிலையில், மழுங்கச் சிரைத்த தலைகளுடன் விளங்கிய ஆயிரம் துறவிகளுடன், காஷாயக் கடலின்மீது விளங்கும் செங்கதிர்போல், ஒளிவீசி நடந்து வந்துகொண்டிருந்தார் பெருமான். அவர் தலையும் முண்டிதமாயிருந்தது, அவர் உடையும் காவிமயமாகவே இருந்தது. தூரத்திலிருந்து அவரைக் கண்டதும், சுத்தோதனர் தேரிலிருந்து கீழிறங்கினர். விருந்தினர் தமது குமாரரே எனினும், மன்னர்கள் துறவிக்குச் செய்யவேண்டிய மரியாதையை எண்ணி அவர் நடந்தே சென்றார். பெருமானின் திருக்கோலம் அவர் உள்ளத்தை வேதனை செய்தபோதினும், அவருடைய பேரெழிலைக் கண்டு அவர் அதிசயித்து ஆனந்தமடைந்தார். அவர் ஏதேதோ பேசவேண்டும் என்று முயன்றும், சொற்கள் கிடைக்கவில்லை.

எதிரே, மேருமலை போன்ற அமைதியும் உறுதியும் கொண்டு, சிம்மம் போன்ற ஆண்மையுடன், ஏறுபோன்ற நடையுடன், ஒளிவீசி வந்துகொண்டிருந்த துறவி அவருடைய சொந்தக் குமாரரே! ஆயினும் அவருக்கும் இவருக்கும் இடையில் எவ்வளவு தூரம்! அந்த முனிவர் இப்போது சித்தார்த்தர் அல்லர்—புத்தர், புனிதர், தருமராஜா,

தாரணியின் தனிப்பெரும் குரு! இவரோ பற்றுக்கள் நிறைந்து, இன்னும் குழப்பத்திலேயே தத்தளித்துக் கொண்டிருந்தார்! ஏழு ஆண்டுகளாக இந்த நாளை எதிர் பார்த்துத் துடித்துக் கொண்டிருந்த மன்னரது உள்ளத்தில் எத்தனையோ உணர்ச்சிகள் குமுறிக் குமைந்துகொண் டிருந்தன. 'சித்தார்த்தா!' என்று அருகே சென்று கூவி அழைக்க வேண்டும் என்று தோன்றிய எண்ணத்தை அவர் உடனே அடக்கிக் கொண்டார்.

## புத்தரின் ஆற்றல்

போதி வேந்தர் மன்னரின் மனநிலையை ஊகித்தறிந்து, தமது இருத்தி ஆற்றலை அவருக்கும் மக்களுக்கும் சிறிது காட்டவேண்டும் என்று திருவுளம் கொண்டார். நியக் குரோத வனத்தை அடைந்ததும், அவர் திடீரென்று வானத்திலே எழுந்து, ஆகாயத்திலே நடந்தும், தமது திரு மேனியைப் பலவிதமாகப் பிரித்தும், சேர்த்தும் காட்டினார். அவர் உடலின் மேற்பகுதியிலிருந்து நெருப்புப் பிழம்புகள் பாய்ந்தன. அடுத்தாற்போல் அவர் இந்தக் காட்சியையே மாற்றிக் காட்டினார். பின்னர் வலது புறத்திலிருந்து நெருப்பும், இடதுபுறத்திலிருந்து நீரும் பெருகிக்கொண்டி ருந்தன. இவ்வாறு இரட்டை இரட்டையான இருபத் திரண்டு ஆற்றல்களை* அறத்தகை முதல்வர் அன்று செய்து காட்டியதாகக் கூறப்படுகின்றது.

சுத்தோதனர் தம் துயரையெல்லாம் கைவிட்டு, மைந்த ருடைய துறவின் மாண்பை அறிந்து, பேரதிசயம் அடைந்து, அவரை வணங்கினார். சாக்கியர் அனைவரும் அரசரைப் பின்பற்றித் தாமும் ததாகதரை வணங்கினர்.

பின்னர் ததாகதர், தாம் முந்திய பிறவிகளில் ஒன்றில்

---

*இரட்டைப்பட்ட இந்த இருத்தியை 'யமக-பாதிஹாரியம்' என்பர்.

**வேசந்தரர்** என்ற இளவரசராயிருந்து, யாசிப்பவர்களுக்குக் கேட்டதை யெல்லாம் அருளி, முடிவில் தமது மக்களைப் பிரிந்து, அருமை மனைவியையும் ஓர் அந்தணருக்குத் தானம் செய்துவிட்டதையும், தேவேந்திரன் தோன்றி, அவரையும் பத்தினியையும் பாராட்டி, அந்த இணை பிரியாக் காதலரை மீண்டும் சேர்த்து வைத்ததையும் விரிவாகக் கூறித் தாம் எக்காலத்திலுமே பரதுக்க துக்கர்* என்பதையும், பிற உயிர் ஓம்பும் மன்னுயிர் முதல்வர் என்பதையும் எடுத்துக் காட்டினார். ஞானியின் இயல்புபற்றி அவர் அப்போது நயமான சில உரைகளும் புகன்றார் :

> 'ஞானி, உலகம் எரிகின்ற நெருப்பால் சூழப்பட்டிருப்பதாகக் கண்டு அச்சமுற்றுப் பிறப்பு, முதுமை மரணங்களை ஒரேயடியாக ஒழிக்கும்வரை அந்த அச்சத்தைக் கைவிடாமல் இருக்கிறான். ஞானி வாழும் இடம் எல்லையற்ற அமைதி நிறைந்து விளங்குகின்றது. அங்கே ஆயுதங்கள் தேவையில்லை; இரதங்களும் யானைகளும் குதிரைகளும் படைகளும் தேவையில்லை! ஞானியின் ஆசைகள் அடங்கி அவிந்து போகின்றன ; வெகுளி அவனிடமிருந்து விலகி ஓடுகின்றது; பேதைமை பிரிந்து ஒழிகின்றது ; பரந்த உலகிலே அவன் வெல்ல வேண்டியது எதுவும் இல்லை! துக்கம் என்ன என்பதை அறிந்து, அவன் அதன் மூலத்தையே அறுத்துவிடுகிறான் ; பின்னர் நன்னெறிகளைக் கடைப்பிடித்து, உலகின் நான்கு சிரியவாய்மைகளையும் நன்குணர்ந்துகொண்டு, அவன் அச்சத்தை உதறிவிட்டுப் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரையேறி விடுகிறான் !'

அவ்வுரைகளைக் கேட்ட மன்னர், 'நீ உலகாளும் மன்னனாக இருந்திருந்தால், இத்தகைய உயர்ந்த தருமத்தை உபதேசிக்க யாரும் இருக்கமாட்டார்கள் ; நான் இதைக் கேட்கும் பேறும் வாய்த்திருக்காது ; உலகில் ஜனன மரண

*பரதுக்க துக்கர் — பிறருடைய துக்கத்திற்காகத் தாம் வருந்துபவர்.

விலங்குகள் மக்களை விட்டு அகலாது பிணித்துக்கொண்டே யிருக்கும்! நீ நாடு துறந்ததும் நலமேயாயிற்று!' என்று மனத்துள் கருதி மகிழ்ந்தார்.

## அற உரைகள்

பின்னர் புத்தர் பெருமான், ஆயிரமாயிரமாகக் கூடி யிருந்த மக்கள் அனைவரும் அமைதியோடிருந்து அறம் கேட்க ஆவலாயிருப்பதை அறிந்து, தாம் பிறந்த திருப்பதியி லேயே, தமது அரிய தரும உபதேசத்தை ஆரம்பித்தார். ஐயனின் அருள் மொழிகளிற் சில* வருமாறு :

'அறிவுக்கு எட்டாதவைகளை ஆராய்ந்துகொண்டு காலத்தை வீணாக்கவேண்டாம்; அளக்க முடியாததைச் சொற் களால் அளவிட முயலவேண்டாம்; ஆழம் காண முடியாத ஆழத்திலே சிந்தனைக் கயிற்றை ஆழ்த்தி இழக்கவேண்டாம்! வினவுவோனும் தவறு செய்கிறான்; விடையிறுப்போனும் தவறே செய்கிறான். (சித்தத்துக்கு எட்டாதவைகளைப்பற்றி) எதுவும் சொல்ல வேண்டாம்!

'திரை திரையாகக் கழற்றிவிட்டுப் பார்த்தாலும், பின் னும் திரைமேல் திரையே மூடிக்கொண்டிருக்கும்.

'உலகில் இருப்பதைக் கொண்டு உண்மையை உணர் தலே போதும். வாழ்வும், மரணமும், இன்பமும், துன்பமும் இங்கே இருக்கின்றன; காரணத்தைத் தொடர்ந்தே காரியம் நிகழ்கின்றது. கால வெள்ளத்திலே நிகழ்ச்சிகள் அலைமேல் அலையாக வீசிக்கொண்டு செல்லும் ஆறுபோல் தொடர்பாக நிகழ்ந்துகொண்டே யிருக்கின்றன. ஒரே ஆறுதான், ஆயி னும் ஒன்றல்ல; மலையிலே தோன்றிய வெள்ளம் சமவெளி யிலே இல்லாது மாறுகின்றது. ஆறு கடலில் மறைந்து,

---

*'The Light of Asia'—By sir Edwin Arnold. உலகப் புகழ் பெற்ற கவிவாணர் எட்வின் ஆர்னல்ட் பொதுவான புத்தருடைய உப தேசங்களைத் தொகுத்து அளித்துள்ளார்; அவைகளிலே மிக முக்கிய மானவை இங்கே குறிக்கப்பெற்றுள்ளன.

ஆவியாகி, மேகமாகி, மலைமீது பொழிந்து, மீண்டும் ஆறாக வந்து ஓடுகின்றது. அதற்கு ஓய்வுமில்லை ; ஒழிவுமில்லை.

'பிரார்த்தனை செய்து என்ன பயன்? இருள் வெளுத்து விடாது! மோன நிலையைப் பார்த்து வரம் கேட்டால், மௌனமே பதிலாக வரும்! சோதர சோதரிகளே, இயற்கையிலேயே துக்கமடைந்துள்ள நீங்கள், கடுமையான தவங்களால் மேலும் மேலும் உங்களை வருத்திக்கொள்ள வேண்டாம்.

'தெய்வங்களை வேண்டி உயிர்ப்பலிகள் அளிக்க வேண்டாம்; பண்டம், பழங்கள் வைத்துப் பூஜை செய்து பலனை எதிர்பார்த்து இருக்க வேண்டாம்!

'உயர்ந்தோர்க்கும், தாழ்ந்தோர்க்கும், யாவர்க்குமே தமது விதியின்மேல் அதிகாரம் உண்டு. உயிரும் சதையும் கொண்டு உலாவும் ஜீவர்கள் யாவர்க்கும் விதி ஒன்று தான் : அவரவர் செயலே இன்பத்திற்கும், ஏனைத் துன்பத்திற்கும் காரணம்.

'செய்த வினைகளே இப்போது செய்யும் வினைகளின் காரணம் ; கடைசியாகச் செய்தது இப்போது முதலாவதாக விளைகின்றது ; முதலாவது செய்ததே முடிவானதாக விளைகின்றது.

'தேவர் யாவரும் முன்செய்த நல்வினைப் பயனைத் துய்ப்பவரே ; நரகில் உழல்வோர் அனைவரும் பழமையான தங்கள் தீவினைப் பயனைத் துய்ப்பவராம்.

'இந்திரனுக்கு மேலாக உங்கள் நிலையை நீங்களே உயர்த்திக்கொள்ள முடியும் ; புழுக்கள் கொசுக்களுக்குக் கீழாகவும் உங்களைத் தாழ்த்திக் கொள்ளவும் முடியும்—இரண்டும் உங்கள் கையிலேதான் இருக்கின்றன.

'சம்சார சக்கரம்* சுழல ஆரம்பித்தால், அது நிற்பதுமில்லை; மாறுவதுமில்லை ; சக்கரத்தின் ஆயக்கால்கள் மேலும் கீழுமாய்ச் சுற்றிக்கொண்டேயிருக்கும்!

'சம்சார சக்கரத்தில் சிக்குண்டு கிடந்தால், விமோசனமில்லை; வேதனையே மிஞ்சும்.

---

*சம்சார சக்கரம்—ஜனன மரண வளையம்.

'நீங்கள் கட்டுண்ட அடிமைகள் அல்லர்! உறுதியாக மனம் வைத்தால், நீங்கள் சக்கரச் சுழலிலிருந்து வெளியாகி, நீங்காத இன்பத்தை யடையலாம்; நல்லன யாவும் மேலும் நன்மைகளாகவே முடியும்.

'புத்தராகிய நானும் புவனத்து மக்களின் துயரை யெல்லாம் எண்ணிக் கண்ணீர் சிந்தினேன்; ஆனால் இப்போது இன்புற்று நிற்கிறேன்! ஏனெனில் யாவர்க்கும் விடுதலை நிச்சயம்—நான் அதைப் பெற்றுவிட்டேன்!

'துயரப்படும் மக்களே! ஒன்றை உணர்ந்து கொள்ளுங்கள். உங்கள் துயரங்களுக்குக் காரணம் நீங்களே! ஜனன மரணச் சக்கரத்தில் உங்களை மாட்டி வைத்து, அதன் ஆயக் கால்களை நீங்கள் ஆர்வத்தோடு பற்றிக்கொண்டு வேதனைப் படும்படி வெளியேயுள்ள எவரும் செய்யவில்லை.

'எது தப்பினாலும் தருமம் தப்புவதில்லை! நன்மையைச் செய்தால் நல்லதே விளையும்; தீமையைச் செய்தால் தீமையே விளையும்.

'தருமத்திற்குக் கோபமில்லை; மன்னிக்கும் இயல்பும் கிடையாது; செய்த வினையின் பயன் இன்றோ, நாளையோ, விளைந்தே தீரும்.

'எனவே, கொலைஞன் தனது கூரிய வாளால் வேறொன்றைக் கோறுவதில்லை,* தன்னையேதான் கொலைசெய்து கொள்கிறான்; அநீதி செய்யும் நீதிபதி தனக்கே அநீதி இழைத்துக் கொள்கிறான்; திருடரும் தீயோரும் பறிக்கும் பொருளைத் திரும்பக் கட்டியே தீரவேண்டும். கரும விதியைக் கடந்து செல்ல முடியாது!

'துக்கம் எங்கிருந்து வருகிறதென்பதை அறிந்து, பழைய தீமைகளுக்குப் பரிகாரம் செய்து, ஆசாபாசங்களையும் அசத்தியங்களையும் களைந்தெறிந்து, துன்பத்தைப் பொறுமையுடன் தாங்கி, இன்னா செய்தவர்களுக்கும் இனியவற்றையே செய்து, வாழ்க்கைப் பற்றை வேருடன் களைந்துவிட்டால், பின்னால் பிறப்புமில்லை, இறப்புமில்லை! அந்நிலையே நிருவாணம்!

---

*கோறல் - கொல்லுதல்

'துக்கத்தை உணருங்கள்! துக்க உற்பத்தி எங்கே என்று காணுங்கள்! துக்க நீக்கம் அவசியம் என்பதை அறியுங்கள்! அதற்கு உரிய வழியை நன்கு கடைப்பிடியுங்கள்!

'இதுவே நான் கூறும் எட்டுப் படிகளுள்ள அறவழி:

'காட்சியைத் தெளிவாக வைத்துக்கொள்ளுங்கள்; நான்கு வாய்மைகளையும் உணர்ந்து, பாவபுண்ணியங்களைப் பகுத்து அறியுங்கள். அறத்திற்கு அஞ்சுங்கள்; கருமத்தைக் கவனியுங்கள். இதுவே நற்காட்சி!

'அவாவை அறுத்து, வெறுப்பு, வெகுளி, கொடுமை முதலியவற்றை நீக்கி, எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொண்டு வாழுங்கள். இதுவே நல்ல சங்கற்பம், நல்லூற்றம்!

'பொய், புறங்கூறல், இன்னாச் சொல், வீண் பேச்சு முதலியவற்றை ஒழித்து, வாய்மை, அடக்கம், இன்சொல், பயனுள்ள அற ஆராய்ச்சி முதலிய நற் பண்புகளை வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் உள்ளத்திலே அரசர் கொலு வீற்றிருக்கிறார். அந்தக் கொலு மண்டபத்தின் வாயில் உங்களுடைய வாய். வாயில் கண்ட வார்த்தைகள் நுழைந்துவிடாமல் காத்துக் கொள்ளுங்கள்; அமைதி, அழகு, கௌரவம் ஆகியவற்றில் ஊறிய சொற்களையே வாய் பழகிக்கொள்ள வேண்டும், இதுவே நல்வாய்மை!

'உயிர்க்கொலை, களவு, காமம், பொறாமை, வெகுளி, முதலிய தீமைகளை விலக்கி, நல்லொழுக்கத்துடன் வாழ வேண்டும். எதைச் செய்தாலும், அச் செயல் முன்னால் உள்ளத்தில் ஊன்றி வளரும் ஒரு தீமையைக் களையவேண்டும், அல்லது ஒரு நன்மை முளைவிட்டு வளரும்படி செய்ய வேண்டும். இதுவே நற்செய்கை!

'வாழ்வுக்கு வேண்டிய பொருள்களை நீதியான முறையிலே உழைத்துப் பெறவேண்டும். இதுவே நல் வாழ்க்கை!

'தீய எண்ணங்களை அழித்து நல்லெண்ணங்களை வளர்க்க இடைவிடாமல் எப்போதும் முயற்சி செய்து கொண்டேயிருக்கவேண்டும். இதுவே நல்லூக்கம்!

'அறிவினுல் கண்ட வாய்மைகளைப் போற்றி எப்போதும் கருத்தோடு இருக்கவேண்டும். கவலையின்றிச் சிறிது கண்ணை மூடினாலும், தீமைகள் உள்ளத்தில் புகுந்துவிடும். கருத்துடைமையே **நற்கடைப்பிடி** !

'உள்ளத்தை ஒருநிலைப்படுத்தலே **நல்லமைதி** !

'ஒரேயடியாக எல்லோரும் வானத்துச் சூரியனை அடைந்துவிட முடியாது. சிறிது சிறிதாக உயரே பறந்து, பயிற்சிபெற்று, உறுதியுடன் முயன்று வந்தால், நினைத்த இலட்சியம் நிச்சயம் கைகூடும் !

'நவரத்தினங்களைவிடச் சிறந்தது நான் கூறும் நல்லறம்; தேனினும் இனியது இந்தத் தருமம்; இன்பங்களில் எல்லாம் இதுவே தலைசிறந்தது !

'எதற்கும் முதலில் ஒழுக்கம் வேண்டும்.

'எந்தப் பிராணியையும் கொல்லாதீர்கள் !

'தானம் கொடுங்கள்; பிறர் உதவிகளை ஏற்றுக் கொள்ளுங்கள். ஆனால், பேராசை, புரட்டு, பலவந்தம் ஆகிய வழிகளில் பிறர் பொருளில் ஆசை வைக்கவேண்டாம் !

'பொய்ச் சாட்சி சொல்லவேண்டாம்; அவதூறு கூற வேண்டாம்; சுத்தமான அகத்திலிருந்து வரும் பேச்சே சத்தியமானது !

'மயக்கமளிக்கும் குடிவகைகளை ஒழித்துவிடுங்கள் !

'பிறன் மனைவியைத் தீண்டலாகாது. உடலால் இயற்றும் மற்றைத் தீமைகளையும் கைவிட்டு விடுங்கள் !'

ததாகதரின் தெள்ளிய மொழிகளைக் கேட்ட மக்கள் தங்கள் மனமாசுகள் கரைந்து, நல்லுணர்வு பெற்று மகிழ்ந்தனர். அரசரும் உள்ளம் பரவசமடைந்து தமது அரண்மனைக்குத் திரும்பிச் சென்றார். புத்தர் நியக்குரோத வனத்திலேயே தங்கியிருந்தார். அன்று கூடியிருந்த அரச குலத்தைச் சேர்ந்தவர்களும், பிரபுக்களும், எக்காரணத்தாலோ பெருமானை மறுநாள் அமுது உண்ண அழைக்காமலே சென்றுவிட்டனர்.

## தந்தைக்கு உபதேசம்

மறுநாள் காலையில் அருள்வள்ளல் தமது வழக்கம் போல் பிச்சையெடுக்க வெளியேறி நகருக்குள்ளே செல்ல லானார். அவர் கையிலே சுரைக்குடுக்கை போன்ற மண் பாத்திரம் இருந்தது. அவருடைய அகத்தின் ஒளி முகத்தி லும் உடலிலும் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அவரைப் பார்ப்பதற்காகத் தெருக்களிலும், மாடிகளிலும், சாளரங் களிலும், பெண்களும் பிரபுக்களும் நிறைந்து நின்றனர். ஐயன் சாலை மண்ணிலே நடந்து ஐயமெடுக்கும் காட்சி யைக் கண்ட பலருடைய கண்களிலே கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. வீடுதோறும் பெண்கள் ஒருவரை ஒரு வர் முந்திக்கொண்டு அமுது அளித்தனர். புத்தர் தெருக் களில் நடந்து பிச்சை யெடுக்கிறார் என்ற செய்தி நகரெங் கும் பரவி, விரைவிலே மன்னருக்கும் எட்டிற்று.

மன்னர் மிகவும் துக்கமடைந்தார்; துக்கம் கோபமாக மாறிவிட்டது. உடனே அரண்மனையிலிருந்து குதிரை மீது ஏறிப் புத்தரை நாடித் தெருக்களுக்கு விரைந்து சென்றார். வழியிலே பெருமான் வீடுதோறும் வாசலில் சிறிது நேரம் மௌனமாக நிற்பதையும், அவர் கரங்களிலே பிச்சையெடுத்த சோற்றுடன் திருவோடு விளங்குவதையும் கண்ட மன்னர், விசனம் தாங்காமல், 'என்னை ஏன் இப்ப டிக் கேவலப்படுத்துகிறீர்? உமக்கும் பிக்குக்கள் அனைவர்க் கும் உணவளிக்க எனக்குச் சக்தி 'இல்லையா?' என்று கேட்டார்.

'இது என் குல மரபு!' என்றார் புத்தர்.

'இது எவ்வாறு மரபாகும்? நீர் உதித்த இராஜ வமி சத்திலே, ஒரு மன்னர்கூட உணவுப் பிச்சை எடுத்த தில்லையே!' என்று மன்னர் மீண்டும் கூறினார்.

'பேரரசே! தாங்களும், தங்கள் குலத்தினரும் அரசர் களின் வமிசம் என்று கூறிக்கொள்ளலாம்; என் வமிசம்

தொன்று தொட்டுத் தோன்றிவந்துள்ள புத்தர்களுடைய வமிசம். அவர்கள் உணவுக்காகப் பிச்சையெடுத்தே வாழ்ந்து வந்தனர்!' என்று பகவர் மறுமொழி புகன்றார்.

அத்துடன் தாம் தவத்தால் கண்டெடுத்த புதையலைத் தந்தையார்க்கும் அளிக்க விரும்புவதாய்க் கூறி, அண்ணல் அவருக்குத் தனியாக அறவுரை புகன்றார்: 'கனவுகளைக் கைவிட்டு, உள்ளத்தை உண்மைக்காகத் திறந்து வையுங் கள்! அற ஒழுக்கத்தைக் கையாண்டு நிலையான இன்பத்தை அடையுங்கள்!' என்று கேட்டுக் கொண்டார்.

மன்னர் அவர் கையிலிருந்த திருவோட்டைத் தம் கையிலே வாங்கி வைத்துக்கொண்டு, அவரை அரண் மனைக்கு அழைத்துச் சென்றார். அன்று புத்தருக்கும் பிக்குக்களுக்கும் அங்கேயே அமுது படைக்கப் பெற்றது. பின்னர் புத்தருடைய உபதேசத்தால் சுத்தோதனர், 'சோதாபத்தி' என்ற நிர்வாண வழியின் முதற்படியை அடைந்தார். அன்றே நியக்குரோத வனத்தைச் சங்கத் திற்கு அளிப்பதாக மன்னர் புத்தர் கையில் புனித நீர் ஊற்றி அர்ப்பணம் செய்து கொடுத்தார்.

## யசோதரை

போதி வேந்தர் அரண்மனைக்கு வந்திருந்த சமயத்தில் அரச குலத்தைச் சேர்ந்த அனைவரும் அவர் இருந்த இடத் திற்கு வந்து அவரைக் கண் குளிரத் தரிசித்துக் கொண்ட னர். அவருடைய சிற்றன்னை கௌதமி அவரிடம் உப தேசம் பெற்று, நிருவாண வழியின் முதற்படியை அடைந் தாள். ஆனால் தேவி யசோதரை மட்டும் அங்கு வரவில்லை. அரசர் அவளுக்குத் தனியாகச் சொல்லி விட்டிருந்தும், அவள், 'என்னிடத்தில் சித்தார்த்தருக்கு ஏதும் சிரத்தை யிருந்தால், அவரே என்னை வந்து பார்ப்பார்!' என்று சொல்லி விட்டாள்.

புத்தரும் யசோதரை எங்கே என்று விசாரித்தார்.

அவள் வர மறுத்து விட்டாள் என்பதைக் கேட்டு, அவர் எழுந்திருந்து, தாமே அவளைச் சென்று பார்க்க வேண்டும் என்றும் புறப்பட்டார். தம்முடன் சாரீபுத்திரரையும், மௌத்கல்யாயனரையும் அழைத்துக் கொண்டார். 'சோகத்தால் உள்ளம் நொந்துள்ள யசோதரை ததாகதரைத் தொட்டாலும், நீங்கள் பேசாதிருங்கள்!' என்று அவர் அவர்களுக்குக் கூறிவைத்தார். சுத்தோதனரும் அவர்களோடு சென்றார்.

யசோதரை கூந்தலை இழந்து, காவிச் சீலை அணிந்து கொண்டு, தனது அறையில் அமர்ந்திருந்தாள். புத்தர் பெருமான் அங்கே சென்றதும், அவள் எழுந்து அவர்முன் தரையில் வீழ்ந்து வணங்கி, அவருடைய இருபாதங்களை யும் பற்றிக்கொண்டு கண்ணீர் பெருக்கிக் கதறினாள், பின்னர் அறையில் மன்னரும் இருப்பதை அறிந்து விரைந்து எழுந்தாள். புத்தர் தமது ஆசனத்தில் அமர்ந்ததும், தேவியும் சிறிது தூரத்திற்கு அப்பால் சென்று அமர்ந்தாள்.

சுத்தோதனர், கணவரைப் பிரிந்த ஏழு ஆண்டுகளுக்கு மேலாக அவள் வாழ்ந்து வந்த முறையை வியந்துகொண்டே விவரமாகக் கூறினார். சித்தார்த்தரைப்பற்றிய செய்திகள் வந்த காலங்களில், அவள் அவைகளைக் கேட்டுத் தன் கணவரைப் போலவே தானும் நடந்துவந்தாள். அவரைப் போலவே தானும் சீவர ஆடை புனைந்தாள்; கூந்தலைக் கத்தரித்துக் கொண்டாள்; ஒவ்வொருநாளும் ஒருவேளை உணவே உட்கொண்டு வந்தாள்; சித்தார்த்தரைப் போலவே தானும் தரையின்மீது படுத்து உறங்கி வந்தாள்.

வள்ளலும், யசோதரையை அன்புடன் நோக்கி, முந்திய பிறவிகளிலும் அவள் தம்மையே விரும்பித் தம்முடனேயே வாழ்ந்து, கொடுந்துன்பங்களையெல்லாம் தாங்கிக் கொண்டு, போதிசத்துவராக விளங்கிய தமக்கு ஒப்பற்ற உதவிசெய்து வந்த வரலாறுகளை எடுத்துக் கூறினார். இந்

தப் பிறவியிலும் அவள் தம்மை அடைந்ததன் காரணம், முற்பிறவிகளில் அவள் புத்தரையே மணந்து கொள்ள வேண்டுமென்று நோற்ற நோன்பு என்றும், அவளுடைய தவ வலிமைக்கு அளவில்லை என்றும் விளக்கிச் சொன்னர்.

## இராகுலன்

புத்தர் கபிலவாஸ்துவுக்கு வந்த ஏழாம் நாளில் யசோதரை, மைந்தன் இராகுலனை இளவரசனைப் போலச் சிங்காரித்து, அப்போது அரண்மனைக்கு விஜயம் செய்திருந்த புத்தர்பிரானை அவனுக்குக் காட்டி, என் அன்பே! அதோ பிக்குக்களின் நடுவே தங்க நிறத்துடன், பிரும்மாவைப் போன்ற ஒளியுடன் இருக்கும் துறவியே உனது தந்தையாகிய புத்தர் பெருமான். அவர் பிறக்கும்போது நான்கு பெரிய கொப்பரைகளிலே நவரத்தினங்களும் நிதிகளும் நிறைந்து தோன்றின. அவர் துறவு பூண்டு சென்றபின் அவைகளும் கண்ணுக்குப் புலனுகாமல் மறைந்திருக்கின்றன. நீ அவரிடம் சென்று, நீ யுவராஜா என்றும், மகுடம் புனைந்தபின் நீ மாநிலத்து அரசனுக விளங்குவாய் என்றும் சொல்லி, தந்தையின் உடைமை மைந்தனுக்கு உரியது என்பதால், அவருடைய பொக்கிஷத்தை உனக்கு அளிக்கும்படி கேட்டு வரவேண்டும்!' என்று சொல்லிக்கொடுத்தாள்.

அன்னை கூறியபடியே இராகுலன் புத்தரிடம் சென்ருன். அவர் அப்போது அமுது செய்துகொண்டிருந்தார். அவரைக் கண்டதுமே, செல்வன் உள்ளத்தில் அன்பு பெருகிற்று. அவர் உணவு அருந்தியபின்பு, அருகே சென்று 'ஐய! எனக்கு உரிய தந்தையின் செல்வத்தைத் தந்தருள வேண்டும்!' என்று கேட்டுக்கொண்டான். புத்தர் ஒரு முடிவும் கூருவிடினும், அவன் அவரைத் தொடர்ந்து நியக்குரோத வனத்திற்கே சென்றுவிட்டான்.

அங்கும், 'ஐய! எனக்கு உரிய தந்தையின் செல்வத்

தைத் தந்தருள வேண்டும்!' என்று கூறினன். அருள் வள்ளல் தாம் போதிமரத்தின் அடியில் பெற்ற அழியாத செல்வத்தையே அவனுக்கு அளிக்க வேண்டும் என்று கருதினர். உடனே சாரீபுத்திரரைப் பார்த்து, என் குமரன் பிதிரார்ச்சிதத்தைக் கேட்கிறன். கவலைகளேயும் துக்கங்களேயும் உண்டாக்கும் அழியும் செல்வங்களே அவனுக்கு நான் அளித்தல் கூடாது; அழியாத செல்வமாகிய புனித வாழ்வையே அவனுக்குச் செல்வமாக வழங்கவேண்டும்!' என்று கூறினர்.

பின்னர் இராகுலனை நோக்கி, 'பொன்னும், வெள்ளியும், நகைகளும் என்னிடம் இல்லே. உயர்ந்த வாழ்வுக்குரிய செல்வங்களே நீ பெறவிரும்பினல், அவைகளேத் தாங்கிப் பாதுகாக்கும் சக்தி உனக்கு இருந்தால், நான்கு வாய்மைகளே உனக்குக் கற்பிக்கிறேன்; அவற்றை உணர்ந்து கொண்டு, எட்டு முறைகள் அமைந்த அஷ்டாங்க மார்க்கத்தை நீ பின்பற்ற வேண்டும். அடையத்தக்க இன்பங்களிலே தலேசிறந்த இன்பத்தை அடைவதற்காக உள்ளத்தைப் பயிற்சி செய்து வரும் பிக்குக்களின் சங்கத்திலே நீயும் சேருவதற்கு விரும்புகிறயா?' என்று பெருமான் வினவினர்.

இராகுலன் உள்ள உறுதியுடன், 'ஆம் விரும்புகிறேன்!' என்றன்.

அவனுக்கு மேற்கொண்டு பிறவியில்லே என்பதை உய்த்துணர்ந்த பெருமான், சாரீபுத்திரரை அழைத்து, இராகுலனுக்கு உபதேசம் செய்து, சங்கத்தில் சேர்த்துக் கொள்ளும்படி கூறினர். அவ்வாறே இராகுலன் சுமார் ஏழுவயதிலேயே துறவு வாழ்க்கையை மேற்கொண்டான்!

பிற்காலத்தில் போதிவேந்தரின் முக்கியமான சீடர்களில் இராகுலனும் ஒருவனுகக் குறிப்பிடப்பெற்றிருக்கிறன். அவன் தெளிந்த சிந்தனேயும், தேர்ந்த ஞானமும், உயர்ந்த ஒழுக்கமும் பெற்று விளங்கினன். அத்தகைய

உயர்நிலையை அடைவதற்கு முன்னால், போதிநாதர் அவனைத் தம் அருகிலே வைத்துக்கொள்ளாமல், வெகுதூரத்திலுள்ள விகாரையிலே தங்கி விநய ஒழுக்கங்களை நிறைவேற்றி வரும்படி உபதேசித்திருந்தார். அப்படியிருந்தும், அவன் நாவடக்கமின்றிப் பிக்கு ஒழுக்கத்தில் நிலைபெறாமல் இருப்பதாகக் கேள்வியுற்று, பெருமான் ஒருமுறை அவனைக் கண்டு அறவுரை புகன்ற விவரம் 'மகாராகுல சூத்திர'த்தில் காணப் பெறுகின்றது. சத்தியத்தின் மகிமையையும், நாவடக்கத்தின் நயத்தையும், நாவினால் பொய் கூறுதல் உள்ளத்தை எவ்வாறு பாழாக்குகின்றது என்பதையும், அதனால் வாழ்வே தாழ்வடையும் என்பதையும் பகவர் அந்தச் சூத்திரத்திலே அமைத்துக் கூறியுள்ளார்.

பகவர் அவன் இருந்த விகாரைக்குச் சென்று அவனை ஒரு பாத்திரத்தில் நீர் கொண்டுவந்து தம் பாதங்களைக் கழுவும்படி கூறினார். அவன் அவ்வாறே செய்தான். அழுக்கு நீர் இருந்த பாத்திரத்தைச் சுட்டிக் காட்டி, 'இதிலுள்ள தண்ணீர் குடிக்கத் தக்கதா?' என்று பகவர் கேட்டார். 'இல்லை!' என்றான் இராகுலன்.

அப்போது பகவர் சொன்னார்: 'உன் விஷயத்தை இப்பொழுது எண்ணிப் பார்! நீ என் குமாரனாயிருந்தும், ஒரு மன்னரின் பேரனாயிருந்தும், தானாக யாவற்றையும் துறந்த சிரமணனாயிருந்தும், உன் உள்ளம் அசுத்தமாகாதபடி உன் நாவைப் பொய்யுரையிலிருந்து காத்துக்கொள்ள உன்னால் முடியவில்லையே!'

தண்ணீரை வெளியே கொட்டிய பிறகு, பகவர் மீண்டும், 'இந்தப் பாத்திரம் குடிதண்ணீர் வைக்கத் தகுதியுள்ளதா?' என்று கேட்டார்.

'இல்லை, பகவரே, பாத்திரமும் அசுத்தமாகிவிட்டது!' என்றான் இராகுலன்.

அப்போது பகவர் சொன்னார்: 'உன் விஷயத்தை இப்பொழுது எண்ணிப் பார்! நீ சீவர ஆடை அணிந்திருப்

பினும், நீ இந்தப் பாத்திரத்தைப்போல, அசுத்தமாகிவிட்ட பின், உயர்ந்த காரியம் எதற்கும் நீ தகுதியுள்ளவனு?'

பிறகுக் காலிப் பாத்திரத்தைக் கையில் எடுத்துப் பிடித்துக்கொண்டு, பகவர் அதை வேகமாகச் சுழற்றிக் கொண்டிருந்தார். 'இது கீழே விழுந்து உடைந்துவிடுமே என்று உனக்கு அச்சம் ஏற்படவில்லையா?' என்று கேட்டார்.

'இல்லை, இந்தப் பாத்திரம் மிக மலிவானது; இது உடைந்தால் அதிக நஷ்டமில்லை!' என்முன் குமரன்.

அப்போது பகவர் சொன்னுர்: 'உன் விஷயத்தை இப்போது எண்ணிப் பார்! எல்லையற்ற பிறவிகள் என்னும் சுழலிலே உன் உடல் சிக்குண்டு சுழன்று வருகிறது; உன் உடலும், மற்ற உடைந்து சிதறும் பொருள்களைப் போலவே, அதே பொருள்களால் ஆக்கப்பட்டிருக்கின்றது; ஆதலால் அது உடைந்து விட்டால், அதிகச் சேதமில்லை. பொய்கள் பேசும் இயல்புடையவன் ஞானிகளால் வெறுத்து ஒதுக்கத் தக்கவன்.'

இராகுலனுக்கு வெட்கம் அதிகமாகி விட்டது. பகவர் மீண்டும் அவனுக்குப் போதிக்க ஆரம்பித்து ஓர் உபதேசக் கதை கூறினுர்:

'ஓர் அரசனிடம் வல்லமையுள்ள யானை ஒன்றிருந்தது; அது ஐந்நூறு சாதாரண யானைகளைத் தனியே எதிர்த்து நிற்கும் ஆற்றலுள்ளது. அந்த யானை போருக்குச் செல்லுகையில், அதன் தந்தங்களில் கூர்மையுள்ள நீண்ட வாள்களைக் கட்டுவார்கள்; கால்களில் ஈட்டிகளைக் கட்டுவார்கள்; வாலில் ஒரு இரும்புக் குண்டைக் கட்டுவார்கள். யானைப்பாகன் ஆயுதங்களோடு விளங்கும் யானையைப் பார்க்கும்போது மகிழ்ச்சியடைவான். அதன் துதிக்கையில் அம்புப் பட்டுச் சிறு புண் ஏற்படினும், அதன் உயிருக்கு அபாயம் என்பதை உணர்ந்து, அவன், யானை தன் துதிக்கையை நன்முகச் சுருட்டிக் கொண்டிருக்கும்படி பழக்கி

வைத்திருந்தான். ஆனால் போர்க்களத்திலே அந்த யானை ஒரு வாளைப் பற்றுவதற்காகத் துதிக்கையை வெளியே நீட்டி விட்டது. பாகன் மனத்திலே கலவரமடைந்து, அரசனிடம் கலந்து பேசினான். மேற்கொண்டு அந்த யானை போருக்கு ஏற்றதன்று என்று அவ்விருவரும் முடிவு செய்தனர்!

'இராகுலா! மனிதர்கள் மட்டும் தங்கள் நாக்குக்களைக் காத்துக் கொண்டால் போதும்; எல்லாம் நலமாக முடியும்! போர் புரியும் யானை தன் துதிக்கையில் அம்பு பாயாமல் கவனித்துக் கொள்வதுபோல், நீயும் உன்னைக் காத்துக் கொள்வாயாக!

'சத்தியத்தின் மீதுள்ள அன்பினால் உண்மையானவர்கள் நீதி முறையில் வழுவாமல் நிற்கின்றனர். நன்கு பழக்கப்பெற்று, அமைதியாயிருக்கும் யானை தனது துதிக்கையை மிதித்துக்கொண்டு மன்னர் ஏறுவதற்கு இணங்கி அடக்கமாயிருக்கும். அதைப்போல், நீதி ஒழுக்கத்தைப் பேணும் மனிதனும், தன் வாழ்வு முழுவதும் அடக்கத்துடன் நேர்மையாகக் கழித்துவிடுவான்.'

இந்தச் சொற்களைக் கேட்ட இராகுலனுக்கு ஆழ்ந்த துக்கமுண்டாயிற்று. இதன் பிறகு அவன், குறைகூறவே இடம் இல்லாதபடி, ஆர்வத்தோடு முயற்சி செய்து, புனித வாழ்வு வாழ்ந்து வரலானான்.

### நந்தன்

சுத்தோதன மன்னரின் இரண்டாவது மைந்தரின் பெயர் **நந்தன்.** மகாராணி கௌதமி சித்தார்த்தரைக் குழந்தைப் பருவத்தில் எடுத்து வளர்த்த பின்பு பெற்ற குலக்கொழுந்து அவன். சித்தார்த்தர் வனம் புகுந்த பின்பு, யாவரும் அவனையே இளவரசாகக் கருதிவந்தனர். அழகிலே அவன் மன்மதனைப் போலிருந்ததால் அவனுக்குச் சுந்தர—நந்தன் என்று பெயர் வந்தது. புத்தர் பெருமான் கபிலை

யம்பதியில் தங்கியிருக்கும்போதே அவனுக்குத் திருமணம் நடந்தது ; அதே நன்னாளில் அவனுக்கு இளவரசுப் பட்டமும் சூட்டப்பெற்றது. நாட்டை ஆள்வதற்கும், தமக்குப் பின்பு தமது வமிசத்தின் பெயரைப் புகழுடன் நிலைநிறுத்தவும், சுத்தோதனர் அவனையே நம்பிக் கொண்டிருந்தார். புத்தர் அவனையும் பிக்குவாகச் செய்து, சங்கத்தில் சேர்த்துக் கொண்டு விட்டார்.*

இளங் குமரனை இராகுலனும், நந்தனும் துறவிகளாகி விட்டதில் சுத்தோதனர் அடைந்த வருத்தத்திற்கு அளவேயில்லை. ஆயினும் புத்தருக்கு எதிராக அவர் எதையும் செய்ய இயலாதவராயும் இருந்தார். எனவே அவர் போதி வேந்தரைக் கண்டு, 'இனியாவது இளைஞர்களைப் பெற்றோருடைய சம்மதமில்லாமல் சங்கத்திலே சேர்க்காமலிருக்க வேண்டும்!' என்று வேண்டிக் கொண்டார். ஐயனும் உடனே அதற்கு இசைந்தார்.

## ஆனந்தன்

அரச குலத்தைச் சேர்ந்தவர்களில் அடுத்தாற்போல் பௌத்த தருமத்தை ஏற்றுக்கொண்டு பிக்குவானவர்களிலே முதன்மையானவன் ஆனந்தன்.† அவன் சுத்தோதனருடைய தம்பி அமிர்தோதனருடைய குமாரன். அவன் புத்தருடைய பிரதம சீடனாவான் என்று குழந்தைப் பருவத்திலேயே சோதிடர் கூறியிருந்தனர். ஆகவே புத்தர் தலைநகருக்கு வந்திருந்த சமயத்தில், அமிர்தோதனர் ஆனந்தனைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வந்தார்.

---

*நந்தன் பிக்குவான விவரத்தை அடுத்த இயலில் காண்க.

†ஆனந்தன் சுக்கிலோதனருடைய புதல்வன் என்றும், அவனும் தேவதத்தனும் உடன் பிறந்த சகோதரர்கள் என்றும் சில வரலாறுகள் கூறும். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் இவ்வாறே குறித்துள்ளார்கள்.—'புத்தர் சரித்திரம்'

ஆயினும் பெற்றோரிடமிருந்து பிள்ளைகளையும், மங்கையர்களிடமிருந்து, கணவர்களையும், குடும்பங்களி லிருந்து தலைவர்களையும் பிரிப்பதற்காகவே அவதரித்துள்ள புத்தர் பிரான் ஆனந்தனை விடவில்லை. ஒரு நாள் அமிர் தோதனருடைய மாளிகையின் தாழ்வாரத்திற்குப் போய் அவர் அங்கே அமர்ந்து கொண்டார். அவ்வமயத்தில் அவர் களைப்போயிருந்ததைத் தன் அறையிலிருந்து கண்ட ஆனந் தன், மெதுவாக வெளியே வந்து, ஒரு விசிறியைக் கொணர்ந்து ஐயன் அருகில் நின்று விசிற ஆரம்பித்தான். காந்தத்தைக் கண்ட இரும்புபோல் அவன் உள்ளம் பகவர் பால் சென்று விட்டது. சோதிடர் சொல்லியிருந்த கூற்று மெய்யாகிவிட்டது!

பகவர் அவனுக்கு உபதேசம் செய்தார். அவர் புறப் பட்டுச் செல்லும் போது, ஆனந்தனும் கூடவே புறப்பட்டு விட்டான். அப்போது மாளிகைக்கு வெளியே வந்த அமிர் தோதனர் ஆனந்தனை அழைத்தார். அவன் திரும்ப மன மின்றித் தயங்கினான்; தான் துறவு பூணுவதற்கு அனுமதி வேண்டினான். அமிர்தோதனர் முதலில் மறுத்ததாயும் பின்னால் தமது சகோதரர் சுத்தோதன மன்னரின் ஆலோ சனையின் பேரில், மனமுவந்து அனுமதியளித்ததாயும் ஒரு கதை உண்டு. சுத்தோதனர், 'நாம் அனுமதி கொடுக்கா விட்டாலும் நம் பிள்ளைகள் துறவிகளாவது நிச்சயம்; அவர்கள் தந்தையின் சொல்லைத் தட்டியவர்கள் என்று பெயர் வராமல், நாமாகவே அனுமதியளித்து விடுதல் நலம்!' என்று கூறினாராம்.

ஆனந்தன் பெருமானின் அழைப்புக்குப் பாத்திர மான அருமைத் தொண்டன். பெருமானிடத்தில் அவன் கொண்டிருந்த அன்புக்கும் அவதியில்லை.* அவன் ஒழுங்கு நிலை நின்று, ஐயன் அறவுரைகள் கூறும்போதெல்லாம்

*அவதி - எல்லை

ஆர்வத்தோடு அவைகளைக் கேட்டு வந்தான். பிற்காலத்தில் பெருமானுடைய ஐம்பதாவது வயதிலிருந்து அவருடைய ஆயுள் முழுவதும் அவர் அருகிலேயே யிருந்து அவருக்குத் தொண்டு செய்யும் அணுக்கத் தொண்டனாக விளங்கியவன் ஆனந்தனே. பின்னால் நெடுநாள் பிக்குவாயிருந்த அவனை 'ஆனந்த தேரர்' என்றே அழைப்பது வழக்கம். புத்தருடைய பிரதம சீடர்களிலே மகாகாசியபர், சாரிபுத்திரர் போன்ற பேரறிவும், மௌத்கல்யாயனர் போன்ற இருத்தி ஆற்றலும், கேட்டவுடன் மனத்தால் பற்றி உணர்ந்து கொள்ளும் அஞ்ஞாத கௌண்டின்யரைப் போன்ற உறுதியும் ஆனந்தனுக்கு இல்லை எனினும், அவன் மெய்யறிவு பெற இடைவிடாது உழைத்து வந்தான். இடையிடையே உலக பாசங்கள் ஏற்பட்டு அவன் சித்தம் தடுமாறுகையில், ஐயன் அதைத் கருத்தால் உணர்ந்து, அவ்வப்போது அவனுக்கு உதவி புரிந்து, அறிவு புகட்டி வந்ததாக விவரிக்கும் கதைகள் பல இருக்கின்றன. மொத்தத்தில், புத்தர் பெருமானின் திருநாமத்தை நினைக்கும் போதெல்லாம், அதனுடன் ஆனந்தனுடைய நினைவும் தோன்றும்படி, அவன் ஐயனின் நிழல்போல அவர் வாழ்க்கை முழுவதும் அவரோடு இணைபிரியாமல் இருந்து வந்தான். மேலும் இன்று உலகத்திலே பௌத்த தருமத்தைப்பற்றி விளக்கும் முக்கியமான சூத்திரங்கள் அடங்கிய 'சுத்த பிடகம்' மகாகாசியபர் தலைமையில் ஆனந்தன் வரிசைப்படுத்திக் கூறிய வரலாறுகளும் உபதேசங்களும் அடங்கிய நூலாகும். மகாகாசியபரும் மற்றைத் தோழர்களும் அவைகளைச் சரி பார்த்து ஏற்றுக்கொண்டபின், அவைகள் குறித்து வைக்கப்பெற்றன.

## அரசகுலக் குமரர்கள்

சித்தார்த்தர் அவதரித்த காலத்திலேயே சாக்கியகுலத் தலைவர்கள் தங்கள் குடும்பம் ஒவ்வொன்றுக்கும் ஒரு வீரன்

வீதம் அவருக்குத் தொண்டுசெய்ய அனுப்புவதாகச் சபதம் செய்துகொண்டிருந்தனர். அவர் அரசராக இருந்து ஆட்சி செய்தால், அந்தச் சாக்கிய இளைஞர்கள் அரசசேவை புரிய வேண்டும் என்றும், அவர் துறவியானால் அவர்களும் துறவிகளாகி அவரைப் பின்பற்றவேண்டும் என்றும் அவர்கள் தீர்மானித்திருந்தனர். ஏனெனின் சித்தார்த்தர் பிறந்ததிலிருந்தே அவர் அடைவது அரசா, துறவா என்பது நிச்சயமில்லாதிருந்தது. முன்னால் குடும்பத் தலைவர்கள் செய்திருந்த உறுதிப்படி, ஆயிரக்கணக்கான சாக்கிய வாலிபர்கள் பிக்குக்களாகி ஐயனைச் சரணடைந்தனர்; எண்பதினாயிரம் பேர்கள் என்று பழைய நூல்களில் கூறப்பட்டிருக்கின்றது!

மற்றைக் குடும்பத்தாரைப் போலவே சுத்தோதனருடைய மற்றொரு சகோதரரான துரோணோதனரின் மைந்தர்களான அனுருத்தனும் மகாநாமனும்* தமக்குள் யார் பிக்குவாகவேண்டும் என்பதுபற்றி யோசித்தனர். முடிவில் அனுருத்தன் அதற்கு இசைந்து, அன்னையிடம் சென்று அனுமதியும் பெற்றான்.

அனுருத்தனுடன் சித்தார்த்தருடைய மைத்துனனான தேவதத்தனும்†, பத்திரிகன், பகு, கிம்பிலன் முதலிய அரச குலக் குமரர்களும் துறவு பூணுவதற்காகப் புத்தரை நாடி நியக்குரோத வனத்திற்குச் சென்றனர். அவர்களுக்குத் தலைகளை முண்டிதம் செய்வதற்காக அரண்மனை நாவிதனான உபாலி என்பவனும் அவர்களுடன் சென்றான்.

தவப்பள்ளியை அடைந்ததும் அரச குமாரர்கள் தலை

---

*அனுருத்தன் அமிர்தோதனர் மைந்தன் என்றும் கூறுவர். மொத்தத்தில், அரச குமாரர்களின் வரலாறு பற்றி நூல்களிலே பெருங் குழப்பமே காணப்படுகின்றது.

†தேவதத்தனும் சுக்கிலோதனருடைய புத்திரன் என்றும் கூறப்படும்.

களை மழுங்கச் சிரைத்துக்கொண்டு குளிப்பதற்குச் சென்றனர். போகுமுன் அவர்கள் தங்கள் ஆடைகளையும் ஆபரணங்களையும் கழற்றி உபாலியிடம்கொடுத்திருந்தனர்.

உபாலி யோசித்தான் : 'அரச வமிசத்தைச் சேர்ந்த கட்டிளங் காளைகளே இரத்தின ஆபரணங்களையும், உடைகளையும் தூர எறிந்துவிட்டுத் துறவு பூணச் செல்கிறார்கள்! நான்மட்டும் இந்தத் துன்பச் சுமைகளைச் சுமந்துகொண்டிருப்பதில் என்ன பயன்? பாவியேன் இழிகுலத்தில் தோன்றியிராவிடின், இதற்குள் புத்த பகவரின் மேன்மையான தருமத்தை ஏற்றுக்கொண்டு துறவியாகி, என் பிறவிப் பிணியை ஒழித்திருப்பேனே!' இவ்வாறு ஏக்கமுற்று, அவன் பள்ளிக்கு வெளியே நின்றுகொண்டிருந்தான்.

அப்பொழுது அங்கு வந்த சாரீபுத்திரர் அவனைக் கண்டு, அவன் சிந்தையையும் உணர்ந்துகொண்டு, 'உபாலி! ஏன் சோகமுற்று நிற்கிறாய்!' என்று வினவினார். உபாலி தன் உள்ளக் கருத்தை உரைத்தான். அவர் அவனைக் கருணை வள்ளலிடம் அழைத்துச் சென்றார்.

'இங்கே வா, பிக்கு! வந்து பரிசுத்த வாழ்க்கையை மேற்கொள்வாயாக!' என்று அண்ணல் பரிவுடன் வரவேற்றார். அந்தக் கணத்திலேயே உபாலி, தலை முடி இழந்து, கையில் திருவோட்டுடன், காவியுடையில் பிக்குவாக மாறிக் காட்சியளித்தான்!

சாக்கிய இளைஞர்கள் நீராடித் திரும்பிவந்து ஐயனைத் தரிசிக்கையில், அவர் அருகில் உபாலி பிக்குவாக அமர்ந்திருந்ததைக் கண்டு வியப்படைந்தனர். அவர்கள் தீக்கை பெறுகையில், பிக்குவான அவனையும் வணங்க நேர்ந்தது பற்றி அவர்கள் சிறிது மனக்கசப்பு அடைந்ததாகத் திபேத்திய வரலாறு கூறுகின்றது. போதிநாதரும், அவர்கள் எல்லோரிடத்திலும் முழு நம்பிக்கை கொள்ளாமல், சந்தேகத்துடனேயே அவர்களைச் சங்கத்தில் சேர்த்துக்கொண்டார்.

அன்று சங்கத்தில் சேர்ந்த பிக்குக்களிலே அனுருத்தன் முதன்மையானவன். அதுவரை அவன் சித்தார்த்தரைப் போல மூன்று அரண்மனைகளிலே சுகமாக வசித்து வந்தவன். அவன் தத்துவ நூல் ஆராய்ச்சியில் தலைசிறந்து விளங்கியதால், பின்னால் பௌத்த தரும வளர்ச்சிக்கு அவன் பெருந்துணையாக விளங்கினான்.

தேவதத்தன் பொறாமைக் குணமுள்ளவன். கிறிஸ்து நாதருக்கு யூதாஸ் என்ற துரோகி வாய்த்ததுபோல, அவன் போதிநாதருக்கு வாய்த்திருந்தான். அவனால் பிற்காலத்தில் அவருக்கும் தருமத்திற்கும் பல கேடுகள் விளைந்தன.

நாவிதன் என்று மற்ற இளவரசர்களால் முதலில் இகழப்பெற்ற உபாலியே பின்னால் பெரிய மேதையாக விளங்கி, புத்தர் பெருமான் சங்கத்திற்கும் பிக்குக்களுக்கும் விதித்திருந்த ஒழுக்க விதிகளை யெல்லாம் தொகுத்து 'விநய பிடகம்' என்ற நூலைத் தயாரிக்கக் காரணமாயிருந்தான்.

இவ்வாறு, முன்னால் ஓர் இளவரசர் துறவு பூண்டதற்காக வருந்திக்கொண்டிருந்த கபிலையம்பதி, புத்தருடைய விஜயத்தால், துறவிகளின் பெரு நகரமாக மாறிவிட்டது. கண்ட இடமெல்லாம் காஷாய உடைகள்! திரும்பிய இடமெல்லாம் திருவோடுகள்! பார்த்த இடமெல்லாம் பிக்குக்களின் திருக்கூட்டம்!

பதின்மூன்காம் இயல்

# நந்தன்*

'எறும்புகடை அயன்முதலா'
எண்ணிறந்த என்றுரைக்கப்
பிறந்திறந்த யோனிதொறும்
பிரியாது சூழ்போகி
எவ்வுடம்பில் எவ்வுயிர்க்கும்
யாதொன்ருல் இடர்எய்தின்
அவ்வுடம்பின் உயிர்க்குயிராய்
அருள்பொழியும் திருவுள்ளம்!'

—வீரசோழியம் உரை

உதய சூரியனைப்போல் கபிலையம்பதியில் புத்தர் பெருமான் அறியாமை இருளை அகற்றி ஒளி பரப்பிக்கொண்டிருந்த சமயத்தில் அவருடைய அருமைத் தம்பியாகிய நந்தன், புதிதாக மணமாகி யிருந்த தன் மனைவியுடன், தனது புதிய அரண்மனையின் மாடியிலே கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தான். நந்தன் அழகிலே சிறந்த ஆடவர் திலகம். அவன் மனைவி சுந்தரி அழகிலே அவனுடன் போட்டியிடுபவளாக இருந்தாள். கற்பகத்தின் பூங்கொம்புபோல் விளங்கிய அவளுடைய உடலில் அணிந்திருந்த நவரத்தினங்கள் இழைத்த நகைகள் அவள் எழிலால் அழகு பெற்று விளங்கின. அவளைப் பார்த்தால் மலர்கள் நிறைந்த

*இந்த இயல் மகாகவி அசுவகோஷர் இயற்றிய 'சௌந்தர - நந்தா' என்ற அழகிய காவியத்தை ஆதாரமாய்க் கொண்டது.

பூம்பொய்கையைப் பார்ப்பதுபோலிருக்கும். அவள் புன்னகையைக் கண்டு அன்னங்கள் ஓடிவரும்; கண்களைக் கருவண்டுகள் வட்டமிடும்; ஓங்கியெழும் மார்பைக் கண்டு தாமரை முகைகள் தலை கவிழும்.

## காதலர் பிரிவு

ஒரு சமயம் அரண்மனை மாடியிலே நந்தன் கண்ணாடி பிடித்து நிற்க, அவன் காதலி அதைப் பார்த்தவண்ணம் தன் முகத்தைச் சிங்காரித்துக் கொண்டிருந்தாள். அப்போது நந்தனுடைய மூச்சு கண்ணாடியில் பட்டுவிட்டது. உடனே அவள் கோபமடைந்து, அருகிலிருந்த தாமரை மலரை எடுத்து அதைக்கொண்டு அவனை அடித்தாள். நந்தன் பேரானந்த முற்றுக் கண்ணாடியை ஒழுங்காகப் பிடித்து நின்றான்.

அந்த நேரத்தில் அந்த அரண்மனையில் பிச்சை ஏற்பதற்காகப் புத்தர்பிரான் உள்ளே நுழைந்து பார்த்து, எவரும் தம்மைக் கவனியாததால், வெளியேறிச் சென்றார். பணிப்பெண்கள் பலரும் பல வேலைகளில் ஈடுபட்டிருந்ததால், எவரும் அவர் வரவைக் கவனிக்கவில்லை. சில பெண்கள் சுண்ணம் இடித்துக்கொண்டிருந்தனர்; சிலர் பட்டு உடைகளுக்கு வாசனைத் திரவியங்கள் போட்டுக்கொண்டிருந்தனர்; சிலர் அறைகளைச் சிங்காரித்துக்கொண்டிருந்தனர்; ஒவ்வொருவரும் ஏதேதோ வேலைகளில் ஈடுபட்டிருந்தனர்.

ஆனால் மாடியிலிருந்து வெளியே பார்த்த ஒரு பெண் ஐயன் அரண்மனையிலிருந்து திருவோட்டுடன் வெளியேறுவதைக் கண்டுவிட்டாள். பெருமானிடம் நந்தனுக்கு அளவற்ற அன்பும் மரியாதையும் உண்டென்பதை அறிந்த அவள், உடனே அவனிடம் ஓடிச்சென்று செய்தியைக் கூறினாள். நந்தன் அதைக் கேட்டு என்ன செய்வதென்று தோன்றாமல் செயலற்று நின்றான். உடனே இருகைகளை

யும் கூப்பிச் சுந்தரியை வணங்கி, வெளியே சென்றுவர விடை கேட்டான். அண்ணல் அரண்மனையில் அமுது பெறாமல் வெறுங்கையோடு வெளியேறியதைக் கேட்டு, அவளும் மனமிரங்கி அனுமதி கொடுத்தாள். ஆனால் தான் நெற்றியில் வைத்த பொட்டுக் காய்வதன் முன்னம் அவன் விரைந்து வரவேண்டும் என்று சொல்லியனுப்பினாள்.

நந்தன் தன் அணிகளும் ஆடைகளும் அசைந்தாடக் காற்று உலுக்கிய கற்பகமரம் போல் கீழே இறங்கி ஓடிச் சென்றான். பின்னர் நடை தளர்ந்துவிட்டது. ஒருபக்கத்திலே ஐயனிடம் அவனுக்குள்ள மரியாதை அவனை முன்னால் இழுத்துச் சென்றது; மற்றொரு புறத்திலே காதலியின் கடைக்கண்பார்வை அவனைப் பின்னுக்கு இழுத்தது. உள்ளத்தில் உறுதியில்லாமல் அவன் தத்தளித்தான். பிறகு ஒருவாறு முன்னோக்கி விரைந்து, பல தெருக்களையும் தாண்டிச் சென்றான்.

## நந்தனின் தடுமாற்றங்கள்

வழியிலே சாக்கியர் பலர் கூடியிருப்பதை அவன் கண்டான். குதிரைகளிலும், தேர்களிலும் ஊர்ந்து வந்தவர்கள் அனைவரும் கீழே இறங்கிப் போதிநாதரை வணங்கிக் கொண்டு நின்றனர். அந்தப் பெருங்கூட்டத்திலே நந்தன் நுழையவில்லை; வெளியே யிருந்துகொண்டே உலக நாயகருக்கு நடைபெறும் மரியாதைகளைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து நின்றான். சிறிது நேரத்திற்கெல்லாம், அவன் விரைவில் திரும்ப வேண்டும் என்ற சுந்தரியின் ஆணை நினைவுக்கு வந்துவிட்டது. அவன் மெதுவாக அங்கிருந்து வெளியேறி, ஒரு சந்தின் வழியாகத் திரும்பிச் சென்றான்.

பெருமான் அன்று சகோதரனுக்கு நல்லறிவு புகட்ட வேண்டும் என்று புறப்பட்டவராதலால், நந்தன் நழுவிச் செல்வதை உள்ளத்தில் உணர்ந்து, தாமும் கூட்டத்தை

விட்டு வெளியேறி, விரைவாகத் தம்பியைத் தொடர்ந்து சென்றார்.

நந்தன் திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்கையில், அருள் முனிவர் தன்னைத் தொடர்ந்து வருவதைக் கண்டு, திரும்பி வந்து அவரை வணங்கினான். 'நான் அரண்மனை மாடியிலிருந்தபோது தாங்கள் வந்தீர்களாம். அரண்மனையில் தங்களை வரவேற்கும் பேறு எனக்குக் கிடைக்காமற் போய்விட்டது! இப்பொழுது நண்பகலாகிவிட்டதால் என்னுடன் வந்து அமுது செய்யவேண்டுகிறேன்!' என்று வள்ளலை அன்புடன் அழைத்தான்.

ததாகதர் பசியில்லையென்று சமிக்கையால் காட்டினார். நந்தன் மீண்டும் அவரை வணங்கிவிட்டுப் புறப்பட ஆரம்பித்தான். அண்ணல் தமது பிச்சைப் பாத்திரத்தை அவன் கையிலே கொடுத்தார். அதைக் கையில் வாங்கி வைத்துக்கொண்டே, அவர் வேறு திசையில் எதையோ பார்த்து நிற்கையில், நந்தன் மெல்ல அரண்மனை நோக்கி நடக்க ஆரம்பித்தான். ஆனால் அவனால் அந்தச் சந்தைக் கடந்து செல்ல முடியவில்லை. அவன் மேலே நடக்கமுடியாமல் அண்ணலின் ஆற்றல் அவனைத் தடுத்து நின்றது. உலகத்தின் துன்ப வாழ்விலிருந்து விடுதலை பெறுவதற்கு இன்றியமையாத அறிவு அவனிடம் குறைந்திருப்பதையும், புலன் இன்பங்களிலே அவன் உள்ளம் வெறிகொண்டு மூழ்கியிருப்பதையும் எண்ணி, ஐயன் தமது மகிமையால் அவனைத் தம்மோடு வருமாறு கட்டாயப்படுத்தினார்.

நந்தன் வருத்தத்தோடு மெல்லத் தொடர்ந்து சென்றான். அரண்மனையிலே சுந்தரி தன் வரவை எதிர்பார்த்துத் துடித்துக்கொண்டிருப்பாளே என்றும், அவள் திலகம் அவ்வளவு நேரத்திற்குள் காய்ந்திருக்குமே என்றும் கவலையுற்றான். முடிவில் இருவரும் நியக்குரோத வனத்தை அடைந்தனர்.

காமம், மோகம் முதலியவைகளை அழித்து, அறம்

ஆனந்தத்துடன் விளையாடிக் கொண்டிருக்கும் அறப் பள்ளியை அடைந்ததும், ததாகதர் தரும சக்கரம் பொறித் திருந்த தமது கரத்தால் தம்பியின் தலையைத் தடவிக் கொடுத்து, அருகே அமரும்படி சொன்னார். பிறகு அவன் அறியவேண்டிய நீதிகளை முறைப்படுத்திக் கூறலானார் :

'அன்ப! இந்த உடல் வர்ணம் தீட்டிய பொம்மை! இது புண்கள் நிறைந்தது. இந்த உடல் நலிந்து தேய்வது. இது நோய்களின் கூடு; மிகவும் நொய்மையானது. இந்த அசுத்தக் குவியல் உடைந்து சிதறிப் போகும் ; வாழ்வின் முடிவு சாவுதான்! ஆதலால் உண்மையான சாந்தியைப் பெறுவதற்கு நீ முயல வேண்டும்.

'கனவு போன்ற நிலையில்லாத காதல் இன்பத்தி லிருந்து உள்ளத்தை விடுவித்து ஒருநிலைப் படுத்தவேண்டும். தீயைக் காற்றினால் அவிக்க முடியுமா? அதுபோல் காம ஆசைக்கு இடம் கொடுத்துத் திருப்தியடையவே முடியாது.

'அறச் செல்வமே தலைசிறந்த செல்வம்; மெய்ஞ்ஞானத் தின் சுவையே தெவிட்டாத தீஞ்சுவை; அகத்தின் நிறைவே ஆனந்தம்.

'நீதியான நல்வாழ்வை நாடி இடைவிடாது செய்யும் முயற்சியே முதன்மையான பயனை அளிக்கும்.

'மனிதன் அழகை அழிப்பதில் முதுமைக்கு இணை வேறில்லை ; துன்புறுத்துவதில் நோய்க்கு இணை வேறில்லை ; அபாயங்களில் மரணத்தைவிட வேறு என்ன இருக்கிறது? நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இவை ஏற்பட்டே தீரும்.

'பற்று பெரிய விலங்கு; ஆசை பெரிய வெள்ளம்; காமம் பெருநெருப்பு—உலகிலே இந்த மூன்றும் இல்லா திருந்தால்தான், உனக்கு இன்பம் நிலைத்திருக்கும்.

'ஒருவனுடைய அன்புக்கு உரியவர்களிடமிருந்து பிரிவு ஏற்பட்டே தீரும்; துக்கமே தவிர்க்க முடியாத அனுபவமா யிருக்கிறது.

'ஆதலால் ஞானம் என்னும் கவசத்தை நீ அணிந்து கொள். பொறுமையுள்ளவன்மீது துக்கத்தின் அம்புகள்

பாயமுடியாது. சிறு நெருப்பை மூட்டிப் பெரிய புற்குவியலை எரியச் செய்யலாம்; அதுபோல் பிறவியை ஒழிப்பதற்கு உனக்குள்ள வீரியத்தைத் தூண்டிக்கொள்!

'பச்சிலை வைத்திருப்பவனைப் பாம்பு தீண்டாது; உலகப் பற்றைத் துறந்தவனை—மாயையை வென்றவனைத் துக்கமாகிய பாம்பு தீண்ட முடியாது.

'தியானத்தினாலும், சமாதியாலும் முடிவான உண்மையை உணர்ந்து கொள்பவன் மரணத்திற்கு அஞ்ச மாட்டான்; போர் முறைகளில் தேர்ந்தவன் இருப்புக்கவசம் அணிந்து, நல்ல வில்லும் ஏந்தி வெற்றிக்காகப் போராடுபவன்—யுத்த காலத்திலே சோர்வுற மாட்டான்!'

போதம் விளக்கும் இப் பொன்மொழிகளைக் கேட்ட நந்தன் உற்சாகமான உரத்த குரலில், 'நல்லது!' என்றான்; ஆனால் அவன் உள்ளம் தளர்ந்திருந்தது.

பெருமான் ஆனந்தரை அழைத்து, 'ஆனந்தா! நந்தன் உள்ச்சாந்தி பெறுவதற்காக அவனுக்குக் காஷாயமளித்துச் சங்கத்தில் சேர்த்துக் கொள்!' என்று கூறினார்.

நந்தன் ஆனந்தருடன் போகும் வழியில், 'நான் பிக்குவாக விரும்பவில்லை!' என்றான். உடனே ஆனந்தர் அவன் கருத்தைப் பகவரிடம் வந்து கூறினார்.

புத்தர் மீண்டும் நந்தனுக்கு உபதேசிக்கலானார் :

'உன் தமையனாராகிய நானே துறவியாகி விட்டேன்! உன் சகோதரர்கள் பலரும் என்னைப் பின்பற்றி வந்துவிட்டனர்! நம்முடைய அரச வமிசத்தில் பூர்வத்தில் எத்தனையோ மன்னர்கள் ஆசாபாசங்களை அறுத்துக் கொண்டு மனச்சாந்தி பெறுவதற்காகத் துறவு பூண்டிருந்தார்கள். கொள்ளை நோய் பரவியுள்ள நாட்டிலே உயிரில் ஆசையுள்ளவர் எவரும் தங்கியிருக்க மாட்டார்; தான் சாக வேண்டும் என்று கருதுவோனே தங்கியிருப்பான். அவனைப்போல நாமும் நடந்து கொள்ளலாமா? தீப்பற்றி எரியும் வீட்டில் அமைதியுடன் தூங்க முடியுமா? நோய், வயோதிகம் என்னும் கொழுந்து

களுடன் எரியும் மரணத் தீயால் வெந்து கொண்டிருக்கும் உலகை விட்டுவர உனக்கு மனமில்லையா ? தூக்கு மேடைக்குச் செல்லும் மனிதன் குடிவெறியில் ஆனந்தக் கூத்தாடி ஆர்ப்பரிப்பதுபோல, மரண வலைக்குள் சிக்கிய மனிதன் அதை உணராமலிருந்தால் வருந்தத்தக்க விஷயமேயாகும்.

'உலகம் நிலையற்றது என்பதை உணர்ந்து கொள் ! இது ஒரு மாயை ! துக்க வலையை அறுத்துக்கொண்டு வெளியேற வேண்டும் என்று உனக்கு விருப்பமிருந்தால் மயக்கத்தைக் கைவிடு ! உன் காதலியிடம் கொண்டுள்ள மயக்கத்தை முதலில் நீக்க வேண்டும். மரணம் வந்து அழைப்பதன் முன்னம், இளமை இருக்கும்போதே, மகோன்னதமான நன்மையைப் பெறுவதற்கு உள்ளத் துணிவு கொண்டு எழுவாய், எழுந்து உரிய செயல்களை மேற்கொள்வாயாக !'

நந்தன் அவர் உத்தரவுப்படியே நடப்பதாக உறுதி கூறினான். ஆனந்தர் அவனை அழைத்துச் சென்று அவன் தலைமுடியை மழிக்க ஏற்பாடு செய்தார். அப்போதுதான் சிறைப்பிடித்து வரப்பெற்ற காட்டு யானை கலங்குவது போல், அவன் கலங்கிக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தான். தலை முண்டிதமாயிற்று ; காவியுடையும் தரிக்க நேர்ந்தது !

## சுந்தரியின் நிலை

அரண்மனையிலே சுந்தரி வழிமேல் விழிவைத்து நெடு நேரம் நாயகன் வரவை எதிர்பார்த்திருந்தாள். அவனைக் காணாமையால் தன் அணிகளைக் களைந்தெறிந்து, மலர்களை உதிர்த்து விட்ட செடிபோல், மலரமளியிலே சாய்ந்திருந்தாள். கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிந்து கொண்டிருந்தது. பணிப்பெண்களின் காலோசை கேட்ட போதெல்லாம் அவளுடைய கண்கள் அறையின் வாசலைப் பார்த்தன. நாயகன் வரவில்லை ; அவள் உள்ளத்தில் கோயில் கொண்டிருந்த நந்தனைக் காண வில்லை !

நந்தன் ஏமாற்றுவானு? வேறு யாரோ ஒரு காதலியை நாடிப் போயிருப்பதால்தான் தன்னை அவன் வஞ்சிக்கத் துணிந்தான் என்று அவளுக்குத் தோன்றிற்று. 'எவளையோ போய்ப் பார்ப்பதற்காகப் புனிதமான பகவரின் பெயரைச் சொல்லிக்கொண்டு போயிருக்கிறுன். அந்த முனிவரிடம் உண்மையான பக்தியுள்ளவர் எவரும் பொய் கூறத் துணியார். இப்போது நந்தன் வேறு எவளுக்கோ கண்ணுடி பிடித்துக்கொண்டு நிற்கிறுன்!' என்று அவள் எண்ணிஞள். இவ்வாறு எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி அவள் நெஞ்சம் புண்ணுஞள்.

அந்நிலையில் பணிப்பெண் ஒருத்தி ஓடிவந்து, 'இளவரசர் தலையைச் சிரைத்துக்கொண்டு பிக்குவாகி விட்டாராம்! அவர் அழுது புலம்பிக்கொண்டேயிருக்கையில், அவருடைய அண்ணு—ததாகதர்—அவரைத் துறவியாக்கி விட்டாராம்!' என்று கூறிஞள்.

சுந்தரிக்கு வாழ்வே இருண்டுவிட்டது போலாயிற்று. அவள் உள்ளமுடைந்து அமளியிலிருந்து கீழே தரையிலே உருண்டுவிட்டாள். கனிகளின் கனம் தாங்காமல் முறிந்து வீழ்ந்த மலர்க்கொம்புபோல் அவள் தரைமீது கிடந்து துவண்டு கொண்டிருந்தாள். கண்ணீரால் கண்கள் சிவந்தன. உள்ளத்தின் துயரம் உடலை உலுக்கிக் கொண்டிருந்தது.

தாமரைத் தளம் போன்ற கண்கள், தாமரை முகம், செந்தாமரைபோன்ற சிவந்த வண்ணமுள்ள துகில் ஆகியவற்றுடன் ஒரு மலர் மாலை வெய்யிலில் காய்ந்து வாடுவது போல், அவள் நுடங்கிக் கிடந்தாள். தரைமீது வீழ்ந்த திருமகளின் தங்கச் சிலை போலிருந்தது அவள் தோற்றம். அந்த அறையிலே தன் நாயகனுடைய அணிகளையும் ஆடைகளையும் பார்க்கும் போதெல்லாம் அவள் உள்ளம் பற்றியெரிந்தது. தான் மீட்டும் வீணையை அவள் பார்த்ததும், தன் இதய வீணையின் தந்திகள் யாவும் அறுந்து கிடப்

பதை எண்ணிஞள்! அவளுக்கு எல்லாப் பொருள்களும் கைத்தன; வாழ்வே துயரமாகி விட்டது! அந்த நேரத்தில் அவள் என்ன செய்வதென்று தோன்ருமல், எழுவதும், அமர்வதும், அழுவதும், அரற்றுவதுமாகித் தன் உடைகளைக் கிழித்துக்கொண்டும், முகத்தை நகங்களால் பிராண்டிக் கொண்டும் கோரமாகக் குமுறிக் கொண்டிருந்தாள்.

அவளுடைய துயரங்களைக் கண்டு ஆற்ருத சேடியர் பலரும் அவளைச் சுற்றி அமர்ந்துகொண்டு, எத்தனையோ ஆறுதல் மொழிகள் கூறிஞர்கள். எதுவும் அவளது செவியில் ஏறவில்லை. விஷமுண்ட பாணம் நெஞ்சிலே பாய்ந்த பெண் யானைபோல அவள் பிளிறிக் கொண்டிருந்தாள்.

வயது முதிர்ந்த சேடி ஒருத்தி அவளுடைய நிலையைத் தெளிவிக்க விரும்பி, அண்டையிலே சென்று பேச ஆரம்பித்தாள். 'அரச குலத்திலே உதித்த ஒரு ஞானியின் நாயகி நீ! உனது நாயகர் தருமத்தை மேற்கொண்டதற்காக நீ இப்படித் துயரப்படுதல் சரியன்று. உங்களுடைய இட்சுவாகு வமிசத்திலே துறவுபூண்டு பெருந்தவம் செய்யும் வழக்கம் இன்று நேற்று ஏற்பட்ட வழக்கமன்று. வீரச் சாக்கியர்கள் துறவு பூண்டால், அவர்களுடைய மனைவியர் கற்பே தங்கள் குலதனம் என்று காத்துப் போற்றி வருவார்கள். நீ அழுவதற்குச் சிறிதும் நியாயமேயில்லை. நந்தர் வேெருரு பெண்ணை இச்சித்துச் சென்ருல், நீ அழலாம். துறவியாயிருக்கும்போது அவர் உறுதிகுலைந்து ஓடிவந்து விட்டாலும், நீ உட்கார்ந்து அழவேண்டியதுதான். ஏனென்ருல் நல்ல குடும்பத்திலே தோன்றிய நங்கைக்கு அதைவிட துக்கம் வேறில்லை! நல்லது நடந்து விட்டால், நாம் மனத்தைத் தேற்றிக்கொண்டு களிப்புறவேண்டுமே அன்றிக் கவலைப்பட்டு அழவேண்டியதில்லை!' என்று ஆணித்தரமான உண்மைகளை அவள் எடுத்துக் காட்டிஞள்.

மற்ரெருத்தி, 'நந்தர் அங்கே நிலைத்திருக்க மாட்டார்!

உன்னை எண்ணி விரைவிலே வந்துவிடுவார்!' என்று ஆறுதல் கூறினள்.

## நந்தனின் கடைத்தேற்றம்

தவப்பள்ளியிலே நந்தன் வெளித்தோற்றத்திலே துறவியாகவும், அகத்திலே தன் காதல் தேவதையை உபாசித்துக் கொண்டும் இருந்ததால், அவனுக்கு அமைதியே ஏற்படாமற் போயிற்று. தன்னைச் சுற்றியிருந்த முனிவர்கள் அருமைக் காதலிகளைப் பிரிந்து எப்படித்தான் தனித்திருந்து தவம் செய்கிருர்களோ என்று அவன் அதிசயித்தான். 'கொடிய உறுதியுடன் விரதம் மேற்கொண்ட துறவிகள் முன்னும் இருந்தார்கள், இன்றும் இருக்கிருர்கள், இனியும் இருப்பார்கள்! ஆயினும் காதலை அறுத்துக் கொண்டு வெளியேறுவது எளிதான செயலன்று! சுடர் விட்டுப் பிரகாசிக்கும் கண்களுடன் விளங்கும் காதலியின் மதிமுகத்தையும், குயில் போன்ற இனிய குரலையும் யாரும் எளிதில் மறந்துவிட முடியாது. கயிறு, மரம், இரும்பு முதலியவற்ருல் செய்த விலங்குகளை எளிதில் தகர்த்து விடலாம்; ஆனுல் காதல் விலங்கை உடைப்பது கடினம்!' என்றெல்லாம் அவன் சிந்தித்துக் கொண்டிருந்தான். புத்தரின் நினைவும், போக ஆசையும் அவனை மாறிமாறி அலைத்துக் கொண்டிருந்தன.

'நான்தான் வீட்டைவிட்டு வெளியேறினேன்; ஆனுல் என் காமக் குரோதங்கள் உள்ளத்தைவிட்டு வெளியேற வில்லையே! பழைய ஆடையைக் களைந்தெறிந்தேன்; ஆயினும் பாவப் போர்வை என்னைவிட்டு அகலவில்லையே! எனக்குத் தெள்ளிய அறிவும், திடமான சித்தமும் வாய்க்க வில்லையே! நான் என் செய்வேன்!' என்று அவன் ஏங்கி, மீண்டும் அரண்மனைக்கே திரும்ப ஆசைகொண்டான். இல்லறமும் இல்லாமல், துறவறமும் இல்லாமல், நடுவிலே ஊசலாடிக்

கொண்டிருத்தல் அவனுக்குப் பெரும் வேதனையாகி விட்டது.

புத்தரும் வெளியே பிச்சைக்குப் போயிருந்தார். நந்தன் துறவைத் துறந்து, தவத்திற்கு விடைகொடுத்துவிட்டுக் கிளம்பத் தீர்மானித்தான்.

அவன் உள்ளப் போக்கை அறிந்து கொண்ட பிக்கு ஒருவர், அவன் அருகில் வந்து அமர்ந்து, அரிய நீதிகள் பலவற்றை எடுத்துச் சொன்னார். 'உன் கண்ணீர்த் துளிகள் உன் உள்ளத்தின் அறியாமையை வெளிக்காட்டுகின்றன. உணர்ச்சிகளை வென்று அடக்கி, உயர்ந்த சாந்தியைப் பெற முயற்சி செய்யவேண்டும். உள்ளத்தின் இயல்புகள் ஒன்றல்ல, இரண்டல்ல—அனந்தம்! மனத்தின் ஆழத்தை மதிப்பிட்டுக் கூறமுடியாது. மனத்தை ஒருநிலைப் படுத்துவதே தலைமையான கலை!' என்று அவர் கூறினார். 'தீப்பட்டு எரியும் காட்டில் தன் கூட்டை எண்ணிப் பறவை ஓடுவது போலிருக்கிறது உன் எண்ணம்!' என்று அவர் பல உபமானங்கள் மூலமும் ஞானமார்க்கத்தை விளக்கியுரைத்தார். 'புல் தானாக வளரும்; ஆனால் பயிரைப் பாடுபட்டுத் தான் வளர்க்க வேண்டும். துக்கம் தானாக வளரும் ; ஆனால் இன்பத்தைப் பாடுபட்டே வளர்க்க வேண்டும். உள்ள நிறைவே இன்ப மார்க்கம்!' என்று கூறி, மனிதன் தன் முயற்சியாலேயே நிலையான இன்பத்தைப் பெற முடியும் என்பதை அவர் எடுத்துக் காட்டினார்.

எல்லாவற்றையும் கேட்டும் நந்தன் மனம் திரும்பவில்லை. பிக்கு பெருமானிடம் நிகழ்ந்ததைக் கூறினார்.

பெருமான் நந்தனைத் திருப்புவதற்கு ஒரு புது முறையைக் கையாள வேண்டும் என்று கருதினார். அவர் அறமுணர்த்திய வரலாறுகளைப் பார்த்தால், உபதேசம் பெறும் பாத்திரங்களுக்கு ஏற்றவாறு பலதிறப்பட்ட முறைகளைக் கையாண்டிருப்பது தெரியவரும். சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் போன்ற மேதாவிகள் உள்ளக் கனிவோடு

அவரை அண்டுகையில், 'வருக!' என்று கூறி ஒருசொல்லா லேயே அவர்களை அவர் ஆட்கொண்டார். அக்கினி காசியபர் சம்பந்தமாக நாகத்தை வென்று, வேறு சில விசித்திரச் செயல்கள் புரிந்து, அவரை வழிப்படுத்தினார். இருத்தி ஆற்றல்களை உபயோகிக்கவே கூடாது என்று அவர் சீடர்களுக்கு உபதேசித்து வந்தார். ஆனால் அவர் தமது அருமைத் தந்தையர்க்காகவும், சாக்கியர்க்காகவும் தாமே சில சித்துக்களைச்* செய்து காட்டினார். பொதுவாக இனிய உரையாடல் மூலமே அவர் பெரும்பாலான மக்களுக்குத் தமது தருமத்தை விளக்கி வந்த போதிலும், இவ்வாறு சில சந்தர்ப்பங்களில் வேறு முறைகளைக் கையாண்டதாக வரலாறுகள் குறிக்கின்றன. பிற்காலத்தில் அங்குலிமாலன் என்ற பெரிய கொள்ளைக்காரனை அவர் ஆட்கொண்டு அருளியது ஒரு தனி முறையாக விளங்குகின்றது. அத் தீயோனின் மனத்தை வசியம் செய்து, 'வா!' என்று அவர் தம்முடன் அழைத்து வந்துவிட்டார். ஆனால் நந்தன் விஷயத்தில், ஆப்பைக் கொண்டே ஆப்பை அகற்றவேண்டும் என்ற முயற்சியை அவர் கையாளத் தீர்மானித்தார்.

சலன புத்தியுள்ள தம்பியை அவர் தம்மோடு அழைத்துக்கொண்டு ஆகாய மார்க்கமாக இமயமலை முதலிய பிரதேசங்களுக்குச் சென்று, கடைசியில் வானத்திலே சென்று இந்திரன் உலகையும் அவனுக்குக் காண்பித்தார். அங்கேயிருந்த தேசுமயமான தேவகன்னியரிடம் நந்தன் நெஞ்சைப் பறிகொடுத்தான். அவன் உள்ளத்தில் சுந்தரி அமர்ந்திருந்த இடத்தில் அப்சரசுகள் அமர்ந்து கொண்டனர்.

புத்தர் அவனைத் திரும்பப் பூவுலகுக்கு அழைத்து வந்தார். அவன் மனப்பான்மையை அறிந்து, 'வானுலக வாழ்க்கை வேண்டுமானாலும், சித்தத்தை அடக்கிச் சீலம் பேணித் தவம் செய்யவேண்டும்!' என்பதை வற்புறுத்திக்

*சித்துக்கள் - மாய வித்தைகள்.

கூறினர். அதன்படியே நந்தன், அப்சரசுகளை மனத்திலே பதித்துக்கொண்டு, துறவு நெறி நின்று நோன்பை மேற் கொண்டான்.

சில நாட்களுக்குப் பின்பு ஆனந்தர் அவனைக் கண்டு பேசினர். 'நீ நல்ல முறையில் திருந்தி, உண்மை நெறியில் நிலைத்து நிற்கிருய். ஆனல் அப்சரசுகளை அடைய வேண் டும் என்பதே உன் உட்கருத்து என்று மற்றவர்கள் சொல் கிருர்கள். இது உண்மையா?' என்று கேட்டார். அவன் முகத்தோற்றத்திலிருந்து அவன் மனப்பான்மையை அறிந்து கொண்டார். 'உன் எண்ணத்தைப் பார்க்கும் போது உன்னிடம் இரக்கமே வருகின்றது! விறகால் தீயை அணைக்க முடியுமா? மருந்துகள் உண்ண ஆசை கொண்டு நோயை வரவழைத்துக் கொள்ளலாமா? அணங்குகள், அப்சரசுகள்—எவர்களாயிருந்தாலும், முடிவில் அவர்களை யும் இழக்கத்தான் வேண்டும்! எத்தனை பிறவிகளில் எத் தனை அப்சரசுகளைக் கண்டாயிற்று! உண்மையான சாந்தி -அழியா வாழ்வு-ஒன்றை நாடியே தவங்கிடக்க வேண்டும். எந்தப் பயனையும் கருதி அதை மேற்கொள்ளலாகாது!' என்று அவர் அறிவு புகட்டினர். 'சுவர்க்கமும் அழிவுள் ளது; தேவர்களுக்கும் தம் செயல்களுக்குத் தக்கவாறு பிறவிகள் உண்டு. பிறவா நிலையை அடைவதே பேரின் பம்!' என்பதை விளக்கினர்.

நந்தனுடைய மனமாகிய தேரை இழுத்துச் சென்று கொண்டிருந்த கற்பனைக் குதிரைகள் நின்று விட்டன. அவன் தெளிவடைந்து தேரை நிருவாணப் பாதையில் திருப்பிவிட்டான். முன்னல் அப்சரசுகளைக் கண்டு தன் மனைவியைக் கைவிட்டான்; இப்போது நிர்வாண இன்பத் தைக் கண்டு அப்சரசுகளையும் கைவிட்டு விட்டான்!

உடனே அவன் நேரே ததாகதரிடம் சென்று தன் மனமாற்றத்தைத் தெரிவித்தான். கட்டைகளைக் கடையும் போது புகையைக் கண்டுவிட்டால், விரைவிலே நெருப்பு

வரும் என்பது நிச்சயமாவதுபோல, அவனுடைய மனமாற்றம் மேற்கொண்டு கிடைக்கப்போகும் பெரிய நன்மைக்கு அறிகுறி என்று ஐயன் மனமகிழ்ந்து கூறி அவனை வாழ்த்தினர்.

'துக்கத்தை அறவே நீக்கும் அமுதம் உன்னிடத்திலேயே இருக்கின்றது!' என்று ஆரம்பித்துப் பெருமான் நெடுநேரம் அவனுக்கு அறவழியின் படிகளை வரிசையாக விளக்கி வைத்தார். கட்டுப்பாடான ஒழுக்கமே முக்தி மார்க்க முதற்படி என்று அவர் கூறினர். முடிவில், 'கருத்தோடு ஊக்கமாயிருத்தலே முதன்மையான அவசியம்; செய்ய வேண்டியவைகளைச் செய்து முடிப்பதற்கு அதுவே அடிப்படை. அமைதி யடைவதில் ஆர்வம் கொண்டால், ஆனந்த வாழ்வை அடைவது நிச்சயம்!' என்ருர்.

நந்தன் அருள்வடிவான அண்ணலின் உதவியால் ஞானமடைந்து, அருகத்தானன்.

பின்னல் ஒரு சமயம் அண்ணலை அடைந்து, அவன், 'தங்களுக்கு நான் எப்படி நன்றி செலுத்த முடியும்?' என்று வேண்டினன்.

'நீ பெற்ற போதத்தைப் பிறர்க்குப் போதிப்பதே நன்றி! தானங்களிலே சிறந்தது தருமதானமே!' என்ருர் ததாகதர்.

பதினைந்தாம் இயல்

# ஜேத வனம்

'துயரமடர்ந்து வளர்ந்துன்னைச்
சுற்றி வளையும் வேளையிலே
முயலும் முயற்சி யின்றி ஒரு
மூலை தேடி இருப்பது(ம்) ஏன் ?
அயலிலுள்ளார் படும் பாடும்
அழுகண்ணீரும் கண்டுனது
மயலை முற்றும் மாற்றுவையே
மனத்தை நன்ருய்த் தேற்றுவையே !'

—உமர்கய்யாம்

அறுபது பெரிய கூடங்களும், அறுபது சிறிய கூடங்களும், ஏராளமான அறைகளும் அடங்கிய மிகப் பெரிய விகாரை ஒன்றை அநாத பிண்டிகர் சிராவஸ்தி நகரிலே கட்டி முடித்திருந்தார். நீராடும் அறைகள், உடைகள் உடுக்கும் அறைகள், பண்டகசாலைகள் முதலியவைகளும், கிணறுகளும் குளங்களும் அங்கே அமைந்திருந்தன. புத்தர் பெருமான் சொல்லியிருந்த ஆலோசனைகளின்படி யாவும் முறையாக அமைக்கப் பெற்றிருந்தன. சாரீபுத்திரர் அங்கேயே தங்கியிருந்து எல்லா வேலைகளையும் கவனித்து வந்தார்.

அந்த விகாரையை மகாராஜாக்களைத் தவிர எவரும் எளிதில் அமைத்திருக்க முடியாது. எனினும் பணத்தைத் தண்ணீர் போல அள்ளிவிட்டு அநாத பிண்டிகர் அதைக்

கட்டி முடித்திருந்தார். விகாரை அமைப்பதற்கு வேண்டிய பெரிய தோட்டத்தை அவர் விலைக்கு வாங்கியதே ஒரு தனிச் சரித்திரம்! அந்த வனம் ஜேதர் என்ற இளவரசருக்குச் சொந்தமாயிருந்ததால், அதற்கு 'ஜேத வனம்' என்று பெயர். வள்ளல் இளவரசரைக் கண்டு அதை விலைக்குக் கொடுக்க வேண்டுமென்று வேண்டினார். இளவரசர் அது விலைக்கு இல்லை யென்றார். 'அந்த வனத்தின் நிலம் முழுவதிலும் தங்கக் காசுகளை நிரப்பி அளித்தாலும் அதை விற்பதற்கில்லை!' என்று அவர் சொல்லிவிட்டார். பின்னர் அநாத பிண்டிகர் மந்திரிகள் முதலாயினோரின் உதவியைப் பெற்று, இளவரசரின் மனத்தை மாற்றி, அவர் பேச்சிலே குறிப்பிட்டபடி, தங்கக் காசுகளை வனத்திலே பரப்பி, எவ்வளவு தொகையானாலும் கொடுக்கத் தயாராயிருப்பதாக அறிவித்தார். இளவரசரும் முடிவாகச் சம்மதித்தார். பேசியபடியே அநாத பிண்டிகர் தமது மாளிகையிலிருந்த 'மசுரன்' என்ற அக்காலத்துத் தங்கப் பவுன் மூடைகளை வண்டிகளிலே கொண்டு வரச் செய்தார். நிலமெங்கும் இடைவெளியில்லாமல் தங்கப் பவுன்கள் நிரப்பப் பெற்றன. வனத்தின் வாசலடியில் சொற்ப இடம் மட்டும் மிஞ்சியிருந்தது. அதற்கும் தேவையான பொற்காசுகளைத் தமது மாளிகையிலிருந்து மீண்டும் எடுத்துவரும்படி வள்ளல் தம் வேலையாட்களுக்குச் சொன்னார்.

அப்போது இளவரசர் ஜேதர் அநாத பிண்டிகர் கோடிக் கணக்கான பவுன்களைக் கொடுத்து அந்த வனத்தை ஏன் வாங்குகிறார் என்ற விவரத்தையெல்லாம் கேட்டறிந்தார். புத்த பகவருக்காகவும், பிக்குக்களுக்காகவும் விகாரை அமைப்பதற்காக நிலத்திற்கு மட்டுமே பொன்னை அள்ளிக் கொட்டிக்கொண்டிருந்த வள்ளலின் மனப்பான்மையைப் பற்றி அவர் சிந்தித்துப் பார்த்தார். அந்தப் புனிதமான திருப்பணியில் தாமும் கொஞ்சம் பங்குபெற வேண்டும் என்று கருதி, அவர் மிஞ்சியிருந்த இடத்திற்குப் பணம்

வேண்டாம் என்றும், அதைத் தாமே பெருமானுக்கு அர்ப்பணம் செய்வதாயும் கூறினர். மேலும் நிலத்திற்கு மட்டுமே தாம் விலை வாங்கிக் கொள்வதாயும், நிலத்தில் நிற்கும் மரங்களை விலையில்லாமல் தாம் அளிப்பதாயும், நிலத்திலே பரப்பியுள்ள பொன்னில் பாதியை மட்டும் தம்மிடம் செலுத்தும்படியும் அவர் கேட்டுக்கொண்டார். அநாத பிண்டிகரும் சம்மதித்தார். அப்படிக் கொடுத்த பொருளே ஐம்பத்துநான்கு கோடிப் பொற்காசுகள் என்று பௌத்த உரை நூல்கள் கூறுகின்றன! நிலமும் மரங்களும் சாரீபுத்திரரின் பொறுப்பில் ஒப்படைக்கப் பெற்றன.

வானளாவி நின்ற விகாரையை வள்ளல் கட்டி முடித்தார். இளவரசர் ஜேதர் தாம் அளித்திருந்த முகப்பிலுள்ள நிலத்தில் முன்வாயிலும், பண்டகசாலைக்கு ஏற்ற மண்டபம் ஒன்றும் தம் செலவில் அமைத்துக் கொடுத்தார்.

சாரீரபுத்திரர் விகாரை அமைப்பதில் கண்ணும் கருத்துமா யிருந்து வந்ததோடு, நகரிலும் சுற்றுப்புறத்திலும் இடைவிடாமல் தருமப் பிரசாரம் செய்துவந்தார். . அந்தக் கருத்தோடுதான் ஐயனும் அவரை அனுப்பியிருந்தார். அங்கே புறச் சமயங்களைச் சேர்ந்தவர்கள் கண்டு பொருமைப் படும்படி அவர் செல்வாக்குடன் வேலை செய்து வந்ததால், அவர்களிற் சிலர் அவரைக் கொலை செய்துவிடவும் முயன்றனர். அவர்கள் சூழ்ச்சிகளிலிருந்து சாரீபுத்திரர் தப்பித்துக்கொண்டு, அவர்களையும் தமது தருமத்திற்கு இழுத்துக் கொண்டார்.

எல்லா வேலைகளும் முடிந்ததும், அநாத பிண்டிகர் புத்தர் பெருமானுக்குத் தகவல் சொல்லியனுப்பினர். ஜேத வனத்தையும் விகாரையையும் வந்து ஏற்றுக்கொண்டருள வேண்டும் என்று அவர் வேண்டிக்கொண்டார். அவ்வாறே ஐயனும் பல பிக்குக்களுடனே கபிலவாஸ்துவை விட்டு சிராவஸ்தி நகருக்குப் புறப்பட்டு வந்தார்.

## அர்ப்பணம்

அசிரவதி* நதிக்கரையிலே அமைந்திருந்த அணி நகரான சிராவஸ்திக்குத் ததாகதர் எழுந்தருளுகையில், அநாத பிண்டிகர் தம் குடும்பத்தார் அனைவரையும் அழைத்துக்கொண்டு, மேளதாளங்களுடன், பொதுமக்கள் யாவரும் தொடர்ந்துவர, அவரை எதிர்கொண்டு வரவேற்றார். ஊர்வலத்தின் முன்னணியில் வள்ளலின் மைந்தன் பெருங்குடிப் பிறந்த ஐந்நூறு இளஞ் செல்வர்களுடன் சென்றான்; அடுத்தாற்போல அவனுடைய சகோதரிகளான பெரிய சுபத்திரை, சின்ன சுபத்திரை இருவரும் நகைகள் அணிந்த நங்கையர் ஐந்நூறு பேர்களுடன் சென்றனர்; வள்ளலின் மனைவி ஐந்நூறு சீமாட்டிகளுடன் தொடர்ந்து சென்றாள்; கடைசியாக அநாத பிண்டிகர் நகரின் முதன்மையான செல்வர் பலருடன் சென்றார். அரசர்களுக்குரிய மரியாதையுடன் ஜேதவனத்திற்கு ஐயனை அழைத்து வந்தனர். இனிய நீரோடைகளும், தடாகங்களும், மலர்களும் கனிகளும் நிறைந்த மரங்களும் ஜேதவனத்தின் எழிலை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. எங்கும் தூப தீபங்களின் நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. வழிகளெங்கும் மலர்கள் தூவப்பெற்றிருந்தன.

அநாத பிண்டிகர் தங்கக் கெண்டியிலிருந்து புத்தர் பிரானின் திருக்கரத்தில் நீர்வார்த்து, ஜேதவனத்தையும் தாம் கட்டியிருந்த விகாரையையும் சங்கத்திற்குத் தானமாக அளித்தார். அந்த நேரத்தில், தாம் பிறவியெடுத்த பெரும்பயனை அடைந்ததுபோல, அவர் மகிழ்ச்சியடைந்தார்.

அமலரும் அன்போடு அவைகளை ஏற்றுக் கொண்டார். 'தீமைகளை யெல்லாம் விலக்கி ஜேதவனம் இந்த இராஜ்யத்திற்கு நிலையான சாந்தியை அளிப்பதாக!' என்றும், 'அநாத

---

*ரப்தி ஆறு.

பிண்டிகரின் ஆனந்தம் ஒன்று பலவாகப் பெருகி வளரட்டும்!' என்றும், அவர் வனத்தையும் வள்ளலேயும் வாயார வாழ்த்திஞர். விகாரைக்கு 'ஜேதவன விகாரை' என்றும், பிக்குக்கள் வசிக்கும் மாளிகைக்கு 'அநாத பிண்டிகர் ஆராமம்'* என்றும் இரண்டு வள்ளல்களின் பெயர்களேயும் ஒன்று சேர்த்துப் புத்தர் பெருமான் அவைகளுக்குப் பெயர்கள் வைத்தார். இளவரசர் ஜேதர் தமது பெயரே முதலில் விளங்குவதை எண்ணிக் களிப்படைந்தாராம்! அநாத பிண்டிகர் அடைந்த பெருமையை அளவிட்டுரைக்க இயலாது. பிற்காலத்து வரலாறுகளிலே புத்தருடைய பிரதம சீடர்கள் எண்பது பேர்களில் அவரும் ஒருவராய்ச் சேர்க்கப்பட்டிருப்பதே அவர் பெருமைக்குச் சான்முகும்.

## பிரசேனஜித்து

சாக்கிய முனிவர் தமது தலேநகருக்கு வந்திருப்பதை அறிந்து பார்த்திபர் பிரசேனஜித்தும் ஜேதவனம் சென்றிருந்தார். அவர் அருள்முனிவரைத் தனியாகத் தரிசித்து இரு கைகளேயும் கூப்பி வணங்கி முகமன் கூறிஞர். 'தேடி வைப்பது ஊரார் பணம்; தானம் செய்வதே தமது செல்வம்' என்ற உண்மையைக் கடைப்பிடித்து அநாத பிண்டிகர் கட்டிவைத்த அரிய அறநிலேயத்தை அவர் மனமார வாழ்த்திப் புகழ்ந்தார். 'வனத்திலுள்ள மணமலர்களின் வாசனேகள் யாவும் காற்றிலே ஒன்று சேர்ந்து வீசுவதுபோல், தனி மனிதர்களின் பண்பாடுகள் பலதிறப்பட்ட நிலேகளில் இருப்பினும், இங்கே எல்லாம் ஒன்று சேர்ந்து சங்கமாகக் கூடி எப்பொழுதும் பரிமளித்துக் கொண்டிருக்கும்!' என்றும், 'உலகத்துச் செல்வம் ஒருநிலேயில் நில்லாது அழிவுறுவதாலும், முடிசூடிய மன்னனும் கவலேகளால் நலிந்து

*ஆராமம் - பிக்குக்கள் தங்கும் இடம்; சங்கத்தார் வசிக்கும் இடம் என்பதால் சங்காராமம் என்றும் குறிப்பிடுவர்.

போவதாலும், புனித வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள சாதாரண மனிதனே உயர்ந்தவன்!' என்றும் அவர் சங்கத்தைப் பற்றியும் பலமுறையில் புகழ்ந்துரைத்தார்.

அவருடைய உள்ளம் ஓரளவு பக்குவம் அடைந்திருப்பதை உணர்ந்த அண்ணல், அவருடைய குறைகளையும் அறிந்து அவருக்குச் சில நல்லுரைகள் பகரவேண்டும் என்று திருவுளம் கொண்டார். பணத்திலும் புலன் இன்பங்களிலும் அரசர்களுக்கு அதிக ஆசை இருந்து வந்தது. எனவே அதற்கு நன்மருந்தாக விளங்கும் வண்ணம் ஐயன் அவரைப் பார்த்துப் பேசலானார் :

'அரசே! ஏதோ முந்திய தீவினையால் தாழ்ந்த நிலையிலே பிறந்தவர்கள்கூட, ஒழுக்கம் நிறைந்த ஒரு பெரியாரைக் கண்டால், அவரிடம் மரியாதை காட்டுகின்றனர். முற்பிறவிகளில் செய்த புண்ணியவசத்தால் இப் பிறவியில் மன்னர் பதவியைப் பெற்றுள்ளவர் புத்தரையே நேரில் காணும் போது எவ்வளவு அதிக மரியாதை கொள்வர் என்பதை எளிதிலே கண்டு கொள்ளலாம்.

'இப்போது நான் சுருக்கமாகக் கூறும் தரும விளக்கத்தை அரசர் கவனமாய்க் கேட்டு, என் சொற்களிலே கருத்தூன்றி, அவைகளை உள்ளத்திலே உறுதியாய்க் கொள்வாராக!

'நமது நற்செயல்களும் தீச்செயல்களும் நம்மை விட்டு நீங்காமல் நிழல்களைப்போலத் தொடர்ந்துகொண்டேயிருப்பவை.

'அன்புள்ள இதயமே முதற்கண் அவசியமாகும்!

'நாம் ஒரே மகனைப் பெற்றிருந்தால், அவனை எப்படிப் பேணுவோமோ, அவ்வாறே உமது குடிகளைப் பேணவேண்டும். அவர்களைக் கொடுமைப்படுத்த வேண்டாம்; அவர்களை அழிக்க வேண்டாம்! உமது புலன்களை யெல்லாம் அடக்கி வைத்துக்கொள்ளவேண்டும்; நீதியற்ற சமயக் கொள்கைகளைக் கைவிட்டு நேரான பாதையிலே நடக்க வேண்டும். மற்றவர்களைத் தாழ்த்தி நசுக்கி, நீர் மேலெழ

எண்ணக்கூடாது. அல்லற்படுவோர்களுக்கு ஆறுதல் கூறி, அவர்களுடைய துன்பம் களையத் துணைபுரியுங்கள்!

'மன்னர் பதவி என்ற மாட்சியில் செருக்கடைய வேண்டாம்; இச்சகம் பேசுவோரின் இனிய வார்த்தைகளுக்குச் செவிசாய்க்க வேண்டாம்!

'கடுமையான தவங்களை மேற்கொண்டு ஒருவர் துயரப் படுவதில் பயனில்லை; புத்தரைப் பற்றியும், அவர் போதிக்கும் நீதியான தருமத்தைப் பற்றியும் சிந்தனைசெய்து பார்க்கவும்.

'பிறப்பு, முதுமை, பிணி, மரணம் ஆகிய பாறைகள் நாலுபுறங்களிலும் நம்மைச் சூழ்ந்து நெருக்கி நிற்கின்றன. இந்தத் துக்க மலையிலிருந்து தப்புவதற்கு உண்மையான தருமத்தை அறிந்து பின்பற்றுதல் ஒன்றே வழியாகும்.

'அறிவு பெற்றவர் அனைவரும் உடல் இன்பங்களை ஒதுக்குகின்றனர். அவர்கள் தங்களுடைய நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதற்காகக் காமங்களை வெறுத்துத் தள்ளுகின்றனர்.

'மரம் தீப்பற்றி எரியும்போது புள்ளினங்கள் அதன் மீது குடியிருக்க முடியுமா? ஆசைகளால் ஏற்படும் சித்த விகாரமுள்ள இடத்திலே சத்தியம் தங்கியிருக்க முடியாது. இதை யறியாத கல்விமானைப் பெரிய முனி என்று பாராட்டினால், அவன் பேதையே யாவான்.

'இதை அறிந்தவனுக்கு ஞானம் உதயமாகின்றது. இந்த ஞானத்தைப் பெறுவது ஒன்றே உயர்ந்த இலட்சியம். இதை அலட்சியம் செய்து விட்டுவிட்டால், வாழ்வே பயனற்றுப் போகும்.

'எல்லாச் சமயங்களின் போதனைகளும் இதையே கேந்திர நிலையாகக் கொண்டிருக்கவேண்டும்; ஏனெனில் இது இல்லையென்றால், பகுத்தறிவே இல்லாமற் போகும்.

'இந்த உண்மை துறவிக்காக மட்டும் ஏற்பட்டதன்று; துறவி, இல்வாழ்வோன் ஆகிய ஒவ்வொரு மனிதனுக்கும் இது அவசியம். துறவிக்கும் கிரகத்தனுக்கும் பேதமில்லை. துறவிகளிலே வழுக்கி விழுந்து பாழாய்ப் போவோரும்

உளர். இல்வாழ்வோரிலே முனிவர்கள் நிலைக்கு உயர்வோரும் இருக்கின்றனர்.

'காமமாகிய வெள்ளம் யாவர்க்கும் அபாயம் விளைக்கும்; உலகத்தையே அது அடித்துக்கொண்டு போய்விடுகின்றது. அதன் சுழல்களிலே சிக்கியவனுக்கு மீட்சிபெற வழியில்லை. ஆனால் ஞானம் என்னும் ஓடம் அந்த வெள்ளத்திலிருந்து காக்கும். ஆழ்ந்த தியானமே அதன் துடுப்பு.

'நாம் நம் செயல்களின் பயன்களிலிருந்து தப்ப முடியாது; ஆதலால் நல்வினைகளையே நாம் செய்து வர வேண்டும்.

'நம் சிந்தனைகளைத் துருவிப் பார்க்க வேண்டும்; அவற்றால் தீயசெயல்கள் விளைந்து விடாமல் கவனிக்க வேண்டும்; ஏனெனில் நாம் விதைப்பதை நாமே அறுவடை செய்ய வேண்டி யிருக்கும்.

'ஒளியிலிருந்து இருளுக்குச் செல்வதற்கும், இருளிலிருந்து ஒளிக்குச் செல்வதற்கும் வழிகள் இருக்கின்றன. இருளிலிருந்து அதிக இருளுக்கும், ஒளியிலிருந்து அதிக ஒளிக்குப் போவதற்கும் வழிகள் இருக்கின்றன. ஞானி அதிக ஒளியைப் பெறுவதற்குத் தன்னிடமுள்ள ஒளியைப் பயன்படுத்திக் கொள்வான். எப்போதும் அவன் உண்மையை உணர்ந்து கொள்வதற்காக இடைவிடாமல் முன்னேறிக்கொண்டே யிருப்பான்!

''நல்லொழுக்கத்தாலும் ஆராய்ச்சி அறிவாலுமே, உமது மேன்மையைக் காட்டவேண்டும். உலகப் பொருள்களின் போலித் தன்மையைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்கவும். சிந்தித்து வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை உணர்ந்து கொள்ளவும்.

உள்ளத்தை மேல் நிலைக்கு உயர்த்துக! உறுதியுடன் உண்மையான நன்மையை நாடுக! மன்னர்க்குரிய கடமைகளைப் புறக்கணிக்க வேண்டாம். உமது இன்பம் வெளிப் பொருள்களைச் சார்ந்திருக்க வேண்டாம்; உமது உள்ளத்திலிருந்தே அது வளரவேண்டும். இவ்வாறு நடந்துகொண்

டால் உலகத்திலே நெடுங்காலம் உமது நற்பெயர் நிலைத்து நிற்கும்; ததாகதருடைய அருளும் கிடைக்கும்!'

பெருமானின் புனித உரைகளைப் பிரசேனஜித்து வணக்கத்தோடு கேட்டுக்கொண்டிருந்து, அவைகளைத் தமது மனத்திலே பதிய வைத்துக்கொண்டார். மன்னர் முதலில் ததாகதரைக் கண்டதும், அவர் தாமே தம்மைப் புத்தர் என்று சொல்லிக் கொள்வதைப்பற்றி ஆட்சேபித்ததாயும், அக்காலத்திலே பிரசித்தமாக விளங்கிய பூரண காசியபர், பரிவ்ராஜக கோசாலர், சஞ்சயர், அஜிதகேச கம்பளர் முதலியோர் கூடத் தங்களை அவ்வாறு அழைத்துக்கொள்ள வில்லை என்று கூறியதாயும் திபேத்திய வரலாறு ஒன்றில் காணப்படுகின்றது. அது எவ்வாறிருப்பினும், போதிநாதரின் உபதேசத்தைக் கேட்ட பிறகு மன்னரின் மனது முற்றிலும் அமைதி பெற்று, ஐயனிடம் அளவற்ற அன்பு கொள்ளும்படி செய்துவிட்டது.

பின்னால் கோசல நாட்டு மன்னர் பகவர் புத்தரிடம் பக்தி கொண்டு அடிக்கடி அவரைத் தரிசித்து வருகிறார் என்பதைக் கண்ட மற்றைச் சமய வாதிகள் மனம் புழுங்கி அழுக்காறடைந்தனர். அவர்களுக்காக அரசர் புத்தரிடம் சென்று அவர்களுக்கு நம்பிக்கை பிறக்கும்படி தமது இருத்தி யாற்றல்களைக் காட்டும்படி பணிவுடன் வேண்டினார். அவ்வாறே பகவரும் வானத்திலெழுந்து கதிரவன் போல எண்ணரிய கதிர்களைப் பரப்பிக்கொண்டு விளங்கினார் என்றும், வேறு சில சித்துக்களும் செய்து காட்டினார் என்றும் சொல்லப்படுகின்றது. காழ்ப்புக் கொண்ட சமய வாதிகள், அவற்றைக் கண்டு மனம் திருந்தி, ஐயனைச் சரணடைந்தனராம். பிரசேனஜித்தும் பௌத்த தருமத்தை மேற்கொண்டு ஒழுகி வந்தார்.

புத்த தரிசனத்திற்கு முன்னால் பிரசேனஜித்து உணவில் கட்டுப்பாடின்றி அறுசுவை உணவுகளை அதிகமாக உண்டு வந்தார். அதனால் அவருக்குப் பகலிலேயும் உறக்க

மும் மயக்கமும் இருந்து கொண்டிருந்தன. ஒருசமயம் அவர் ஜேதவன விகாரையில் பகவர் முன்னிலையில் இருக்கும் போதே அவருக்கு உறக்க மயக்கம் ஏற்பட்டது. அதைக் கண்ட பிறவிப்பிணி மருத்துவராகிய பகவர், அதற்குக் காரணம் பேருண்டி என்பதை அறிந்து, அளவறிந்து உண்ணவேண்டியதன் அவசியத்தைப்பற்றி அவருக்கு எடுத்துரைத்தார். மாறுபாடில்லாத நல்லுணவை அளவோடு உண்டு வந்தால், சோம்பலும் தூக்கமும் விலகிவிடும். என்றும், பெருந்தீனியே உயிருக்கு ஊறுபாடு என்றும் விளக்கிச் சொன்னார். உணவு மிகவும் குறைந்தால் உடலின் சக்தியும் குறையும்; ஆனால் உணவு அதிகமானால் அசதியும் சோம்பலும் தோன்றி, ஊக்கமே ஒழிந்துவிடும். இதனாலேயே பகவர் தமது தம்பியாகிய நந்தனுக்குப் பிக்குக்களின் ஒழுக்கத்தைக் கற்பிக்கும்போது, 'பகைவன் உயிரோடு மட்டும் இருப்பதற்கு ஒருவன் உணவளிக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டால், எவ்வளவு அளிப்பானோ, அவ்வளவே ஒருவன் தானாகத் தன் உடலுக்கு அளிக்கவேண்டும்' என்று கூறியதாக அசுவகோஷர் குறித்துள்ளார்.

பெருமான் உணவுபற்றிப் பேசுகையில் மன்னரின் மருகனான **சுதர்சன குமாரன்** அவர்களுடன் இருந்தான். பெருமான் அவனைப் பார்த்து, அரசர் உணவருந்தும் ஒவ்வொரு வேளையிலும் அவன் அவர் அருகேபோய் இருந்துகொண்டு, 'அளவறிந்து உண்பவர்கள் பிணியில்லாமல் நெடுங்காலம் இளமையோடு இன்புற்று வாழ்வார்கள்' என்று சொல்லிக் கொண்டேயிருக்கும்படி கூறிவைத்தார். இதை அநுசரித்துப் பகவர் 'குமார திருஷ்டாந்த சூத்திரம்' என்ற உபதேசத்தையும் செய்தார்.

அவ்வாறே சுதர்சனன் நாள்தோறும் சொல்லிவந்ததில் மன்னரும் பகவரின் அரியவாக்கியத்தை நினைவுகொண்டு, மித உணவே அருந்தி வந்தார்; விரைவில் உடல் நலமும் பெற்றார்.

மடிமையே மனிதனின் பகைவன் என்பதைப் புத்தர் பெருமான் பல இடங்களில் வற்புறுத்தியுள்ளார். தீவிர முயற்சியும், தளராத உறுதியுமே மனிதனுக்கு உதவி யானவை என்பதை அவர் இடைவிடாது கூறிவந்திருக் கிறார். 'கருத்துடைமையே நித்தியமான நிருவாண மோட் சத்திற்கு வழி. கருத்துடையவர் இறப்பதில்லை. மடிமை யுடையவர் இருக்கும்போதே இறந்தவராவர்'* என்பது அவருடைய மூல மந்திரங்களில் ஒன்று.

புத்தர் பெருமான் மழைக் காலத்தில் மூன்று மாதங் கள் மட்டும் வேணுவனம், ஜேதவனம் போன்ற ஒரு விகாரையில் சீடர்களோடு தங்கியிருத்தல் வழக்கம். அது போல் அவர் போதியடைந்தபின் மூன்றுவது மாரிக்காலத் தில் ஜேதவனத்திலேயே தங்கியிருந்தார். புத்தர் தங்கி யிருந்த விகாரைகளிலே ஜேதவனமே முதன்மையானது.

---

*'தம்மபதம்'

பதினாறும் இயல்

# விசாகை

'இருட்பார வினைநீக்கி
எவ்வுயிர்க்கும் காவல்என
அருட்பாரம் தனிசுமந்த
அன்றுமுதல் இன்றளவும்
மதுஒன்று மலரடிக்கீழ்
வந்தடைந்தோர் யாவர்க்கும்
பொது அன்றி நினக்(கு)உரித்தோ,
புண்ணிய நின் திருமேனி!'

—வீரசோழிய உரை

பிற்காலத்திலே சிராவஸ்தி நகரில் புத்தர் பெருமானின் முதன்மையான அடியார்களாக விளங்கியவருள் ஒருத்தி விசாகை. பௌத்தர்கள் மிகச் சிறப்பாகக் கொண்டாடும் ஏழு பெண்மணிகளில் அவள் ஒருத்தி. அவளுடைய தந்தையரான தனஞ்சயர் பெருஞ் செல்வர். அவர் முன்னால் அங்கநாட்டில் வசித்துவந்தவர். பின்னர் மன்னர் பிரசேனஜித்தின் அழைப்பின் பேரில் சிராவஸ்தி நகரில் வசிப்பதற்காக அவர் புறப்பட்டு வந்தார். வழியில் சாகேத நகரிலேயே தங்கியிருக்கலாம் என்று அவருக்குத் தோன்றிற்று. கோசல மன்னரும் அதற்குச் சம்மதித்ததால், அவர் அங்கேயே பெரிய மாளிகைகள் அமைத்துக்கொண்டு வசிக்கலானார். விசாகையும் அவரோடு இருந்தாள். அவள் சிறு வயதிலேயே போதிநாதரின் உபதேசம் பெற்றுப் பௌத்த தருமத்தை மேற்

கொண்டிருந்தார். பெருஞ் செல்வமும், அருங் குணங்களும் வாய்ந்த விசாகை பின்னல் பெரும்புகழ் பெற்று விளங்கிய தால், அவளை வியந்துரைக்கும் கற்பனைக் கதைகள் பல தோன்றிவிட்டன. அந்தக் கதைகளிலிருந்து உண்மையான வரலாற்றைப் பார்க்கிலும், அவளிடம் பௌத்தர்களும் மக்களும் கொண்டிருந்த அன்பே அதிகமாக விளங்குகின் றது. அத்தகைய கதைகளிலிருந்து அவளைப்பற்றி அறியத் தக்க சில குறிப்புக்களைக் கவனிப்போம்.

விசாகைக்குத் தக்க வயது வந்ததும், தனஞ்சயர் சிராவஸ்தி நகரிலே பெருந் தனிகராயிருந்த **மிகாரர்** என்பவ ருடைய குமாரன் **புண்ணியவர்த்தன**னுக்கு அவளை விவாகம் செய்து கொடுக்க எண்ணியிருந்தார். விசாகை சகல அழகு களும் பொருந்தியவள். மதிமுகமும், மயில் தோகைபோல் நீண்டு அடர்ந்து வளர்ந்திருந்த கூந்தலும், தங்கநிற மேனி யும் பெற்றிருந்த அம்மங்கை நல்லாள் சிராவஸ்தி நகரின் தலைசிறந்த செல்வருடைய மாளிகைக்கு ஏற்ற மருமக ளாகவே அமைந்திருந்தாள். புண்ணியவர்த்தனனும் அவ ளுக்கு இசைந்த அழகிய மணவாளன்.

## திருமணம்

சாகேதத்திலேயே விவாகம் நடைபெற ஏற்பாடா யிற்று. தனஞ்சயர் பொற்கொல்லர்களிடம் வைரங்கள், முத்துக்கள், மற்றும் இரத்தினங்களில் எழுபது படி அளந்து கொடுத்து, அழகிய நகைகள் பல செய்து வாங்கி னர். திருமணத்திற்கு நான்கு மாதங்களுக்கு முன்பே விருந்தினர்கள் வந்து குழுமியிருந்தார்கள். மிகாரருடைய குடும்பத்தினரும் முன்னதாகவே வந்திருந்தனர். எல்லோ ருக்கும் மேலாகக் கோசல மன்னர் பிரசேனஜித்தும் தமது பரிவாரங்களுடன் நான்கு மாதங்களாகச் சாகேதத்தில் தங்கியிருந்தார். இலட்சக்கணக்கான ஜனங்களுக்கும்

தாராளச் சிந்தையுள்ள தனஞ்சயர் முகம் கோணாமல் விருந்தளித்துக் கொண்டிருந்தார். ஒரு சமயம் சமையலுக்கு விறகு போதாமையால், அவர் தமது பழைய யானைக் கூடங்கள், குதிரை லாயங்களை யெல்லாம் இடித்து அவற்றிலிருந்த கட்டைகளை யெல்லாம் விறகாக எரிக்கும்படி கொடுத்தாராம்!

திருமணத்தன்று விசாகைக்குச் செய்திருந்த அலங்காரங்களை அளவிட்டுரைக்க முடியாது. தலையிலிருந்து பாதங்கள்வரை அவள் உடலை மறைத்து நகைகள் அணியப் பெற்றிருந்தாள். தலையில் நவரத்தினங்கள் இழைக்கப் பெற்று மயில் உருவத்திலிருந்த சூளாமணி ஒன்றை அவள் அணிந்திருந்தாள். அந்த மயிலின் கழுத்து முழுவதும் ஒரே மரகதப் பச்சையில் அமைந்திருந்தது. காற்று வீசும்போது அந்த மயிலின் வாயிலிருந்து வரும் ஒலி உயிருள்ள மயில் அகவுவதுபோலவே இருந்ததாம்! மொத்தம் ஒன்பது கோடி மசூரன்கள்* பெறுமதியுள்ள ஆபரணங்களை அவள் அணிந்திருந்தாள். அன்று தனஞ்சயர் அவளுக்கு அளித்திருந்த பரிசுகளில் தங்கம் மட்டும் ஐந்நூறு வண்டிகள் இருந்ததாம்! மற்றும் வெள்ளி முதலிய உலோகங்களில் செய்த பாத்திரங்கள், பண்டங்கள் எல்லாம் வண்டிவண்டியாக இருந்தன. ஆயிரக்கணக்கான பணிப்பெண்களும் விசாகையோடு அவளுடைய புக்ககத்திற்குச் செல்வதற்காகத் தயாராக இருந்தனர். அன்று சாகேத நகரமே திருமண மண்டபம்போல விளங்கிக்கொண்டிருந்தது. இத்தனை வைபவங்களுடன் திருமணம் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.

விசாகையும் விருந்தினர்களும் சிராவஸ்திக்குப் புறப்பட்டுச் செல்கையில், அவர்களைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான வண்டிகள் சென்றன. நகரை அடைந்ததும்,

---

*மசூரன் - அக்காலத்துப் பொற்காசு.

மிகாரர் தம் மருமகளின் அழகையும், அவள் நகைகளையும் பற்றி ஜனங்கள் சந்தேகம் கொள்ளாத முறையில், அவளைத் திறந்த இரதம் ஒன்றிலே ஊர்வலமாக அழைத்துச் சென்றார். அரசரும் பிரபுக்களும் மதிப்பதற்கு அரிய பரிசுகள் பலவற்றை அனுப்பிவைத்தனர். மிகுந்த கோலாகலத்துடன் விசாகை தன் கணவனின் மாளிகையை அடைந்தாள். அங்கே எல்லாச் செல்வங்களும் பெற்று அவள் இனிது வாழ்ந்து வந்தாள்.

## மிகாரருக்கு அன்னையாதல்

மிகாரர் ஜைன சமயத்தைச் சேர்ந்தவர். ஜைனத் துறவிகளை அவர் போய் வணங்கி வருவதும், அவர்களைத் தமது மாளிகைக்கு அழைத்து வருவதும் வழக்கம். ஒரு சமயம் அவர் விசாகையை அழைத்துக்கொண்டு அத்துறவிகளைத் தரிசிக்கச் சென்றார். ஜைனப் பள்ளியில் தான் சந்திக்கப்போகும் துறவிகள் ஆடைகளில்லாமல் நிர்வாணமாயிருப்பவர்கள் என்பதை விசாகை அறிந்ததும் வெட்கமடைந்து, தன்னை அங்கு அழைத்துச் சென்றதற்காக மாமனாரிடம் மிகவும் வருத்தமடைந்தாள். இதையறிந்த துறவிகள், அவள் புத்தருடைய உபாசிகை என்றும், அவளை மருமகளாக மாளிகையில் வைத்திருப்பதே தவறு என்றும் மிகாரருக்கு அந்தரங்கமாகச் சொல்லிவைத்தனர். ஆனால் அவர் அவர்கள் கூற்றை அதிகமாகப் பொருட்படுத்தவில்லை.

ஒருநாள் மிகாரர் தமது மாளிகையில் உணவு அருந்திக் கொண்டிருக்கையில் வாயிலில் பிக்கு ஒருவர் உணவுக்காகத் திருவோட்டுடன் வந்து நின்றார். மிகாரர் பிக்குக்களுக்கு ஐயமிடுவதற்கு அனுமதிப்பதில்லை யாதலால், விசாகை உள்ளிருந்துகொண்டே, 'ஐயா பழஞ்சோறு உண்கிறார்!' என்று சொல்லிப் பிக்குவை வேறிடம் பார்க்

கும்படி அனுப்பிவிட்டாள். மிகாரர், தாம் கொதிக்கக் கொதிக்கப் புதிய அன்னத்தை உண்டுகொண்டிருக்கையில், அவள் பழையது என்று சொல்லி ஏளனம் செய்ததாக எண்ணி வருத்தமடைந்து, அவளை உடனே வீட்டைவிட்டு வெளியே செல்லும்படி கூறினர். விசாகை தான் அடிமையில்லை என்றும், தான் அங்கும் இங்குமாக அலைந்து கொண்டிருக்க முடியாது என்றும் மறுமொழி புகன்ருள்.

மிகாரர் இந்த விஷயத்தைப் பஞ்சாயத்தாரிடம் தெரிவித்தார். இந்தப் பஞ்சாயத்தார் எட்டுப் பேர்கள்; அவர்கள் சாகேதத்திலிருந்து விசாகையோடு தனஞ்சயரால் அனுப்பப் பெற்றிருந்த அவளுடைய போஷகர்கள். அவர்கள் கூடி விசாரித்தனர். விசாகை தான் உணவைப் 'பழையது' என்று கூறியது உண்மைதான் என்றும், மிகாரர் உண்டு வந்த உணவு அவர் முந்திய பிறவிகளில் செய்த பழமையான தருமங்களின் பயனுகக் கிடைப்பது என்றும், ஆனல் இந்தப் பிறவியில் அவர் தான தருமங்களை நிறுத்தி விட்டதால் மேலைக்கு வேண்டிய புண்ணியம் அவருக்கு இல்லாமற் போகிறதே என்ற வருத்தத்தால்தான் அவ்வாறு கூற நேர்ந்தது என்றும் விளக்கிச் சொன்னுள். அந்த விளக்கம் எல்லோருக்கும் திருப்தியளித்தது. மிகாரரும் புத்தறிவு பெற்று மகிழ்ச்சி யடைந்தார். அப்போது விசாகை தான் அவர் மாளிகையைவிட்டு வெளியேறச் சித்தமாயிருப்பதையும், அங்கேயிருக்க விரும்பவில்லை என்றும் தெரிவித்தாள்.

மிகாரர் அவள் அங்கேயே இருக்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டார். விசாகை கூறினுள்: 'தாங்கள் ஜைனத் துறவிகளை ஆதரிப்பவர்கள்; நான் புத்தரையும் தருமத்தையும், சங்கத்தையும் சரணடைந்தவள். நான் இங்கேயே தங்க வேண்டுமானல், நான் போதிமாதவரின் உபதேசங்களைக் கேட்டுவரவும், பிக்குக்களுக்குத் தான

மளிக்கவும் அனுமதிக்கவேண்டும்'. மிகாரரும் அவற்றிற்கு இசைந்தார்.

விசாகை விரைவிலேயே புத்தர் பெருமானுக்கும் பிக்குக்களுக்கும் தனது மாளிகையில் அன்னமளிக்க ஏற்பாடு செய்தாள். ஜைனத் துறவிகள், கோடீச்வரரான மிகாரர் புத்தரைச் சந்தித்தால் தங்களை அவர் கைவிட நேரும் என்று கருதி, அவருக்கு ஒரு யோசனை கூறியிருந்தனர். புத்தர் மாளிகைக்கு வருகையில் அவர் தம் கண்களைத் துணியால் கட்டி மூடிக்கொள்ள வேண்டும் என்பதே அந்த யோசனை !

பெருமானும் சீடர்களும் விசாகை அம்மை விருப்போடு அளித்த விருந்தை அருந்திய பின்பு, அவள் தன் மாமனாரை யும் பெருமானிடம் அழைத்துச் சென்றாள். பெருமான் அறவுரை பகர்ந்து கொண்டிருக்கையில், மிகாரர் மனம் களித்து அதிலே மூழ்கியவராய்த் தம் கண்களை மறைத் திருந்த துகிலை எடுத்தெறிந்துவிட்டு, ஐயனைக் கண்குளிரத் தரிசித்தார். அதுமுதல் அவரும் பெருமானுடைய சீட ரானார். அவருக்கு இந்தப் பாக்கியம் கிடைப்பதற்கு விசா கையே காரணமாயிருந்ததால், அவர் அவளைத் 'தாயே !' என்று அன்புடன் அழைத்தார். இதனால் விசாகைக்கு 'மிகாரரின் அன்னை' என்ற பெயர் ஏற்பட்டு விட்டது. அன்றிலிருந்து மிகாரரின் மாளிகையில் பௌத்த பிக்குக் களுக்கு மட்டுமே அமுது படைக்கப் பெற்று வந்தது. மிகாரரும் தமது நாற்பது கோடிப் பொன் மதிப்புள்ள செல்வங்களை விதைப்பதற்கு நல்ல நிலம் கிடைத்துவிட்டது என்று மகிழ்ச்சியடைந்தார்.

## விசாகையின் தருமங்கள்

தினந்தோறும் விசாகை மூன்று முறை பௌத்த விகாரைக்குச் சென்று வந்தாள். பகலில் உணவு

கொண்டுபோய் அளித்தாள் ; மாலையில் மலர் மாலைகளும் தீபங்களும் கொண்டு சென்றாள். புத்தருக்கும், பிக்குக்களுக்கும் பணிவிடை செய்வதே பெரும் பேறு என்று அவள் கருதிவந்தாள். அவள் தனது செல்வத்தை யெல்லாம் பிக்குக்களுக்காகவும், தருமப் பிரசாரத்திற்காகவும் செலவழிப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தாள். பிக்குக்கள் தங்குவதற்காக அவள் அமைத்துக் கொடுத்த ஆராமங்களிலே புகழ்பெற்ற முக்கியமான ஒன்று நகரின் கீழ்த் திசையில் இருந்தது. நகருக்குக் கிழக்கே இருந்த தோட்டத்தில் அது அமைந்திருந்ததால், அதற்குப் 'பூர்வ ஆராமம்' அல்லது 'பூர்வாராமம்'* என்று பெயர் ஏற்பட்டது. புத்தரும் பிக்குக்களும் சிராவஸ்திக்குச் சென்ற காலங்களில் அந்த ஆராமத்திலே நெடுநாள் தங்கியிருப்பது வழக்கம்.

ஒரு நாள் அங்கே சென்று ஐயனைத் தரிசிக்கையில், விசாகை மறுநாள் தனது வீட்டில் பகவரும் சீடர்களும் உணவருந்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். பெருமானும் அவள் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார்.

அன்றிரவு பெருமழை பெய்தது. பிக்குக்கள் தங்கள் காவி உடைகள் நனைந்துவிடுமே என்று அவிழ்த்துவைத்து விட்டு, மழைநீர் தங்கள் உடல்களிலே படும்படி இருந்து விட்டனர்.

மறுநாள் அண்ணலுக்கும் அடியார்களுக்கும் விருந்தளித்து முடிந்தபின்பு விசாகை ஐயன் அருகிலே அமர்ந்து கொண்டு, தனக்கு எட்டு வரங்கள் அருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

'சங்கத்தைச் சேர்ந்த அடியார்களுக்கு என் ஆயுள் முழுவதும் மாரிக்காலங்களில் நான் உடைகள் அளித்துவர விரும்புகிறேன். நகருக்குள் வருகிற பிக்குக்களுக்கும், இங்கிருந்து வெளியே செல்லும் பிக்குக்களுக்கும், நோயுற்ற பிக்

---

*பூர்வம் - கிழக்கு.

குக்களுக்கும்,அவர்களுக்குப்பணிசெய்யும் பிக்குக்களுக்கும் நான் உணவு அளித்துவர விரும்புகிறேன். பிணியாளருக்கு மருந்துகள் அளிக்கவும் விரும்புகிறேன். எப்பொழுதும் சங்கத்திற்கு அரிசிக் கஞ்சியை நானே அனுப்பி வரவேண்டும். சங்கத்தில் சேரும் பிக்குணிகள் நீராடும்போது அணிந்து கொள்ளத் தக்க உடைகளையும் அடியேனே அளிக்கவேண்டும்!' என்று அவள் தான்கேட்ட எட்டு வரங்களையும் விளக்கிச் சொன்னாள்.

அவ்வாறெல்லாம் ஏன் கேட்கிறாள் என்பதையும் அவள் எடுத்துக் கூறினாள். முந்திய நாள் மழையில் பிக்குக்கள் நனைந்ததையும், மாற்று உடைகளில்லாமல் அவதிப் பட்டதையும், எங்கு உணவு கிடைக்கும், ஆராமங்கள் எங்கேயிருக்கின்றன என்பவற்றையெல்லாம் தெரியாமல் பிக்குக்கள் கஷ்டப்படுவதையும், பெண்டிர் குளிக்கும் போது தக்க உடைகள் இருக்கவேண்டும் என்பதையும் ஐயன் மனமுருகும்படி அவள் விவரித்துச் சொன்னாள்.

இத்தகைய விஷயங்களில் ததாகதர் யாருக்கும் எளிதாக விட்டுக் கொடுப்பதில்லை. ஆயினும் விசாகை கூறிய காரணங்கள் பொருத்தமாயிருந்ததால், அவள் கேட்ட வரங்களுக்குச் சம்மதித்து விட்டார்.

'இத்தகைய வரங்களால் உனக்கு என்ன நன்மை கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறாய், விசாகா?' என்று பெருமான் கேட்டார்.

'பிற்காலத்தில் பிக்குக்களையும், பிக்குணிகளையும் நான் பார்க்க நேரும்போது, அவர்களுக்கு ஒரு சமயம் உடைகளும், உணவும் அளிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருந்தது என்று எண்ணி மகிழ்வேன்! அந்த மகிழ்ச்சியிலிருந்து எனக்குச் சாந்தம் பிறக்கும். சாந்தியிலிருந்து நல்ல ஞானம் கிடைக்கும்!' என்றாள் விசாகை.

ஐயன் அளவற்ற சந்தோஷமடைந்தார். 'பாத்திரம் அறிந்து, நல்லோர்களுக்குச் செய்யும் உதவி நல்ல நிலத்தில்

விதைக்கப்பெற்ற விதைகளைப்போல் ஏராளமாக விளை வளிக்கும்; உணர்ச்சிகளின் வசப்பட்டு உழல்வோர்களுக் குச் செய்யும் உதவி கரம்பில் விதைக்கப்பெற்ற விதைகளை போலப் பயனற்றுப் போகும்; அவர்களுடைய உணர்ச்சி களே, புண்ணியங்களை வளரவிடாமல் அழித்துவிடும்!' என்று அவர் கூறினர்.

விசாகை பின்னல் நெடுநாள் ஜீவித்திருந்தாள். இருபது ஆண்டுகளில் அவளுக்குப் பத்து ஆண் மக்களும், பத்துப் பெண்களும் பிறந்தார்கள் என்றும், பின்னல் அவர்களுக் கும் ஏராளமான குழந்தைகள் இருந்தன என்றும், அவளைப் பற்றிய கதைகளில் கூறப்பட்டிருக்கிறது. கடைசியில் அவளுக்குக் கொள்ளுப் பேரர்களும், பேர்த்திமார்களுமாக மொத்தம் எண்ணுயிரம் பேர்கள் இருந்தனராம்! மற்றப் புராணக் கதைகளைப் போலவே பௌத்தக் கதைகளிலும் ஏண்ணிக்கையில் குறைவே இருப்பதில்லை!

## பூர்வாராமம்

விசாகை அம்மையின் கிழக்கு ஆராமத்தில் புத்தர் பெருமான் தங்கியிருந்த காலத்தில் ஒரு சமயம் உபவாஸத நாளன்று* இரவில் பிக்குக்கள் அனைவரும் வந்து கூடியிருந் தனர். பகவர் அறவுரை பகர்வார் என்று எல்லோரும் வெகுநேரம் காத்திருந்தனர். ஆனல் பிக்குக்களின் நடுவே அவர் மௌனமாகவே அமர்ந்துகொண்டிருந்தார்.

---

*ஒவ்வொரு பட்சத்திலும் முதல்நாளும் எட்டாவது நாளும் ஆக, மாதத்தில் நான்கு நாட்கள் பிக்குக்களுக்கு உபவாஸத நாட்களாம். அந்த நாட்களில் புத்தர் பெருமான் பிக்குக்களின் ஒழுக்க விதிகள் பற்றி அருளிய 'பிராதிமோட்சம்' என்ற நூல் ஓதப்பெறும்; அதில் கூறப் பெற்றுள்ள விதிகளுக்கு மாருக நடந்த பிக்குக்கள் தங்கள் குறைகளை வெளிப்படையாகக் கூறி ஒப்புக்கொண்டு, மேற்கொண்டு திருந்திய வாழ்க்கையை அடைவார்கள்.

ஆனந்தர் மெதுவாக எழுந்து தமது உடையால் இடது தோளை மறைத்து முறையாகப் போர்த்துக்கொண்டு, பெருமானிடம் சென்று வணங்கினர். 'பகவ, இரவு வெகு நேரம் ஆகிவிட்டது. பிக்குக்கள் ஆர்வத்தோடு காத்துக் கொண்டிருக்கின்றனர். பகவர் உபதேசத்தை ஆரம்பிக்கலாமா?' என்று அவர் வினவினர். ததாகதர் மறுமொழி கூறவில்லை.

இரண்டாவது சாமமும் கழிந்து கொண்டிருந்தது. மீண்டும் ஆனந்தருடைய கேள்விக்கு ஐயனிடமிருந்து பதில் வரவில்லை.

மூன்ருவது சாமத்தில் ஆனந்தர் மூன்ருவது முறையாக விண்ணப்பித்துக் கொண்டார். அப்போது பகவர், 'கூட்டம் பரிசுத்தமாக இருக்கவில்லை, ஆனந்தா!' என்ருர்.

பெருமான் எவரைப்பற்றி எண்ணி அப்படிக் கூறினுர் என்பதை மகா மௌத்கல்யாயனர் சிந்தித்துப் பார்த்தார். கூடியிருப்பவர்களுடைய உள்ளங்களைத் தமது உள்ளத்தால் துருவிப் பார்த்துப் பரிசுத்தமற்றவர் யார் என்பதை அவர் கண்டு கொண்டார். கூட்டத்திலே அமர்ந்திருந்த ஒருவர், முன்னுல் திரிசரணங்களைக் கூறித் தருமத்தை மேற்கொண்டிருந்த போதிலும், ஆசைகளுக்கு அடிமைப்பட்டுத் திருந்தாத ஒழுக்கத்துடன் இருந்தார். மௌத்கல்யாயனர் அவரிடம் சென்று, 'ஐய, எழுந்திரும்! பகவர் உம்மைக் கண்டு பிடித்து விட்டார். நீர் இந்தக் கூட்டத்திற்கு உரியவரல்லர்!' என்று சொன்னுர். மூன்று முறை இவ்வாறு கூறியும் அந்த மனிதர் எழுந்திருக்கவில்லை. அன்று கூட்டத்தை நடத்தும் பொறுப்பை வகித்திருந்த மௌத்கல்யாயனர் அவருடைய கையைப் பிடித்து எழுப்பி வெளியே கொண்டுபோய் விட்டுவிட்டுக் கதவையும் தாழிட்டார். பிறகுதான் புத்தர் உபதேசம் செய்ய இசைந்தார்.

## கடலும் தருமமும்

புத்தர் பெருமான் அன்றிரவு கடலின் விசேட அமிசங்களைக் குறிப்பிட்டு, அதனோடு தமது தருமத்தையும், சங்கத்தையும் ஒப்பிட்டு விளக்கினர். அவர் கூறியதாவது :*

'ஓ பிக்குக்களே! மகா சமுத்திரத்தினிடம் ஆச்சரியமான அபூர்வமான எட்டுக் குணங்கள் இருக்கின்றன ; அவைகளை இடைவிடாது கண்டு அதனுள் வாழும் பெரிய பிராணிகள் இன்புற்று அதிலே திளைத்துக் கொண்டிருக்கின்றன.

'அதே முறையில், ஓ பிக்குக்களே, தருமத்திலும் வினயத்திலும் அதிசயிக்கத் தக்க அபூர்வமான எட்டுக் குணங்கள் இருக்கின்றன ; அவைகளை இடைவிடாது கண்டு பிக்குக்கள் இன்புற்றுத் தருமத்திலும் வினயத்திலும் திளைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த எட்டுக் குணங்கள் எவை ?

'ஓ பிக்குக்களே! கடல் (கரையிலிருந்து) போகப் போகக் கொஞ்சங் கொஞ்சமாகப் பள்ளத்திலிருந்து பள்ளமாக, ஆழமாகிக் கொண்டே போகின்றது ; திடீரென்று பெரும் பள்ளமாயில்லை. ஓ பிக்குக்களே ! அதுபோலவே, இந்தத் தருமத்திலும், வினய ஒழுக்கத்திலும் பயிற்சி பெறுதல் படிப்படியாக அமைந்துள்ளது; ஒவ்வொரு முறையும் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக அமைந்துள்ளது ; திடீரென்று ஒரேயடியாக அருகத்து நிலையை அடைந்துவிடுவதில்லை. இது முதலாவது குணம்.

'ஓ பிக்குக்களே ! பெருங்கடல் ஒரே தன்மையுடன், கரையைக் கடந்து அப்பால் செல்வதில்லை,—அதுபோலவே, என் உரையைக் கேட்பவர்களுக்காக நான் அமைத்துள்ள விதிகளை அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் தாண்டிச் செல்வதில்லை. இது இரண்டாவது குணம்.

---

* இந்தச் சொற்பொழிவு 'சுள்ள வக்க'த்திலுள்ளது.

'ஓ பிக்குக்களே! மகா சமுத்திரம் உயிரற்ற சடலத்தைத் தன்னகத்தே வைத்திருப்பதில்லை; கடலிலுள்ள எத்தகைய செத்த உடலாயினும், அதை அது விரைவாகக் கரையிலே கொண்டுபோய் ஒதுக்கிவிடும். அதுபோலவே, யாராவது ஒருவர் தீயொழுக்கத்துடன், தீய குணங்களுடன், அசுத்தமான அல்லது சந்தேகிக்கத் தக்க நடத்தையுடன், சத்திய விரதங்களை மேற்கொண்டிருப்பினும், சிரமணராயில்லாமல், உள்ளம் மாசடைந்து, ஆசைகளுக்கு அடிமைப்பட்டுப் பயனற்ற ஜன்மமாக விளங்கினல்—அவருடன் சங்கம் எவ்விதத்தொடர்பும் கொள்ளாது; கூட்டம் கூடியதும் விரைவாக அவரை வெளியே கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். அந்த மனிதர் பிக்குக்களின் சங்கத்தின் நடுவில் அமர்ந்திருந்தாலும், அவர் சங்கத்திலிருந்து வெகு தூரத்தில் விலகியிருப்பவராவார்; சங்கமும் அவரிடத்திலிருந்து வெகு தூரம் எட்டியே யிருக்கும். இது மூன்றுவது குணம்.

'ஓ பிக்குக்களே! மகா நதிகளெல்லாம் பெருங் கடலுள் வீழ்ந்த பிறகு, தங்கள் பெயர்களையும் வரலாறுகளையும் இழந்து, ஒரே மகா சமுத்திரமாகக் கருதப் பெறுகின்றன. அது போலவே, நான்கு வருணத்தார்களும் உலக ஆசைகளைத் துறந்து, ததாகதர் பிரகடனம் செய்துள்ள தருமத்தையும் விநயத்தையும் மேற்கொண்ட பிறகு, தத்தம் பெயர்களையும் குலங்களையும் துறந்து, ஒரே தன்மையான சாக்கிய புத்திய சிரமணர்களாக ஆகிவிடுகிறார்கள். இது நான்காவது குணம்.

'ஓ பிக்குக்களே! உலகத்திலுள்ள ஆறுகளெல்லாம், ஓடி ஓடிச் சென்று, முடிவிலே பெருங்கடலில் சேர்ந்தபோதிலும், வானத்து மழை நீரெல்லாம் அக்கடலிலேயே வீழ்ந்த போதிலும், அதனுல் அது மிகவும் குறைந்திருப்பதாகவோ, மிகவும் நிறைந்திருப்பதாகவோ காணப்படுவதில்லை. அது போலவே, அநேகம் பிக்குக்கள் (நிருவாணப் பேற்றை அடைந்து), தாங்கள் இருந்த சுவடுகள் தெரியாமலே மறைந்து விட்டபோதிலும், அதனுல் சங்கம் அதிகம் குறைந்திருப்பதாகவோ, அதிகம் நிறைந்திருப்பதாகவோ காணப்படுவதில்லை. இது ஐந்தாவது குணம்.

'ஓ பிக்குக்களே! மாபெருங் கடலுக்கு ஒரே சுவைதான் இருக்கிறது—அதுவே உப்புச் சுவை. அதுபோலவே இந்தத் தருமத்திற்கும் விநயத்திற்கும் ஒரே சுவைதான் உண்டு—அதுவே விமுக்தி (நிருவாணம்). இது ஆறுவது குணம்.

'ஓ பிக்குக்களே! பெரிய சாகரத்திலே முத்துக்கள், பலவிதமான மணிகள் நிறைந்திருக்கின்றன. அது போலவே, இந்தத் தருமத்திலும், விநயத்திலும் முத்துக்களும், பலவித மான மணிகளும் நிறைந்திருக்கின்றன. அவைகளிலே சேர்ந்தவை நான்கு **சதிப் பிரஸ்தானங்கள்**, நான்கு **சம்யக் பிரதானங்கள்**, நான்கு **ருத்திபாதங்கள்**, ஐந்து **பலங்கள்**, ஏழு **போத்தியாங்கங்கள்**, ஐந்து **இந்திரியங்கள்**, **அஷ்டாங்க மார்க்கம்** ஆகியவை.* இது ஏழாவது குணம்.

---

*போதி அல்லது மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கு 37-தத்துவங்களைப் புத்தர் வகுத்துள்ளார். அவைகளைப்பற்றிய முழு விவரங்களும் அபிதர்ம பிடகத்தில் விளக்கப்பட்டுள்ளன.

**நான்கு சதிப் பிரஸ்தானங்கள்:** உடல், உணர்ச்சி, சித்தம், நிருவாணம் (தருமம்) ஆகியவற்றின் இயல்புகளைப் பற்றிய உண்மைகள்.

**நான்கு சம்யக் பிரதானங்கள்:** பாவம் வளராமல் தடுப்பதற்கும், நன்மையை வளர்ப்பதற்கும் உரிய நான்கு வகை முயற்சிகள்.

**நான்கு ருத்திபாதங்கள்:** சித்தத்தின் இருத்தி ஆற்றலுக்கு அடிப்படைகள்: அடைய வேண்டும் என்ற நினைப்பு, முயற்சி, இதயப் பண்பாடு, ஆராய்ச்சி ஆகிய நான்கு.

**ஐந்து இந்திரியங்கள்:** மனோ சக்தியின் வளர்ச்சிக்கு உரிய முறைகள்: சிரத்தை, வீரியம் (விடாமுயற்சி), ஞாபக சக்தி, சமாதி, பிரக்ஞை (மெய்யறிவு) ஆகிய ஐந்து.

**ஐந்து பலங்கள்:** மனத்தின் ஷ்டி அங்கங்களுக்குள்ள ஐந்து ஆற்றல்கள்.

**ஏழு போத்தியாங்கங்கள்:** மெய்ஞ்ஞானத்திற்கு வேண்டிய கருவிகள்: சாமர்த்தியம், ஞாபக சக்தி, வீரியம் (விடாமுயற்சி), உள்ளக் களிப்பு, சாந்தி, சமாதி, சமதிருஷ்டி ஆகிய ஏழு.

**அஷ்டாங்க மார்க்கம்:** நற்காட்சி முதலிய எட்டுப் படிகளுள்ள நிருவாண வழி.

‘ஓ பிக்குக்களே! பெருங்கடலிலே பூதாகாரமான உடல்கள் அமைந்த பெரிய ஜந்துக்கள் (பல்லாயிரம் அடி நீளமுள்ளவை) இருக்கின்றன. அதேபோல, இந்தத் தருமத்தையும் விநயத்தையும் கடைப்பிடித்து வரும் மாபெரும் மனிதர்கள் இருக்கின்றனர்; அவர்களிலே முதற்பாதையில் இறங்கியுள்ளவன் (சோதாபன்னன்), அதன் பயனை அடைந்தவன் (சக்ருத காமின்), மூன்றுவது பாதையில் இறங்கியுள்ளவன் (அநாகமின்), அதன் பயனை அடைந்தவன் (அருகத்து), அருகத்து நிலையின் பயனை அடைந்தவன் ஆகியோர் அடங்கியுள்ளனர். இது எட்டாவது குணம்.

‘ஓ பிக்குக்களே! இந்தத் தருமத்திலும், விநயத்திலுமுள்ள அதிசயிக்கத்தக்க அபூர்வமான எட்டுக் குணங்களும் இவை. இவற்றை இடைவிடாது உணர்ந்து பிக்குக்கள் இவற்றிலே இன்புறுகின்றனர்.’

பதினேழாம் இயல்

# இருபது வருட யாத்திரைகள்

---

'அருள் நெறியால் பாரமிதை
ஆறைந்தும் உடனடக்கிப்
பொருள் முழுதும் போதியின்கீழ்
முழுதுணர்ந்த முனிவரன்தன்
அருள்மொழியால் நல்வாய்மை
அறிந்தவரே பிறப்பறுப்பார்
மரு(ள்) நெறியாம் பிறநூலும்
மயக்கறுக்கு மாறுளதோ!'

—சித்தாந்தத் தொகை

**போ**திமாதவர் ஞானமடைந்த காலம் முதல் இருபது ஆண்டுகளுக்கு மேலாக இடைவிடாது தருமப் பிரசாரம் செய்துகொண்டிருந்தார். இதைப் பற்றிய விவரமான சரித்திரம் இல்லாது போயினும், அவருடைய யாத்திரை களைப் பற்றிய பல குறிப்புக்கள் கிடைத்திருக்கின்றன. மழைக் காலமாகிய மூன்று மாதங்கள் மட்டும் ஒரே விகாரை யில் சீடர்களோடு தங்கி யிருந்துவிட்டுப் பின்னர் ஆண்டு முழுவதும் அவர் பிரயாணம் செய்துகொண்டே யிருந்தார். காசி, உருவேலா, இராஜகிருகம், கபிலை, சிராவஸ்தி முத லிய இடங்களிலும், நடுவழிகளிலிருந்த நகரங்கள், கிராமங் களிலும் பிரசாரம் செய்வதிலே முதல் நான்கு ஆண்டுகள்

கழிந்தன. ஐந்தாவது ஆண்டிலே அவர் **வைசாலி*** நகரை அடைந்தார்.

வைசாலி விரிஜி நாட்டின் தலைநகர். வட இந்தியாவில் அக்காலத்தில் மகதம், அங்கம், விதேகம், காசி, கோசலம், பாஞ்சாலம், குரு, அவந்தி, காந்தாரம் முதலிய பல இராஜ்யங்கள் தனித்தனி அரசர்களின் ஆட்சியில் இருந்து வந்த போதிலும், விரிஜி நாடு மட்டும் ஒருவகை ஜனநாயகத்தைப் பெற்றிருந்தது. அந்நாட்டில் விரிஜியர், லிச்சவிகள், மல்லர்கள் ஆகிய வகுப்பினர்கள் தத்தம் குடும்பங்களுக்குக் 'கணராஜர்கள்' என்ற தலைவர்களை நியமித்துக்கொண்டு, அத் தலைவர்களின் மூலம் எல்லோர்க்கும் பொதுவான ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வது வழக்கம். அந்தத் தலைவரே குறிப்பிட்ட ஒருகாலத்திற்கு விரிஜி நாட்டின் அரசராயிருப்பார். லிச்சவிகள் பெருஞ் செல்வமும் செல்வாக்கும் பெற்று விளங்கியதால், அவர்களிலேயே ஒருவர் அரசராக் வருவதும் இயல்பாயிருந்தது. அரசர் 'லிச்சவிகளின் சிங்கம்' என்று அழைக்கப் பெற்று வந்ததாக வரலாறுகளிலிருந்து தெரிகின்றது. பல குறுநில மன்னர்களுக்கும் குடும்பத் தலைவர்களுக்கும் மேலே ஆட்சி அதிகாரம் அவர் வசமே இருந்து வந்தது.

அக்காலத்திய இராஜ்யங்களில் காசியும் கோசலமும் ஒரே ஆட்சியில் சேர்ந்திருந்தன. மகத நாடு நாளுக்குநாள் வல்லமை பெற்றுப் பெருகி வந்ததோடு, நாட்டின் பரப்பும் அதிகரித்துக்கொண்டே வந்தது. ஆயினும் விரிஜி நாட்டு அரசரும், குறுநில மன்னர்களும், தங்கள் நாடு மகதத்துடன் சேர்ந்துவிடாமல் தனித்திருப்பதற்காக எப்போதுமே விழிப்புடன் இருந்து வந்தனர். மகத மன்னரும்,

---

*வைசாலி இக்காலத்திய பிரயாகை என்ற அலகாபாத் நகர் தான் என்று பௌத்தர்கள் கருதுகின்றனர். ஆனால் இராமாயணத்திலிருந்து அந் நகர் பிரயாகைக்குக் கீழே கங்கையின் வடகரையில் இருந்ததாகத் தெரிகிறது.

அவர்களுடைய படையெழுச்சி ஏற்பட்டால் தடுப்பதற்காகக் கோட்டை கொத்தளங்கள் அமைத்துக்கொண்டு, படைகளையும் தயாராக வைத்திருந்தார்.

வைசாலியைப் பற்றிய வரலாறுகள் யாவும் அந்நகரைப் 'பூவுலகின் சொர்க்கம்' என்று வருணிக்கின்றன. உயரமான அழகிய வீடுகளும், மாளிகைகளும், பூஞ்சோலைகளும், உபவனங்களும் அங்கே நிறைந்திருந்தன. இசை பாடும் பறவைகள் ஏராளமாக இருந்தன. லிச்சவி வகுப்பினர்கள் செல்வம் கொழித்துச் செழிப்புடன் இருந்ததால், அவர்களிடையே விருந்துகளுக்கும், விழாக்களுக்கும் குறைவேயில்லை. அங்கு சென்ற பிக்குக்கள், 'தேவர் உலகிலேகூட இத்தகைய எழிலுள்ள நகரை நம் புத்தர் பெருமான் பார்த்திருக்கமாட்டார்!' என்று புகழ்வார்களாம்.

அந்நகரம் மூன்று பிரிவுகளாகப் பிரித்து அமைக்கப்பெற்றிருந்ததாகவும், முதல் பிரிவில் செல்வர்களுடைய 7,000 வீடுகளும், இரண்டாம் பிரிவில் நடுத்தர வகுப்பாருடைய 14,000 வீடுகளும், மூன்றும் பிரிவில் ஏழைகளுடைய 21,000 வீடுகளும் இருந்ததாகவும் திபேத்திய **'துல்வா'** என்ற நூலில் காணப்படுகின்றது. வைசாலி நகரத்துப் பெண்கள் அந்நகரத்திலுள்ள ஆடவரைத்தவிர வெளியிடங்களிலே திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படவில்லை.

செல்வமும் செழிப்பும் பெற்றிருந்த வைசாலி நகரம் கூட ஒருகால் கொடிய பஞ்சம், நோய் முதலியவைகளால் துன்புறக்கூடும் என்று புத்தர் பெருமான் முன்னால் கூறியிருந்தார். ஒரு சமயம் அவ்வாறே அங்குப் பஞ்சமும், கொள்ளை நோயும் தோன்றிப் பல உயிர்களைப் பலிவாங்கி விட்டன. அவ்வேளையில், மகரிஷிகள் சிலரை நகருக்கு அழைத்து வந்தால் அவர்களுடைய மகிமையால் துயரங்கள் நீங்கும் என்று பல மக்கள் கூறினர். முடிவில் அச்சமயத்தில் இராஜகிருகத்திலே வேணுவன விகாரையில் தங்கி

யிருந்த புத்தர் பெருமானையே அழைத்து வரவேண்டும் என்று தீர்மானமாயிற்று. லிச்சவிகளின் தலைவனான மன்னனும் அதற்கு இசைந்தான். ஜனப்பிரதிநிதிகள் சிலர் பிம்பிசார மன்னரிடம் சென்று பெருமானைத் தங்கள் நகருக்கு எழுந்தருளும்படி கேட்டுக்கொள்ள வேண்டினர். அவர், பெருமான் எல்லோரிடத்திலும் கரையற்ற கருணையுடையவர் என்றும், அவர்களே நேரில் அவரிடம் விண்ணப்பித்துக் கொள்ளலாம் என்றும் தெரிவித்தார்.

அவர்கள் ஐயனிடம் நேரில் தெரிவித்ததும், அவரும் வைசாலிக்குப் புறப்படலானார். உடனே பிம்பிசாரர் கங்கைவரை சாலையைச் செப்பனிட்டார். பெருமான் புறப்பட்டதுமே வைசாலியிலும் சுற்றுப்புறங்களிலும் மழை பொழிய ஆரம்பித்தது. கங்கையின் மறு கரையிலிருந்த பாதையை லிச்சவிப் பிரபுக்கள் செம்மையாக்கி வைத்தனர்.

## வைசாலி விஜயம்

வைசாலியை அடைந்ததும், பெருமான் ஆனந்தரிடம் தமது திருவோட்டை அளித்து, அதில் நீரெடுத்துக்கொண்டு, நகரின் வீதிகளிலே அந்நீரைத் தெளித்து வரும்படியும், சுற்றி வரும்போது தாம் உபதேசித்திருந்த சூத்திரங்கள் சிலவற்றை ஓதும்படியும் சொல்லி வைத்தார். ஆனந்தர் அவ்வாறு செய்துவிட்டுத் திரும்பியதும், நகரில் நோயும் பஞ்சமும் நில்லாது நீங்கின என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

அந்நகரிலுள்ள **மகாவனத்தில்** அமைத்திருந்த **கூடாகார விகாரையிலே** பெருமான் தங்கியிருந்து மக்களுக்கு அறவுரைகள் புகன்று வந்தார். ஏராளமான ஜனங்கள் அவருடைய தருமத்தை ஏற்றுக்கொண்டனர். பின்னும் ஐயன், அரண்மனைக்குச் சென்று, அரசனுக்கும் தரும உபதேசம் செய்தார். அவ்வுபதேசம் ' இரத்தின சூத்திரம் ' எனப்படும்.

## சாக்கியர் - கோலியர் பகைமை

போதி வேந்தர் மகாவனத்தில் தங்கியிருக்கையில், கபிலவாஸ்துவிலிருந்த சாக்கியர்களுக்கும் பக்கத்து நாட்டாராகிய கோலியருக்கும் கடுமையான பகை முற்றிச் சண்டை விளைந்துவிட்டது. இரு நாடுகளுக்கு மிடையில் ஓடிக் கொண்டிருந்த உரோகிணி ஆற்றில் நீர் வற்றியிருந்ததால், சாக்கியர்கள் அந்த நீரில் தங்களுக்கே உரிமையுண்டு என்று கூறி, ஆற்று நீர் முழுவதையும் அணையிட்டுத் தடுத்துத் தங்கள் நிலங்களுக்கே பாய்ச்ச ஆரம்பித்தனர். கோலியர்கள் அதை எதிர்த்து, நீர் அனைத்தையும் தாங்களே கொண்டு செல்ல முயன்றனர். இதனால் இரு திறத்தாருக்கும் விரோதம் வளர்ந்தது. ஒருநாள் இருகட்சிகளையும் சேர்ந்த வீரர்களும், விவசாயிகளும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு பெருங் கூட்டங்களாக ஆற்றின் கரையிலே கூடிப் போராடத் தயாராக நின்றனர். அவர்கள் வெறி கொண்டு செல்வதை அறிந்த இருபக்கத்து அரசர்களும் அங்கு சென்றிருந்தனர். அவர்கள் போரைத் தவிர்ப்பதற்குத் தங்களால் இயன்றவரை சொல்லிப் பார்த்தும் பயன் படவில்லை. எனவே சிறிது நேரத்தில் உரோகிணி ஆற்றில் உதிரவெள்ளம் பாயும் நிலைமை ஏற்பட்டிருந்தது.

அந்நிலையில் புத்தர் பெருமான் திடீரென்று அங்குத் தோன்றி, இருதிறத்தாரையும் சமாதானப்படுத்தினர். சில அரிய உபதேசக் கதைகளைக் கூறி, ஐயன், 'மன்னர்களைப் பார்க்கினும் மண் மேம்பட்டதா?' என்று கேட்டார்; 'தண்ணீரைப் பார்க்கினும் மனித இரத்தம் மலிவான பொருளா?' என்று வினவினர். ஜனங்கள் 'இல்லை' என்றனர். அவர்கள் தங்கள் மன்னர்களை அவமரியாதை செய்துவிட்டுப் போராட வந்ததையும், கேவலம் நீருக்காக மானிட உதிரத்தை வெள்ளமாகப் பெருக்க நினைத்ததையும் அவர் கண்டித்து அவர்களின் அறியாமையை எடுத்துக் காட்டினர். அவருடைய

தலையிட்டால் இருகட்சியார்களுக்கும் மனமாற்றம் ஏற்பட்டது. சாக்கியர்கள் தங்கள் குலதீபமான கருணைகரரின் சொற்படியே நடந்து, கையிலிருந்த ஆயுதங்களைத் தூர எறிந்தனர். உடனே கோலியர்களும் அவ்வாறே செய்தனர். அன்று பெருமானால் சமாதானம் ஏற்பட்டிராவிடின், ஆற்று மணலில் கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்களும் சண்டையில் மடிந்திருப்பர்; நடந்த விவரத்தைச் சொல்வதற்கு ஒருவன்கூட மிஞ்சியிருக்க மாட்டான்!

பெருமானின் பெருமையை உணர்ந்து சாக்கியப் பிரபுக்களில் பலரும், கோலியரில் பலரும் பௌத்த தருமத்தை மேற்கொண்டனர்.

மேலே கூறிய சண்டையைத் தவிர்ப்பதற்காகப் புத்தர் வைசாலியிலிருந்து ஆகாய மார்க்கமாக உரோகிணிக் கரைக்கு வந்ததாகச் சொல்லப்படுகின்றது. சமாதானத்திற்குப் பிறகு, அவர் மீண்டும் வைசாலிக்குத் திரும்பி, மகாவனத்திலே தங்கியிருந்தார்.

## சுத்தோதனரின் மரணம்

ததாகதர் கூடாகார விகாரையிலிருந்த சமயத்திலே, கபிலவாஸ்துவில் மன்னர் சுத்தோதனர் நோயால் மிகவும் வேதனைப்படுவதாகவும், அவருடைய அந்திம காலம் நெருங்கிவிட்டதாகவும் கேள்வியுற்று, அவர் முக்கியமான சில சீடர்களுடன் அங்கே விரைந்து சென்றார்.

அரண்மனை மாடியிலே கட்டிலில் படுத்திருந்த அரசரின் தலைமாட்டில் போதிநாதர் அமர்ந்து கொண்டு, அவருடைய தலையில் கையை வைத்து, 'எண்ணற்ற பிறவிகளில் யான் செய்துள்ள தவங்களின் மகிமையாலும், போதிமரத்தின் அருகே நாற்பத்தொன்பது நாட்கள் நான் நோற்ற நோன்பின் பயனாலும், இந்தத் தலையில் ஏற்பட்டுள்ள வேதனை அனைத்தும் உடனே நீங்குவதாக!' என்று கூறினார். அவ்வாறே கண் இமைப்பதற்குள் தலை வேதனை

நீங்கிவிட்டது. நந்தன் மன்னரின் வலது கரத்தையும், ஆனந்தர் இடது கரத்தையும், மௌத்கல்யாயனர் பாதங்களையும் தொட்டு, 'நாங்கள் போதிமாதவரின் பாத அரவிந்தங்களைப் பின்பற்றி அடைந்துள்ள புண்ணியப் பேற்றினால் இவைகளின் வலி நீங்குவதாக!' என்றனர். உடனே அந்த அங்கங்களிலிருந்த வேதனையும் நீங்கிவிட்டது. எனினும் மன்னர் இளைத்துக் களைப்பாகவே இருந்தார்.*

பின்னர் புத்தர் பிரான் தந்தையர்க்கு அற உபதேசம் செய்தார். அதைக் கேட்டுச் சுத்தோதனர் அருகத்து நிலையை அடைந்து, மெய்ஞ்ஞானம் பெற்றார். ஏழு நாட்களுக்குப் பின் அவர் ஆவி பிரியும் என்று ஐயன் கூறினார். அந்நாட்களில் அரசர் உலகப் பற்றுக்கள் எவையுமின்றிச் சாந்தி நிறைந்த சிந்தையோடு நிர்வாண முக்தியின் மகிமையை மனக் கண்ணால் கண்டு இன்புற்றிருந்தார். புத்தரின் சத்திய வார்த்தைகள் கடைசிவரை அவருக்கு ஆறுதல் அளித்துக் கொண்டிருந்தன.

கடைசி நாளன்று சூரியன் உதிக்கும் நேரத்தில், கடைசி முறையாக மன்னர் மைந்தரை வணங்கிவிட்டு, பூத உடலை நீத்துப் புகழுடம்பு எய்தினார்.† அப்போது அவருக்கு வயது தொண்ணூற்றேழு.

புத்தரும், சாரீபுத்திரரும் சேர்ந்து மன்னரின் உடலை நீராட்டி, மக்களும் சாக்கியத் தலைவர்களும் தரிசனம் செய்வதற்காக அதை ஓர் உயர்ந்த பீடத்தில் வைத்திருந்தனர். பின்னர் பிரேத ஊர்வலத்திற்கும் ஏராளமாக மக்கள் திரண்டு வந்திருந்தனர். மேள வாத்தியங்களுடன் ஊர்வலம் மயானத்தை அடைந்ததும், ததாகதர் தமது கரங்களாலேயே பிரேதத்திற்கு நெருப்பு வைத்தார்.

---

* 'The Burmese Buddha' – by Rt. Rev. P. Brigandet

† அன்று கி. மு. 534 (ஈசான சகம் 107-ஆம் ஆண்டு) ஆடி மீ, 18-ஆம் வ, சனிக்கிழமை, பூர்ணிமை.

## பெண்களும் சங்கத்தில் சேர்தல்

தந்தையரின் தகனக் கிரியைகள் முடிந்த பின்பு புத்த தேவர் சிறிது காலம் நியக்குரோத வனத்திலே தங்கியிருந் தார். அவ்வமயம் ஒருநாள் அவருடைய சிற்றன்னை கௌதமி அங்கே சென்று, மைந்தராகிய மாமுனியைக் கண்டு வணங்கி, ஒரு புறத்தே ஒதுங்கி நின்றாள். அவ்வாறு நின்று கொண்டு, அவள் ஐயனைப் பார்த்து, 'பகவ! ததா கதர் அருளியுள்ள தரும-விநய முறைப்படி வீட்டைத் துறந்து வீடற்ற வாழ்க்கையை மேற்கொள்வதற்குப் பெண்களும் அனுமதிக்கப் பெற்றால் நலமாகும்' என்று சொன்னாள்.

'போதும், கௌதமி! ததாகதர் அருளிய தரும - விநய முறைப்படி வீட்டைத் துறந்து வீடற்ற வாழ்க்கையை மேற்கொள்ளப் பெண்கள் அனுமதிக்கப் பெறுவதைப் பற்றி ஆசை வைக்கவேண்டாம்!' என்று பகவர் பதி லுரைத்தார் *

இரண்டாவது, மூன்றாவது முறையாகவும் கௌதமி முயன்று பார்த்தும், பயனில்லாது போயிற்று. பின்னர் அவள் அண்ணலை வலப்புறமாக நின்று வணங்கிவிட்டுச் சோகத்துடன் கண்ணீர் பெருக்கி அழுதுகொண்டே திரும் பிச் சென்று விட்டாள்.

புத்தர் ஆடவரின் இரட்சகரேயன்றிப் பெண்களின் இரட்சகரல்லர் என்று மகாநாமனுடைய† மனைவி அவ

---

*கௌதமி சங்கத்தில் பிக்குணியாகச் சேர்வதற்கு முயன்ற இவ் வரலாறு 'விநய பிடக'த்திலுள்ளது.

வெள்ளைத் துகிலணிந்து, மன நிறைவும், பரிசுத்த ஒழுக்கமும் கொண்டு வாழ்ந்து வரும்படியும், அதனாலேயே நிலையான பயன் பெற லாம் என்றும் புத்தர் கௌதமிக்குக் கூறியனுப்பியதாகத் திபேத்திய 'துல்வா'வில் குறிக்கப் பெற்றுள்ளது.

†சுத்தோதனரின் சகோதரருடைய குமாரன்.

ரைப்பற்றிக் கூறினளாம். அவன், தன் தமையனராகிய ததாகதரின் கருணை சகல ஜீவராசிகளுக்கும் உரியது என்றும், அவர் பெண்களுக்கும் அறவுரை கூறுகிறார் என்றும் சொல்லி, அவளையும் ஐந்நூறு சாக்கியப் பெண்களையும் உபதேசம் கேட்டு வரும்படி அனுப்பி வைத்தான். மகாநாமனின் மனைவி மிக்க அழகுடையவள். ஏராளமான நகைகளையும், கண்ணைப் பறிக்கும் உயர்ந்த உடைகளையும் அணிந்துகொண்டு, அவள் நியக்குரோத வனத்துள் சென்றதும், அங்கே ஒரு பிக்கு அவ்வாறு அளவுக்கு அதிகமான ஆடம்பர நகைகளை அணிந்து கொண்டு ஐயனைத் தரிசித்தல் முறையன்று என்று கூறினர். உடனே அவள் நகைகளைக் கழற்றித் தன் பணிப் பெண்ணிடம் கொடுத்து மாளிகைக்குக் கொண்டு செல்லும்படி கூறிவிட்டு, உபதேசம் கேட்கச் சென்றாள். அந்தப் பணிப் பெண், ஐயனின் அமுதம் போன்ற இன் மொழியைத் தானும் கேட்கலாம் என்று அதுவரை களித்திருந்தாள். ஆனல் அவளுக்கு அந்தப் பேறு கிடைக்காமற் போகவே, வழியிலே அவள் மனத்துயரால் மடிந்து போனளாம்! புத்தர் அன்று வந்த பெண்களுக்குத் தருமத்தைப் பற்றி விளக்கிக் கூறினர்.

ஆயினும், பெண்கள் பிக்குணிகளாவதை அவர் அனுமதிக்க இசையவில்லை. அவருடைய சிற்றன்னை கௌதமியோ, சிறிதும் மனம் கலங்காது, எப்படியும் துறவு வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்று உறுதி பூண்டு, காலம் கருதிக் காத்திருந்தாள். பெருமான் நியக்குரோத வனத்திலே சில நாட்கள் இருந்துவிட்டு மீண்டும் வைசாலியை நோக்கிப் புறப்பட்டார்; வழியிலே பல இடங்களில் தங்கித் தருமப் பிரசாரம்செய்துகொண்டே சென்று, மகாவனத்தை அடைந்தார்.

அன்னை கௌதமி, புத்தர் வைசாலியிலிருப்பதை அறிந்து தானும் அங்கே புறப்பட்டாள்.

அவள் தன் கூந்தலைச் சிரைத்துவிட்டுக் காவியுடை

அணிந்துகொண்டு, தன்னைப் போலவே துறவுக் கோலம் பூண்ட வேறு பல சாக்கியப் பெண்களுடன் வழிநடை கொண்டாள். வாழ்நாள் முழுவதும் அரண்மனைகளிலே கண்ணாடி போன்ற பளபளப்புள்ள மென்மையான தரையில் மிதிப்பதிலேகூடக் கால் வருந்தக்கூடிய கௌதமி கல்லும் மண்ணும்நிறைந்த சாலைவழியாக நடந்தேசெல்லவேண்டும் என்று தீர்மானித்தாள். கோலிய மன்னரின் கோமளக் குமாரி, மாநிலம் போற்றும் சுத்தோதன மன்னரின் மகாராணி, புத்தரைப் போற்றி வளர்த்த உத்தமி காட்டு வழிகளிலும் கிராமப் புறங்களிலும் நடந்து சென்று கொண்டிருந்தாள். தாமரை மலர் போன்ற அவள் பாதங்கள் வாடி வதங்கி வீங்கி விட்டன. அவைகளில் ஏற்பட்ட வெடிப்புக்களிலிருந்து உதிரம் கசிந்து கொண்டிருந்தது. அவளைப்போலவே மற்றைப் பெண்களும், எல்லையற்ற இடர்களை அநுபவித்துக் கொண்டிருந்தும், உறுதி குலையாமல் அவளுடன் நடந்து சென்று கொண்டிருந்தனர்.

அவர்கள் வைசாலியில் மகாவனத்தை அடைந்ததும், நேராக விகாரைக்குள் செல்லாமல், வெளியே முன் வாயிலில் அமர்ந்துகொண்டு காத்திருந்தனர். அப்போது அங்கு வந்த ஆனந்தர் அவர்களைக் கண்டார். நெடுவழி நடந்த களைப்பால் சோர்ந்தும், கால்கள் வீங்கியும், சாலைகளின் புழுதி படிந்த உடைகளுடனும், மாசுற்ற மணிகளைப் போல் விளங்கிய அந்த ஸ்திரீகளைக் கண்டதும், அவர் திடுக்கிட்டுக் கௌதமியை நோக்கி, 'அம்மா, சாக்கியர் நாட்டில் எவரேனும் படையெடுத்து வந்துள்ளனரா? நீங்கள் ஏன் இப்படி அலங்கோலமாக வந்துவிட்டீர்கள்?' என்று வினவினர். கௌதமி தாங்கள் வந்த காரியத்தை தெரிவித்தாள்: 'ததாகதர் பெண்களைச் சங்கத்தில் சேர்த்துக் கொள்ள அனுமதிக்காததால், நாங்கள் வெளியே நிற்கிறோம்!' என்றாள். அவளுடைய நீர் நிறைந்த கண்களை

யும், அழுகுரலையும், துயரத்தையும் கண்டு, ஆனந்தர் ஐயனை நாடி விகாரையுள் சென்றார்.

உள்ளே சென்றவர் பகவரை வணங்கி, அவர் அருகே ஒரு பக்கத்தில் அமர்ந்துகொண்டு, அன்னை கௌதமி முன் வாயிலில் வந்து காத்திருப்பதைத் தெரிவித்தார். 'பெரும! ஸ்திரீகளும் தரும ஒழுக்கத்தை மேற்கொண்டு சங்கத்திலே சேர அனுமதித்தல் நலம்!' என்றும் கூறினார்.

'போதும், ஆனந்தா! ஸ்திரீகளை அவ்வாறு அனுமதிக்க வேண்டும் என்று விரும்பவேண்டாம்!' என்று பெருமான் மறுத்து விட்டார். மீண்டும் இருமுறை ஆனந்தர் கேட்டதற்கும், அதே மறுமொழிதான் கிடைத்தது. ஆயினும் ஆனந்தர் விடுவதாயில்லை.

பெண்கள் துறவு பூண முடியுமா, முடியாதா என்றும், அவர்கள் தருமத்தை ஏற்றுக்கொண்டு உபாசிகைகளாகி, மூன்று படிகளைத் தாண்டி, நான்காவதான அருகத்து நிலையை அடைய முடியுமா, முடியாதா என்றும், அவர் பெருமானிடம் சில கேள்விகள் கேட்டார். பெருமான் அவர்கள் அவ்வாறெல்லாம் அடைய முடியும் என்று கூறினார். பிறகு ஆனந்தர் அன்னை கௌதமியின் ஏற்றத்தையும், அவள் பெருமானைப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்து வந்த பெருமையையும் எடுத்துக் கூறி, அவளைத் ததாகதரின் சங்கத்தில் சேர்த்துக் கொள்ளல் நலம் என்று மீண்டும் வேண்டினார்.

முடிவில் ததாகதரும் மனமிரங்கிப் பிக்குணிகளுக்குரிய எட்டு முக்கியமான விதிகளைக் கௌதமி ஏற்று நடக்க இசைந்தால், அவளைச் சங்கத்தில் சேர்த்துக் கொள்ளலாம் என்று அனுமதித்தார். அந்த எட்டு முக்கிய விதிகளாவன :

> ஒரு பிக்குணி நூறு வயதானவளாயிருந்தாலும், ஒரு பிக்கு எவ்வளவு இளைஞனாயிருந்தாலும், அவனைக் கண்டதும் அவள் எழுந்து வணங்கவேண்டும்.

ஒரு பிக்குக்கூட இல்லாத பிராந்தியத்தில் (ஜில்லாவில்) பிக்குணி மாரிக்காலத்தில் தங்கியிருக்கக் கூடாது.

ஒவ்வொரு பட்சத்திலும் (மாதம் இரு முறை) பிக்குணி பிக்குக்களிடம் தரும உபதேசம் பெறவேண்டும்.

வருஷா காலம் முடிவடையும் பொழுது, பிக்குக்களும் பிக்குணிகளும் கூடிய சங்கத்தின் முன்பு, மற்றவர்கள் கண்டும், கேட்டும், சந்தேகித்தும் உள்ள விஷயங்களைப்பற்றிப் பிக்குணி விசாரணைக்கு உட்பட்டிருக்க வேண்டும்.

பெருந் தவறு புரிந்துள்ள பிக்குணி, ஒரு பட்ச காலத்திற்குள் அதற்குப் பரிகாரம் தேடிக் கொண்டு, இருபாலாரும் கூடியுள்ள சங்கத்தின் நன்மதிப்பைப் பெறவேண்டும்.

இரண்டு வருஷா காலங்கள் முடிய இந்த விதிகளில் ஆறு விதிகளை முறையாகக் கடைப் பிடித்து வந்த பிக்குணி, பயிற்சி முடிந்து, இரு பாலாரும் சேர்ந்துள்ள சங்கத்திடம், பிக்குணிக்குரிய முழு அந்தஸ்தையும் பெறலாம்.

எக்காரணத்தையிட்டும் பிக்குணி ஒரு பிக்குவை ஏசவோ, கண்டிக்கவோ கூடாது.

பிக்குணி பிக்குக்களிடம் பேசுதல் கூடாது; ஆனால், அவர்கள் அவளிடம் பேசலாம்.

ஆனந்தர் இந்த எட்டு விதிகளையும் கௌதமியிடம் போய்த் தெரிவித்தபோது, அவள் தன் உயிருள்ளவரையிலும் அவைகளைக் கடைப்பிடித்து வருவதாக உறுதி சொன்னாள்.

அவ்விஷயத்தை ஆனந்தர் ஐயனிடம் கூறித் ததாகதரின் தாயார் பிக்குணியாகிவிட்டாள் என்றார். அப்போது பெருமான், 'பெண்களைச் சேர்க்காமலிருந்தால், தருமமும் சங்கமும் ஆயிரம் ஆண்டுக் காலம் நிலைத்திருக்கும்; சேர்க்கலாம் என்று முடிவு செய்துவிட்டதால், அவை ஐந்நூறு ஆண்டுகளே நிலைத்திருக்கலாம்!' என்று கூறினார்.

அன்னை கௌதமி சங்கத்தில் சேர்ந்த சமயத்திலேயே தேவி யசோதரையும் பிக்குணியானாள்; அவர்களுடன் மகா

வனத்திற்குச் சென்றிருந்த மற்ற ஸ்திரீகளும் துறவறத்தை மேற்கொண்டனர்.

## பௌத்தமும் பெண்களும்

புத்தர் பெருமான் பெண்களைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தையும், பௌத்த தருமத்தில் அவர்களுக்கு உரிய நிலையையும் இங்கே குறிப்பிடுதல் அவசியம். பெண்களைப் பாவிகள் என்றோ, மாயப்பிசாசுகள் என்றோ புத்தர் கருதவில்லை. ஆடவர்களே உயர்ந்தவர்கள், முக்திக்கு உரியவர்கள் என்றும் அவர் கருதவில்லை. 'நரகத்திற்குச் செல்லும் பாதையில் வழிகாட்டி நிற்கும் ஒளி விளக்குக்கள் பெண்கள் என்பது அவர் கொள்கையன்று. அவருடைய உபதேசங்களை ஆயிரக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் ஒரே கூட்டமாக இருந்தே கேட்டு வந்தனர்.

ஆயினும் பெண்களைச் சங்கத்தில் சேர்ப்பது பற்றி அவர் தயக்கமடைந்ததன் காரணங்கள் பொதுவான மனித இயல்பைப் பற்றி அவர் தெள்ளத் தெளிவாக அறிந்திருந்தமையும், அக்காலத்திலே புறச்சமயவாதிகள் வீண் பழி சுமத்த முன்வரக்கூடும் என்பதுமேயாம். ஆணாயினும் பெண்ணாயினும், அப்பழுக்கில்லாமல், மாசுமறுவில்லாமல், மிகத்தூய்மையுடன் வாழவேண்டும் என்பதும், அத்தகைய வாழ்க்கைக்கு இடைவிடாத பயிற்சி அவசியம் என்பதும் அவர் கொள்கை. கண்களால் பார்ப்பவைகளும், காதுகளால் கேட்பவைகளும், மற்றைப் புலன்களால் உணர்பவைகளும் மனத்தைப் பாதிக்கின்றன. இதனால் உணர்ச்சிகள் ஏற்படுகின்றன; விருப்பும் வெறுப்பும் ஏற்படுகின்றன. விருப்பு - வெறுப்புக்களால் பற்று உண்டாகிறது. எனவே புலன்கள் விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாயிருந்து காத்து வரவேண்டும் என்பதற்குப் பெருமான் பல விதிகளையும், பயிற்சி முறைகளையும் அமைத்தார்.

சங்கத்தில் துறவிகளாகச் சேர்ந்த ஆடவர்களுக்கு

மனவிகாரம் ஏற்படக்கூடிய காரணங்களில் முதன்மையாகக் குறிப்பிடத் தக்கது பெண் உருவம். மற்றைப் பொருள்கள் சம்பந்தமாகப் புலன்களை அடக்கியும், விருப்பு வெறுப்புக்களைக் களைந்தும் பயிற்சி பெறலாம் எனினும், பெண்ணைச் சந்தித்து அதனால் ஏற்படும் உணர்ச்சியை வெல்வதைப் பார்க்கினும், அவளைச் சந்திக்காமலே ஒதுங்கிச் சென்று விடுதல் மேலென்று புத்தர் கருதினார்.* மனத்திற்கு எவ்வளவு பயிற்சியிருப்பினும், சில சமயங்களில் அது வழுவி விழுந்துவிடக் கூடும். புத்தர் சம்பந்தப்பட்ட மட்டில், அவர் உணர்ச்சிகளை அடக்கி வென்றவர் என்பது மட்டுமன்று, அவைகளின் காரணங்களையே வேரோடு பறித்தெறிந்து விட்டவர் என்றே சொல்ல வேண்டும். மற்றவர்களும் அவரைப்போலவே இருக்கமுடியும் என்று கருத இயலாது. ஆதலால்தான் ஆடவருக்கும் பெண்டிருக்கும் சந்திப்பே இல்லாதிருத்தல் நலம் என்று அவர் கருதினார்.

பெண்களுடன் வீண் பேச்சுப் பேசுதலை அவர் தடை செய்தார். கூடியவரை பெண்களைப் பாராமலே ஒதுங்கியிருக்க வேண்டும் என்று அவர் கூறினார். அவர்களிடம் சமயம், ஒழுக்கம் முதலிய விஷயங்களைப் பற்றிப் பேச நேர்ந்தாலும், பிக்குக்கள் தூர விலகியிருந்தே பேசவேண்டும் என்றும், அவ்வாறு ஒரு பிக்கு பேசும்போது, வேறு பிக்குக்கள் சிலர் உடனிருக்க வேண்டும் என்றும் அவர் விதிகள் செய்தார். இவைகள் எல்லாம் பெண்கள் தாழ்ந்தவர், தீயோர் என்ற கருத்தால் ஏற்பட்டவை அல்ல. பண்படாத மானிட உள்ளத்தின் பலவீனங்களை அறிந்து, உணர்ச்சி வெள்ளத்தைத் தடை செய்வதற்காகப் போடப் பெற்ற அணைகளே இவை.

*'......he raised the strongest barrier against the wildest passion of the heart.'

—*Rt. Rev. P. Brigandet.*

பௌத்த தருமத்தில் பெண்களுக்கு உயர்ந்த நிலையே அமைந்திருக்கின்றது. அவர்கள் இழிந்த பிறவிகளாகக் கருதப்படவில்லை. பிக்குக்கள் பாடிய பாடல்கள் பல 'தேர காதை' என்ற நூலாகவும், பிக்குணிகள் பாடிய பாடல்கள் 'தேரி காதை' என்ற நூலாகவும் தொகுக்கப் பெற்று, அவை பௌத்தத் திருமுறைகளோடு சேர்க்கப் பெற்றுள் ளன. பிக்குக்களிற் பலர் சிறந்து விளங்கியது போலவே, பிக்குணிகளிலும் பலர் புகழ் பெற்று விளங்கி வந்தனர்.

பௌத்த சமயிகளிடையே ஆண்-பெண் உறவும், திரு மணமும், தனிப்பட்டவர்களுடைய விஷயங்களாகக் கரு தப் பட்டன. விவாகத்தில் ஆணும் பெண்ணும் சமமாகவே கருதப்பட்டனர். பெண்ணுக்குச் சொத்துரிமை உண்டு. அவளுடைய சொத்தில் கணவன் தலையிட முடியாது. பௌத்த சமயம் பரவியுள்ள நாடுகளில் காதலே விவாகத் திற்கு அடிப்படையாக விளங்குகின்றது; காதலற்றுப் போனால் விவாக ரத்து அனுமதிக்கப்பெறுகின்றது. பர்மாவி லுள்ள பௌத்தப் பெண்கள் விவாகமான பின் தாலி, ஐம் படை, திருமண மோதிரம் முதலிய அடையாளங்கள் எது வும் அணிவதில்லை.

## இருத்தி ஆற்றல்கள்

புத்தர் போதியடைந்த பின் ஆறுவது ஆண்டில் இராஜகிருகத்து வேணுவனத்தில் தங்கியிருந்தார். அப் போது பிம்பிசாரருடைய மகாராணியான க்ஷேமை என்பவ ளுக்கு அவர் தரும உபதேசம் செய்தார். அந்தச் சீமாட்டி யின் பக்தி விசுவாசத்தைக் கண்டு அவர் அவளை மிகவும் உயர்ந்த முறையில் பாராட்டி வந்தார்.

அக்காலத்தில் இராஜகிருகத்திலே ஒரு செல்வன் இருந்தான். அவன் ஒருநாள், நதியில் குளித்துக்கொண் டிருக்கையில் சந்தனக் கட்டையிலே செய்த ஒரு திருவோடு நீரில் மிதந்து வந்தது. அதை அவன் எடுத்துக்கொண்டு

சென்று, தன் வீட்டு முன்வாயிலில் ஒரு மூங்கில் கழியிலே கட்டிவைத்து, உலகில் யாராவது அருகத்து இருந்தால், அவர் ஆகாய வழியாக வந்து அதை எடுத்துக்கொண்டு போகலாம் என்று நகரெங்கும் விளம்பரம் செய்தான்.

அந்நகரில் அக்காலத்தில் பல சமயவாதிகள் தத்தம் மதமே சிறந்தது என்று வாதாடித் தீவிரமாகப் பிரசாரம் செய்து கொண்டிருந்தனர். அவர்களிலே எவரும் அந்தத் திருவோட்டை எடுக்கச் செல்லவில்லை. ஆனால் ஏழாவது நாளன்று, உபாதானம் எடுப்பதற்காக நகருட் சென்ற புத்தரின் சீடர்களான மௌத்கல்யாயனரும் பிண்டோல பாரத்துவாஜரும் அதைப்பற்றிய செய்தியைக் கேள்விப் பட்டுத் தமக்குள் ஆலோசனை செய்தனர். மௌத்கல்யாய னர், ஏற்கெனவே தாம் பிக்குக்களின் தலைவராயிருந்து புகழ் பெற்றிருப்பதால், தமது நண்பரே வான வழியாகப் பறந்து சென்று தமது ஆற்றலைக் காட்டிப் பரிசைப் பெற்று வரும் படி கூறினர். பாரத்துவாஜர் அவ்வாறே சென்று, பல ஜனங்கள் பார்த்து மெச்சும்படியாகத் தமது இருத்தி ஆற்றலைக் காட்டித் திருவோட்டைப் பெற்று வந்தார்.

இச்செய்தியைப் புத்தர் பெருமான் அறிந்ததும் மிக வும் வருந்தினர். எந்தப் பொருளைப் பெறுவதற்காகவும் பிக்குக்கள் இருத்தியை உபயோகித்தல் தகாது என்று சொல்லி, அவர் சந்தன மரத்திற் செய்த அத்திருவோட்டை வாங்கி உடைத்தெறிந்துவிட்டார். அது முதல் பிக்குக்கள் தமக்குள்ள சித்துக்களை வெளிக்காட்டாமல் அடக்கமா யிருந்தனர்.

இதை அறிந்த புறச்சமயத் தலைவர்கள் பௌத்தர் களிடம் விசேடமான எந்த ஆற்றலும் கிடையாது என்று எங்கும் பிரசாரம் செய்து வந்தனர். இதனால் ஒரு சமயம் மன்னர் பிந்துசாரர் பெருமானை நேரில் கண்டு, பிக்குக்கள் இருத்தி ஆற்றலைக் காட்டக் கூடாது என்று அவர் விதித் திருப்பதால் எதிரிகளின் கும்மாளம் தாங்கமுடியாதபடி

அதிகரித்து விட்டது என்று முறையிட்டார். அப்போது பெருமான், அரசரின் கட்டளை ஜனங்களுக்கேயன்றி அவனைப் பாதிக்காதது போல், தமது கட்டளை பிக்குக்களுக்கே யன்றித் தமக்கு இல்லையென்றும், இருத்தி ஆற்றல் சமய வாழ்க்கையில் மிக அற்பமான விஷயம் என்றும், அவசியம் அதைக் காண்பிக்க வேண்டுமென்றால் தாமே விரைவில் செய்து காட்டுவதாயும், வெளியே தூரத்திலுள்ள ஒரு நகரில் அதற்குத் தாமே ஏற்பாடு செய்வதாயும் கூறினார்.

சிறிது காலத்திற்குப் பின்பு சிராவஸ்தி நகருக்குப் போதி வேந்தர் சென்றிருந்த சமயம், கோசல நாட்டின் பல பகுதிகளிலும் முரசறைவித்து, ஆயிரக்கணக்கான மக்களின் முன்பு அவர் தமது இருத்தி ஆற்றலைக் காட்டினார். ஒரு மாங்கொட்டையிலிருந்து திடீரென்று மாபெரும் மாமரம் ஒன்று முளைத்தெழுந்து, பூவும், காயும், பழமுமாக விளங்கும்படி அவர் செய்தார். அப்பொழுது அவர் திருமுகத்திலிருந்தும், திருவடிகளிலிருந்தும் பேரொளி தோன்றி மேலும் கீழும் பரந்து திகழ்ந்ததாம். இவைகளைக் கண்டு மக்கள் பெரு வியப்படைந்ததோடு, பௌத்த சமயத்தின் பகைவர்களும்கூடப் பிரமித்துப் போயினர்.

## தேவலோகத்தில் அன்னைக்கு உபதேசம்

பின்னர் மழைக் காலத்தில் மூன்று மாதங்கள் பெருமான் இந்திரன் வசிக்கும் திரய ஸ்திரிம்ச லோகத்திற்குச் சென்று, அங்கே தேவ உருக்கொண்டிருந்த* தமது அன்னை மாயாதேவிக்கும், தேவர்களுக்கும் தரும உபதேசம் செய்து கொண்டிருந்ததாகப் பழைய வரலாறுகளில் கூறப்பட்டிருக்கின்றது.

மூன்றே அடிகளில் புத்தர் வானுலகை அடைந்ததாகவும், இந்திரன் மிக்க மரியாதையுடன் வரவேற்றுத் தனது

---

*இந்திரன் மகளாக வளர்ந்து கொண்டிருந்ததாகவும் கூறுவர்.

அரியாசனத்தில் அவரை அமரச்செய்து அறம் கேட்டதாக வும் கதைகள் கூறுகின்றன. பெருமான் அப்போது, 'குஸல தர்மா, அகுஸல தர்மா, அவ்யக்த தர்மா' என்று ஆரம்பித்து அபிதர்மத்தை ஆதியோடு அந்தமாக எண்பத்து மூன்று நாட்கள் உபதேசம் செய்தாராம். மாயாதேவி ஐயனிடம் அறம் கேட்டு அருகத்தாயினள். எத்தனையோ பிறவிகளில் என் உதரத்தில் நீ கோயில் கொண்டிருந்தாய். பிறவி தோறும் நானே உனக்குத் தயாக வாய்க்க வேண்டும் என்று நீ விரும்பி யிருந்தாய்; நானும் உன்னையே மதலை யாய்ப் பெற வேண்டும் என்று விரும்பி வந்தேன். உன்னைச் சுமந்து சுமந்து பெற்ற பயனை இன்றுதான் பெற்றேன்!' என்று கூறி அவள் பெருமகிழ்ச்சி யடைந்தாள்.

புத்தர் வானுலகத்திற்குச் சென்றதை அறியாத மக்கள் ஆயிரக் கணக்கில் சிராவஸ்தியில் கூடியிருந்து மௌத்கல்யாயனரை விசாரித்தார்கள். அவர் அநுருத்த ரைக் கேட்கச் சொன்னார். அநுருத்தர் விஷயத்தை விளக் கிச் சொன்னார். மக்கள் புத்தர் வரவை எதிர்பார்த்துக் கூட்டங் கூட்டமாகக் காத்திருந்தனர். அப்போது மௌத் கல்யாயனர் வானுலகம் சென்று, ஐயனைத் தரிசித்து, அவர் பூவுலகுக்கு எப்பொழுது திரும்பக்கூடும் என்பதைக் கேட் டார். ஏழு நாட்களில் திரும்புவதாக விடை கிடைத்தது. மேலும், வானுலகிலிருந்து தாம் இறங்க உத்தேசித்துள்ள தலம் சிராஸ்வதியிலிருந்து முப்பது யோசனை தூரத்தி லிருந்த **சங்கர்ஷபுரம்*** என்றும் ஐயன் கூறினார்.

மௌத்கல்யாயனர் ஜேதவனம் திரும்பியதும், மக்களை யும் பிக்குக்களையும் அழைத்துக்கொண்டு சங்கர்ஷபுரத்திற்

* பாலி மொழியில் இந்நகரை 'ஸங்கஸ்ஸா' என்று கூறுவர். இது கன்னோசி (Kanowj) நகரிலிருந்து ஐம்பதாவது மைலில் உள்ளது. இங்கே பௌத்த சமய சம்பந்தமான ஏராளமான புதை பொருள்களும், பாழடைந்த பல கட்டடங்களும் இருப்பதாக லெப். கன்னிங்ஹாம் குறித்துள்ளார்.

குச் சென்றார். அங்கே குறித்த தினத்தில் போதிவேந்தர் தேவருலகை நீத்துத் திரும்பிவந்து காட்சியளித்தார். அவர் அங்கு எழுந்தருளியதும் முதலாவதாகத் தரும சேனாபதி யான சாரீபுத்திரர் எதிர்கொண்டு வணங்கினார். பின்னர் மற்றவர் சென்று முறைப்படி வணங்கினர். அன்று பெருமான் உபதேசம் செய்கையில், சாரீபுத்திரருடைய மேதையையும், மேன்மையையும் யாவரும் அறியும்படி விளக்கவேண்டும் என்று திருவுளம்கொண்டு, அவரிடம் சில வினாக்களைக் கேட்டார். அவைகளுக்குத் தரும சேனாபதி அளித்த விடைகளை வேறு எவரும் கூறியிருக்க முடியாது என்பதை யாவரும் உணர்ந்து மகிழ்ச்சியுற்றனர்.

## இரண்டு அவதூறுகள்

சிராவஸ்தியிலே பகவருக்கும் பிக்குக்களுக்கும் நாள் தோறும் செல்வாக்கு வளர்ந்து வருவதையும், ஆயிரக்கணக்கான மக்கள் காலையிலும் மாலையிலும் ஜேதவன விகாரையில் திரளாகக் கூடி அறவுரை கேட்டு வருவதையும் கண்டு புறச்சமயிகளில் முக்கியமான ஜைனத் துறவிகள் சிலர் அழுக்காறு அடைந்தனர். அவர்கள் எவ்வளவு எதிர்ப் பிரசாரம் செய்யினும், போதி மாதவரின் அருளுருவமும், அருட்செய்தியும் மக்கள் மனங்களை வசீகரித்துக்கொண்டிருந்தன. எனவே அத்துறவிகள் முறையற்ற சூழ்ச்சிகளிலும், சதிகளிலும் ஈடுபடலாயினர்.

அவர்களோடு இருந்துவந்த சந்நியாசினியான சிஞ்சை என்பவள் அவர்களுடைய கைக்கருவியாக அமைந்து, புத்த பகவரைக் கேவலப்படுத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டாள். ஒருநாள் மாலை பகவர் ஜேதவன விகாரையில் பெருங்கூட்டமான மக்களுக்கும் சீடர்களுக்கும் சமய சம்பந்தமான விரிவுரை நிகழ்த்திக்கொண்டிருக்கையில், அவள் திடீரென்று அங்கே சென்று உரக்கப் பேசினாள். 'நீர் ஒரு துறவி ; உபதேசம் செய்துகொண்டிருக்கிறீர் ; உமக்கு

இனிமையான நல்ல குரல் இருக்கிறது; உருவத்திலும் அழகாயிருக்கிறீர்! உம்மால் எனக்குக் கர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது; எனது பிரசவத்திற்கு வேண்டிய இடவசதி கூட நீர் இன்னும் செய்யவில்லை! பேறுகாலத்திற்கு வேண்டிய சுக்கு, மிளகு ஒன்றுமில்லை! நீரோ புத்தர். அநாத பிண்டிகர், விசாகைபோன்ற பணக்காரர்களும், பணக்காரிகளும் உமக்குச் சிநேகமானவர்கள். அவர்களிடம் சொல்லியாவது எனக்கு உதவி புரிய ஏற்பாடு செய்யக்கூடாதா?' என்று அவள் சரமாரியாகப் பேசினாள்.

மாதவர் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, அவளைப் பார்த்து 'சிஞ்சி! உன் வார்த்தைகள் உண்மையாகவே இருக்கட்டும்; ஆனால் நீ கூறுவது உனக்கு மட்டும் தெரிந்த உண்மையாக இருக்கிறதே! அது உனக்கும், எனக்கும் தெரிந்ததாக இருக்கவேண்டாமா?' என்று கேட்டார். 'நியாயமானவர்கள் வாயிலிருந்து வரும் வார்த்தைகளே சத்தியமானவை. இப்போது எனது பிரசவத்திற்கும், மருத்துவத்திற்கும் ஏற்பாடு செய்வதே உமது முதல் வேலை! இங்கே உபதேசம் செய்து, மக்களின் மனங்களைக் கலக்கிக்கொண்டிருப்பதில் பயனில்லை!' என்று பரிகாசத்துடன் கூறினாள் சிஞ்சை.

இதைக் கேட்டு மக்கள் மனம் கலங்கினர். சிஞ்சையின் வயிற்றைப் பார்த்தால், அவள் நிறைந்த சூல்கொண்டவள் என்று தோன்றிற்று. ஒரு சந்நியாசினி, கருவுற்று, மகா சபையின் நடுவே வந்து பகவர்மீது குற்றஞ் சாட்டியது யாவர்க்கும் வியப்பும் திகைப்புமாகவே இருந்தது.

அந்த நேரத்தில் தேவர்களுடைய சூழ்ச்சியால் அவளுடைய முதுகில் சேலைக்குள் சில சுண்டெலிகள் சென்று அங்கிருந்த துணி முடிச்சுக்களைக் கருவிக் கத்தரித்துவிட்டன. அவள் வயிற்றோடு சேர்த்துக் கட்டி வைத்திருந்த மரக்கட்டைகள் திடீரென்று கீழே விழுந்துவிட்டன.

சிஞ்சை மருத்துவ உதவி இல்லாமலே இவ்வாறு பிரசவித்து விட்டாள் !

மக்கள் பெருங் கோபமடைந்து அவளை விரட்டிக் கொண்டு சென்று அடித்தனர். முடிவில் அவள் நிரயத்தை அடைந்ததாக 'சத்தர்ம ரத்னுகரம்' என்ற நூல் கூறு கின்றது. சிஞ்சையின் செயலால் பகவரின் புகழ் அதிகரிக்க லாயிற்று.

* * *

அடுத்தாற்போல் சுந்தரி என்பவள் தோன்றினுள். பக வரின் எதிரிகள் அவளைத் தூண்டிவிட்டனர். அவள் ஒவ் வொரு நாள் மாலையிலும் ஜேதவன விகாரைக்குச் செல்வது போல அந்தப் பக்கமாக நடந்து போவதும், காலையில் அந்தப் பக்கமிருந்து நகரை நோக்கி வருவதும் வழக்கமா யிருந்தது. ஜனங்கள் விகாரைக்குச் செல்லும்போதும், அங்கிருந்து திரும்பும்போதும், அவர்கள் தன்னைக் கவனிக் கும்படியாகவே அவள் நடப்பது வழக்கம். தன்னைக் கேட்டவர்க்ளிடம், அவள் தான் பகவர் புத்தருடன் இர வில் தங்கிவிட்டுக் காலையில் திரும்புவதாகக் கூறி வந்தாள். புஷ்பம் முதலிய அவளுடைய அலங்காரங்களைக் கண்டு பல ஜனங்கள் அவளுடைய கூற்று உண்மையா யிருக்கலாம் என்று எண்ணினுர்கள்.

பல மாதங்களாகச் சுந்தரி செய்துவந்த சூழ்ச்சியால், நகரெங்கணும் அவளைப்பற்றியும் ஐயனைப்பற்றியுமே பேசப்பட்டு வந்தது. அந்நிலையில் ஒரு நாள் காலை சுந்தரி கொலை செய்யப் பெற்று, அவள் பிரேதம் ஜேதவன விகா ரைக்கு வெளியே குப்பை மேட்டில் கிடந்தது. பகவருக்கும் சுந்தரிக்குமுள்ள தீய நட்பைப் பற்றி மக்கள் அனைவரும் பேசி வந்ததால், அதை மறைப்பதற்காகப் பௌத்த பிக்குக் களே அவளைக் கொலை செய்துவிட்டதாகப் பகவரின் எதிரிகள் எங்கும் செய்தியைப் பரப்பி, மன்னரிடமும் முறையிட்டுக் கொண்டார்கள்.

சில நாட்களுக்குப்பின் உண்மைக் கொலைஞர் இருவர் அரசாங்க அதிகாரிகளிடம் அகப்பட்டுக் கொண்டனர். ஒரு கள்ளுக்கடையில் அந்த இருவரும் தாங்கள் சுந்தரியைக் கொலை செய்ததைப் பற்றி மது வெறியில் பேசிக் கொண்டிருந்ததால் உண்மை வெளிப்பட்டுவிட்டது. அரசரின் விசாரணையின்போது, பகவரின் மீது அவதூறு உண்டாக்கும் வண்ணம் சுந்தரியைத் தூண்டி, அவளையும் கொலை செய்ய ஏற்பாடு செய்த புறச் சமயத் துறவிகளின் விவரம் அனைத்தும் வெளியாயிற்று. அவர்களுக்கும், கொலைஞர்களுக்கும் உரிய தண்டனை விதிக்கப் பெற்றது.

## பழைய பிதாவும் மாதாவும்

ஞானமடைந்த பின் எட்டாம் ஆண்டில் புத்தர் யாத்திரை செய்து வருகையில் **சும்சுமாரகிரி** என்ற நகருக்குச் சென்றிருந்தார். அங்கே இல்லறமாகிய நல்லறம் நடத்திக் கொண்டிருந்த **நகுல பிதா, நகுல மாதா** என்ற தம்பதிகள் அவரைத் தரிசித்து, 'இவனே நமது மகன்!' என்று கூறி, அவர் பாதங்களில் விழுந்து வணங்கினர். முன்னம் பல பிறவிகளில் அவர்கள் இருவரும் ஐயனுக்குப் பிதாவாகவும், மாதாவாகவும் விளங்கியதை அவரும் அறிந்து கொண்டு, அவர்களுக்கு ஞான உபதேசம் செய்தார்.

## கௌசாம்பி

ஒன்பதாம் ஆண்டில் ஐயன் கௌசாம்பி நகரை அடைந்தார். இராமாயணம், மற்றும் புராணங்களிலெல்லாம் சிறப்பாக வருணிக்கப் பெற்றது இந்நகரம். நகரமக்கள் ஐயனை உவகையுடன் வரவேற்று, அவர் அறவுரைகளைக் கேட்டு வந்தனர். பலர் பௌத்த தருமத்தை மேற்கொண்டனர். அரசன் **உதயணனும்**, அச்சமயத்தைத் தழுவிக்கொண்டு, தன் குமாரன் **இராஷ்டிரபாலன்** பிக்கு ஆவதற்கும் அனுமதியளித்தான். இவ்வாறு கௌசாம்பி சென்ற

முதல் வருடத்தில் புத்தர் பெருமான் பெருமகிழ்ச்சியுடன் அங்குப் பிரசாரம் செய்து கொண்டிருந்தார்.

ஆனால் அடுத்த ஆண்டில் **மௌத்கலி** என்ற பிக்குவால் பௌத்த சங்கத்துள் பிளவு தோன்றி, அதனால் பெருமானுக்கு மிக்க வருத்தம் ஏற்பட்டது.

மௌத்கலி ஏதோ தவறு செய்ததைச் சங்கத்தார் எடுத்துக் காட்டியபோது, அவர் அதை ஏற்றுக்கொள்ள மறுத்தார். அதனால் அவர்கள் அவரைச் சங்கத்திலிருந்து வெளியேற்றத் தீர்மானம் செய்தனர்.

மௌத்கலி படித்த அறிவாளி; தருமத்தையும், விநய ஒழுக்கங்களையும் நன்கு தெரிந்தவர். அவ்வாறிருந்தும், அவர் சங்கத்தின் தீர்ப்புத் தவறானது என்றும், தாம் தவறே செய்யவில்லை என்றும், சங்கத்தின் தீர்மானம் தம்மைக் கட்டுப்படுத்தாது என்றும் மற்றப் பிக்குக்களிடையே பிரசாரம் செய்தார். அவர் கட்சியில் சிலர் சேர்ந்து கொண்டனர். எதிர்க் கட்சியிலிருந்த பிக்குக்களும் விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. எனவே இரண்டு சங்கங்களாகப் பிரிந்து அவர்கள் செயலாற்றி வந்தனர்.

இச் செய்திகளெல்லாம் பகவருக்கு அறிவிக்கப் பட்டன.

தீர்ப்புக் கூறிய பிக்குக்கள் இருந்த இடத்திற்குப் பகவர் முதலில் சென்று, ' ஓ பிக்குக்களே! ஒரு விஷயத்தின் உண்மைகள் எப்படி யிருப்பினும், " எங்களுக்கு இப்படித் தோன்றுகிறது; நாங்கள் எங்கள் சகோதரர் ஒருவர் மீது நடவடிக்கை எடுப்போம்!" என்ற முறையில் நீங்கள் நினைக்கவேண்டாம். தருமத்தையும் விநயத்தையும் நன்கு அறிந்துகொண்டு, கல்விமானாயும், ஞானியாயும், அடக்கமுள்ளவராயும், மனச்சான்றை மதிப்பவராயுமுள்ள ஒரு சகோதரருக்கு எதிராகப் போதிய ஆதாரமில்லாமல், பொறுப்பற்ற முறையில் தீர்ப்பளிக்கும் பிக்குக்கள் சங்கத்தில் பிளவுகள் ஏற்படுவதைக் கண்டு பயமும் நடுக்கமுமே

கொள்ளவேண்டும். ஒரு சகோதரர் தாம் செய்தது தவறு என்று ஒப்புக்கொள்ள மறுப்பதற்காக அவரைச் சங்கத்திலிருந்தே வெளியேற்றத் தீர்மானிப்பது உசிதமில்லை' என்று கூறினார்.

இதேபோல, மௌத்கலியை ஆதரிக்கும் பிக்குக்களிடத்தும் சென்று பெருமான் பின்கண்ட முறையில் நீதியை எடுத்துரைத்தார்: 'ஓ பிக்குக்களே! நீங்கள் ஏதும் தவறு செய்திருந்தால், "நாம் குற்றமற்றவர்கள்" என்று கருதிக்கொண்டு, அதற்குக் கழுவாய் தேட வேண்டியதில்லை என்று எண்ணி யிருக்கவேண்டாம். ஒரு பிக்கு தவறு செய்திருந்து, அவர் அதைத் தவறு என்று கருதவில்லையானாலும், சங்கம் அவரைக் குற்றவாளி என்று கருதுகிறது. அப்போது அவர், "இந்தச் சகோதரர்கள் தரும விநய ஒழுக்கங்களை நன்கு தெரிந்தவர்கள்; கல்விமான்களாயும், ஞானிகளாயும், அடக்கமுடையவர்களாயும், மனச்சான்றை மதிப்பவர்களாயும் இருக்கிறார்கள்; இவர்கள் என் பொருட்டாகச் சுயநலத்தாலோ, துவேஷத்தாலோ, மயக்கத்தாலோ, பயத்தாலோ முறை தவறி நடக்கமாட்டார்கள்" என்று எண்ணிப் பார்க்கவேண்டும். சங்கத்தில் பிளவுகள் ஏற்படுவதுபற்றி அவர் பயமும் நடுக்கமுமே கொள்ளவேண்டும்.'

இரு கட்சிகளும் பெருமானின் போதனையை மேற்கொள்ளாமல் தனித் தனியாகவே உபவாசதம் முதலிய காரியங்களை நடத்தி வந்தன. அவைகள் இரு சங்கங்களாகச் செயல்புரிந்து வருதல் நியாயம்தான் என்று அண்ணலும் கூறினார்.

ஆயினும், தலைக்கனம் ஏறிய பிக்குக்களுக்கு உபதேசம் செய்தல் எளிய காரியமன்று என்று கருதி, புத்தர்பிரான் அங்கிருந்து வெளியேறிவிட்டார். அவர் பாரிலேயகம் என்ற வனத்திற்குச் சென்று அங்கே ஏகாந்தமாக மூன்று மாதங்கள் தங்கியிருந்தார். பிறகு அங்கிருந்து பல இடங்

களுக்குச் சென்று, கடைசியாகச் சிராவஸ்தி நகரை அடைந்தார்.

அவர் இல்லாத காலத்தில் கௌசாம்பியில் பிக்குக்களிடையே மனவேற்றுமைகள் வளர்ந்து சண்டைகள் முற்றிவிட்டன. அப்பொழுது பௌத்த சமயத்தைச் சேர்ந்த பொது மக்கள், பிக்குக்கள் சீரழிவதைக் கண்டு, அவர்களுக்கு உதவி புரிவதை அறவே நிறுத்திக்கொண்டனர். அவர்கள் பிக்குக்களைக் கண்டால் வணங்குவதைக்கூட நிறுத்தி விட்டனர். 'இவர்கள் சீவர உடைக்கே உரியவரல்லர் ; ஒன்று இவர்கள் பெருமானைத் திருப்தி செய்ய வேண்டும்; அல்லது இல்வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்!" என்று அவர்கள் கூறினார்கள்.

இதன் பிறகுதான் பிக்குக்களுக்கு நல்லறிவு உண்டாயிற்று. பகவரை அடைந்து தங்களுக்குள் சமாதானம் செய்து வைக்கும்படி வேண்டிக்கொள்ள வேண்டும் என்று இரு கட்சியார்களும் சிராவஸ்திக்குச் சென்றனர். அவர்கள் வரவை அறிந்த சாரீபுத்திரர் அண்ணலிடம் சென்று, அவர்களிடம் தாம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று கேட்டார்.

அப்போது பகவர், 'சாரீபுத்திர ! இருதிறத்தாரையும் கண்டிக்க வேண்டாம்; கடுஞ் சொற்கள் எவர்க்கும் இனிமை பயப்பதில்லை. ஒவ்வொரு கட்சிக்கும் தனியாக இருக்க இடமளித்து, இருபக்கத்தாரையும் சமமாக நடத்தவும். இரு கட்சியார்கள் சொல்வதையும் பொறுமையோடு கேட்கவேண்டும். பிறகு சங்கம் முடிவு செய்து ஒற்றுமையை நிலைநிறுத்த வேண்டும்' என்று கூறினார்.

அதேபோலத் தம்மிடம் ஆலோசனை கேட்டு வந்த கௌதமிக்கும், உபாலிக்கும் ஐயன் பதிலுரைத்தார். இரு கட்சியினருக்கும் வேற்றுமை இன்றி உணவு, உடைகள் எல்லாம் அளித்து வரும்படி கௌதமிக்குக் கூறப்பட்டது. உபாலி, சண்டையின் விவரத்தை மீண்டும் விசாரிக்காமலே

சமாதானம் செய்யலாமா என்று கேட்டதற்கு, அது உண்மையான சமாதானமாகாது என்று ஐயன் கூறினார்.

பிக்குக்கள் யாவரும் பெருமானிடம் நேரில் வந்தபோது, அவர் முற்காலத்தில் கோசல மன்னனுடைய மைந்தன் தீர்க்காயு என்பவன் தன் பெற்றோரைக் கொன்ற காசி அரசனைப் பழிக்குப் பழி வாங்காமல் மன்னித்துப் பொறுமையை மேற்கொண்ட வரலாற்றை விளக்கிச் சொன்னார். பிறகு, 'சகோதரர்களே! தரும சம்பந்தமாக நீங்கள் என் பிள்ளைகள். தந்தை கூறிய போதனையை மைந்தர்கள் காலால் மிதித்துத் தள்ளுதல் தகாது; இதுமுதல் என் போதனைப்படி நடவுங்கள்!' என்று கூறினார்.

இதற்கு அப்பால் பிக்குக்கள் ஒன்றுகூடி ஆலோசனை செய்து, தங்கள் பிணக்குக்களைத் தீர்த்துக் கொண்டனர். சங்கத்தில் மீண்டும் ஒற்றுமை நிலை நிறுத்தப் பெற்றது.

## காசி பாரத்துவாஜர்

புத்தர் போதியடைந்த பதினோராம் ஆண்டில் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி அவர் காசி பாரத்துவாஜரைச் சந்தித்துத் தரும உபதேசம் செய்ததாகும்.

இராஜகிருகத்தின் அருகே எகனுலா என்ற கிராமத்திலுள்ள தட்சிணகிரி விகாரையில் புத்தர் பெருமான் தங்கியிருக்கையில், அங்கே காசி பாரத்துவாஜர் என்ற செல்வம் மிகுந்த பிராமணர் ஒரு நன்னாளில் நடுகை விழாவை மிகச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்திருந்தார். அன்று 500 ஏர்களும், 1000 எருதுகளும் தயாராகப் பூட்டி நிறுத்தப் பெற்றிருந்தன. 500 உழவர்களும் ஆடை ஆபரணங்களுடன் தங்களை அலங்கரித்துக்கொண்டு நின்றனர்; காளைகளின் கழுத்துக்களிலும் மலர் மாலைகள் விளங்கின. ஆயிரக்கணக்கான ஜனங்களும் வேடிக்கை பார்க்கக் கூடியிருந்தனர். வந்தவர்களுக்கெல்லாம் உணவளிப்பதற்காகப் பாரத்துவாஜரின் மனைவி வண்டி வண்டியாக உணவு

வகைகள் தயாரித்து வயல்களுக்குக் கொண்டு வந்திருந்தாள். பாரத்துவாஜர் யார் யாருக்கு என்ன உணவுகள் கொடுக்க வேண்டும் என்று ஒவ்வொருவராகக் குறித்துக் காட்டவும், அவர் மனைவி அவ்வாறே அன்னத்தையும் பண்டங்களையும் அள்ளி அள்ளிக் கொடுத்துக்கொண்டிருந்தாள். அன்று காலையில் புத்தர் பெருமான், 'இன்று யாருக்குத் தரும உபதேசம் செய்யலாம்?' என்று எண்ணிப் பார்க்கையில், தவமகிமையுள்ள பாரத்துவாஜரை நடுகை விழாவிலே சந்திக்க வேண்டும் என்று திருவுளம் கொண்டு, அவ்வாறே விழா நடந்த இடத்திற்குச் சென்றிருந்தார். அன்ன தானம் நடந்து கொண்டிருந்தது. ஐயன் கையிலே திருவோட்டுடன் சிறிது தூரத்திற்கு அப்பால் மௌனமாக நின்று கொண்டிருந்தார். பாரத்துவாஜரும் அவர் நிற்பதைக் கண்டு கொண்டார். உணவு அருந்திய ஜனங்கள் அருள் வள்ளலின் திருமுகவிலாசத்தைக் கண்டு அவர் பக்கமாகச் சென்று கூடியிருந்தனர்.

ப்ாரத்துவாஜர் ஐயனைப் பார்த்து வெறுப்புற்று, 'சிரமணரே! நீர் ஏன் பிச்சைகேட்க வருகிறீர்? நான் நிலத்தை உழுது, விதை விதைத்து, அறுவடை செய்வதால் தானியம் கிடைக்கின்றது; அதை நான் அனுபவிக்கிறேன். துறவியாகிய நீரும் இதுபோல உழுது பயிரிட்டால், உமக்கும் உண்ண உணவு கிடைக்கும்!' என்று கூறினர்.

அமலர், 'ஓ அந்தண! நானும் உழுகிறேன், விதைக்கிறேன், பிறகுதான் உண்கிறேன்!' என்று பதிலுரைத்தார். அந்தணரின் அஞ்ஞானம் நீங்கும் தருணம் வந்துவிட்டதை அவர் அகத்திலே உணர்ந்து கொண்டார்.

'ஏருமில்லை, எருதுகளுமில்லை! இந்தத் துறவி உழுது பயிர் செய்வதாகச் சொல்கிருரே! ஆனல், இவருடைய உடலின் ஒளியைப் பார்த்தால், இவர் பொய்யும் புகல மாட்டார் என்று தெரிகின்றது!' என்று எண்ணிய பிராமணர், 'கோதமரே! நீர் உழுவதாகச் சொல்லிக் கொண்

டால், 'எவரும் நீர் உழுவதைக் கண்டதில்லையே! உமது கலப்பை எங்கே? கருவிகள் எங்கே?' என்று கேட்டார்.

'ஓ, பிராமணரே, கேளும்!' என்று பெருமான் பேச ஆரம்பித்தார்.

'தருமமே எனது நிலம். வாழ்க்கையைப் பற்றியிருக்கும் ஆசை என்னும் களைகள் அதில் உண்டாவதை நான் களைந்தெறிகிறேன். ஞானம் என்பது என் கலப்பை; கருத்துடைமை எனது தார்க்கோல். விடாமுயற்சி என்ற எருதுகள் ஏரை இழுத்துச் செல்கின்றன. (மெய்ப்பொருளை உணரும்) தெளிவான காட்சிகளே நான் விதைக்கும் விதைகள். நல்லொழுக்கமே நான் பாய்ச்சும் நீர். எனது அறுவடை எது தெரியுமா? என்றும் அழிவில்லாத நிர்வாண அமிழ்தம். இந்த விளைவைப் பெறுகிறவர்களுக்கு என்றென்றும் குறைவேயில்லை'*

பாரத்துவாஜர் உடனே மாமுனியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். 'அருமை, அருமை, அருமையான உபதேசம், என் குருவே!' என்று பாராட்டினர்.

பின்னர் அவர், 'தவறி எறியப்பட்டதை மீட்டும் எடுத்துக் கொடுப்பது போலவும், மறைத்து வைக்கப்பட்டதைத் தெரியும்படி காட்டி வைப்பது போலவும், வழிதவறிச் செல்வோனுக்குச் சரியான மார்க்கத்தைக் காட்டுவது போலவும், இருளில் ஒளிவிளக்கைப் பிடித்துக்கொண்டு கண்ணுள்ளவர்களுக்குப் பார்வை அளிப்பது போலவும் விளங்குகின்றன தங்கள் வார்த்தைகள்...நான் இப்போதே புத்தர், தருமம், சங்கம் ஆகிய மூன்று அடைக்கலங்களையும் மேற்கொள்கிறேன்!' என்று மன உருக்கத்தோடு கூறினர்.

உடனே மிக உயர்ந்த உணவுகளை எடுத்துவரச் செய்து, அவர் உள்ளக் களிப்போடு அண்ணலை அருந்தும்படி

---

*இந்த விவரம் 'சுத்த நிபாதம், காசி பாரத்வாஜ சூத்திர'த்திலுள்ளது.

வேண்டினர். ஆனால் பெருமான் அதை ஏற்றுக் கொள்ள வில்லை; தரும உபதேசம் செய்த பின்பு எதையும் காணிக்கையாகப் பெறுவது உசிதமன்று என்று மறுத்து விட்டார். இல்லாவிடில், பாணர்களும், நடிகைகளும் தங் கள் இசையும் நடனமும் முடிந்தவுடன் பணம் வசூலிப்பது போன்ற முறையில் அறவுரையையும் கருத நேரிடும் என் பது அவர் உள்ளக் கருத்து.

பின்னர் காசி பாரத்துவாஜர் புத்தர் பெருமானுடைய விகாரைக்குச் சென்று பிக்குவாகி, மேனிலை அடைந்து விளங்கினர்.

## இயக்கன் ஆலவிகன்

பின்னர் பெருமான் நான்கு ஆண்டுகள் கோசல நாட்டி லும், காசி, வைசாலி, சிராவஸ்தி முதலிய இடங்களிலும், சாலிகை என்ற மலையிலும் யாத்திரை செய்து அற உரை கள் நிகழ்த்தி வந்தார். இக்காலத்தில் நடந்த பல நிகழ்ச்சி களின் விவரங்கள் தெரியவில்லை. சிராவஸ்தியில் இரா குலனுக்குக் காஷாய உடையளித்து அவனைப் பிக்குவாகச் சேர்த்துக்கொண்டதும்*, யசோதரையின் தந்தையாகிய **சுப்பிரபுத்திரர்** போதிநாதரைச் சந்தித்ததும் இங்கே குறிக் கத்தக்க நிகழ்ச்சிகளாம். சுப்பிரபுத்திரர் கோபத்தோடு சிராவஸ்திக்கு வந்து, தம் அருமைக் குமாரி யசோதரை யைப் பெருமான் துறந்ததற்காக அவரை வாய்க்கு வந்தபடி ஏசியதாகவும், உடனே அவர் நின்ற இடத்தில் பூமி வெடித்து அவர் பாதாளத்திற்குச் செல்ல நேர்ந்தது என் றும் புத்த சரித்திரங்கள் கூறுகின்றன.

ஞானமடைந்த பதினாறும் ஆண்டில் பெருமான் **ஆலவி** என்னும் நகருக்குச் சென்றிருந்தார். அந்நகருக்கு அருகே யிருந்த அடவியில் ஓர் ஆலமரத்திலே **ஆலவிகன்** என்ற

---

*அப்போது இராகுலனுக்கு வயது இருபது.

இயக்கன் தன் உருவை மறைத்துக்கொண்டு வசித்து வந்தான். அவன் அசுரகுணம் படைத்தவன். முன்பு ஒரு நாள் அடவியிலே வேட்டையாட வந்த ஆலவி மன்னன் இயக்கனுடைய ஆலமரத்தடியில் இளைப்பாறிக் கொண்டிருக்கையில், அவன் மன்னனைப் பற்றிக் கொண்டு கொலை செய்ய முயன்றான். அப்போது மன்னன், தன்னை விட்டு விடும்படியும், தான் நகருக்குத் திரும்பியதும் நாள்தோறும் ஓர் இளைஞனை அவனுக்கு உணவாக அனுப்புவதாகவும் கூறினான். அதற்கு அவன் இசைந்து மன்னனை விட்டு விட்டான். அது முதல் மன்னன் தினந்தோறும் ஓர் இளைஞனை இயக்கனுக்குப் பலியாவதற்காக அனுப்பிவந்தான். இவ்வாறு பல்லாண்டுகள் நடந்து வந்ததால், நகரின் மக்கள் பலர் இராஜ்யத்தை விட்டே ஓடிவிட்டனர். கடைசியாக ஒருநாள் மன்னன் தன் மைந்தனையே ஆலவிகனிடம் அனுப்ப நேர்ந்தது.

அந்தச் சமயத்தில் ஆலவியிலிருந்த புத்தர் பெருமான் மன்னனின் மைந்தனைக் காப்பாற்றி ஆட்கொண்டு, ஆலவிகனுக்கும் அருளுரை புகலவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டார். வனத்திலே பெரியதோர் ஆலமரத்தின் அருகே பூமிக்குள் அமைந்திருந்த இயக்கனுடைய மாளிகையை அடைந்து, அவர் அதனுள் சென்று அவனுடைய ஆசனத்திலே அமர்ந்துகொண்டார். இயக்கன் அப்பொழுது வெளியே போயிருந்தான். பின்னால் அவன் மாலையில் திரும்பி வந்ததும், உள்ளே வல்லமை மிக்க துறவி ஒருவர் அமர்ந்திருப்பதை அறிந்து, அவரை எதிர்க்கத் துணிந்தான். புயல், மழை, அனல் முதலியவற்றால் புத்தரை வெல்ல முயன்றான். அன்றிரவு முழுவதும் அவனுக்குத் தெரிந்த வித்தைகளையெல்லாம் செய்து பார்த்தான். கருணை வள்ளல் அவன் தன் செயல்களால் தானாகவே களைத்து வரட்டும் என்று காத்திருந்தார். கடைசியில் அவன் இந்திரனுடைய வஜ்ராயுதம் போன்ற கொடுமை

யான ஆயுதம் ஒன்றை ஐயன்மீது எறிந்தான். அதுவும் பயனற்றுப் போகவே, அவன் வெகுளியை விட்டுச் சாந்தமடைந்து, போதி நாதரின் பெருமையை உணர்ந்துகொண்டான். அமலர் அன்பு காரணமாகவே அங்கு வந்திருந்ததை அறிந்து, அன்பை அன்பிஞலேயே வெல்ல முடியும் என்று கருதித் தன் இடத்தைக் காலி செய்து தரும்படி ஐயனை வேண்டிஞன். உடனே பெருமானும் எழுந்திருந்து அங்கிருந்து அகன்ருர்.

இயக்கன் மீண்டும் அவரை அழைத்துத் தான் கேட்கும் விஞக்களுக்கு அவர் பதிலுரைக்க வேண்டும் என்று கூறிஞன். அவ்வாறே அவன் விஞக்களுக்கு ஐயன் தக்க விடைகூறி அவனுக்கு ஞானச்சுடர் உண்டாகும்படி அருளிஞர். ஆலவிகன் அவரிடம் தரும உபதேசமும் பெற்ருன். அந்தக் கணத்திலிருந்து அவன் வாழ்க்கை திருந்திவிட்டது. அவன் புத்த தேவரை வணங்கிக்கொண்டிருக்கும்போது, ஆலவி மன்னரின் மைந்தனை அரசாங்க அதிகாரிகள் முறைப்படி அங்கே கொண்டுவந்து சேர்த்தனர். அங்கு இயக்கன் பகவரை வணங்கிக்கொண்டிருந்த நிலைமையைக் கண்டு அவர்கள் யாவரும் பெரு வியப்படைந்தனர். ஆலவிகன் இளவரசனைப் புத்தரிடம் ஒப்படைத்து விட்டான்.

பின்னர் பெருமான் இளவரசனை அரண்மனைக்கு அனுப்பிவிட்டு, நகரில் ஐயம் எடுத்து உணவருந்தியபின், ஒரு மரத்தின் அடியில் அமர்ந்திருந்தார். அவ்வமயம் மன்னனும், பெருந்திரளான மக்களும் அங்கே சென்று அவரைத் தரிசித்து உபதேசம் பெற்றனர். பெருமான் அப்போது ‘ஆலவிக சூத்திர’த்தை அவர்களுக்கு உபதேசித்தார்.

பிற்காலத்தில் இளவரசனுக்குத் தக்க பிராயம் வந்ததும், அவனுக்குப் போதி வேந்தரே முன்பு உயிர்ப்பிச்சை அளித்ததால், அவன் அவரிடம் போய்ச் சீடனுயிருக்க

வேண்டும் என்று மன்னன் அவனை அனுப்பி வைத்தான். இளவரசனும் ஐந்நூறு துணைவர்களுடன் சென்று, பெருமானைக் கண்டு, பௌத்த தருமத்தை மேற்கொண்டு சிறப்படைந்தான்.

## அணுக்கத் தொண்டர்

புத்தர் ஞானமடைந்த இருபதாம் ஆண்டில் அவர் சிராவஸ்தியில் ஜேதவன விகாரையில் தங்கி யிருந்தார். வழக்கம்போல் கூட்டங் கூட்டமான மக்களுக்கு அவர் அறவுரைகள் கூறிவந்தார். அந்தக் காலத்தில்தான் ஆனந்தர் பகவருக்கு அணுக்கத் தொண்டராக நியமிக்கப் பெற்றார். அதுவரை ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு பிக்குவாக அவருக்குத் தொண்டு செய்து வந்தனர். நிரந்தரமாக ஒருவரைத் தொண்டராக நியமிக்காவிட்டால், அவருடைய திருவோட்டைக்கூடப் பாதுகாக்க முடியாமலிருந்தது

புத்தர் தமக்கு ஓர் அணுக்கத் தொண்டர் வேண்டுமென்று கேட்டவுடன் சாரீபுத்திரர் முதல் ஒவ்வொரு பிக்குவும் தாமே தொண்டராக இருக்க விரும்புவதைத் தெரிவித்துக்கொண்டனர். ஆனால், ஐயன் அவர்களைத் தேர்ந்தெடுக்கவில்லை. அப்போது ஆனந்தர் மட்டும் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். மற்றைப் பிக்குக்கள் அவரைத் தூண்டி, அவர் மனத்திலுள்ளதை வெளியிட்டுக் கூறும்படி வேண்டினார்கள். ஆனந்தர் சில நிபந்தனைகளின் பேரிலேயே தாம் தொண்டராக இருக்க முடியும் என்றார். பகவருக்கு அளிக்கப்பெறும் உணவு, உடை, ஆசனம், மரியாதைகள் முதலியவைகளைப் பகவர் தமக்கு அளிக்கக்கூடாது என்றும், தாம் அழைத்துவரும் அன்பர்களுக்கு ஐயன் தரிசனமளிக்க வேண்டும் என்றும், தம்மைத் திருத்தி நல்வாழ்வில் நிலைத்திருக்கும்படி கவனித்துக் கொள்ள வேண்டியது பெருமானின் பொறுப்பு என்றும், தாம் இல்லாத வேளைகளில் பகவர் மற்றவர்களுக்குக்

கூறும் உபதேசங்களைத் தமக்கும் பின்னால் போதிக்கவேண்டும் என்றும் அவர் வேண்டிக்கொண்டார். பகவர் மிக்க மகிழ்ச்சியுடன் அந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு, ஆனந்தரையே அணுக்கத் தொண்டராக நியமித்தார்.

அப்போது ஆனந்தர் துறவியாகி இருபது ஆண்டுகள் சென்றிருந்தன. அதிலிருந்து இருபத்தைந்து ஆண்டுகள் அவர் அருள் வள்ளலுடன் இடைவிடாது தங்கியிருந்து அருந்தொண்டாற்றி வந்தார். பெருமானுக்கும் அவரிடம் அளவற்ற அன்பு இருந்து வந்தது.

## அங்குலிமாலன்

புத்தர் சிராவஸ்தியில் தங்கியிருந்த சமயத்தில், ஒரு நாள் காலையில், அன்று யாருக்கு உபதேசம் செய்யலாம் என்று ஆலோசனை செய்யும்போது, **அங்குலிமாலன்** என்ற கொள்ளைக்காரனின் நினைவு வந்தது. அன்று அவனை நிச்சயமாக ஆட்கொள்ளவேண்டும் என்று அவருக்கு அருள் பிறந்தது.

அங்குலிமாலன் கொள்ளைக்காரனாயிருந்ததுடன், பெரிய கொலைகாரனாயும் விளங்கினான். இரக்கம் என்பதை அவன் அறியான். அவன் கொடுமையைத் தாங்காமல் அநேகம் கிராமங்களும் நகரங்களுமே பாழாகிக்கிடந்தன. சிராவஸ்திக்கு அருகே ஒரு வனத்தில் தங்கி யிருந்துகொண்டு அவன் அந்த வழியாக வருகிறவர்களைக் கொள்ளையிட்டும், கொலை செய்தும் வந்தான். அவனால் கொலை செய்யப்பட்ட ஒவ்வொரு மனிதருடைய விரல்களிலும் ஒன்றை வெட்டி, அப்படிச் சேர்ந்த விரல்களை யெல்லாம் மாலையாகத் தொடுத்து அவன் அணிந்திருந்தான். அதனால் தான் அவனுக்கு, 'விரல்-மாலை அணிந்தவன்' என்று பொருள்படும் 'அங்குலிமாலன்'* என்ற பெயர் வந்ததாம்.

---

*அங்குலி - விரல்; மாலன் - மாலையுடையவன்.

புத்தர் அவனை நல்வழிப்படுத்த வேண்டும் என்று கருதிய தினத்தில், காலையில் ஐயம் ஏற்றுவந்து, உணவருந்திய பின், அவர் உடையணிந்து, திருவோட்டை எடுத்துக் கொண்டு தனியாக வெளியே புறப்பட்டார். வழக்கமாக அந்த நேரத்தில் அவர் சிறிது ஓய்வெடுத்துக்கொள்வதையும் அன்று நீக்கிவிட்டார்.

அவர் வனத்தில் நுழையும்போது, ஆடு மாடுகள் மேய்த்துக்கொண்டிருந்த ஆயர்களும், விறகு வெட்டிக் கொண்டிருந்தவர்களும் அவர் அவ்வழியாய்ச் செல்லவேண்டாம் என்று கூவினார்கள். யாரோ துறவி அங்குலிமாலனிடம் உயிரைப் பலி கொடுப்பதற்காகச் செல்வதாக அவர்கள் எண்ணி, அவனைப்பற்றிப் பெருமானுக்கு எச்சரிக்கை செய்தார்கள். பெருமான் மௌனமாகச் சென்று கொண்டேயிருந்தார். அவர்கள் மீண்டும் இருமுறை எச்சரிக்கை செய்தும் பயனில்லை. இருபது, முப்பது, நாற்பது பேர்கள் சேர்ந்து சென்றாலும், அங்குலிமாலனிடம் தப்பி வர முடியாது என்று அவர்கள் உரக்கக் கூவினார்கள். ஆனால் ஐயன் மறுமொழி ஒன்றும் கூறவில்லை, தமது நடையையும் நிறுத்தவில்லை. அவர் வனத்துள் சிறிது தூரம் சென்றவுடன் அங்குலிமாலன் அவர் வரவைத் தொலைவிலிருந்தே கவனித்துவிட்டான். ஒரே துறவி தனிமையாக நடந்து செல்வதைக் கண்டதும், அவரைக் கொன்றுவிட வேண்டும் என்று அவன் தீர்மானித்தான். உடனே உடைவாளையும், அம்புகளையும், வில்லையும் எடுத்துக்கொண்டு, அவன் போதிவேந்தரைத் தொடர்ந்து பின் செல்லலானான்.

புத்தர் வழக்கம்போல் நிதானமாகவே நடந்துகொண்டிருந்தார். ஆயினும் திருடன் அவரை எட்டிப் பிடிக்க முடியவில்லை. அவன் எவ்வளவு வேகமாக நடப்பினும், அவருக்குப் பின்னால் தூரத்திலேயே தான் இருப்பதை உணர்ந்துகொண்டான். பெருமான் தமது ஆற்றலால்

அவன் மனத்தை வசியப்படுத்தி, அவனது நடையைத் தளர்த்திவிட்டார். 'இதுவரை யானை, குதிரை, மான், வண்டி முதலியவை முழுவேகத்தில் செல்லும்போதும், நான் அவைகளை எட்டிப் பிடித்துவிடுவேன்; ஆனால் இப்போது இந்தத் துறவியைப் பிடிக்க முடியவில்லையே! இவர்சாதாரணமாகவே நடந்து கொண்டிருக்கிறார்; அப்படியிருந்தும் நான் பின் தங்கியே நிற்கிறேன்!' என்று அவன் கருதினான்.

உடனே அவன் நடையை நிறுத்திக்கொண்டு, ஐயனைக் கூவி அழைத்து, அவரும் நடையை நிறுத்தும்படி உரக்கக் கூறினான்.

**புத்தர்:** நான் நடையை நிறுத்தியாயிற்று; நீயும் நிறுத்திவிடு!

**அங்குலிமாலன்:** நடையை நிறுத்திவிட்டதாகச் சொல்லிக்கொண்டே நடக்கிறீர்களே! நான் நிற்கத்தான் செய்கிறேன்; எனினும் "நில்லு" என்று சொல்கிறீர்களே! நீங்கள் நிற்பதாகச் சொல்வதும், நான் நிற்காததாகச் சொல்வதும் ஒன்றும் விளங்கவில்லையே!

**புத்தர்:** நான் நடையை நிறுத்திவிட்டேன். ஒரு போதும் நான் எவரிடத்தும் பலாத்காரம் செய்வதில்லை. தீயவினை அனைத்தையும் நான் நிறுத்திவிட்டேன். நீயோ இன்னும் உயிர்க் கொலை புரிகிறாய்! நான் நிறுத்திவிட்டேன், நீதான் நிறுத்தவில்லை! அங்குலிமாலன் திகைத்து விட்டான். 'இந்த முனி எப்படியோ என்னையும், என் செயலையும் தொடர்ந்து கண்டு பிடித்துவிட்டார்!' என்று ஆச்சரியமடைந்து, 'தேவா! உமது புனித உதவியால் அடியேன் தீவினைகளையெல்லாம் கைவிடத் துணிந்துவிட்டேன்!' என்று கூறினான். உடனே தன்னிடமிருந்த ஆயுதங்களையெல்லாம் மிகவும் ஆழமாயிருந்த ஒரு பள்ளத் தாக்கில் எறிந்துவிட்டான். பின்னர் பெருமானிடம் சென்று அவர் திருவடிகளை வணங்கித் தன்னையும் ஆட்கொண்டு அருளவேண்டும் என்று கெஞ்சினான்.

புத்த தேவர் 'கல்லும் கனிந்துருகும்படி நின்ற அக் கள்வனைக் கருணையுடன் பார்த்து, 'பிக்கு! என்னைத் தொடர்ந்து கூட வா!' என்று சொல்லித் திரும்பி நடந்தார். அந்தக் கணத்திலேயே அங்குலிமாலன், மஞ்சள் உடையும், முண்டிதமான தலையும் பெற்றுப் பிக்குவாகி ஐயனைப் பின்தொடர்ந்து ஜேதவனம் சென்றான்.

மறுநாள் காலையில் மன்னர் பிரசேனஜித்து ஜேதவன விகாரைக்குச் சென்று பகவரைச் சந்தித்தார்.

புத்தர், திடீரென்று காலையில் அரசர் வந்திருந்திருந் ததைக் கண்டு, என்ன விஷயம் என்று விசாரித்தார். 'மகத மன்னர் பிம்பிசாரர் படையெடுத்து வந்துள்ளரா? வைசாலியிலுள்ள லிச்சவிகளின் பகை ஏற்பட்டுள்ளதா? வேறு பகைவர் எவரேனும் வந்துள்ளாரா? என்றெல்லாம் அவர் கேட்டார்.

மன்னர் அத்தகைய துயரம் எதுவும் நேரவில்லை என்றார். பிறகு அவர் அங்குலிமாலனைப் பற்றிப் பேசலானார். அவன் செய்துள்ள அட்டூழியங்களைக் கண்டு மக்கள் அல்லலுற்றுத் தம்மிடம் பன்முறை வந்து வேண்டிக்கொண்டும், தம்மால் அவனை ஒன்றும் செய்ய முடியாதிருந்தது என்றும், அப்போது ஐந்நூறு குதிரை வீரர்களுடன் வனத்துள் சென்று அவனைப் பிடித்து வருவதற்காகவே தாம் புறப் பட்டு வந்திருப்பதாயும், அது சம்பந்தமாக ஐயன் ஆலோசனை கூற வேண்டும் என்றும் மன்னர் கூறினார்.

**புத்தர்:** அந்த அங்குலிமாலன், தலையையும் தாடியையும் சிரைத்துவிட்டு, மஞ்சள் உடையணிந்து, கொல்லாமை, திருடாமை, பொய்யாமை முதலிய விரதங்களை மேற்கொண்டு, ஒருநாளைக்கு ஒரே பொழுது மட்டும் உண வருந்தி, உயரிய ஒழுக்கங்களை யெல்லாம் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தால், தாங்கள் அவனைப் பார்த்ததும் என்ன செய்ய விரும்புவீர்கள்?

**பிரசேனஜித்து:** அவனை வணங்குவேன்!

**புத்தர் :** (அருகே அமர்ந்திருந்த பிக்குவைக் காட்டி) இதோ, இவன்தான் அங்குலிமாலன் !

மன்னர் நடுக்க மடைந்தார். 'இங்கே பயப்படவேண்டியது எதுவுமில்லை ; அஞ்சவேண்டாம் !' என்று புத்தர் அவருக்குத் தேறுதல் மொழி கூறினார்.

அரசர் அங்குலிமாலனிடம் சென்று வணங்கி, 'புனிதரே ! தாங்கள்தாம் உண்மையில் அங்குலிமாலரா ?' என்று வினவினார்.

'ஆம் !' என்று பதில் வந்தது.

அரசர், 'தாங்கள் சந்தோஷமாயிருக்கலாம் ; தங்களுக்குத் தேவையுள்ள பொருள்களை யெல்லாம் நானே அனுப்பி வருவேன் !' என்றார்.

அப்போது அங்குலிமாலன், 'ஏற்கெனவே என்னிடம் மூன்று காஷாயத் துணிகள் இருக்கின்றன.* எனக்கு வேறு எதுவும் தேவையில்லை !' என்று கூறினான்.

அதைக் கேட்டு மன்னர் அதிசயப்பட்டுப் பெருமானிடம் சென்று, 'ஆச்சரியம் ! ஆச்சரியம் ! வாளாலும் வேலாலும் நான் அடக்க முடியாத ஒருவன் இதோ இங்கே வந்திருக்கிறான். ஆனால் எவ்வித ஆயுதமும் இல்லாமல் மகாபிரபு அவனை ஆட்கொண்டு அருள் புரிந்திருக்கிறார் !' என்று அவரை வாயார வாழ்த்தினார்.

அப்போது அங்குலிமாலன், 'கத்தியும் கம்பும் இல்லாமலே கருணை வள்ளல் என்னைத் திருத்திவிட்டார். இரத்த வெள்ளத்தில் ஆழ்ந்திருந்த என்னைப் பெருமான் வந்து காப்பாற்றிவிட்டார் !' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.†

---

*மூன்று உடைகளுக்கு மேல் ஒரு பிக்கு வைத்துக்கொள்ளக் கூடாது என்பது விதி.

†அங்குலிமாலனின் இந்த வரலாறு 'மஜ்ஜிம நிகாயம் - அங்குலிமால சூத்திரம்' என்ற பகுதியிலுள்ளது.

இந்த அங்குலிமாலன் யார், அவன் ஏன் கொலை பாதகனாக விளங்கினான் என்ற விவரங்களைப் பௌத்தக் கதைகள் கூறுகின்றன. அவன் பிறப்பில் பிராமணனாம். கோசல மன்னரின் புரோகிதராயிருந்த பார்க்கவர் அவன் தந்தை. அவன் அக்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய தட்சசிலத்துக் கலாசாலைக்குச் சென்று கல்வி பயின்று வந்தான். அங்கே அவனுடன் பயின்ற மாணவர் சிலர் அவனிடம் பொறாமைகொண்டு, ஆசிரியரிடம் அவனைப் பற்றி அவதூறுகள் சொல்லி, அவர் மனத்தை விஷமாக்கி விட்டனர். அவர் அங்குலிமாலனைத் தொலைத்துவிட வேண்டும் என்று கருதி, அவனுக்கு மேற்கொண்டு தாம் கல்வி புகட்டவேண்டும் என்றால், அவன் ஆயிரம் பேர் களைக் கொலை செய்யவேண்டும் என்றும், அப்படிக் கொன்ற தற்கு அடையாளமாக ஆயிரம் விரல்களைத் தம்மிடம் கொண்டுவந்து காட்டவேண்டும் என்றும் சொல்லி, அவனை அனுப்பிவிட்டார். அவனும், அவர் கூற்றை மெய்யென்று நம்பி, வெளியே சென்று, கொலைத் தொழிலை மேற்கொண் டானாம். ஆயிரம் கொலைகளுக்கு ஒன்று குறைய அவன் முடித்துவிட்டான். கடைசியாக வந்த துறவியை அவன் பிடிக்கவே முடியவில்லை, அவரே அவனை ஆட்கொண்டு விட்டார்!

பதினெட்டாம் இயல்

# தேவதத்தனும் அஜாதசத்துருவும்

---

'அருவினை சிலகெட ஒருபெரு நரகிடை
எரிசுடர் மரைமலர் எனவிடும் அடியினை !
அகலிடம் முழுவதும் அழல்கெட அமிழ்துமிழ்
முகில்புரி இமிழ் இசை நிகர்தரும் மொழியினை!'

**தேவதத்தன்** கோலிய மன்னரான சுப்பிரபுத்தரின் மைந்தன், புத்த பகவருடைய மைத்துனன். அநுருத்தன் முதலானோருடன் அவன் சங்கத்தில் சேர்ந்ததிலிருந்தே, மற்றவர்களைப்போல், ஒழுக்க முறைகளிலும், தியான முறைகளிலும் கருத்தில்லாமல், பெருமானுக்கு ஏற்பட்டு வரும் மரியாதைகளையும் புகழையும் கண்டு பொறாமைப் பட்டுக் கொண்டிருந்தான். ஒரு சமயம் அவன் புத்தரிடம் சென்று தனக்கு இருத்தி முறையைக் கற்றுக்கொடுக்க வேண்டும் என்று கேட்டான். அவர் மறுத்துவிட்டார் : 'விநய ஒழுக்க முறைப்படி நீ நடந்து வந்தால் மெய்யறிவும், இருத்தி ஆற்றலும் தாமாகவே உண்டாகும்' என்று அவர் கூறி அனுப்பினர்.

பிறகு தேவதத்தன் கௌண்டின்யர், அசுவஜித், பத்ரிகர் முதலியோரிடம் சென்று வேண்டினன். அவர்களும் அஷ்டாங்க மார்க்கத்தின்படி அவன் நற்காட்சி முதலிய படிகளில் பயிற்சி பெறவேண்டும் என்று கூறியனுப்பினர். அதன்பின் அவன் தசபால காசியபரிடம் சென்றான். மகா ஞானியாகிய அம்முனிவர் அவனுக்கு இருத்தி பெறுவதற்குரிய வழிகளை விளக்கிக் கூறினர். அது முதல் அவன் ஊண், உறக்கம் முதலியவைகளைக்கூடக் கவனியாமல்,

தியானத்திலே அமர்ந்திருந்தான். விரைவிலே அவனுக்கு இருத்தி ஆற்றலெல்லாம் உண்டாகிவிட்டது. தன்னைப் போலவே வேறு உருவங்கள் தோன்றும்படி செய்தல், எல்லாஉருவங்களையும் ஒன்ருக்கிக் காட்டுதல், தன்னைக் கட்புலனுகாதபடி மறைத்துக் கொள்ளல், நினைத்தபடி வானத்திலே பறந்து செல்லுதல் முதலிய பல சக்திகள் அவனுக்கு உண்டாகிவிட்டன.

அந்த நிலையில் அவன், பிம்பிசாரருடைய குமாரன் மகத நாட்டு இளவரசனுன அஜாதசத்துருவைத் தோழனுக்கிக் கொண்டு, அவன் மூலம் பிம்பிசாரரையும் புத்த பகவரையும் ஒழித்துவிட வேண்டும் என்று திட்டமிட்டான். புத்தரை ஒழித்துவிட்டு அவருக்குப் பதிலாகத் தானே பிக்குக்களின் தலைவனுக வரவேண்டும் என்பதே அவனுடைய ஆசை. அப்படி வரும்போது, தன்னையும் தன் பிக்குக்களையும் ஆதரித்து உதவி புரிவதற்கு உரிய வள்ளலாக அஜாதசத்துருவை முதலில் அரசனுக்கவேண்டும் என்றும் அவன் கருதினுன்.

புத்தர் கௌசாம்பி நகரில் இருந்த சமயத்தில் ஒருநாள் தேவதத்தன் இராஜகிருகத்தில் ஆகாய மார்க்கமாக அரண்மனைக்குப் பறந்து சென்று, அஜாதசத்துருவைக் கண்டு, தன் இருத்தி ஆற்றல்களை அவனிடம் காட்டினுன். மன்னன் ஒரு பக்கம் பயமும், ஒரு பக்கம் வியப்பும் கொண்டு, தேவதத்தனுக்காகத் தான் எதுவேண்டுமானுலும் செய்யத் தயாராயிருப்பதாக அறிவித்தான். இரண்டு இளவரசர்களும் நெடுநேரம் சதி செய்து கலந்து பேசிக் கொண்டார்கள். முதலில் அஜாதசத்துரு தன் தந்தையைக் கொலை செய்யவேண்டும் என்று முடிவு செய்யப்பெற்றது.

## புத்தரைச் சந்தித்தல்

புத்ததேவர் இராஜகிருகத்திற்கு வந்திருந்த சமயத்தில் தேவதத்தன் அவரிடம் சென்று வணங்கித் தன் விருப்

பம் ஒன்றைத் தெரிவித்தான் 'இறைவ! பகவருக்கு இப்போது வயதாகிவிட்டது; வாழ்வின் கடைசிப் படியை எட்டியாகிவிட்டது. இனிப் பகவர் கவலையில்லாமல் ஒதுங்கி ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டிய காலம். பிக்குக்களின் சங்கத்தை என்னிடம் ஒப்படைத்தால், நான் கவனித்துக் கொள்ளத் தயாராயிருக்கிறேன்!' என்று அவன் கூறினான். அதற்குப் பகவர், 'போதும், தேவதத்தா! பிக்குக்களின் சங்கத்தை ஏற்று நடத்த நீ விரும்ப வேண்டாம்!' என்று சொல்லிவிட்டார்.

இரண்டு, மூன்று முறைகள் தேவதத்தன் தன் வேண்டுகோளைக் கூறினான். முந்திய மறுமொழியையே பகவர் திரும்பச் சொல்லிவிட்டு, 'சாரீபுத்திரர், மகாமொக்கல்லானு (மௌத்கல்யாயனர்) ஆகியவர்களிடமே சங்கத்தைக் கவனிக்கும் பொறுப்பை நான் ஒப்படைக்கமாட்டேன்; எச்சில் பொறுக்கி உண்ணும் தீயோனாகிய உன்னிடமா ஒப்படைக்க முடியும்!' என்று தெரிவித்தார்.

அப்போது அரசரும், அதிகாரிகளும், பல பிக்குக்களும் பகவரைச் சூழ்ந்து அமர்ந்திருந்தனர். எல்லோருடைய முன்னிலையிலும் பகவர் தன்னை இழிவுபடுத்தியும், சாரீபுத்திரரையும், மொக்கல்லானுவையும் உயர்வுபடுத்தியும் பேசியதை அவனால் தாங்கமுடியவில்லை. அவன் பகவரை வணங்கிவிட்டு வெஞ்சினத்தோடு வெளியேறினான்.

## பிம்பிசாரரின் சிறைவாசம்

அஜாதசத்துரு தேவதத்தனுடைய ஆலோசனைப்படி தன் தந்தையைத் தானே கொன்றுவிடவேண்டும் என்று பலநாள் முயன்றான். ஆனால் அதற்கு மனம் வரவில்லை. ஆதலால் அவரைச் சிறையில் அடைத்துவிட்டுத் தான் சிம்மாசனம் ஏறினான். பிம்பிசாரர் உயிரோடிருப்பதில் தேவதத்தனுக்கு மிக்க வருத்தம் ஏற்பட்டது. எனினும் புதிய அரசன் அஜாதசத்துரு அவனுக்காகத் தனி விகாரை

ஒன்றைக் கட்டிக் கொடுத்தான். ஐந்நூறு சீடர்களும் சேர்ந்தனர். அவர்களுக்கு அரண்மனையிலிருந்து நாள் தோறும் வண்டி வண்டியாக உணவும், மற்றைப் பொருள் களும் சென்று கொண்டிருந்தன.

சிறையிலே அடைக்கப் பெற்றிருந்த மன்னருக்கு உணவும் மறுக்கப்பட்டது. மகாராணி மட்டும் தினந் தோறும் அவரைச் சந்தித்து வந்தாள். அவள் சந்திக்கும் நேரத்தில் இரகசியமாகக் கொஞ்சம் உணவு கொண்டு போய்க் கொடுத்து வந்தாள். அதை யறிந்த மன்னன் அவள் செல்வதையும் தடுத்துவிட்டான். ஆயினும் பிம்பிசாரர் சிறைக்கோட்டத்திலே கவலையில்லாமல் காலங்கழித்து வந் தார். உணவில்லாமல் உடல் தேய்ந்துகொண்டிருந்தும், அவர் உள்ளம் நிறைவு பெற்றிருந்தது. ஏனெனில், சிறையி லிருந்து கொண்டே அவர் போதி வேந்தரை ஒவ்வொரு நாள் மாலையிலும் தரிசிக்க முடிந்தது. அவர் அடைக்கப் பெற்றிருந்த அறையில் ஒரு சாளரம் இருந்தது. அதன் வழியாகப் பார்த்தால் கிருத்திரகூடம்* என்ற மலை தெரி யும். அங்கேயும் ஒரு விகாரை இருந்தது. பகவர் மாலை நேரத்தில் விகாரையிலிருந்து வெளிவந்து மலைமீது ஏறிச் செல்வது வழக்கம். அவர் நோக்கம் பிம்பிசாரருக்குக் காட்சி யளிக்கவேண்டும் என்பதே. புத்த தரிசனம் ஒன்றே தமக்குப் போதுமானது என்று பிம்பிசாரர் ஆறுதல்கொண் டிருந்தார்.

இதை அறிந்த அஜாதசத்துரு சிறையிலிருந்த சாள ரத்தையும் அடைத்துவிடுமாறு உத்தரவிட்டான். ஒருநாள் பகவர் மௌத்கல்யாயனரைப் பிம்பிசாரரிடம் அனுப்பி யிருந்தார். மௌத்கல்யாயனர் தமது இருத்தி ஆற்றலால் சிறையுள் புகுந்து வயோதிக மன்னருக்கு வேண்டிய ஆறு தல் மொழிகளைக் கூறினர்.

*கிருத்திரகூடம் - கழுகுக் குன்றம், அல்லது கழுகுமலை.

பின்னர் சில நாட்களில் அஜாதசத்துரு தன் குழந்தையைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டிருக்கையில், தன்னையும் தன் தந்தை எவ்வளவு பிரியமாக வளர்த்திருப்பார் என்று எண்ணித் தந்தையை விடுதலை செய்யவேண்டும் என்று விரும்பினான். ஆனால் அவன் விடுதலை செய்யுமுன் அவரே முக்தியடைந்துவிட்டார் என்று பழைய வரலாறுகள் கூறுகின்றன.

புதிய மன்னனிடம் தேவதத்தன் பரிசுகள் பெற்று வருவதையும், அரச சபையில் அவனுக்குப் புகழ் ஏற்பட்டு வருவதையும் பற்றிப் புத்தர்பிரான் தம் சீடர்களுக்குச் சில சமயங்களில் விளக்கிக் கூறிவந்தார். மூடனுக்கு ஏற்படும் புகழும், ஆதரவும், அவனது அழிவுக்கே காரணமாகும் என்று அவர் கூறினார். வாழை குலை தள்ளுவதும், மூங்கில் கனி பெறுவதும் அவைகளின் அழிவுக்காகவே என்பதை அவர் உபமானமாக எடுத்துக் காட்டினார். 'நீங்கள் ஊதியங்களையோ, உபகாரங்களையோ, போலிப் புகழுரைகளையோ விரும்பாமலிருங்கள்!' என்று பிக்குக்களுக்கு எச்சரிக்கையும் செய்தார்.*

## தேவதத்தனின் கொலை முயற்சிகள்

தேவதத்தன் மன்னனின் உதவி கொண்டு, பெருமானை அழிப்பதற்காக ஐந்நூறு வில்லாளரைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு ஏராளமான பொன்னைப் பரிசளித்தான். ஆனால் அவர்கள் மனம்மாறிப் புத்த தேவரிடம் தரும உபதேசம் கேட்கச் சென்றுவிட்டனர். பின்னால் கிருத்திர கூட மலையிலிருந்து ஒரு பெரும் பாறையைப் பகவர் அடிவாரத்தில் நடந்துசெல்லும்போது அவர்மீது உருட்டிவிட வேண்டும் என்றும் தேவதத்தன் ஏற்பாடு செய்தான். அதற்குவேண்டிய எந்திரங்களும் அமைக்கப் பெற்றன.

---

*சுத்த நிபாதம்

ஆனால் பாறை பகவர் தலைக்கு நேராகக் கீழே விழுந்த சமயத்தில், அது இரு துண்டுகளாகி ஐயனின் இரண்டு பக்கங்களிலும் விலகிப்போய் விழுந்தது. எனினும் அதி லிருந்து சிதறிய சிறு கற்கள் ஐயனின் பாதத்தில் பட்ட தால் புண் ஏற்பட்டது. அதனை அரசனுடைய புகழ்பெற்ற வைத்தியராயும், பகவரிடம் பக்திகொண்ட சீடராயும் விளங்கிய ஜீவகர் மருந்திட்டுக் குணப்படுத்திவிட்டார்.

தேவதத்தன் மனிதரை ஏவிப் பகவரை அழிக்க முடி யாது என்று கண்டு, இரத்தினபாலன் என்ற மதயானையை அவிழ்த்துவிட்டு, அதனைக் கொண்டு தன் கருத்தை நிறை வேற்றிக் கொள்ளத் தீர்மானித்தான். அதன் பாகனைக் கண்டு பெருநிதி கொடுத்துக் குறித்தநாள் ஒன்றில் அதைத் தெருக்களிலே சுற்றி வரும்படி அனுப்ப ஏற்பாடு செய் தான். அரசனும் அதற்கு ஆதரவு அளித்தான்.

அன்று புத்தர்பிரான் இராஜகிருகத்தில் ஒரு பெருந் தனிகரின் வீட்டில் ஐயம் ஏற்றுக்கொள்ள இசைந்திருந் தார். அவருடன் ஐந்நூறு பிக்குக்களும் வந்து கொண் டிருந்தனர். நகரில் மதயானை வெளிவரப் போகின்றது என்று எச்சரிக்கை மணி எங்கும் ஒலித்தது. உடனே புத்தருக்கு விருந்தளிக்க இசைந்த செல்வரும் பல மக்களும் ஓடிச் சென்று விஷயத்தைச் சொல்லி, ஐயனும் பிக்குக் களும் நகருக்குள் வரவேண்டாம் என்று வேண்டிக் கொண் டனர். ஆனால் பெருமான் அதற்குச் செவி சாய்க்கவில்லை. எதுவும் நிகழாததுபோலே, அவர் வழக்கம்போல் நடந்து கொண்டே நகரை நண்ணினார்.

மதங் கொண்ட யானைக்கு வெறியளிப்பதற்காக மேற் கொண்டு மதுவும் கொடுக்கப்பட்டிருந்தது. குன்றம் உருண்டு செல்வதுபோல் அது முழக்கம் செய்துகொண்டு வீதிகளிலே ஓடிக் கொண்டிருந்தது. ஜனங்கள் வீடுகளை அடைத்துவிட்டு மாடிகளிலிருந்து அதைப் பார்த்துக் கொண்டிருந்தனர். விவரம் தெரியாமல் தெருக்களில் நடந்து

வந்த மக்களிற் பலர் யானையால் மிதிக்கப்பெற்று உயிர் துறந்தனர். தேவதத்தன் உயர்ந்த மாடி ஒன்றில் நின்ற வண்ணம் ஐயன் வரவை எதிர்பார்த்திருந்தான்.

புத்தரும் பிக்குக்களும் வீதிகளின் வழியாக நடந்து வந்தனர். மாடிகளிலே நின்ற மக்கள் அவர்கள் திரும்பச் செல்லும்படி கூக்குரலிட்டுக் கூவினர். பெருமான் எதையும் பொருட்படுத்தாமலே அமைதியோடு சென்று கொண்டிருந்தார், வழியிலே யானைக்குப் பலியானவர்களின் பிணங்கள் நசுங்கிக் கிடந்தன. திடீரென்று இரத்தினபாலன் பகவருடைய கூட்டத்தை நோக்கி ஆவேசத்துடன் ஓடிவந்தது. பெருமானைச் சூழ்ந்து சென்று கொண்டிருந்த பிக்குக்கள் நாலு பக்கங்களிலும் சிதறி ஓடிவிட்டனர்; பலர் ஆகாயத்திலே பறந்து சென்றதாகவும் சொல்லப்படுவதுண்டு. அணுக்கத் தொண்டர் ஆனந்தர் ஒருவர் மட்டுமே, ஐயனின் நிழலைப்போலே, அவரைத் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார்.

வீதிகளும், வீடுகளும் அதிரும்படி பாய்ந்துவந்த வேழத்தை நோக்கிப் பெருமான் எதிர்கொண்டு சென்றார். அவரைக் கண்டதும் யானை, மண்மீது மலை சாய்வதுபோல், அவர் பாதத்தடியில் வீழ்ந்து வணங்கியது. ஐயன் அதனைப் பார்த்து, 'அப்பா! இன்று முதலே உன் வெறி, மயக்கம், கோபம் முதலியவற்றை ஒழித்துவிடு! துக்கச் சேற்றில் நீ அழுந்தியது போதும்! இப்போதே நீ தீமைகளைக் கைவிடாவிட்டால், உன் பாவமூட்டை மேலும்மேலும் பெருகிக்கொண்டேயிருக்கும்!' என்று உபதேசம் செய்தார். மதயானையின் இதயம் சாந்தி பெற்றது. இக்காட்சியைக் கண்டுகொண்டிருந்த ஜனங்கள் பெருமானுக்குப் பல காணிக்கைகளைக் கொண்டுவந்து செலுத்தி வணங்கி நின்றனர்; உற்சாக மிகுதியால் தங்கள் நகைகளைக் கழற்றி ஐயனிடம் உபதேசம்பெற்ற யானைக்கும் அணிவித்தனர். அந்த யானையின் இயற்பெயர் 'மாலாகிரி' என்றும், ஏராள

மான இரத்தின ஆபரணங்களைப் பெற்றதால் அது 'இரத்தினபாலன்' அல்லது 'தனபாலன்' என்று பெயர் பெற்றது என்றும் சொல்லப் படுகின்றது. பௌத்த தருமத்தில் அதுவரை நிலைத்து நில்லாத பல மக்கள் அப்பொழுது முதல் அதிலே ஊக்கம் கொண்டனர். மன்னனும் இரத்தினபாலன் அடங்கி வணங்கிய செய்திகேட்டு ஆச்சரியமடைந்தான். தேவதத்தன் மட்டும் தனது கடைசி முயற்சியும் தோல்வியடைந்ததை எண்ணி மனம் புழுங்கிக் கொண்டிருந்தான்.

பிற்காலத்தில் புத்த சரித்திரத்தைச் சித்திரங்களாகத் தீட்டியுள்ள விகாரைகளிலும், ஆலயங்களிலும் மதயானை பெருமானைத் துரத்தி வருவதும், அவர் அதனை ஆட்கொள்வதும் அழகிய சித்திரங்களாக எழுதப்பெற்றிருக்கின்றன. அஜந்தா, அமராவதிபோன்ற இடங்களிலும், வெளிநாடுகளிலுள்ள ஆலயங்களிலும் இந்தச் சித்திரங்களை இப்போதும் காணலாம்.

## ஜீவகர்

பகவரிடம் அன்பு பூண்டு அவர் அருளைப் பெற்ற அடியார்களுள் அநாத பிண்டிகர், விசாகை முதலியவர்களோடு ஜீவகருடைய பெயரும் அடிக்கடி கூறப்படும். ஜீவகர் அக்காலத்திலே தலைசிறந்த மருத்துவராக விளங்கிவந்தவர். அவர் மகத மன்னர் பிம்பிசாரருக்கு அரண்மனை வைத்தியராக இருந்தார். பின்னால் அஜாதசத்துருவுக்கும் அவரே வைத்தியர்.

பிம்பிசாரருடைய மற்றொரு மைந்தனன அபயன் என்பவனுக்கும் புகழ்பெற்ற சாலாவதி என்ற தாசிக்கும் மைந்தராகப் பிறந்தவர் ஜீவகர் என்று கூறுவர். அவர் பிறந்த செய்தி எதுவும் இளவரசருக்குத் தெரியாது. குழந்தை பிறந்ததும், அதை ஒரு கூடையில் வைத்து அருகிலிருந்த ஒரு வனத்திலே கொண்டுபோய் வைத்துவிட்டு வரும்படி

சாலாவதி ஏற்பாடு செய்திருந்தாள். அவ்வனத்திலே வேட்டைக்குச் சென்ற அபயன் குழந்தையின் குரலைக் கேட்டு அதை அரண்மனைக்கு எடுத்துவந்து வளர்த்து, அதற்கு ஜீவகன் என்று நாமகரணம் செய்தான்.

ஜீவகர் சிறு வயதிலேயே மகா புத்திசாலியாக விளங்கினார். ஆனால் தமது தாய்தந்தையர் எவரென்று தெரியாததால் அவர் மிகவும் துயரமடைந்தார். அந்நிலையில் கல்வி கேள்விகளிலே பயிற்சிபெற்றுத் தாம் உயர்ந்த நிலையை அடையாவிட்டால், வாழ்க்கை பெருந்துன்பமாகவே யிருக்கும் என்று உணர்ந்து, அவர் தட்சசீலம் சென்று, அங்குள்ள கலாசாலையில் படித்துவந்தார். ஆரம்பத்திலிருந்தே மருத்துவத்திலே அவர் மனம் பற்றுக்கொண்டிருந்ததால், அதையே அவர் பயின்றார். சில ஆண்டுகளுக்குள்ளே அவர் அதில் தேர்ந்து விளங்கினார். கல்வி முடிந்தபின் ஆசிரியர் அவருக்கு வழிச்செலவுக்குப் பொருள் கொடுத்து, ஆசி கூறி அனுப்பிவைத்தார்.

வருகின்ற வழியிலே சாகேத நகரில் ஒரு செல்வச் சீமாட்டிக்குப் பல ஆண்டுகளாக ஏற்பட்டிருந்த தலைவலியை ஜீவகர் நிவாரணம் செய்து, பெருஞ்செல்வமும் புகழும் பெற்றார். மிக்க சிறப்போடு அவர் இராஜகிருகத்தில் அபயனைச் சென்று கண்டார். இடையில் அபயன் ஜீவகர் தமது குமாரரே என்பதை விசாரித்து அறிந்து கொண்டிருந்ததால், அவர் வந்ததும், தானே அவர் தந்தை என்பதையும், சாலாவதி அவர் தாய் என்பதையும் தெரிவித்தார்.

நாள்தோறும் ஜீவகரின் புகழ் அதிகரித்து வந்தது. மன்னர் பிம்பிசாரருக்கும் அவரே வைத்தியம் செய்து வந்தார். காசி, உஜ்ஜயினி முதலிய பெரு நகரங்களிலிருந்து செல்வர்கள் பலர் அவரைத் தேடிவரலாயினர். ஒரு சமயம் புத்தர் பெருமான் உடல் நோயுற்றிருக்கையில், ஆனந்தர் ஜீவகரை அழைத்துச் சென்றார். ஜீவகர் தாம் பிறவி

யெடுத்த பெரும்பேறு கிடைத்துவிட்டது என்று அக மகிழ்ந்து, பெருமானுக்கு வைத்தியம் செய்தார். நோயின் காரணங்கள் மூன்று என்று கண்டு, அவர் மூன்று தாமரை மலர்களைப் பெருமானிடம் கொடுத்து, அவைகளை முகர்ந்து பார்த்தால் நோய் நீங்கும் என்றார். அம்மலர்களிலே உடலில் சேரவேண்டிய மருந்துப் பொடிகள் சேர்ந்திருந்தன. பெருமான் அவர் கூறியபடியே செய்ததில், பிணி உடனே குணமாகிவிட்டது. பின்னால் தேவதத்தன் வீசிய பாறையிலிருந்து தெறித்த கற்களால் அவருடைய பாதத்தில் ஏற்பட்ட புண்ணையும் ஜீவகரே குணப்படுத்திய செய்தி மேலே கூறப்பட்டுளது. பெருமானுக்கு ஜீவகரிடத்தில் அளவற்ற பிரியமுண்டு. கல்வி, கேள்வி, ஒழுக்கம், தரும விருப்பம் முதலியவற்றிலே ஜீவகர் சிறந்து விளங்கியதால், அவர் எது சொன்னாலும் ஐயன் அதை அன்போடு கேட்டுக் கொள்வது வழக்கம். ஜீவகர் வேண்டுகோளுக்கு இணங்கியே பிணி வந்த காலத்தில் பிக்குக்கள் மருந்துகளை உபயோகித்துக் கொள்ளலாம் என்று அவர் அனுமதித்தார்.

ஒரு சமயம் உஜ்ஜயினி மன்னர் **பிரத்தியோதர்** தமக்கு ஏற்பட்டிருந்த காமாலையைக் குணப்படுத்தியதற்காக ஜீவகருக்கு மிக உயர்ந்த ஆடைகளைப் பரிசளித்தார். அவைகளைப் பார்த்ததும், ஜீவகர், 'இவ்வளவு உயர்ந்த ஆடைகளைப் புத்த தேவருக்கே காணிக்கையாக அளிக்கவேண்டும்; இல்லாவிடில் மன்னர் பிம்பிசாரரே இவற்றிற்கு உரியவர்!' என்று கருதினார். பிறகு அவ்வுடைகளைப் பெருமானிடமே கொண்டு சேர்த்துவிட்டார். 'நல்ல பொருள்களெல்லாம் நம்பிரானுக்கே உரியவை' என்று அவர் கருதியதைக் கண்டு பெருமான் மனம் கனிந்திருந்தார். அவ்வமயம் ஜீவகர், 'பொதுமக்கள் உவந்து அளிக்கும் உடைகளைப் பிக்குக்கள் ஏற்றுக் கொள்ளலாம் என்று பகவர் அனுமதியளிக்கவேண்டும். இதுவரை கிழிந்த கந்தல்களையும், பிணங்களுக்குப் போர்த்தும் துணிகளையுமே அவர்கள்

அணிந்து வருகிறார்கள். இதனால் நோய்களும் ஏற்படுகின்றன' என்று வேண்டினார். பெருமானும் அவ்வாறே அனுமதித்தார். அதைக் கேட்ட இராஜகிருக மக்கள், உடனே ஆயிரக்கணக்கான உடைகளை எடுத்துக் கொண்டு போய்ப் பிக்குக்களுக்கு அளித்தனர்.

## அஜாதசத்துரு தருமத்தை ஏற்றல்

கோடை காலத்தில் ஒரு பூர்ணிமையன்று இராஜகிருகத்தில் கோலாகலமான திருநாள் ஒன்று நடந்தது. அன்று மாலை அஜாதசத்துரு மிக்க ஆடம்பரத்துடன் ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். மந்திரிகளும் பிரபுக்களும் அவனைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்தனர். அப்போது அவன் தன் மனத்திற்கு ஆறுதலளிக்கும் முறையில் யாரிடமாவது போய் அறவுரைகள் கேட்டு வரவேண்டும் என்று விரும்பினான். அவன் தன் தந்தையின் உயிரைப் பலி வாங்கியதிலிருந்து மனச்சாந்தியை இழந்துவிட்டான். இரவு முழுவதும் உறக்கம் வரவில்லை. பிம்பிசாரரின் மரணம் அவன் உள்ளத்தைப் பெரும் பாறையைப்போல் நசுக்கிக் கொண்டேயிருந்தது.

மந்திரிகளும் பிரபுக்களும் சில பெரியோர்களுடைய பெயர்களைச் சொல்லி, அவர்களைப் போய்த் தரிசித்து வரலாம் என்றனர். ஒருவர் பூர்ண காசியபர் பெரிய மதகுரு என்றும், அவரைக் காண்பது நலம் என்றும் கூறினார். அரசனின் மைந்தனான உதாயிபத்ரன் ஏதாவது ஒரு நாட்டின் மீது படையெடுத்துச் செல்லலாம் என்று கூறினான். அந்தக் கூட்டத்திலே நின்று கொண்டிருந்த ஜீவகர் மட்டும் வாய் திறந்து பேசவேயில்லை. ஏனெனில், அவர் ஆலோசனை சொல்வதானால், புத்தரிடம் செல்லவேண்டும் என்றே கூறுவார்; ஆனால் பெருமானிடம் மன்னனுக்குப் பகைமை இருந்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொருவரைப் பற்றிக் கூறுகையில், தாமும் பெருமானின் பெயரைச் சொல்லிக்

குழப்பத்தை அதிகப்படுத்தவேண்டாம் என்றும் அவர் கருதியிருந்தார். ஆனால் அரசன் அவரைப் பார்த்து, 'மற்றவர்கள் தத்தம் குருமார்களைப் பற்றிக் கூறுகையில் நீ மட்டும் மௌனமா யிருப்பதன் காரணம் என்ன? உனக்கு ஏதாவது அதிருப்தி ஏற்பட்டிருக்கிறதா?' என்று வினவினார். அப்போது ஜீவகர், சமயம் வந்துவிட்டது என்பதை அறிந்து பேசலானார். போதிமாதவரின் பெருமைகளை எடுத்துச் சொல்லி, 'அநேகர் வணங்கி ஏத்தவும், பல்லாயிரவர் உபதேசம் கேட்கவும், அந்தக் கருணை வள்ளல் எனது மாந்தோப்பிலுள்ள விகாரையிலேயே இப்போது அமர்ந்திருக்கிறார்; அவரை நாம் போய்த் தரிசித்தல் நலம்!' என்றார்.

புத்தர்பால் பற்றுடையவர்களிடத்திலே அஜாதசத்துருவுக்கு எப்போதுமே சந்தேகம் உண்டு. ஏனெனில் பெருமானுக்கு அவன் அத்தனை தீங்குகள் செய்திருந்தான். ஆகவே அவன் ஜீவகரிடத்தில் உண்மையைச் சொல்லும்படி கேட்டான். 'என்னை ஏமாற்றவில்லையே? எதிரிகளிடம் என்னைக் காட்டிக் கொடுக்கும் சூழ்ச்சி எதுவும் இல்லையே? என் உயிருக்கு ஆபத்தில்லையே?' என்றெல்லாம் பல கேள்விகள் கேட்டான். எந்தவித ஆபத்தும் ஏற்படாது என்று ஜீவகர் பதிலுரைத்தார். 'ஆயினும் தாங்கள் தனித்துச் செல்லாமல், தக்க பாதுகாப்புடனும், பெருங்கூட்டமான ஜனங்களுடனும் செல்வது நலம்' என்றும் அவர் யோசனை கூறினார். எவரேனும் பகைவர் மறைந்திருந்து மன்னனுக்குத் தீங்கிழைத்தாலும், அந்தப் பழி தம்மையே சாரும் என்று அவர் அஞ்சினார். மேலும் பகவர் அவரவர் தகுதியை அறிந்தே உபதேசம் செய்ய இசைவர் என்பதையும், மன்னனுக்குத் தகுதியைப் பார்க்கினும் பாவமே அதிகமிருக்கும் என்பதையும் எண்ணி, அவர் ஏராளமான ஜனங்களுடன் செல்ல விரும்பினார். ஜனங்களிலே புண்ணியம் புரிந்தவர்கள் இருப்பார்கள் என்றும்,

அவர்களுக்காக ஐயன் அறவுரை கூறுவார் என்றும் அவர் கருதியிருந்தார்.

கடைசியாக மன்னன் மருத்துவரின் யோசனைப்படியே புத்த தேவரைத் தரிசிக்கப் புறப்பட்டான். ஆண்களின் உடையுடன் ஆயுதந் தாங்கிய ஏராளமான பெண்களுடனும், பரிவாரங்களுடனும், பொதுமக்களுடனும், அவனும் ஜீவகரும் ஒரு யானைமீது அமர்ந்து கழுகுமலைமேல் அமைந்திருந்த விகாரையை நோக்கிச் சென்றனர். வானத்தில் பூர்ணச் சந்திரன் தன்னொளி பரப்பிக் கொண்டிருந்தான். வழியெங்கும் மன்னன் மன அமைதியில்லாமல் சஞ்சலப் பட்டுக் கொண்டேயிருந்தான்.

விகாரையை அடைந்ததும், யானையை ஒருபுறமாக விட்டுவிட்டு, மன்னனும் ஜீவகரும் மற்ற மக்களுடன் புத்த தரிசனத்திற்காகச் சென்றனர். அப்போது பால்போன்ற நிலவில், ஆயிரத்து இருநூற்றைம்பது சீடர்களின் நடுவிலே, போதிமாதவர் அமர்ந்திருந்தார். மன்னன் அந்தக் கூட்டத்திலே எவர் புத்தர் என்று ஜீவகரிடம் கேட்டான். பிக்குக்களின் நடுவே ஒப்பற்ற எழிலுடன் நடுநாயகமாக விளங்குபவரே அருள் வள்ளலாயிருக்க வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். எனினும் அரசர்க்குரிய முறைப்படி தனக்குத் தெரியாததுபோல் கேட்டுக் கொண்டான். அவனுடைய கேள்வி, 'பூமி எது?' என்பது போலவும், ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே, 'சூரியன் எது? சந்திரன் எது?' என்று கேட்பது போலவும் ஜீவகருக்குத் தோன்றிற்று. செந்தாமரை போன்ற மலர்ந்த முகமும், அண்டினோர் அனைவருக்கும் அபயமளிக்கும் அருட்கரமும் கொண்டு விளங்கிய பெருமானை அவர் சுட்டிக்காட்டி, 'அவரே போதிமாதவர்!' என்றார்.

அஜாதசத்துரு, தனது மேலங்கியைக் கழற்றி ஒரு தோளில் போட்டுக் கொண்டு, பகவரிடம் சென்று முழங்கால் படியிட்டுத் தரையைத் தொட்டு வணங்கினான். பின்

னர் கைகளைக் கட்டிக் கொண்டு ஒருபுறமாக ஒதுங்கி நின்று, 'பகவ! இங்கே பிக்குக்கள் அனைவரும் மன அடக்கத்துடன் சாந்தியோடு திகழ்வது கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது. இத்தகைய சாந்தி என் இளவரசன் உதாயிபத்ரனுக்கும் கிடைத்தால் பாக்கியந்தான்!' என்று கூறினான்.

'நன்று, நன்று, மகாராஜா! இளவரசனிடம் நீங்கள் அளவற்ற அன்புகொண்டிருக்கிறீர்கள்! உட்காருங்கள்!' என்று பெருமான் கூறினார்.

மன்னன் அவர் பாதங்களை மறுபடி வணங்கி, ஒரு பக்கத்தில் அமர்ந்துகொண்டு, 'பகவர் அனுமதித்தால் நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்' என்று வேண்டினான்.

எந்தக் கேள்வியும் கேட்கலாம் என்று பகவர் சொன்னார்.

அஜாதசத்துரு, 'உலகத்திலே மக்கள் பல தொழில்களைச் செய்து அவற்றால் பயனடைவதுபோல், தருமத்தை மேற்கொண்டு, ஒழுக்கமும் பேணுவதால் வெளிப்படையாகத் தெரியக்கூடிய பயன் ஏதும் உண்டாகிறதா?' என்று கேட்டான்.

அந்தக் கேள்வியை வேறு யாரிடமாவது அவன் கேட்டதுண்டா என்று பகவர் வினவினார்.

அதற்கு அவன், 'ஆம்' என்று சொல்லி, பூர்ண காசியபர், கோசாலி, சஞ்சயர், அஜித கேசகம்பளர், நிக்கிராந்தர், காத்தியாயனர் முதலிய சமயத் தலைவர்களிடம் முன்னால் தான் கேட்டதாகவும், ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாகப் பதிலுரைத்ததாகவும், எதுவும் தனக்குத் திருப்தியளிக்கவில்லை என்பதாகவும் கூறினான்.

பகவர் அவனுடைய கேள்விக்குப் பதிலாகத் தாமும் அவனை ஒரு கேள்வி கேட்க விரும்பினார்: 'மகாராஜா! உங்களிடம் ஓர் அடிமை இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவன் தன் விருப்பம்போல நடக்க முடியாது;

தனக்கு என்று அவனுக்கு எவ்வித இன்பமும் கிடையாது; ஏவிய பணிகளைச் செய்வதே அவன் கடமை. அத்தகைய ஏவலாளன் தங்கள் அரண்மனையையும், அதிலே தாங்கள் உலகத்தில் அனுபவிக்க வேண்டிய செல்வங்களும் இன்பங் களும் நிறைந்திருப்பதையும் பார்த்து, ஒரு சமயம் இப்படி எண்ணக்கூடும்: "மகத மன்னரான வைதேகி புத்திரர் அஜாதசத்துருவும் ஒரு மனிதரே; நானும் மனிதனே! ஆனால் அஜாதசத்துரு, பூர்வ ஜன்மங்களின் புண்ணிய வசத்தால், இப்போது அரண்மனையில் வசித்து, மனிதர் அடைய முடியாத இன்பங்களையெல்லாம் துய்த்துக்கொண் டிருக்கிறார். நானும் நற்கருமங்களை மேற்கொண்டு புண் ணியத்தைத் தேடி அவரைப்போல் ஆகமுடியும். நான் என் தலைமயிரையும் தாடியையும் மழித்துவிட்டுக் காவி யுடை அணிந்து, வீட்டு வாழ்க்கையைத் துறந்து துறவி யாகிவிடுவேன்!"

'அவன் எண்ணியபடியே துறவு பூண்டு, உயிர்க் கொலை புரிதல், களவு, காமம், வேடிக்கை, விளையாட்டுக் கள், நிந்தனை, பேராசை, புறங்கூறுதல், பிறருக்குத் தீங்கு நினைத்தல் முதலிய பாவ கருமங்களையெல்லாம் விட் டொழித்துவிடுகிறான். அவனைத் தங்கள் அதிகாரிகள் கண்டுவந்து தங்களிடம் அறிவிப்பார்கள். அப்போது தாங்கள் என்ன செய்வீர்கள்? அந்தத் துறவியைப் பிடித்து வரச்சொல்லி, அவன் மறுபடி உங்கள் அடிமையாகவும் பணியாளாகவுமே இருக்கவேண்டும் என்று உத்தரவு போடுவீர்களா?'

அஜாதசத்துரு கூறினான்: 'பகவ, அவ்வாறு செய்ய மாட்டேன்! அவனை நான் எந்த இடத்தில் கண்டாலும், அவன் முன்பு எழுந்து நின்று என் இரு கைகளையும் கூப்பி வணங்குவேன். அவன் அந்தத் துறவு வாழ்க்கையில் ஈடு பட்டிருக்கும்வரை நான் அவனுக்கு உடைகளும், உணவும், தங்குவதற்கு இடமும், மருந்துகளும் அளித்து வருவேன்!'

தருமத்தை மேற்கொண்டு ஒழுகுவதில் கண்முன்பு தெரியக்கூடிய பயன் விளைகிறது என்பது இந்த உதாரணத்தின் மூலம் தெரிகிறது அல்லவா?' என்று பெருமான் கேட்டார்.

மன்னன் திருப்தி யடைந்தான். பின்னர் அவன் அவருடன் வெகுநேரம் உரையாடிக் கொண்டிருந்தான். ஐயன் தருமத்தைப்பற்றி அவனுக்கு விரிவாக விளக்கி உரைத்தார்.*

முடிவில் அஜாதசத்துரு மனத்தெளிவு பெற்று, 'நான் தருமத்தைச் சரணடைகிறேன்; புத்த பகவரே மெய்ஞ்ஞானி என்பதை மறுப்பதைப் பார்க்கினும் என் தலை அறுபடுவதையே நான் விரும்புவேன்; நான் சங்கத்தையும் சரணடைந்து உபாசகனாகிறேன்!' என்று கூறினான்.

அவன் வெளியே சென்றபின், பெருமான், 'இவன் இந்தப் பிறவியிலேயே அருகத்தாக விளங்கவேண்டியவன்; ஆனால் தந்தையைக் கொலை செய்த பாவம் குறுக்கே நிற்கிறது!' என்று மொழிந்தார்.

## தேவதத்தனின் முடிவு

தேவதத்தனின் துர்ப்போதனையைக் கேட்டே அஜாதசத்துரு பழைய மன்னரின் உயிரைப் போக்கினான் என்பதை அறிந்திருந்த அமைச்சர்களும், பிரபுக்களும், புத்தர் பெருமானின் ஏற்றத்தை எடுத்துக் காட்டி, மேற்கொண்டு தேவதத்தனுக்கும் அவனுடைய துறவிகளுக்கும் அரசன் எவ்வித உதவியும் செய்யவேண்டியதில்லை என்று ஆலோசனை கூறினர். அவ்வாறே உதவிகளை நிறுத்திவிடும்படி அரசனும் கட்டளையிட்டான். அரண்மனையிலிருந்து வண்டி வண்டியாக உணவுப்பொருள்கள் வருவது நின்று போகவே

*அஜாதசத்துரு ஐயனைச் சந்தித்த இவ்வரலாறு 'சிரமணபால சூத்திர'த்திலுள்ளது.

தேவதத்தனுடைய துறவிகள் அவனைக் கைவிட்டனர். வறுமையாலும், மனவேதனையாலும் அவன் மிகவும் அவதிப்பட்டான். எனினும் மீண்டும் ஒருமுறை புத்தரைச் சந்தித்துத் தன் காரியம் கைகூடுமா என்று பார்க்க அவன் விரும்பினான்.

ஒருநாள் அவன் புத்தரிடம் சென்று, அவரை வணங்கி, ஐந்து வேண்டுகோள்களுடன் தான் வந்திருப்பதாகக் கூறினான். பெருமானும் அவற்றைப் பொறுமையோடு கேட்டுக்கொண்டிருந்தார். அவன் வேண்டுகோள்கள் வருமாறு: பிக்குக்கள் மேற்கொண்டு நகரங்கள் கிராமங்களுக்கு அருகிலுள்ள விகாரைகளில் தங்காமல் காடுகளிலேயே இருக்கவேண்டும்; அவர்கள் ஐயமெடுக்கும் உணவைத் தவிர மக்கள் விகாரைகளில் கொண்டுவந்து அளிக்கும் உணவுகளைத் தீண்டக்கூடாது; இடுகாடுகளில் பிணங்களின்மீதுள்ள துணிகளைத் தவிர வேறு உடைகளைப் பிக்குக்கள் அணியக்கூடாது; அவர்கள் மரங்களின் அடியில் தங்கலாமே யன்றிக் கூரையுள்ள வீடுகளுக்குள் புகவே கூடாது; எந்தப் பிக்குவும் எத்தகைய புலாலையும் உண்ணக்கூடாது; இந்த ஐந்து விதிகளையும் புத்தர் உடனே அமலுக்குக் கொண்டு வரவேண்டும்.

இவைகளில் ஒவ்வொன்றையும் மறுத்துப் போதி வேந்தர் பதிலளித்தார். உடலை மிகவும் வருத்தக்கூடிய தவத்தையும், உலக போகங்களில் ஆழ்ந்திருப்பதையும் மறுத்து, நடுவழியான தருமத்தை அவர் உபதேசித்து வந்ததால், மிகவும் கடுமையான விதிகளை விதிக்க விரும்பவில்லை. ஆரம்பத்தில் ஏற்பட்டிருந்த விதிகளைக்கூட அவர் பின்னால் தளர்த்திவிட்டார். தேவதத்தனுடைய நோக்கம் சங்கத்தில் பிக்குக்களே இல்லாமற் செய்துவிட வேண்டும் என்பது. அதை அறிந்த புத்தர் பெருமான், வயோதிகர்களும், குழந்தைகளும், பெண்களும்கூடச் சங்கத்திலிருப்பதால், எல்லோரும் வனங்களிலேயே இருக்கவேண்டும் என்று

கூறுவது தவறு என்றும், ஊர்களுக்கு அருகே இருந்தால் தான் பிக்குக்கள் அடிக்கடி மக்களுக்கு உபதேசிக்க முடியும் என்றும், விருப்பமுள்ளவர்கள் மட்டும் வனங்களில் வசிக்கலாம் என்றும் கூறினர். இவ்வாறே மற்ற வேண்டுகோள்களையும் அவர் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். புலால் உணவு பற்றி அவர் கூறுகையில், உணவுக்காக உயிர்க்கொலை புரிதல் கூடாது என்றும், ஆனல் மக்கள் அளிக்கும் புலால் உணவுகளைப் பிக்குக்கள் ஏற்றுக்கொள்வதைத் தாம் தடுக்க இயலாது என்றும், பிக்குக்கள் அவர்கள் இருக்கும் பிராந்தியங்களில் ஏற்பட்டுள்ள பழக்க வழக்கங்களின்படி நடந்துகொள்ள அனுமதிக்கப்படுவர் என்றும், எந்த உணவானலும் நாவுக்கு அடிமைப்பட்டிருக்கக் கூடாது என்பதே முக்கியம் என்றும் குறிப்பிட்டார்.

தேவதத்தன் தன்முயற்சியில் தோல்வியுற்றுத் திரும்பி விட்டான். பின்னர், தன்னை விட்டுச் சென்ற துறவிகளைச் சமாதானப்படுத்தி மீண்டும் தன் விகாரைக்கு அழைத்து வந்தான். அந்தத் துறவிகளின் வாழ்க்கை வீணுகாமல் அவர்களை உய்விக்கக் கருதிப் புத்தர் பிரான் சாரீபுத்திரரையும், மௌத்கல்யாயனரையும் அவர்களிடம் அனுப்பி வைத்தார்.

அவர்கள் தேவதத்தனுடைய விகாரைக்குச் சென்ற சமயத்தில், அவன் புத்தரைப் போலப் பாவனை செய்து அமர்ந்துகொண்டு, சீடர்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருந்தான். அவன் அவர்களைப் பார்த்ததும், அவர்களும் தன் கட்சிக்கு வந்துவிட்டதாக எண்ணி, மகிழ்ச்சியுடன் அவர்களை வரவேற்ருன். சிறிது நேரத்திற்குப் பின், அவன் களைப்படைந்திருக்கையில், சாரீபுத்திரர் பிக்குக்களுக்கு உபதேசம் செய்ய ஆரம்பித்தார். சிறிது நேரத்தில் பிக்குக்கள் அனைவரும் அவர் மொழிகளில் ஈடுபட்டுப் புத்தர் பெருமானிடம் பக்திகொண்டனர். இடையில் தேவதத்தன்

களைப்பினால் உறங்கிவிட்டான். அவன் விழித்துப் பார்க்கையில், அங்கு அவனைத் தவிர வேறு ஆளேயில்லை; எல்லோரும் ஜேதவன விகாரைக்குச் சென்றுவிட்டனர்!

தேவதத்தன் வீதிகளிலே சென்று ஐயமெடுக்கவும் வழியில்லை; ஜனங்கள் உணவளிக்க மறுத்ததோடு, அவனுடைய திருவோட்டையும் உடைத்தெறிந்து விட்டனர். அவன் உள்ளமுடைந்து, ஒன்பது மாதம் நோயுற்றுக் கிடந்தான். அக்காலத்தில் அவன் புத்த தேவருக்குத் தான் இழைத்து வந்த கொடுமைகளையெல்லாம் எண்ணி வருந்தினான். பெருமான் எவரிடத்தும் பகைமை கொள்ளாதவர் என்பதால், தன்னிடத்தும் அவர் கருணை காட்டுவார் என்று அவன் கருதினான். அந்த எண்ணத்தோடு அவன் ஐயனைப் பார்க்கவேண்டும் என்று விரும்பினான். அப்போது சிலர் அவனை ஒரு டோலியில் வைத்துத் தூக்கிக்கொண்டு போய் ஜேதவனத்தில் இறக்கினர். அவர்கள் கை, கால்களைக் கழுவிக் கொள்ளச் சென்றிருந்த சமயத்தில், தேவதத்தன் அவசரமாக எழுந்து டோலியிலிருந்து தரையில் காலை வைத்தான். ஐயனை உடனே தரிசிக்கவேண்டும் என்று அவன் உள்ளம் துடித்தது. ஆனால் அவன் கால் வைத்த இடத்தில் பூமி பிளந்து, நெருப்புப் பிழம்பாக எரிய ஆரம்பித்தது. அவனும் அக்கினிப் பிழம்பில் கலந்து வெடிப்பின் வழியே பாதலம் சென்றுவிட்டான்.

பத்தொன்பதாம் இயல்

# கடைசி யாத்திரை

'மாரனை வெல்லும் வீர, நின்னடி,
தீ நெறிக் கடும்பகை கடிந்தோய், நின்னடி,
பிறர்க்(கு) அறம் முயலும் பெரியோய், நின்னடி,
துறக்கம்* வேண்டாத் தொல்லோய், நின்னடி,
எண்பிறக்(கு) ஒழிய இறந்தோய்,† நின்னடி,
கண் பிறர்க்(கு) அளிக்கும் கண்ணோய், நின்னடி,
தீ மொழிக்(கு) அடைத்த செவியோய், நின்னடி,
வாய்மொழி சிறந்த நாவோய், நின்னடி,
நரகர் துயர்கெட நடப்போய், நின்னடி,
உரகர் துயர(ம்) ஒழிப்போய், நின்னடி,
வணங்குதல் அல்லது வாழ்த்தல் என் நாவிற்(கு)
அடங்காது !'

—மணிமேகலை

புத்ததேவரின் சரிதையிலே, அவர் மெய்ஞ்ஞானம் பெற்றபின் இருபத்தோராண்டுகள் வரை—அதாவது அவருடைய ஐம்பத்தாறும் வயது வரையிலுமே—ஓரளவு வாழ்க்கைக் குறிப்புக்கள் தெரிந்திருக்கின்றன. அதன் பின்னர் அவரது எழுபத்தொன்பதாவது வயதுவரை, இருபத்து மூன்று ஆண்டுகளின் சரிதையைப் பற்றி எத்தகைய குறிப்புமே இல்லை. ஆனால் அந்திம காலத்தில் அவர் செய்த யாத்

* துறக்கம் - சுவர்க்கம்; சுவர்க்க வாழ்வும் அழிவுள்ளதென்று புத்தர் அதையும் விரும்பவில்லை.

† எண்பிறக்கு ஒழிய இறந்தோய் - மனிதரால் எண்ண முடியாத அளவு உயர்நிலை அடைந்தோய்.

திரை பற்றியும், மல்லர்கள் வாழ்ந்த குசிநகரில் அவர் முடி வெய்தியது பற்றியும் 'மகா-பரி-நிர்வாண சூத்திர'த்தில்* விவரங்கள் காணப் பெறுகின்றன. தமது இறுதி யாத்திரையில் அவர் பல ஊர்களில் அடியார்களுக்கும் மக்களுக்கும் செய்த உபதேசங்களின் சுருக்கங்களும் அதில் குறிக்கப்பெற்றுள்ளன. அந்தச் சூத்திரத்தை ஆதாரமாகக் கொண்டு புத்தர் பெருமானின் கடைசி யாத்திரையையும், மகா-பரி-நிருவாணத்தையும் நாம் விவரிப்பதற்கு முன்னால், பெருமானின் சிற்றன்னையாகிய கௌதமி அம்மையாரும், வாழ்க்கைத் துணையாக விளங்கிய யசோதரா தேவியாரும் நிர்வாணமடைந்ததைக் குறிப்பிடவேண்டும்.

## அன்னையார்

கௌதமியார் வைசாலி நகரில் நெடுங்காலம் பிக்குணிகளின் தலைவியராயிருந்து புத்தருக்கும், தருமத்திற்கும், சங்கத்திற்கும் அரும்பெரும் பணிகள் ஆற்றிவந்தார். நாள்தோறும் பௌத்த தருமம் வளர்ந்து பிக்குக்களும், பிக்குணிகளும் பல்லாயிரக்கணக்கில் பெருகி வந்ததைப் பற்றி எண்ணி எண்ணி அவர் உள்ளம் பூரித்திருந்தார். தாம் வளர்த்து வந்த தவப்புதல்வர் கோடிக் கணக்கான மக்களின் பிறவிப் பிணிக்கு மருத்துவராக விளங்கியதுடன், தமக்கும் நற்கதியளிக்கும் வழியை உணர்த்தியதற்காக அப்புனிதரை அவர் உள்ளன்போடு வாழ்த்தி வணங்கி வந்தார். ஒரு சமயம் புத்தர் பிரான் வைசாலி நகரில் மகாவனத்தில் அமைந்திருந்த கூடாகார விகாரையில் தங்கியிருக்கையில் சிற்றன்னைகௌதமியார் அங்கே சென்று

* மகா – பரி – நிருவாண சூத்திரம் தீக நிகாயத்திலுள்ளது; இதைப்பற்றி 1838-ல் ஆராய்ந்து எழுதிய டர்னர் என்பார், பௌத்த பிடகங்கள் மூன்றிலும் இதுவே முதன்மையாகக் கவனிக்கத்தக்க கவர்ச்சியுள்ளதாயிருக்கும் என்று குறித்துள்ளார். இதில் பொருள் செறிந்திருப்பதுடன், வரலாற்றுக் குறிப்புக்களும் நிறைந்திருக்கின்றன.

அவுரைத் தரிசித்துவிட்டுத் தமது விகாரைக்குத் திரும்பிச் சென்றார். அப்போது அவர் உள்ளத்தில் தாம் விரைவிலே நிருவாணமடைய வேண்டும் என்ற எண்ணம் சுடர்விட்டு ஒளிர ஆரம்பித்தது.

பெருமானுடைய திருமேனி திடமாயிருக்கும்போதே தாம் முன்னதாக முக்திபெற வேண்டும் என்று அவர் கருதினார். மேலும் புத்தருடைய சீடர்களில் கௌண்டின் யர், சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் முதலியோர் விரை விலே நிருவாணமடையும் நிலையிலிருந்ததை அவர் தமது ஞானதிருஷ்டியால் உணர்ந்திருந்தார். எனவே எல்லோ ருக்கும் முன்னதாகத் தாமே நிருவாணப் பேற்றைப் பெற வேண்டும் என்று ஆவல்கொண்டு, அவர் பெருமானை அணு கித் தமது விருப்பத்தை வெளியிட்டார். ஐயனும் மன உருக்கத்தோடு அதற்கு இசைந்தார். அப்போது அன்னை யார்க்கு வயது நூற்றிருபது என்று இலங்கை வரலாறு களில் காணப்படுகின்றது. அந்த முதுமைப் பருவத்திலும் அவர் நரை, திரை முதலியவையின்றி இளமையோடு இருந்ததாகவும் கூறப்படுகின்றது.

பெண்டிரும் நிருவாணப் பேற்றை எளிதில் அடைய முடியும் என்பதை எல்லா மக்களும் அறிந்துகொள்ளும் பொருட்டுப் போதி மாதவர் தம் அன்னையார் பெற்றிருந்த இருத்தி ஆற்றல்களைக் காட்டும்படி வேண்ட, அவரும் அவ்வாறே ஆகாயத்திற் பறந்து, பல உருவங்களெடுத்துப் பின்பு ஓரே உருவாகிப் புத்தர் புகழை ஓதிக்கொண்டே நிருவாண நிலையை அடைந்தார். அவரைப்போலவே அவ ருடன் தவப்பள்ளியில் தங்கியிருந்த 500 பிக்குணிகளும் நிருவாணமடைந்தனராம்.

## மனைவியார்

யசோதரா தேவியார் தமது எழுபத்தெட்டாம் வயதில் நிருவாண நிலையை அடைந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

புத்தர் அவதரித்த நன்னாளிலேயே அவரும் தோன்றியவ ராதலால், இருவரும் ஒரே வயதினர். பெருமான் ஈராண்டு களில் மகா - பரி - நிருவாணம் எய்துவார் என்பதைத் தேவி யார் அறிந்திருந்ததால், அவருக்கு முன்னதாகத் தாம் நிருவாண மடைதலே முறையென்று கருதினார். போதி வேந்தரும், 'சீலம் நிறைந்த பெண்களில் நீயே முதன்மை யானவள்!' என்று அவரைப் போற்றி அனுமதி அளித் தார். பெருமானும், பிக்குக்களும், ஏராளமான பொது மக்களும் சூழ்ந்திருக்கையில், தேவியார் வானத்தில் எழுந்து தமது இருத்தி ஆற்றலால் சில அற்புதங்கள் செய்து காட்டிவிட்டுத் தமது தவப்பள்ளிக்குத் திரும்பிச் சென்று, தியானத்தில் அமர்ந்து, அன்றிரவே சாந்தி நிலையமாகிய நிருவாண நிலையை அடைந்தார்.

## யாத்திரா மார்க்கம்

போதி நாதரின் கடைசியான புனிதயாத்திரை இராஜ கிருக் நகருக்கு அருகேயிருந்த கிருத்திரகூடம் என்ற கழு குக் குன்றிலிருந்து ஆரம்பமாயிற்று. தலைநகரிலும், அருகாமையிலும் தங்கியிருந்த பிக்குக்களும், சீடர்களும் ஐயனின் அறவுரை கேட்க விகாரையில் வந்து குழுமி யிருந்தனர். பௌத்த சங்கம் நாள்தோறும் வளர்ச்சி பெற்று நிலைநிற்பதற்குரிய முறைகளை யெல்லாம் பெரு மான் திருவாய் மலர்ந்தருளினார். பிக்குக்கள் ஒற்றுமை யோடு அடிக்கடி சங்கத்திற் கூட வேண்டும் என்றும், வயது முதிர்ந்த தேரர்களுடைய வாய்மொழிகளை மற்றவர் கள் மதித்து நடக்கவேண்டும் என்றும் அவர் உபதேசித் தார். ஏகாந்த வாசம், வீண்பேச்சை விலக்கல், மடிமைக்கு இடங்கொடாமை, ஊதியம் தரும் தொழில்களில் ஈடு படாமை, தீய ஆசைகளை அகற்றல், தீவினைகளுக்கு அஞ்சு தல், நிரம்பிய கல்வி, நிறைந்த நம்பிக்கை, தெளிந்த ஞானம், உலைவில்லாத ஊக்கம், சத்திய நாட்டம், நிலை

யாமையை உணர்தல், உள்ளப் பரிசுத்தம், அமைதி, ஆனந்தம், தியானம், அற்பமான பயன்களைக் கருதிப் பேரின்ப லட்சியத்தைக் கைவிடாமை, 'நான்' எனும் அகங்கா ரத்தை ஒழித்தல், சுயநலங்களை அறவே மறத்தல், உயர்ந்த புனிதமான சிந்தனைகளை வளர்த்தல், நிருவாண நிலையின் மேம்பாடு ஆகிய பல பொருள்களைக் குறித்தும் அப்போது அவர் விளக்கியுரைத்தார்.

கழுகுக் குன்றில் அவர் சீடர்களுக்குச் செய்த உபதேசங்களிலும், பின்னால் யாத்திரையில் பல இடங்களிலே ஆற்றிய சொற்பொழிவுகளிலும், பெருமான் ஒரு முக்கியமான கருத்தைத் திரும்பத் திரும்பக் கூறி வந்ததாகக் குறிக்கப்பெற்றுள்ளது. அந்த உயரிய உபதேசம் வருமாறு :

> 'நேர்மையான ஒழுக்கத்தை ஆதாரமாய்க் கொண்டு, சிந்தையை ஒருநிலைப்படுத்தும் சமாதியால் (தியானத்தால்) விளையும் பயன் பெரிது; மகத்தானது. சமாதியை ஆதாரமாய்க் கொண்டு அடையும் ஞானத்தால் விளையும் பயன் பெரிது; மகத்தானது. ஞானத்தால் செம்மையுற்ற உள்ளம் புலன்களின் ஆசைகளிலிருந்தும், "நான்" என்ற அகங்காரத்திலிருந்தும், மயக்கம், அறியாமைகளிலிருந்தும் விடுதலை பெறுகின்றது.'

பிக்குக்கள் நிறைந்த நம்பிக்கையோடு இருக்கவேண்டும்; அவர்கள் இதயத்தில் அடக்கம் நிலைபெற வேண்டும்; பாவத்திற்கு அவர்கள் அஞ்சி ஒதுங்கவேண்டும்; அவர்கள் கல்வி நிறைந்திருக்கவேண்டும்; ஆற்றல் பெறவேண்டும்; உள்ளங்கள் அசைவிலா ஊக்கத்தோடு இருக்கவேண்டும்; அவர்கள் பூரண ஞானம் பெறவேண்டும்—இந்த ஏழு விதிகளின்படி அவர்கள் நடந்து வந்தால்தான் பிக்குக்கள் அழிவுப் பாதையைவிட்டு வளர்ச்சிபெற்று வாழ்வார்கள் என்பதை ஐயன் அவர்கள் மனத்தில் பசுமரத்து ஆணிபோல் பதிய வைத்தார்.

பின்னர் பெருமான் இராஜகிருக நகரிலிருந்து, அடியார்

கள் புடைசூழ, அம்பலத்திகா என்ற கிராமத்திற்குச் சென்று சிறிது காலம் தங்கியிருந்துவிட்டு, நாலந்தா கிராமத்தை அடைந்தார். நாலந்தா தருமசேநாபதியாகிய சாரீபுத்திரருடைய சொந்த ஊர். அங்கே பாவாரிகை என்ற மாந்தோப்பில் அவர் பகவருடன் தங்கியிருந்த சமயத்தில் இருவருக்கும் நிகழ்ந்த உரையாடல் ஒன்று 'மகா - பரி - நிருவாண சூத்திர'த்தில் குறிக்கப்பெற்றுள்ளது. உலகில் தோன்றிய புத்தர்கள் யாவரிலும் கௌதம புத்தரே தலை சிறந்தவர் என்று சாரீபுத்திரர் தம் கருத்தைக் கூறினராம். நிகரற்ற மேதையாயும், சாத்திரக் கடலாயும், சன்மார்க்க சீலராயும் விளங்கிய தருமசேநாபதி கூட அவ்வாறு கூறியது குற்றம் என்று விமலர் எடுத்துக் காட்டினார். ஒரு வாழ்க்கையில் காணும் விஷயங்களைக் கூட முழுவதும் உய்த்துணர முடியாத நிலையில், தொன்மையிலே தோன்றிய புத்தர்கள் அனைவரையும் பற்றி ஒருவர் எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? எனவே பகவர், 'கௌதம புத்தராகிய என்னை யாவது நீ பூரணமாக அறிந்து விட்டாயா?' என்று வினவினார். சாரீபுத்திரர் வெட்கத்தால் தலை வணங்கித் தமது பிழையை உணர்ந்து, தமது குருநாதரையே தாம் முழுதும் தெரிந்துகொள்ளவில்லை என்று ஒப்புக் கொண்டார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின்பு சாரீபுத்திரரைப் பற்றியோ மௌத்கல்யாயனரைப் பற்றியோ 'மகா - பரி - நிருவாண சூத்திர'த்தில் வேறு விவரம் எதுவுமில்லை. ஆயினும் புத்த தேவரின் வலக்கரமாயும், இடக்கரமாயும் விளங்கிய இவ்விரு நண்பர்களும் அவருக்கு முன்பாகவே நிருவாணப் பேற்றை அடைந்து விட்டனர். அந்த விவரத்தை நாம் வேறு வரலாறுகளிலிருந்தே அறிய வேண்டியிருக்கிறது.

நாலந்தாவுக்கு அடுத்தாற்போல் புத்ததேவர் தங்கியிருந்து உபதேசம் செய்த இடம் பாடலிகாமம். இது அக்காலத்தில் 'பாடலி' என்ற சிறு கிராமமாகவே இருந்து வந்தது. பிற்காலத்தில் பாடலிபுரம் (பாடலிபுத்திரா)

என்ற பெருநகராகி, சந்திரகுப்தர், அசோகர் முதலிய சக்கரவர்த்திகளின் சாம்ராஜ்யத்திற்குத் தலைநகரமாயும் விளங்கிற்று. 'பாடலி' என்பது ஒரு மலரின் பெயர் என்பர்; பாடலிபுரத்திற்குக் குஸுமபுரம் (மலர்-நகர்) என்றும் பெயருண்டு. புத்தர் காலத்திலேயே பாடலியில் மகத மன்னர் அஜாதசத்துருவின் ஆணைப்படி பல அரண்கள் கட்டப்பெற்று வந்தன. விரிஜி நாட்டார் மகத நாட்டின் மீது படையெடுத்து வரக்கூடும் என்பதற்காக இவை அமைக்கப் பெற்றனவாம். எதிர் காலத்தில் பாடலி சாம்ராஜ்யத் தலைநகராக விளங்கும் என்பதைப் புத்தர் பெருமானும் அறிவித்திருந்தார்.

பாடலியில் யாத்திரிகர்கள் தங்கும் கிராம விடுதியிலேயே பெருமான் எழுந்தருளியிருக்க ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. அவருடைய விஜயத்தைக் கேள்வியுற்று அந்தப் பகுதியிலிருந்த அடியார்கள் பலரும் திரளாக வந்து குழுமியிருந்தனர். இரவில் நெடு நேரம்வரை போதிநாதர் அவர்களுக்கு அறவுரை புகன்று வந்தார். பின்னால் மகதமன்னரின் பிரதிநிதிகளாக அங்கு வேலை பார்த்து வந்த சுநீதர், வருஷகாரர் என்ற இருவரும் பெருமானை வணங்கி, அவரும் அடியார்களும் தம் அதிதிகளாக வந்து அமுது செய்யவேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அவரும் அதற்கு இசைந்து ஒருநாள் அவர்கள் அளித்த விருந்தினை ஏற்றுக்கொண்டார்.

பாடலியிலிருந்து பெருமான் யாத்திரை தொடங்குகையில், ஏராளமான அடியார்களும், பொதுமக்களும் தொடர்ந்து சென்றனர். வழியில் கங்கை நதியைக் கடந்து அக்கரை செல்லவேண்டியிருந்தது. பெருமானுக்காகப் பல ஓடங்கள் வந்து காத்து நின்றன. ஆயினும் அவர் தமது இருத்தி ஆற்றலால் கங்கைமீது பறந்து சென்றனராம். எந்த ஓடத்தில் ஏறிச் சென்றாலும், மற்ற ஓடக்காரர்கள் மனம் வருந்தக்கூடிய நிலையைத் தவிர்க்கவே அவர் பறந்து சென்றனர் என்று குறிக்கப் பெற்றுளது.

## அம்பபாலி

இதன் பின்னர் பெருமான் கோடிகாமம், நாதிகா என்ற கிராமங்களின் வழியாக விரிஜி நாட்டின் தலைநகரான வைசாலியை அடைந்தார். அங்கே அம்பபாலியின்* மாஞ்சோலையில் அவரும் அடியார்களும் தங்கியிருந்தனர். அம்பபாலி பேரெழிலும் பெருஞ் செல்வமும் பெற்றிருந்த ஒரு கணிகை. பேரரசர்களும், இளவரசர்களும் அவளுடைய புன்னகையை எதிர்பார்த்துப் பொற் காசுகளையும் நகைகளையும் அவள் அடிகளில் வைத்துக் காத்து நிற்பது வழக்கம். பழைய மகத மன்னர் பிம்பிசாரர் மூலம் அவள் புத்த பகவரின் கருணையைப் பற்றியும் பெருமையைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்தாள். பகவரின் அன்பு எவரையும் வசியப்படுத்தி ஆட்கொள்ளும் என்றும், அது சுயநலக் கலப்பில்லாது மன்னுயிர் அனைத்தையும் தழுவிக்கொள்ளும் நீர்மையுள்ளது என்றும், அது வற்றாத கருணை வெள்ளம் என்றும் அம்மன்னவர் விளக்கிக் கூறியதாக ஒரு கதையுண்டு. எனவே அம்பபாலி பெருமானைக் கண் குளிரக் கண்டு வணங்கவேண்டும் என்று அவர் வரவைப் பன்னெடு நாட்களாக எதிர்பார்த்திருந்தாள். அவர் வைசாலி வந்து தனது மாஞ்சோலையிலேயே தங்கியிருப்பதை அறிந்தவுடன், அவள் விரைவாக அங்கே சென்று அவரைத் தரிசிக்க வேண்டுமென்று தன் பணிப்பெண்களுடன் மாளிகையை விட்டுப் புறப்பட்டாள்.

மாஞ்சோலையிலே, பெருமான் பிக்குக்களின் நடுவே அமர்ந்து, கருத்துடைமையைப் பற்றி உபதேசம் செய்து கொண்டிருந்தார். அவருடைய உபதேசங்களிலெல்லாம், 'கருத்தோடிருங்கள்! கருத்தின்மை அழிவிற் கொண்டு சேர்க்கும்; கருத்துடைமை அமர வாழ்வளிக்கும். விழிப்

*வடமொழியில் ஆம்ரபாலி என்று பெயர்; மாஞ்சோலையை ஆம்ர வனம் என்பர்.

போடிருங்கள்! மடிமைக்கு இடம் கொடுக்க வேண்டாம்!' என்ற கருத்தை அடிக்கடி கூறி வற்புறுத்துவது வழக்கம். அப்போதும் அதையே தெளிவுபடுத்திக் கூறினர்: 'ஓ பிக்குக்களே! துறவி கருத்தோடு, விழிப்போடு, இருக்க வேண்டும். துறவி, இவ்வுலகில் இருக்கும்போது உடலின் ஆசையாலும், புலன்களின் வேட்கையாலும், தவருன ஆராய்ச்சியாலும் எழும் துக்கத்தை வெல்லவேண்டும். நீங்கள் எதைச் செய்தாலும் மன உறுதியுடன் செய்யுங்கள். உண்ணல், பருகல், நடத்தல், நிற்றல் முதலியவற்றிலும், உறங்கல் அல்லது விழித்திருத்தல், பேச்சு அல்லது மௌனம் ஆகிய எதிலும் கருத்தோடு நடந்து கொள்ளவும்!'*

மேலும் மெய்ஞ்ஞானம் பெறுவதற்குரிய ஏழு கருவிகளான ஸதி (ஞாபகம்), தரும விசாரம் (திரிபிடக சாத்திர ஆராய்ச்சி), வீரியம் (இடைவிடா முயற்சி), ஆனந்தம் (உள்ளம் இன்பத்தில் திளைத்தல்), சாந்தி (சித்தத் தெளிவால் வரும் அமைதி) சமாதி (சிந்தையை ஒருநிலைப்படுத்தல்), உபட்சை (எதையும் சமமாகப் பாவித்தல்) என்ற 'ஸப்த போத்தியாங்கங்கள் பற்றியும் அவர் விளக்கியுரைத்தார்.

கண்டோர் உள்ளத்தைக் கவரக்கூடிய பேரழகுள்ள தாசி அம்பபாலி அங்கு விரைவிலே வரக்கூடும் என்பதால், பிக்குக்கள் துறவிகளேயாயினும் ஐம்புலன்களையும் அடக்கிக் கொண்டு விழிப்போடு இருப்பதற்காக ஐயன் அந்த நேரத்தில் கருத்துடைமை பற்றியும், உள்ளப் பண்பாடு பற்றியும் எச்சரிக்கை செய்தார் என்று புத்தகோஷர் என்ற உரையாசிரியர் கூறுவர்.

மாஞ்சோலையை அடைந்த அம்பபாலி, சோலையுள்ளே சிறிது தூரம் சென்றதும், தன் வாகனத்தையும், சேடிகளை

---

*மகா – பரி – நிருவாண சூத்திரம்.

யும் ஒருபுறம் நிறுத்திவிட்டு, அறவாழி அந்தணரை நோக்கி நடந்து சென்றாள். அழகு வழியும் வதனமும், இளமை ததும்பும் அங்கங்களும் அவளுடைய பேரெழிலை விளம்பரஞ் செய்து வசீகரித்தபோதிலும், அன்று அவள் மதிப் புயர்ந்த அணிகள், ஆடைகள் எதுவுமின்றித் தூய்மையான எளிய உடையே அணிந்திருந்தாள். அவள் உள்ளத்தில் சாந்தி நிலைத்திருந்தது. பயபக்தியோடு அவள் ஐயன் அமர்ந்திருந்த மரத்தடியை நோக்கி மெல்ல மெல்ல நடந்து சென்றாள்.

தூரத்தில் வரும்போதே அமலர் அவளைக் கண்டு கொண்டார். அவர் பிக்குக்களை நோக்கி, 'ஒரு நுகத்தடியில் பூட்டப் பெற்ற இரு காளைகளாக விளங்குபவை புலன்களும் அவை நாடிச் செல்லும் பொருள்களும். இரண்டையும் குறித்த அளவுக்குக் கட்டுப்படுத்தி வைக்கவேண்டும். கட்டுப்பாடில்லையென்றால், இரண்டுக்கு மிடையே ஆசைகள் வளர ஆரம்பிக்கின்றன. ஏனெனில் இரண்டும் பொருத்தமில்லாதபடி ஒன்றுக்கொன்று மிஞ்சிய காளைகள் ...ஆதலால்தான், "இதயத்தை அடக்கி வையுங்கள், கட்டுப்பாடில்லாமல் அதை விட்டுவிடக்கூடாது" என்று நான் கூறுகிறேன்.'* மன்னர்களோடு மகிழ்ந்து வாழ்ந்து கொண்டிருந்த அம்பபாலி சிந்தை நிறைவுற்றுச் சாந்தி பெற்றுத் திகழ்வதைக் கண்டு அவர் வியப்படைந்தார். இளவயது, பெருஞ் செல்வம், பேரழகு ஆகியவற்றோடு, தன்னைச்சுற்றி நிறைந்திருந்த இன்பங்களில் ஆழ்ந்து திளைத்திராமல், அக் கணிகைமகள், முகத்திலே சிந்தனையைத் தேக்கிக்கொண்டு, உள்ள உறுதியோடு வந்துகொண்டிருந்தாள். 'உலகிலே இது அபூர்வம். பொதுவாகப் பெண்கள் அறிவில் குறைந்தவர்களாயும், ஆடம்பரத்தில் ஆழ்ந்தும் வாழ்ந்து வருகின்

*'ஃபோ — ஷோ — ஹிங் — த்ஸாங் — கிங்' என்ற சீன நாட்டுப் புத்த சரிதை.

றன்ர். ஆனால் இவளோ, செல்வம் கொழிக்கும் நிலையில் வாழ்ந்திருந்தும் ஒரு மேதாவியைப் போன்ற ஞானம் பெற்று, தவத்தில் இன்பம் கண்டு களிப்படைந்து, சத்திய உபதேசத்தை அப்படியே முழுவதும் ஏற்றுக்கொள்ளத் தக்க நற் பாத்திரமாக விளங்குகிறாள் !' என்று பெருமான் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அம்பபாலி அருகே வந்து போதிமாதவரின் பொன்னடிகளை வணங்கி, அவர் குறித்துக்காட்டிய இடத்தில் அமைதியோடு அமர்ந்தாள். அழகும், அறிவும், குணசௌந்தரியமும் பெற்றிருந்த அவளைப் போன்ற ஒரு பெண் தரும உபதேசம் பெற வந்திருப்பது அரியதொரு நிகழ்ச்சி என்று அவர் பாராட்டி, மேலும் சிலவார்த்தைகள் கூறினார் :

'இவ்வுலகில் தோன்றிய ஒரு மனிதன் முறையான சிந்தனையினால் நன்மையிலே திளைத்திருக்க ஆரம்பிக்கிறான். செல்வமும் அழகும் நிலையாமையை அவன் கண்டுகொள்கிறான். தருமமே அவனுக்கு நிகரற்ற அணியாக விளங்குகின்றது.

'ஆசையைத் தூண்டக்கூடிய ஒவ்வொரு விஷயத்தையும் அவன் எப்போதும் ஒதுக்கித் தள்ளி விட்டு, அவாவின்மையால் ஏற்படும் வலிமையைப் பெறுகிறான்.

'வெளி உதவியைச் சார்ந்து நின்றால், அவன் துக்கமே பெறுகிறான் ; தன்னம்பிக்கை கொண்டவுடன், அவனுக்கு வலிமையும் இன்பமும் கிடைக்கின்றன ...'*

சினேந்திரரின் சீரிய சொற்கள் செவிகளில் நுழைந்தவுடனே, அம்பபாலியின் மெய்யறிவு திடம் பெற்றது. அறிவின் உதவியால் அவள் ஆசைகளைத் துறக்க முடிந்தது. உள்ளத்தை விஷமாக்கும் தீய கருத்துக்கள் யாவுமே அவளை விட்டு அகன்று விட்டன. அவள் முகம் ஆனந்தத்தால் மலர்ச்சியுற்றது. அவள் எழுந்து நின்று, 'பகவர்

*'ஃபோ – ஷோ – ஹிங் – த்ஸாங் – கிங்.'

பிக்குக்களுடனே நாளை எனது இல்லத்தில் பிச்சை ஏற்றுக் கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா?' என்று விநயமாக வேண்டினாள். பெருமானும் தமது மௌனத்தினாலேயே அவ்வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். பிறகு அவள் அங்கிருந்து அரிதில் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினாள்.

வழியிலே வைசாலி நகரத்து லிச்சவிகள் என்ற அரச குலத்தைச் சேர்ந்த பிரபுக்களில் முக்கியமானவர்களும் அவர்களுடைய தலைவனும், ஆடம்பரமான ஆடைகளும், அணிகளும் அணிந்து, தங்களுடைய நேர்த்தியான இரதங்களிலே மாஞ்சோலையை நோக்கி வந்துகொண்டிருந்தனர். அம்பபாலியின் இரதம் லிச்சவித் தலைவனுடைய இரதத்திற்கு நேர் எதிராக ஓடிச் சென்றது. அப்போது அத் தலைவன், 'அம்பபாலி, எங்களுக்கு எதிராக நீ இவ்வளவு வேகமாக இரதத்தை ஓட்டிச் செல்வதன் கருத்து என்ன!' என்று வினவினான்.

'பிரபுவே, புத்த பகவரையும் அவருடைய அடியார்களையும் நாளை எனது இல்லத்தில் அமுது செய்யும்படி இப்பொழுதுதான் கேட்டுக் கொண்டு திரும்புகிறேன்!' என்று மறுமொழி கூறினாள் அம்பபாலி.

தங்களுக்கு முன்னதாக ஒரு கணிகை போதி வேந்தருக்கு விருந்தளிக்கும் பெருமையைக் கொள்வதா என்று லிச்சவிகள் மனம் புழுங்கினர். அவர்கள், 'அம்பபாலி, இந்த விருந்தை நாங்கள் அளிக்கும்படி எங்களுக்கு விட்டுக் கொடு—நூறாயிரம்பொன் தருகிறோம்!' என்று வேண்டினர்.

'சீமான்களே! வைசாலி முழுவதையும் அதற்கு உட்பட்ட இராஜ்யத்தையும் கொடுத்தாலும், நான் இத்தகைய பெருமையை விட்டுக் கொடுக்க இயலாது!' என்று கூறி விட்டுப் போய்விட்டாள் அம்பபாலி.

லிச்சவிகள், நேராகச் சென்று ஐயனிருந்த அருந்தவப் பள்ளியை அடைந்தனர். தேவர்களைப் போல் அலங்காரம்

செய்துகொண்டு வந்திருந்த அவர்களைச் சுட்டிக் காட்டி, ஐயன், 'தேவர்களைப் பார்த்திராதவர்கள் இவர்களை இப்போது பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று கூறினார். லிச்சவிகள் அவரை வணங்கிவிட்டு அருகே அமர்ந்து கொண்டனர்.

பகவர் அவர்களுக்கு ஏற்ற அரிய உபதேசங்களைச் செய்தார். செல்வம், ஆபரணங்கள், மலர்மாலைகள், அழகு முதலியவை ஒழுக்கத்தின் எழிலுக்கு இணையாகமாட்டா என்பதை முதற்கண் வற்புறுத்திச் சொன்னார். வைசாலி நாடு இயற்கை வளங்கள் நிறைந்து, செழிப்பும் சாந்தியும் நிறைந்திருப்பினும், மக்கள் இன்பமாகவும் எழிலுடனும் வாழ்வதற்கு உள்ளப் பண்பாடே அவசியம் என்றுகூறினார். சமயவாழ்விலும் பற்று ஏற்பட்டுவிட்டால், அந்த மக்களின் புகழுக்கு ஈடில்லை என்றார். மேலும் அவர் கூறியதாவது :

'பரிசுத்தமான ஒழுக்கத்திலிருந்து சுயமான வீரியம் பிறக்கின்றது ; அதுவே அபாயங்களினின்றும் ஒருவனைக் காக்கும். நாம் பேரின்பத்திற்கு ஏறிச்செல்வதற்கு ஏற்ற ஏணிபோல் தூய ஒழுக்கம் விளங்குகின்றது.......

'முதலாவதாக "நான்" என்ற அகங்காரமுள்ள கருத்து ஒவ்வொன்றையும் அகற்றிவிடவேண்டும். நெருப்பை நீறு மறைத்திருப்பது போல் அகங்கார எண்ணம் ஒவ்வோர் உயரிய இலட்சியத்தையும் மறைத்துவிடுகின்றது; சாம்பரை மிதித்த பாதத்தை உள்ளேயுள்ள நெருப்பு சுட்டுவிடுகின்றது.

'நல்லொழுக்கத்தையும் புண்ணியத்தையும் இழந்தால், நாம் வருந்த நேருகின்றது ; அவ்வாறு இழப்பதற்கு முழுவதும் காரணமாயுள்ளது "நான்" என்ற அகந்தையே. (வாழ்வில்) வெற்றியடைந்தவர்களிடையே நான் சிரேஷ்டனாயுள்ளேன் ; எனவே, தன்னைத்தான் அடக்கி வெற்றி கொள்ளும் ஒவ்வொருவனும் என்னோடு சேர்ந்தவனாவன்.

'அவா என்பதே துக்கத்திற்கு முதன்மையான காரணம்; அது நமது நண்பனைப்போல இருந்து, அந்தரங்கத்தில் நம்மை உறவாடிக் கெடுக்கும் பகையேயாகும்.

'ஆகவே, முதலாவது நமக்குத் தேவையானது "ஸம்மா திருஷ்டி" (என்ற நற்காட்சி). ஐயம், திரிபுகளுள்ள கொள்கைகளை நீக்கி, உண்மையைக் கண்டு கொள்ள அதுவே உதவியாகும். அதன் பின்பு அவாவின் பிடியிலிருந்து விடுதலை பெறுதல் எளிது......'

அமலர் அருளிய அரிய வாசகங்களால் லிச்சவிகளின் உள்ளங்களில் எழுச்சியும் மகிழ்ச்சியும் தோன்றின. அவர்கள் எழுந்து நின்று வணங்கி,மறுநாள் பெருமானும் பிக்குக்களும் தங்கள் இடத்திற்கு வந்து விருந்துண்ணவேண்டும் என்று கேட்டுக்கொண்டனர்.

'லிச்சவிகளே! கணிகை அம்பபாலியுடன் நாளை விருந்துண்ண வாக்களித்துள்ளேன்!' என்று பெருமான் கூறியதும், அவர்கள் ஒரு வேசிப் பெண் தங்களை எளிதில் வென்று விட்டதை எண்ணி வருந்தினார்கள். பிறகு விடைபெற்றுக் கொண்டு, அவர்கள் தத்தம் இடத்திற்குச் சென்றார்கள்.

மறுநாள் காலையில் அம்பபாலி தனது மாளிகையில் மாதவர்க்கு ஏற்ற நல் விருந்து தயாரித்து, ஐயனையும் அடியார்களையும் அழைத்து வந்து, அன்போடு உபசரித்தாள். அவர்கள் 'போதும்! போதும்!' என்று தடுக்கும் வரை அக்காரவடிசிலும் பணிகாரங்களும் பரிமாறப்பட்டன. விருந்துக்குப் பின்னால், அம்பபாலி பகவரின் பக்கத்திலிருந்துகொண்டு, 'தேவா! புத்ததேவரைத் தலைவராய்க் கொண்ட பிக்குக்களின் சங்கத்திற்கு நான் இந்த மாளிகையைத் தத்தம் செய்கிறேன்!' என்று கூறித் தான் வசித்து வந்த மாபெரும் மாளிகையையும் தானம் செய்துவிட்டாள். குருதேவரும் அதை ஏற்றுக்கொண்டு, அவளுக்கு உறுதுணையாக விளங்கக்கூடிய அறவுரைகள் புகன்று, அரிதில் விடைபெற்றுக்கொண்டு வெளியேறினார்.

## பெலுவம்

அம்பபாலியின் ஆம்ரவனத்திலே தாம் விரும்பிய காலம் வரை தங்கியிருந்துவிட்டுப் பெருமான் அடுத்தாற்போல் வைசாலிக்கு அருகேயிருந்த பெலுவம் என்னும் ஊருக்குச் சென்றார். பெரும்பாலான அடியார்களைத் தலைநகருக்கு அருகே பல இடங்களில் தங்கியிருக்கச் சொல்லிவிட்டு அவர் மட்டும் மாரிக்காலம் முழுவதும் அந்தக் கிராமத்திலேயே வசித்திருந்தார். அப்போது அவர் மெய்ஞ்ஞானம் பெற்று நாற்பத்தைந்து ஆண்டுகளாயின. அவருடைய கடைசி வருஷா காலத்தை அவர் பெலுவத்திலேயே கழித்தார்.

அங்கே அவருக்குத் திடீரென்று கடுமையான நோய் தோன்றியது. கொடிய வேதனைகளால் மரணமும் நேரக் கூடிய நிலை ஏற்பட்டது. எனினும் அவர் எல்லையற்ற அடக்கத்துடன் எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டார். சங்கத்தைச் சேர்ந்த அடியார் பலரையும் சந்தித்து, இறுதியாக அவர்களுக்கு உபதேசம் செய்யாமல் உலக வாழ்வை நீத்தல் உசிதமில்லை என்று கருதியதால், ததாகதர் தமது உள்ள வலிமையையெல்லாம் ஒருங்கே திரட்டிக்கொண்டு அப்போதிருந்த நிலையில் நோயை அடக்கி, மரணத்தை வென்றுவிட்டார்.

விரைவிலே உடல் நலமடைந்து வந்தது. ஒருநாள் பெருமான் தாம் தங்கியிருந்த தவப்பள்ளிக்குப் பின்புறத்திலே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அணுக்கத் தொண்டர் ஆனந்தரும் அங்கேபோய் வணங்கி விட்டு, அருகே ஓரிருக்கையில் அமர்ந்தார். அவர் பெருமான் நோயுற்று வருந்திய சமயத்தில் தாம் அடைந்த மனவேதனையை விவரித்துக் கூறி, ஐயன் நெடுநாள் வாழ்ந்திருக்கவேண்டுமென்றும், அடியார்களுக்கு மேலும் அவசியமான உபதேசங்களைச் செய்ய வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டார்.

அதைக் கேட்ட பகவர், 'ஆனந்தா, சங்கம் இன்னும் என்னிடம் என்னதான் எதிர்பார்க்கின்றது? சாதாரண மாணவர்களுக்கு என்றும், பயிற்சிபெற்ற அந்தரங்க சீடர்களுக்கு என்றும், தருமத்தில் வேற்றுமையில்லாமலே, எல்லோருக்கும் பொதுவாகவே, நான் தருமப் பிரசாரம் செய்துள்ளேன். ஆனந்தா, சில விஷயங்களைக் கூறாமல் "ஆசாரிய முஷ்டி"* என்று தருமசம்பந்தமாக நான் எதையும் மறைத்துவைத்துக் கொள்ளவில்லை!' என்று கூறினார். சங்கத்தைத் தாமே தலைமை தாங்கி நடத்திவர வேண்டுமென்றோ, சங்கம் தம்மையே தாரகமாகக்கொண்டதென்றோ ஒருவர் கருதினால், அவரே சங்க சம்பந்தமான சகல விதிகளையும் விதிக்கவேண்டுமென்றும், ஆனால் ததாகதரென்ற முறையில் தாம் அவ்வண்ணம் கருதவில்லையென்றும் அவர் தெளிவாக்கினார்.

மேலும் அவர் கூறியதாவது :

'பின் எதற்காகச் சங்க சம்பந்தமான எந்த விஷயத்தைப்பற்றியும் ததாகதர் போதனைகள் கூறிவைக்க வேண்டும்?

'ஓ ஆனந்தா! எனக்கும் வயதாகின்றது; இப்போது முதுமையடைந்துவிட்டேன்; எனது யாத்திரையின் முடிவு நெருங்கியுள்ளது; நான் வாழவேண்டிய நாட்கள் வாழ்ந்தாகிவிட்டது; எனக்கு எண்பதாவது வயது நிறைகின்றது.

'தேய்ந்து ஆடிப்போன வண்டியை அதிகக் கவனத்துடன் பாதுகாத்தால்தான் அதை ஓடும்படி செய்யலாம்; அதுபோலவே ததாகதருடைய உடலையும் அதிகக் கவனத்துடன் பாதுகாத்தால்தான் இயங்கிக்கொண்டிருக்கும்படி செய்ய முடியும் என்று நான் கருதுகிறேன், ஆனந்தா!

---

*ஆசாரிய முஷ்டி - ஆசாரியர் வெளியிடமால் கைப்பிடியில் மறைத்து வைத்துக் கொள்ளும் தத்துவம் (முஷ்டி - கைப்பிடி, விரல்களை முடக்கிய கை.)

"ஆனந்தா! வெளியேயுள்ள பொருள் எதையும் பற்றிக் கவனியாமல், (புலன்களின் மூலம் ஏற்படும்) உணர்ச்சிகளையும் விட்டு, உலகப் பொருள் எதிலும் சம்பந்தமில்லாத தியானத்தில் ஆழ்ந்திருக்கும்போதுதான், ததாகதர் நிம்மதியாக இருக்கிறார்.'

சங்கத்தின் சார்பாக ஆனந்தரை முன்னிலையில் வைத்துக்கொண்டு பெருமான் தொடர்ந்து பேசலானார். மெய்ப்பொருளில் நாட்டமுடையோர் யாவர்க்கும், எக்காலத்தும், உறுதிபயக்கும் வண்ணம் அவர் கூறிய திருவாசகங்கள் வருமாறு:

'ஆதலால், ஆனந்தா, உங்களுக்கு நீங்களே தீபங்களாயிருங்கள். உங்களுக்கு நீங்களே அடைக்கலமாயிருங்கள். வெளியில் எத்தகைய அடைக்கலத்தையும் நாடாதீர்கள்!

'சத்தியத்தையே தீபமாக உறுதியுடன் பற்றிக்கொள்ளுங்கள். சத்தியத்தையே அடைக்கலமாக உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள். உங்களைத் தவிர வேறு சரணடைய வேண்டிய எவரையும் நாடவேண்டாம்!

'ஆனந்தா! ஒரு பிக்கு தாமே தமக்குத் தீபமாயும், தாமே தமக்கு அடைக்கலமாயும், வெளியே அடைக்கலம் தேடாமல், சத்தியத்தையே தீபமாகப் பற்றிக் கொண்டும், தம்மைத் தவிர வேறு எவரையும் அடைக்கலமாக்க் கொள்ளாமல் இருப்பது எப்படி?

'ஆனந்தா! ஒரு பிக்கு உடலோடு வாழும் காலத்தில் இடைவிடாத முயற்சியுடனும், கருத்துடனும், உறுதியுடனும், தாம் உலகில் இருக்கும்போதே, உடலின் ஆசைகளிலிருந்து தோன்றும் துக்கத்தை வெல்லத்தக்க முறையில் உடலைப் பற்றிப் பாவனை செய்துகொள்ள வேண்டும்.

'அவ்வாறே, அவர் சிந்தனை செய்யும்போது, அல்லது ஆராயும்போது, அல்லது உணரும்போது, இடைவிடாத முயற்சியுடனும், கருத்துடனும், உறுதியுடனும், தாம் உலகில் இருக்கும்போதே, சிந்தனைகள், ஆராய்ச்சி, அல்லது உணர்வு காரணமான அவாவிலிருந்து தோன்றும் துக்கத்தை

வெல்லத்தக்க முறையில் சிந்தனைகளைப் பற்றிப் பாவனை செய்துகொள்ள வேண்டும்.

'ஆனந்தா! என் பிக்குக்களிடையே இப்பொழுதோ, அல்லது நான் மரித்த பிறகோ, எவர்கள் தமக்குத்தாமே தீபமாயும், வெளியே எவ்வித உதவியும் தேடாமல், தமக்குத் தாமே அடைக்கலமாயும், சத்தியத்தையே தீபமாகப் பற்றிக்கொண்டும், சத்தியத்தையே தமது அடைக்கலமாகப் பற்றிக்கொண்டும், தம்மைத் தவிர வெளியே எவரிடமும் அடைக்கலத்தை நாடாமலும் இருக்கின்றார்களோ, அவர்களே (இலட்சிய) சிகரத்தை அடைவார்கள். ஆனால் அவர்கள் கற்கவேண்டியதில் ஆர்வத்தோடு இருக்க வேண்டும்!'

## வைசாலி

மறுநாள் அதிகாலையில் புத்த தேவர் மடியான சீவர உடையணிந்து, திருவோடேந்திக்கொண்டு, ஐயம் ஏற்பதற்தாக வைசாலி நகருக்குச் சென்று திரும்பினார். அன்று உணவருந்திய பின்னர் அவர் ஆனந்தரை அழைத்து, 'ஆனந்தா, பாயை எடுத்துக்கொள்! இன்றைப் பொழுதை நான் சாபால சேதியத்தில் கழிக்க விரும்புகிறேன்' என்று சொன்னார். ஆனந்தர் அவ்வண்ணமே பாயை எடுத்துக்கொண்டு, ஐயனுக்குப் பின்னால் அடிமேல் அடிவைத்துத் தொடர்ந்து சென்றார்.

சாபால சேதியத்தில் பெருமான் பாயின்மீது வீற்றிருக்கையில், ஆனந்தரும் அருகே அமர்ந்திருந்தார். அப்பொழுது 'வைசாலி எவ்வளவு அழகான இடம், ஆனந்தா! உதான சேதியம், கோதம சேதியம், சத்தம்பக சேதியம், பகுபுத்த சேதியம், சாரந்தத சேதியம், சாபால சேதியம் எல்லாம் எவ்வளவு இன்பமானவை!' என்று, இயற்கையழகும் செயற்கையழகும் சிறந்து விளங்கிய விரிஜி நாட்டின் தலைநகரைப் பகவர் பாராட்டிப் பேசினார்.

பின்னர், அருகத்து நிலையை அடையவேண்டும் என்ற

இலட்சியத்தை மேற்கொண்ட ஒருவர் அதற்குரிய சிரத்தை, வீரியம், சித்தம், மீமாம்சை* ஆகிய நான்கு 'இருத்தி பாதங்கள்' என்ற வழிகளில் இடைவிடாது ஒழுகி வந்தால் என்ன பயன் விளையும் என்பதுபற்றி அவர் எடுத்துரைத்தார். அந்த நால்வகை இருத்தி ஆற்றல்களும் கைவரப் பெற்று, அவற்றை ஒரே சாதனமாக்கி, அந்தச் சாதனத்தை உபயோகித்துக்கொள்ளும் பயிற்சி பூரணமாக ஏற்பட்டுள்ள ஒருவர், தாம் விரும்பினால், உலகில் கற்பகாலம் வரை வாழ்ந்திருக்க முடியும் என்றும், ததாகதராகிய தாம் அத்தகைய வல்லமை பெற்றிருப்பதால் தாம் விரும்பினால், அவ்வாறு வாழ்ந்திருக்க முடியும் என்றும் பெருமான் கூறினார்.

ஆனந்தருக்கு எப்பொழுதுமே புத்த தேவர் உலகில் உயிரோடு உலவி வரவேண்டும் என்ற ஆவலுண்டு. எனவே அவர் பெருமானைப் பார்த்து, உலக மக்கள், தேவர்கள் யாவருடைய நலனுக்காகவும் ததாகதர் உலக முடிவு (கற்பம்)வரை வாழ்ந்திருக்க வேண்டும் என்று வேண்டினார். பெருமான் தாம் கூறியதை மீண்டும் மும்முறை திரும்பக்கூறியும், ஆனந்தர் அவர் திருவுளத்தை உணர்ந்து கொள்ள முடியவில்லை. எனவே அவர் ஆனந்தர் தம்மை விட்டு அகன்று சென்று தமக்கு உசிதமான வேலையைக் கவனிக்கும்படி சொன்னார். ஆனந்த தேரரும் அவ்வாணைப் படியே எழுந்து நின்று வணங்கிவிட்டுப் பிரிந்து சென்று,

---

*சிரத்தை - இலட்சியத்தை அடைய வேண்டும் என்ற தீவிர ஆர்வம் முதலில் வேண்டும்.

வீரியம் - இடைவிடாத முயற்சி வேண்டும்.

சித்தம் - தீய சிந்தனைகள் யாவும் அகன்று, சித்தம் பரிசுத்தமாக வேண்டும்.

மீமாம்சை - தாம்கொண்ட முடிவுகள் சரியானவையா என்று பகுத்தறிந்து பார்க்கும் ஆராய்ச்சி வேண்டும்.

சிறிது நேரத்திற்குப்பின் ஒரு மரத்தடியிற்போய் அமர்ந்து கொண்டார்.

அந்தச் சமயம் பார்த்துச் சிலவிரோதியாகிய மாரன் பகவரண்டையில் வந்து, அவர் உலகைப் பிரியவேண்டிய காலம் வந்துவிட்டது என்று ஞாபகப்படுத்தினன். பகவர் ஏராளமான பிக்குக்களைச் சீடர்களாகப் பெற்று, அவர்கள் தருமத்திலும் விநய விதிகளிலும் ஊறித் திளைக்கும்படியும், தருமத்தின் உதவியால் தவருன கொள்கைகளையும் சித்தாந்தங்களையும் பரிசிலனை செய்து ஒதுக்கித் தள்ளிவிட்டு உண்மையான மார்க்கத்தை அவர்கள் எங்கும் உபதேசம் செய்யும் வல்லமை பெறும்படியும் செய்து, பௌத்த தருமத்தை உலகிலே நிலைநிறுத்திய பின்பு பூத உடலை நீத்துவிடுவதாக முன்பு தன்னிடம் கூறியிருந்ததையும் அவன் எடுத்துக் காட்டி, 'இப்போது தாங்கள் எண்ணிய படியே எல்லாம் நிறைவேறிவிட்டனவே!' என்று கூறினன்.

'மாரனுடைய மாற்றத்தைக் கேட்டதும், பெருமான், 'தீவினையாள, பொறுமையோடிரு! ததாகதர் மகா-பரி-நிருவாணமடைதல் நெடுந்தூரத்திலில்லை. இப்போதிலிருந்து மூன்று மாதங்கள் முடிந்ததும் ததாகதர் மகா-பரி-நிருவாண மடைவார்!' என்று பகர்ந்தார்.

இவ்வாறு பெருமான் தாம் நெடுங்காலம் வாழ்ந்திருக்கக் கூடிய எஞ்சிய வாழ்வு வேண்டாமென்று துறந்துவிட்டார். அந்த நேரத்தில் பூமியதிர்ச்சி உண்டாயிற்று; பயங்கரமான இடியும் இடித்தது. மாரனும் மறைந்தான்.

'முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்பட்டுச் செல்வது போல நான் விடுதலை பெற்றுச் செல்கிறேன். எனக்குரிய வாழ்நாளை நான் தியாகம் செய்துவிட்டேன்; இனிமேல் நான் சமாதியின் சக்தி கொண்டு வாழ்வேன். என் உடல் பழுதுபட்ட இரதம் போல நிற்கின்றது. இனி "வருதல்",

"போதல்" ஆகியவைகளுக்குரிய காரணம் யாதுமில்லை!* என்று பெருமான் அப்போது உலகுக்கெல்லாம் பொதுவாக அறிவித்தார்.

உலகின் உற்பாதங்களைக் கண்டு ஆனந்தர் அறவாழி அந்தணரை அணுகியபோது, அவர் மாரனுக்கும் தமக்கும் நிகழ்ந்த உரையை அறிவித்தார். மேலும் ததாகதர் சம்பந்தமாகப் பூகம்பங்கள் எவ்வெப்போது ஏற்படுகின்றன என்பதையும் விளக்கிக் கூறினர். ஆனந்தர் ஐயனுடைய முடிவான தீர்மானத்தை அறிந்து, அவர் அதனை மாற்றிக் கொண்டு உலகமுள்ளவரை இருக்க வேண்டுமென்று மன்றாடினர்.

'போதும், ஆனந்தா! ததாகதரிடம் அதைக் கேட்காதே. ததாகதரிடம் அதை வேண்டிக்கொள்ளும் காலம் கடந்துவிட்டது, ஆனந்தா!' என்று போதிவேந்தர் மறுத்து விட்டார்.

உள்ளன்போடு உருகிநின்ற ஆனந்தர் ஒருகணமேனும் பெருமானின் பிரிவை எங்ஙனம் சகித்திருக்கமுடியும்? அவர் மீண்டும் இருமுறை வேண்டிப் பார்த்தார். 'ததாகதரின் ஞானத்தில் உனக்கு நம்பிக்கையில்லையா?' என்று கேட்டார் பகவர். சிறிது நேரத்திற்கு முன்னர் இருத்தி பாதங்கள் நான்கும் கைவரப்பெற்றவர், தாம் விரும்பினுல், கற்பகாலம் வரை வாழ்ந்திருக்க முடியும் என்று பெருமான் அருளிய வாய்மையை ஆனந்தர் எடுத்துக் காட்டினர். அவர் தமது உள்ளக்கிடையை அறிந்துகொள்ளாமைக்குப் பெருமான் வருந்தினர்.

'ஆனந்தா! ததாகதரின் ஞானத்தில் உனக்கு நம்பிக்கையிருந்தால், மூன்று முறைகளாகத் ததாகதரை நீ சிரமப்படுத்துவானேன்? நமக்குப் பிரியமான சகல பொருள்களையும் நாம் விட்டுப் பிரிந்து செல்லத்தான் வேண்டும்

---

*'ஃபோ — ஷோ — ஹிங் — த்ஸாங் — கிங்.'

என்பது இயற்கை என்பதை உனக்கு நான் முன்பு தெரி விக்கவில்லையா? உலகில் பிறந்துள்ள, அல்லது தோற்று விக்கப்பட்ட, (ஸ்கந்தங்களாக) ஒன்று சேர்க்கப்பட்ட ஒவ் வொரு பொருளும் தானே உலேந்து மறையக் கூடிய இயற் கையைத் தன்னுள்ளே பெற்றிருக்கையில், ஆனந்தா, நான் எப்படி (உடலோடு) இருக்கமுடியும்? எனவே என்னு டைய இந்த உடல் மட்டும் உலேயாமல் இருப்பது எப்படி முடியும்? அத்தகைய நிலேமை இருக்கமுடியாது! ஆனந்தா! அநித்தியமான வாழ்வு வேண்டாமென்று ததாகதர் உதறி விட்டார்; தியாகம் செய்துவிட்டார்; மறுத்துவிட்டார், தள்ளிவிட்டார்!' என்று பகவர் மீண்டும் விளக்கிச் சொன் ஞர்.

இதற்குப் பின்பு பெருமானும் ஆனந்தரும் மகாவனத்தி லிருந்த கூடாகார விகாரைக்குச் சென்றனர். வைசாலியைச் சுற்றிச் சமீபத்தில் வசித்து வந்த பிக்குக்கள் யாவரும் அங்கு வந்து கூடினர். பெருமான் ஒரு பாயின் மீது எழுந்தருளி யிருந்து, அவர்களுக்கு உபதேசம் செய்தார்.

'ஓ பிக்குக்களே! உங்களுக்குத் தருமத்தைப் பற்றித் தெளிவாக அறிவிக்கப்பட்டிருக்கின்றது. அதை நீங்கள் (ஐயம்-திரிபு இல்லாமல்) பூரணமாகத் தெரிந்துகொண்டு, அதை அனுஷ்டிக்கவும்! அதைப்பற்றித் தியானம் செய்ய வும்! உண்மையான சமயம் நெடுங்காலம் நிலேத்திருப்பதற் காகவும், பெருங் கூட்டமான மக்களுக்கு நன்மையும் இன்ப மும் ஏற்படும்படியும், உலகின்மீது இரக்கம் கொண்டும், உயிர் படைத்த சகல ஜீவராசிகளின் நன்மைக்காகவும், ஆதாயத்திற்காகவும் தருமம் நீடித்து நிலேபெறுவதற்காக அதை வெளியே பரவச் செய்யுங்கள்!

'ஓ பிக்குக்களே, வாருங்கள்! உங்களுக்கு மீண்டும் நினேவுறுத்துகிறேன்: ஒன்ருகச் சேர்க்கப்பெற்ற பொருள் கள் (பஞ்ச பூதங்களின் கலப்பால் தோன்றுபவை) யாவும் அழியும் தன்மையுள்ளவை. நீங்கள் கருத்தோடு முக்திக்கு

வழி தேடுங்கள்! ததாகதர் முற்றிலும் மறைவதற்கு இன்னும் அதிக காலமில்லை. இதிலிருந்து மூன்று மாதங்கள் கழிந்ததும் ததாகதர் முற்றிலும் மறைந்து விடுவார்!'

போதியடைவதற்குரிய முப்பத்தேழு தத்துவங்களையும் பெருமான் அந்தக் கூட்டத்தினர்க்கு நினைவுறுத்தினார். அவர் தமது தருமத்திற்குரிய—தாமே கண்டுணர்ந்த—அவ்வாய்மைகளை முன் பலமுறை கூறியது போல் மீண்டும் வகைப்படுத்திக் கூறினார். நான்கு சதிப்பிரஸ்தானங்கள், நான்கு சம்யக் பிரதானங்கள், நான்கு இருத்தி பாதங்கள், ஐந்து இந்திரியங்கள், ஐந்து பவங்கள், ஏழு போத்தியாங்கங்கள், அஷ்டாங்க மார்க்கம் என்ற எட்டு முறைகள்* ஆகியவற்றை அவர் விளக்கினார். முடிவாக, அவர் கூறியதாவது :

'என் ஆயுள் பூர்த்தியாகிவிட்டது; என் வாழ்வு அதன் இறுதிக் கட்டத்தை நெருங்கியுள்ளது; நான் உங்களை விட்டுப் பிரிகிறேன்; என்னையே நான் துணையாய்க் கொண்டு செல்கிறேன்! ஓ பிக்குக்களே, கருத்தோடிருங்கள்! புனிதமாயிருங்கள்! சிந்தனை நிறைந்திருங்கள்! செய்துகொண்ட முடிவில் உறுதியுடன் நில்லுங்கள்! உங்களுடைய சொந்த இதயங்களையே நன்றாகக் கண்காணித்து வாருங்கள்! எவர்கள், சலனமடையாமல், சத்தியத்தையும் தருமத்தையும் பற்றுகிறார்களோ, அவர்கள் வாழ்க்கைக் கடலைத் தாண்டி விடுவார்கள்! துக்கத்திற்கு முடிவு கட்டிவிடுவார்கள்!'

பின்னர், லிச்சவிகள் பலரும் வந்து ஐயனைத் தரிசித்து ஆசி பெற்றனர். அப்போது பெருமான், 'சூரியனும், சந்திரனும், எல்லாமும் அழியக்கூடியவையே. எல்லாப் புத்தர்களும், எதிர்காலப் புத்தர்களும் அழிவுறக்கூடியவர்

* இவற்றின் விவரங்களை 'அஷ்டாங்க மார்க்கம்' என்ற பகுதியிலே (இயல் : 9, 10) காண்க.

கள். நானும் நிருவாண மடைந்து விடுவேன்......கதிரவன் மேற்கு மலைகளில் ஏறிச்செல்வதுபோல, மேல் நோக்கிச் செல்லும் (தருமப்) பாதையில் அடிமேல் அடியாக முன் னேறிச் செல்லுங்கள் !' என்று உபதேசித்தார். லிச்சவிகள் மிகுந்த துயருற்று, 'அந்தோ ! பரிசுத்தமான பொன் மலை போல விளங்கிவந்த பெருமானின் திருமேனி விரைவிலே சாய்ந்துவிடுமே ! புனிதமும் அழகும் நிறைந்து வானளாவிப் பறந்து கொண்டிருந்த அருட் கொடி அற்று விழுந்து விடுமே!' என்று கதறினர்.

ஒருநாள் காலையில் பெருமான் வைசாலி நகரில் பிச்சை யெடுத்துவந்து உண்ட பின்பு, யானை திரும்பிப் பார்ப்பது போல, நகரை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார். அப்போது அவர் ஆனந்தரை நோக்கி, 'ஆனந்தா ! ததாகதர் வைசாலி யைப் பார்த்தல் இதுவே கடைசி முறையாகும். இனி, ஆனந்தா, நாம் பண்டகாமாவுக்குச் செல்வோம்!' என்றார்.

## பண்டகாமா

அவ்வாறே அவர்களும் அடியார் பலரும் பண்டகாமா வுக்குச் சென்றனர். அங்கே பெருமான் பிக்குக்களுக்கு நால் வகை வாய்மைகளை விளக்கிக் கூறினர். பின்னர் அங் கிருந்து ஹத்திகாமா, அம்பகாமா, ஜம்புகாமா ஆகிய ஊர்களில் சிலநாள் தங்கியிருந்துவிட்டு, அவர்கள் போக நகரத்தை அடைந்தனர். எல்லா ஊர்களிலும் வழக்கம் போல் பிக்குக்களுக்கு ஐயன் உபதேசம் செய்தார். போக நகரில் ஆனந்த சேதியத்தில் நிகழ்த்திய சொற்பொழி வில் பிக்குக்களில் எவர் எது சொன்னாலும், அது ததாகத ருடைய வாய்மொழிதானா என்பதையும், அவருடைய முந் திய நியமங்களுக்கும் சூத்திரங்களுக்கும் அது பொருத்தமா யுளதா என்பதையும் ஆராய்ந்து பார்த்தே அதை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று அவர் கூறினர். தமக்குப் பின்னால் அடியார் அனைவரும் தருமத்தையே துணையாகக்

கொள்ளவேண்டும் என்றும், விநய விதிகளுக்கு முரண்பாடானவைகளை விலக்கி ஒதுக்குதல் வேண்டும் என்றும் அவர் வற்புறுத்திச் சொன்னார்.

## சந்தனின் விருந்து

அந்த யாத்திரையிலே அடுத்தாற்போல் பகவர் தங்கிய இடம் பாவா நகரில் ஒரு மாஞ்சோலை. அது சந்தன் என்னும் சீடனால் சங்கத்திற்கு அளிக்கப்பெற்ற தோட்டம். சந்தன் ஒரு பொற்கொல்லன்; பெருமானிடம் பேரன்பு கொண்டவன். ஐயன் எழுந்தருளிய செய்தியைக் கேட்டதும், அவன் ஆர்வத்தோடு சென்று அவரை வணங்கி. உபதேசம் பெற்றான். முடிவில் மறுநாள் தேவர் அடியார் திருக்குழாத்துடன் தனது இல்லத்தில் பிச்சை யேற்றருள வேண்டும் என்று அவன் வேண்டினான். பெருமானும் மௌனமாக அவ்வேண்டுகோளை ஏற்றுக்கொண்டார், வந்ததுபோலவே வணக்கம் செய்துவிட்டுச் சந்தன் விடை பெற்றுச் சென்றான்.

மறுநாள் பகலில் சந்தன் சர்க்கரைப் பொங்கல், பண்டங்கள், பணிகாரங்கள் முதலியவற்றோடு, உலர்த்தி வைத்த பன்றி இறைச்சியும் சமைத்து வைத்திருந்தான். பெருமான் அவன் வீட்டுக்கு வந்து அமர்ந்த பின்பு, அவனை அழைத்து, 'சந்தா! நீ தயாரித்துள்ள உலர்ந்த பன்றி இறைச்சியை எனக்கு மட்டும் படைக்கவும். மற்ற அரிசிப் பொங்கல், பணிகாரங்கள் முதலியவற்றைப் பிக்குக்களுக்குப் படைக்கவும்' என்று சொல்லிவைத்தார். உணவருந்திய பின்னும் அவர் பக்தனை அழைத்து, 'சந்தா! உன்னிடம் எஞ்சியுள்ள உலர்ந்த பன்றி இறைச்சி முழுவதையும் ஒரு புழையில் கொட்டி மூடிவிடவும். என்னைத் தவிர வேறு எவரும் அதை உண்டு ஜீரணித்துக்கொள்ள இயலாது!' என்றும் கூறினராம். சந்தன் ஐயனுடைய ஆணைப்படியே செய்துவிட்டுத் திரும்பிவந்து, அவர் அருகே

அமர்ந்திருந்து, மீண்டும் உபதேசம் பெற்ருன். பிறகு ஐயன் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு சீடர்களுடன் வெளியே சென்ருர்.

சந்தன் அளித்த உணவே பெருமான் பூவுலகில் புசித்த கடைசி உணவாகும். அன்று உணவருந்தியதிலிருந்தே அவருக்குக் கடுமையான சீதபேதி ஏற்பட்டது. அன்பன் ஆர்வத்தோடு அளித்த உணவினுல் அவருக்கு நோயும் மரணமும் நேர்ந்தன என்று உலகில் எவரும் கருதவேண்டாம் என்றும், சந்தனும் அதை எண்ணி வருந்தலாகாது என்றும் பெருமானே பின்னுல் ஆனந்தரிடம் கூறியுள்ளார்.

பெருமான் சந்தனுடைய வீட்டில் அருந்தியது உலர்ந்த பன்றி இறைச்சிதாஞ என்பதே சந்தேகமாயுள்ளது. பாலி மொழியிலும் வடமொழியிலுமுள்ள விவரங்களிலிருந்து மொழிபெயர்த்தவர்கள் மூலத்தின் சொற்களை மாற்றிப் பொருள்கொண்டிருத்தல் கூடும் என்று சிலர் கருதுகின்றனர். 'ஸூஸ்க ஸூகர மார்தவ—ஸூகர மாத்தவ' என்ற சொற்ருெடருக்கு 'உலர்ந்த பன்றி இறைச்சிபோல் மென்மையான' என்றுதான் பொருள் என்றும், அது மக்கள் புசிக்கக்கூடிய ஒருவகைக் காளானையே குறிக்கும் என்றும் 'புத்த மீமாம்சை - Buddha Mimamsa' என்ற ஆங்கில நூலொன்றில் குறிக்கப்பெற்றுளது. குடல் நோயைக் குணமாக்கும் காளான் அல்லது ஒருவகைக் கிழங்கினையே சந்தன் சமைத்திருக்கவேண்டும் என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். அதுவரை பெருமானுக்கு நடந்த விருந்துகளிலெல்லாம் இனிப்பான அரிசிப் பொங்கலும், பணிகாரங்களும் குறிக்கப்பெற்றிருக்கின்றனவேயன்றி, வேறு புலால் சேர்ந்த கறி வகைகளைப்பற்றிய குறிப்பே யில்லை. எனவே அவர் அருந்திய கடைசி உணவும் சைவ உணவாகவே இருந்திருக்கும் என்று கருத இடமுண்டு.

## மீண்டும் பயணம்

பெருமானுக்கு வயதும் எண்பதாகி யிருந்தது. வயிற்றுக் கடுப்பும் அதிகமாகிப் பெரும் வேதனையளித்தது. எனினும் வழக்கம்போல் அளவுகடந்த பொறுமையுடன் அவர் துயரத்தையெல்லாம் தாங்கிக்கொண்டு, 'ஆனந்தா, நாம் குசிநகருக்குச் செல்வோம்!' என்று கூறி, மீண்டும் பிரயாணமானார். வழியில் அவருக்குக் களைப்பு மிகுந்ததால், அவர் பாதைக்கு அருகிலிருந்த ஒரு மரத்தடியில் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டார். அப்போது, 'தாகம் அதிகமாயுளது!' என்று கூறி அருகே யிருந்த ஓடையிலிருந்து நீர் கொண்டுவருமாறு அவர் ஆனந்தரை வேண்டினார். மேற்கொண்டு சிறிது தூரம் சென்றால், குகுஷ்டை நதியில் நல்ல நீர் பருகலாம் என்று ஆனந்தர் சொல்லியும் அவர் கேட்கவில்லை. ஆகவே ஓடையிலிருந்து ஆனந்தர் தண்ணீர் கொணர்ந்து கொடுக்கப் பகவர் அதைப் பருகித் தாகவிடாயைத் தணித்துக்கொண்டார்.

மரத்தடியில் மாதவர் அமர்ந்திருப்பதைக் கண்ட புக்குசா என்ற வாலிப மல்லர் ஒருவர் அருகே சென்று அவரை வணங்கினார். புக்குசா ஆலார காலாமரின் சீடர். உடல் தள்ளாடிக் கொண்டிருந்த நிலையிலும் பெருமான் அவருக்குத் தரும உபதேசம் செய்து களிப்பித்தார். புக்குசா காவி நிறத்தில் இரண்டு பொன்னாடைகளை வரவழைத்து அந்த இடத்திலேயே அளித்து, ஐயன் அவைகளை அங்கீகரிக்கும்படி வேண்டினார். ததாகதர் ஒன்றைத் தமக்கு அணிவிக்கும்படியும், மற்றதை ஆனந்தருக்கு அளிக்கும்படியும் கூறினார்.

பொன்னாடை போர்த்திய புத்த தேவரின் திருமேனி திடீரென்று பேரொளியோடு விளங்கிற்று. ஆடையின் பிரகாசம் அவருடைய ஜோதியில் அடங்கிவிட்டது. ஆனந்தர் அதற்குக் காரணம் கேட்கையில், ததாகதர் மகாபோதி

யடையும்போதும், தேகவியோகமாகும் போதும் அவரது உடல் ஜோதிமயமாக விளங்குவது இயற்கை என்று பெருமான் கூறினர்.

அன்றிரவு நடுயாமத்தில் குசிநகரிலுள்ள மல்லர்களுடைய சாலமரச் சோலையிலே ததாகதர் தேகவியோகமாவார் என்பதையும் அவர் ஆனந்தருக்கு அறிவித்தார்.

பின்னர் ஐயனும் ஆனந்தரும் குகுஷ்டை நதிக்குச் சென்றனர். பெருமான் நீருள் இறங்கிக் குளித்துவிட்டுத் தாகத்திற்கும் அத்தெளிந்த நீரைப் பருகினர். அங்கிருந்து அடியார்கள் புடைசூழ, இரணயவதி நதிக்கரையில் அமைந்திருந்த குசிநகரை நோக்கி அவர் மெல்ல மெல்ல நடந்து சென்றார்.

## சாரீபுத்திரர் நிருவாணமடைதல்

பகவருடைய மகா - பரி - நிருவாணத்தைக் கூறு முன்பு, அவருடைய திருக்கரங்களாக விளங்கித் தருமம் வளர்த்து வந்த சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் இருவரும் முக்தியடைந்ததை இங்கே குறிப்பிட வேண்டும்.

பெருமான் கடைசி முறையாக வைசாலியில் எழுந்தருளியிருக்கையில் சிராவஸ்தியில் தங்கியிருந்த சாரீபுத்திரர் தமது இறுதிக் காலம் நெருங்கிவிட்டது என்பதையும், ஏழு நாட்களே எஞ்சியிருந்தன என்பதையும் உணர்ந்து, தமது சொந்த ஊராகிய நாலந்தாவுக்குச் செல்ல வேண்டுமென்று அண்ணலிடம் வந்து விடைபெற்றுக் கொண்டார். அவர் கடைசி முறையாகப் பிக்குக்களுக்குப் போதனை செய்ய வேண்டுமென்று அண்ணல் வேண்டிக்கொள்ளவும், அவரும் அவ்வாறே செய்துவிட்டு, ஐயனின் உதவியால் தாம்பெற்ற இருத்தி ஆற்றல்களையும் ஓரளவு வெளிப்படுத்திக் காட்டினர்.

தரும சேனாபதியின் இறுதிக் காலம் நெருங்கிவிட்டது, என்பதைக் கேள்விப்பட்ட மக்கள், ஏராளமான வாசனைத்

திரவியங்களும், மலர் மாலைகளும் எடுத்துக்கொண்டு, அவரைத் தொடர்ந்து நாலந்தாவுக்குப் புறப்பட்டுச் சென்றனர், வழியில் அவர்களுக்கு அவர் ஆறுதல் கூறி, அவர்கள் நகருக்குத் திரும்பிச் செல்லுமாறு செய்தார். அவருடைய மெய்யடியார்களான ஐந்நூறு பிக்குக்கள் மட்டும் அவருடன் சென்றனர்.

நாலந்தாவில், தம்முடைய பழைய வீட்டில், தாம் பிறந்த அறையிலேயே பூதவுடலை நீத்து நிருவாணப்பேறு பெறவேண்டும் என்பது சாரீபுத்திரரின் எண்ணம். மேலும் நாட்டார் பலருக்கும் நல்லுபதேசம் செய்து வந்த அப்பெரியார், தம்மைப் பெற்று வளர்த்த அன்னைக்கும் தருமத்தைப் போதிக்கவேண்டும் என்று விரும்பினார். எனவே ஏழுநாள் வழிநடந்து கிராமத்தை அடைந்ததும், முதற்கண் அவர் வயது முதிர்ந்த தமது அன்னைக்கு உபதேசம் செய்து, புத்த, தரும, சங்கத்தை அடைக்கலமாகப் பெறும்படி செய்தார். பின்னர், 'அம்மா! என்னைப் பெற்று வளர்த்து, எனக்குக் கல்வி புகட்டி நீ பட்டபாட்டுக்கெல்லாம் இப்போது நான் கைம்மாறு செய்துவிட்டேன். இனி நீ என்னைத் தனியே விட்டு விட்டு அகன்றுவிட வேண்டுகிறேன்!' என்று அவர் சொல்லியதால், அன்னை அறையை விட்டு வெளியே சென்றார்.

அன்றிரவு முடிவில், காலைக் கதிரவன் தோன்று முன்னே, சாரீபுத்திரர் தலைநிமிர்ந்து எழுந்து தம்மைச் சுற்றியிருந்த பிக்குக்களைப் பார்த்து, 'நாற்பத்துநான்கு ஆண்டுகளாக நீங்கள் என்னுடன் வாழ்ந்து வந்தீர்கள். இவ்வளவு காலத்திலும் நான் உங்களில் எவருக்காவது பிழை செய்திருந்தால், என்னைப் பொறுத்தருள வேண்டும்!' என்று கேட்டுக் கொண்டார். பிக்குக்களும் அவரே தங்களை மன்னிக்க வேண்டும் என்றனர். குறித்த நேரம் வந்து விட்டதை அறிந்த சாரீபுத்திரர் திரிசரணங்களைக் கூறித் தியானத்தில் ஆழ்ந்து, ஆனந்த பரவசராகி, அவ்வண்ணமே

நிருவாணநிலையை அடைந்துவிட்டார். இது காறும் தனித்து இலங்கிக் கொண்டிருந்த நீர்த்துளி பிரகாசமான பெருங் கடலுள் சேர்ந்து அதனுடன் கலந்து விட்டது!

சாரீபுத்திரரின் உடல் வாசனைத்திரவியங்கள் ஊட்டப் பெற்றும், அலங்கரிக்கப் பெற்றும் ஏழு நாட்கள் பொது மக்களின் பார்வைக்காக வைக்கப் பெற்றிருந்ததாயும். ஆயிரக்கணக்கான ஆடவரும், பெண்டிரும், தேவர்களும் வந்து அதற்கு வணக்கம் செலுத்தியதாயும் பின்னர் பிரேத தகனம் மிக்க விமரிசையாக நடைபெற்றதாயும், அந்தியக் கிரியை முடியும்வரை பிக்குக்களின் தரும உபதேசம் இடை விடாது நடந்து வந்ததாயும் பர்மாநாட்டு வரலாறுகளில் காணப்படுகின்றது. தரும சேநாபதியின் இளைய சகோதர ராயும், சிறந்த பிக்குவாயும் விளங்கிய சந்தர் தமது சகோ தரரின் அஸ்தியையும், திருவோடு முதலியவற்றையும் புத்த பகவரிடம் கொண்டுபோய்ச் சமர்ப்பித்து விவரம் கூறினர்.

பகவர் தமது மெய்யடியாரின் அஸ்தியை வலது கையிலே ஏந்திக்கொண்டு, பிக்குக்கள் அனைவருக்கும் சாரீ புத்திரரின் மேன்மையைப்பற்றி விளக்கிக் கூறினர். 'அவன் மற்றொரு புத்தரைப்போல் தானே தரும உபதேசம் செய்ய வல்லவன். நண்பர்களைப் பெறுவது எப்படி என்பதை அவன் அறிவான். அவன் சென்றவிடமெல்லாம் கூட்டங் கூட்டமான மக்கள் அவனுடைய போதனையைக் கேட்கத் தொடர்ந்து சென்றனர். என்னைத் தவிர, அவனுக்கு இணை யானவர் எவருமிலர்!...அருமையான பிக்குக்களே, எனது ஞானபுத்திரன் சாரீபுத்திரனை நினைவூட்டும் இந்த அஸ்தி களை மீண்டும் ஒரு முறை பாருங்கள்!' என்று பெரு மான் பெருமிதத்தோடு வியந்து பேசினர்.

சாரீபுத்திரரின் நினைவுச் சின்னமாக ஜேதவனத்தில் ஒரு சேதியம் அமைக்கும்படியும் பெருமான் ஏற்பாடு செய்தார்.

## மௌத்கல்யாயனர் நிருவாணமடைதல்

கடைசி முறையாகப் புத்ததேவர் இராஜகிருகத்தில் தங்கியிருந்த சமயம் மௌத்கல்யாயனரும் நிருவாணமடைந்தார்.

இராஜகிருகத்திற்கு அருகில் இஸிகிலிமலைக் குகை ஒன்றில் மௌத்கல்யாயனர் தங்கிவந்தார். அவருடைய இடைவிடாத பிரசாரத்தினுலும், ஊக்கத்தாலும், தைரியத்தாலும், ஆற்றல்களாலும் நகர்முழுவதும் பௌத்த தருமத்தின் பசுஞ்சோலையாக விளங்கிவந்தது. இதனுல் மனக்கொதிப்படைந்து குமுறிக் கொண்டிருந்த புறச்சமயிகள் பலர். ஆடையில்லாத துறவிகளாக விளங்கிய அவர்கள் காழ்ப்புக் காரணமாக மௌத்கல்யாயனரைக் கொலை செய்யவே தீர்மானித்துவிட்டார்கள். இரகசியமாகக் கொலைஞருக்குப் பணம் கொடுத்துத் தங்களுடைய தீய கருத்தை நிறைவேற்ற அவர்கள் ஏற்பாடும் செய்தனர்.

கொலைஞர்கள் ஆறுநாட்களாக மௌத்கல்யாயனரிடம் சென்று வாட்களை ஓங்கியபொழுது, அவர் தமது இருத்தி ஆற்றலால் ஆகாயத்திலே எழுந்துசென்று தப்பிக்கொண்டார். ஆனுல் ஏழாவது நாளில், இருத்தி ஆற்றல் பயனற்றுப்போய், அந்த மெய்யடியார் கொலைஞர் கையிலே சிக்கிக்கொண்டார். அவர்கள் அவரை மிகமிகக் கொடுமையாக அடித்து வதைத்ததில் அவர் உடல் சதைப் புண்டு மாமிசக் குவியலாகிவிட்டது. கொலைஞர் உடலை ஒரு புதரிலே தூக்கி யெறிந்துவிட்டுச் சென்றனர்.

கோரமான இக்கொலையைப் பற்றிய செய்தி விரைவிலே நாடெங்கும் பரவிவிட்டது. அரசர் அஜாதசத்துரு உடனே புலன் விசாரித்துக் கொலைஞர்களையும், கொலைக்குத் தூண்டிய துறவிகளையும் கைதுசெய்து விசாரணை நடத்தியதில், குற்றவாளிகள் உண்மையை ஒப்புக்கொண்டனர். ஏராளமான குற்றவாளிகள் இந்தக் கொலையில்

சம்பந்தப்பட்டிருந்ததால்; அரண்மனைக்கு முன்னால் ஆயி ரம் குழிகள் தோண்டப் பெற்றன. ஒவ்வொரு குழியிலும் ஒரு குற்றவாளி இடுப்பளவுக்குப் புதைக்கப்பட்டான். பின்னால் அனைவரும் தீயால் எரிக்கப்பட்டனர்.

சீலம் மிகுந்த மௌத்கல்யாயனருக்கு மேலே கூறிய துர்க்கதி எப்படி நேர்ந்தது? அவருடைய இருத்தி ஆற்ற லெல்லாம் இறுதியில் ஏன் பயனற்றுப் போயிற்று? இவை களைப்பற்றிப் பிக்குக்கள் விவரம் தெரியாமல் திகைத்து, ஒருவரை யொருவர் விசாரித்துக் கொண்டிருந்தனர். அதை யறிந்த புத்ததேவர் அவர்கள் அனைவருக்கும் விவரத்தை எடுத்துக் கூறினார். முந்திய ஜன்மம் ஒன்றில் மௌத்கல் யாயனர் தமது மனைவியின் தூண்டுதலால், தம் தாயையும் தந்தையையும் ஒரு வனத்திற்கு அழைத்துப்போய், நேத் திரம் தெரியாத அவ்வயோதிகர்களைத் தனியே விட்டு விட்டுச் சென்றாராம். சிறிது நேரம் கழிந்தபின் அவர் மீண் டும் அவர்களிடம் வந்து, எவனோ ஒரு கொள்ளைக்காரன் என்று அவர்கள் கருதும்படி தம் குரலை மாற்றிக் கூவிக் கொண்டே, அவர்களைக் கொலைசெய்து விட்டாராம். மரிக் கும் பொழுதும் அப்பெற்றோர்கள் மகனை நினைத்து வருந்தி, 'மகனே, நீயாவது எங்கேனும் தப்பித்துக் கொள்!' என்று கூறினராம். தங்களைக் கொன்றவன் தங்கள் மகனே என் பதை அவர்கள் நம்பவேயில்லை. மாதா, பிதா இருவரையும் கொலைசெய்த அந்தப் பாவத்திற்காக மௌத்கல்யாயனர் பலகாலம் வெய்யநரகிடையே அவதியுற்று, மீண்டும் உல கில் மனிதராய்த் தோன்றி முடிவில் கொலையுண்டு மடிந் தார் என்றும், கருமவினையின் பயனாய் அவருக்கு இறுதி யில் ஆற்றல் பலியாது போயிற்று என்றும் பெருமான் கூறினார்.

மௌத்கல்யாயனரின் ஞாபகார்த்தமாக வேணுவன விகாரையின் வாயிலில் ஒரு சேதியம் கட்டும்படி பெருமான் ஆணையிட்டருளினார்.

## 2500-ஆண்டுகட்குப் பின்னல் !

பிற்காலத்தில் சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் இருவருடைய அஸ்திகளும் சுமார் இருபத்தைந்து நூற்றுண்டுகளாகப் பாதுகாக்கப்பெற்று, இன்றும் இந்திய நாட்டில் இருந்து வருகின்றன. ஆதியில் இந்த அஸ்திகள் புகழ் பெற்ற பௌத்தத் தலமாகிய சாஞ்சியில் ஒரு ஸ்தூபத்தில் புதைத்து வைக்கப்பெற்றிருந்தன. 1850-ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கப் புதைபொருள் ஆராய்ச்சித் தலைமை அதிகாரியாயிருந்த தளபதி கன்னிங்ஹாம் அவைகளைக் கண்டெடுத்து, லண்டனிலுள்ள ஒரு கண்காட்சிசாலைக்கு அனுப்பிவைத்தார். இந்தியா விடுதலை பெற்றபின், தேடுதற்கரிய அச்செல்வங்கள் திரும்ப இந்நாட்டுக்கே அனுப்பப் பெற்றன.

அவைகளை மீண்டும் அடக்கம் செய்து வைப்பதற்காக, இரண்டு லட்சம் ரூபாய்க்குமேல் செலவிட்டு மகாபோதி சங்கத்தார் சாஞ்சியிலே புதிதாக அழகிய விகாரையொன்றை அமைத்திருந்தனர். 1952, நவம்பர் 29-ஆம் தேதி உலகப் பௌத்தர்களின் கலைப்பண்பு மகாநாடு சாஞ்சியிலே நடைபெற்றது. பாரதரத்னம், பேராசிரியர், சரவபள்ளி ராதாகிருஷ்ணன் தலைமை வகித்தார்.

மறுநாள் புத்ததேவரின் முதன்மையான சீடர்களான சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் இருவருடைய அஸ்திகளும் அடங்கிய தங்கப் பேழை சாஞ்சிக் குன்றுக்கு ஊர்வலமாக எடுத்து வரப்பெற்றது. ஐம்பதினுயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் அவ்வமயம் கூடியிருந்தனர். சீனு, ஜப்பான், இலங்கை, தாய்லந்து, பர்மா முதலிய பலநாட்டுப் பௌத்த பிக்குக்களும் பிக்குணிகளும் சீவர ஆடை யணிந்து வந்து அப்புனிதத் திருநாளில் கலந்துகொண்டனர். சாஞ்சிக் கிராமமும், விகாரை அமைந்திருந்த குன்றும் தொலைவிலுள்ள சிறு குன்றுகளும் அதிரும்படி கண்டாமணிகள்

முழங்கின. மந்திர கீதங்கள் ஒலித்தன. பிக்குக்களும், பிக்குணிகளும் தரையில் விழுந்து வணங்கவும் பல்லாயிரம் மக்கள் பணிந்து போற்றி நிற்கவும், இந்திய மகாபோதி சங்கத்தின் தருமகர்த்தா புனித பிக்கு ஸ்ரீநிவாச நாயகத் தேரரும், இலங்கை மகாபோதி சங்கத் தலைவர் புனிதபிக்கு டாக்டர் வஜிராணன மகாதேரரும் அஸ்திகளை இந்தியப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டு விகாரையுள் அடக்கம் செய்தனர். பிக்குக்கள் பௌத்த சூத்திரங்களைப் பாராயணம் செய்து கொண்டிருக்கையில், இலங்கை உள்நாட்டு மந்திரி திரு. ஏ. ரத்னநாயகா, சாரீபுத்திரர், மௌத்கல்யாயனர் இருவருடைய ஞாபகர்த்தமாகப் புதிய தீபம் ஒன்றை ஏற்றி வைத்தார். விகாரைக்கு வெளியே இளம் அரசமரக் கன்றுகளும் நடப்பெற்றன. அவைகளில் ஒன்று, புத்தகயையில் இருபத்தைந்து நூற்றாண்டுகட்கு முன்பு நற்றவ மூர்த்தியான சித்தார்த்தர் எந்தப் போதிமரத்தடியில் அமர்ந்து ஞானமடைந்தாரோ அதே மரத்தின் கன்று. அதைப் பர்மியப் பிரதம மந்திரி திரு. யு. நூ நட்டார். இலங்கை அநுராதபுரத்திலுள்ள புராதனப் போதிவிருட்சத்தின் கன்று ஒன்றைச் சிக்கிம் சமஸ்தானத்து மகராஜகுமார் நட்டுவைத்தார்.

இருபதாம் இயல்

# மகா - பரி - நிருவாணம்

'மருளறுத்த பெரும்போதி மாதவரைக்
கண்டிலமா(ல்)என் செய்கேம் யாம்!
அருளிருந்த திருமொழியா(ல்) அறவழக்கம்
கேட்டிலமா(ல்)என் செய்கேம் யாம்!
பொருளறியும் அருந்தவத்துப் புரவலரைக்
கண்டிலமா(ல்)என் செய்கேம் யாம்!'

—வீரசோழியம்

## குசீநகர்

பெருங் கூட்டமான, பிக்குக்களோடு புத்ததேவர் குசீநகரில் 'உபவர்த்தனம்' என்ற சாலமரச் சோலையை அடைந்தார். அப்போது அவர் மிகவும் களைப்படைந் திருந்ததால், ஆனந்தரை அழைத்து, ஓரிடத்தில் இரட் டைச் சாலமரங்கள் இருந்ததைச் சுட்டிக்காட்டி, அவை களின் இடையே தமக்குக் கட்டிலைப் போட்டுவைக்கும்படி கூறினார். உடனே ஆனந்தர் அவ்வாறே செய்தார். பெரு மான் வட திசையில் தலைவைத்து, வலது புறமாகத் திரு மேனியைச் சாய்த்துக் கொண்டு, கட்டில் மீது சயனித்துக் கொண்டார். அப்போது அவர் நல்ல பிரக்ஞையுடனும் அமைதியுடனுமே விளங்கினார். சீரிய சிங்கம் பாறைமீது படுத்திருப்பது போல அவர் காணப்பெற்றார்.

இரட்டைச் சால மரங்களிலும் கொத்துக் கொத்தா கப் பூக்கள் குலுங்கிக் கொண்டிருந்தன. காலமில்லாத காலத்திலே பூத்த அந்த மலர்கள் பெருமான் திருமேனி

மீது உதிர்ந்து கொண்டிருந்தன. வானத்திலிருந்து மந்திர புஷ்பங்களும், கந்தம் மிகுந்த சந்தனத் துகளும் சாரல் பெய்வதுபோல் பெய்து கொண்டிருந்தன. ஆகாயத்தில் தேவகீதங்கள் முழங்கின ; சோலையைச் சுற்றிலும் இன்னிசை ஒலித்துக் கொண்டிருந்தது. இந்த அற்புதங்களை யெல்லாம் பார்த்து ஆனந்தர் பெருவியப்படைந்தார்.

அப்போது பெருமான் அவரைநோக்கி அந்த நேரத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த அற்புதங்களால் மட்டும் ததாகதருக்குப் பெருமையில்லை என்றும், ஒவ்வொரு பிக்குவும், பிக்குணியும் தமக்குரிய விநய விதிகளின்படி நடந்து, வாழ்க்கையை முறைப்படுத்திக் கொண்டு, சீலத்தில் சிறந்து விளங்குவதே ததாகதரைச் சரியான முறையில் வணங்கிக் கௌரவிப்பதாகும் என்றும் விளக்கிச் சொன்னார்.

அப்போது எதிரே நின்று விசிறிக் கொண்டிருந்த உபரவணரைப் பார்த்துப் பெருமான், 'ஓ பிக்கு, என் முன்னால் நின்று மறைக்காமல் ஒதுங்கி நிற்கவும்!' என்று கூறினார். காலமெல்லாம் அவருக்கு ஊழியம் செய்து வந்த தொண்டரை விலகியிருக்கச் சொல்லியதன் காரணம் என்ன என்று ஆனந்தர் பெருமானை வினவினார். ததாகதரைத் தரிசிப்பதற்காகப் பத்து உலகங்களிலிருந்தும் தேவர்கள் வந்து இச்சோலையைச் சூழ்ந்து நிற்கிறார்கள் ; இங்கிருந்து பல காத தூரம்வரை எள்ளும் விழ இடமின்றிச் சுற்றிலும் வல்லமை மிக்க தேவதைகள் குழுமி நிற்கின்றனர். அவர்கள் தரிசிப்பதற்கு இடையூறாக யாரும் ததாகதரை மறைத்து நிற்கவேண்டாம் என்பதற்காகவே உபாவணரை ஒதுங்கியிருக்கச் சொன்னேன்' என்று பெருமான் கூறினார். ததாகதர்கள் மண்ணுலகில் தோன்றுவதே அபூர்வம் ; அவ்வாறு அருமையாகத் தோன்றிய ஒரு ததாகதர் தேக வியோகமாவதைக் காணவே யாவரும் கூடியிருந்தனர்.

பகவர் சில மணி நேரத்தில் தங்களை விட்டுப் பிரிந்து செல்வது நிச்சயம் என்பதை ஆனந்தர் உணர்ந்து கொண்டார். எவ்வளவு உறுதியுடன் மனத்தை அடக்கி வைத்துக் கொண்ட போதிலும், அவரால் துக்கத்தைத் தாங்க முடியவில்லை. பகவரின் நிழல்போலப் பல்லாண்டுகள் அவரையே தொடர்ந்து சென்று கொண்டிருந்த ஆனந்தர், 'இனி நமக்குக் கதி யார்?' என்று ஏக்கமுற்றார். அவருக்கு எப்பொழுதுமே இளகிய மனமுண்டு. மகா காசியபர், சாரிபுத்திரர், மௌத்கல்யாயனர், உபாலி முதலியோரைப் போல, அவர் பெரிய அதிர்ச்சிகளைத் தாங்குதல் அரிது. பண்பாடுபெற்ற பெருந்துறவியே யாயினும், இடையிடையே அவர் உணர்ச்சி வசப்பட்டு உழல்வது வழக்கம். எனவே பெருமானுடைய வாழ்க்கையில் பல சம்பவங்களை பற்றி அவர் எண்ணமிட்டுக் கலங்கியிருக்க வேண்டும். மழைக் காலத்தில் பிக்குக்கள் பலரும் ததாகதருடன் வந்து தங்கியிருக்கையில் அவர் எல்லோருக்கும் உபதேசம் செய்து வந்ததை நினைத்தவுடன், 'இனி அதற்கெல்லாம் வழியில்லையே!' என்று அவர் வருந்தினார்.

பகவர் ஆனந்தரைப் பார்த்துப் பேசலானார். தருமத்தில் நம்பிக்கையுள்ள மனிதன் பயபக்தியுடன் யாத்திரை செய்து தரிசிக்க வேண்டிய தலங்கள் நான்கு என்றும், ததாகதர் அவதரித்த இடம், போதியடைந்த இடம், தரும சக்கரப் பிரவர்த்தனம் செய்த இடம், முடிவில் அவர் பேரின்பமடைந்த இடம் ஆகிய நான்குமே அத்திருப்பதிகள் என்றும் கூறினார்.

பெண்கள் சம்பந்தமாகப் பிக்குக்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பது பற்றி ஆனந்தர் விசாரிக்கையில், அவர்களைப் பார்க்கவே வேண்டாம் என்றும், பார்க்க நேர்ந்தால் அவர்களுடன் பேச வேண்டாம் என்றும், பேச நேர்ந்தால் மிகவும் விழிப்போடு இருக்கவேண்டும் என்றும் பெருமான் அருளினார்.

ததாகதர் மகா-பரி-நிருவாணமடைந்த பிறகு பிக்கு செய்யவேண்டிய கிரியைகளைப் பற்றி ஆனந்தர் பகவரின் கருத்தை அறிய விரும்பினார்.

பகவர் கூறியதாவது :

'ஆனந்தா, ததாகதரின் சடலத்திற்கு மரியாதை செய்வதைப் பற்றி நீ இடர்ப்பட வேண்டியதில்லை ! எப்பொழுதும் நீ விழிப்போடிருக்க வேண்டும். ஆனந்தா, உன் நன்மைக்காகவே இதைச் சொல்லுகிறேன். உனது நன்மைக்காக நீயே பாடுபட வேண்டும். ஆர்வத்தோடு இருக்க வேண்டும்; விழிப்போடு இருக்கவேண்டும்; உனது நன்மையிலே நாட்டமாயிருக்கவேண்டும் !

'ஆனந்தா ! க்ஷத்திரியப் பிரபுக்களிலும், பிராமணர்களிலும், கிருகஸ்தர்களிலும் ததாகதரிடம் உறுதியான நம்பிக்கையுள்ள அறிவாளர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் ததாகதரின் உடலுக்குரிய மரியாதையைச் செய்வார்கள்.

இராஜாதி ராஜனின் உடலுக்குச் செய்வது போன்று தமது உடலுக்கும் மரியாதை செய்ய வேண்டுமென்று பெருமான் கூறினார். தமது உடலைத் தைலமாட்டி வைத்திருந்து, கோடித்துணி அணிவித்துப் பலவிதமான கந்தப் பொருள்கள் தெளித்த காஷ்டத்திலே தகனம் செய்ய வேண்டுமென்றும் அவர் விவரமாகத் தெரிவித்தார். சக்கரவர்த்தியின் அஸ்திகளை அடக்கம் செய்து வைப்பதற்குப் தாதுகோபம் அமைப்பதுபோல், தம் அஸ்திகளுக்கும் செய்வது உசிதமென்றும் அவர் சுட்டிக் காட்டினார்.

பின்னர் ஆனந்தர் அருகேயிருந்த விகாரையுள்ளே சென்று, ஒரு கதவு நிலையில் சாய்ந்துகொண்டு துக்கத்தில் ஆழ்ந்து நின்றார். 'நான் இன்னும் அருகத்து நிலையை அடையவில்லையே! அதற்குள் பெருமான், என்னைத் தனித்திருக்க விட்டுவிட்டுப் பிரிகின்றாரே !' என்ற எண்ணத்தினால், அதுவரை அவர் கட்டி வைத்திருந்த கண்ணீர்க் கடல் வெள்ளமிட்டுப் பெருக ஆரம்பித்தது. அதற்குள்

வெளியே ஐயன், 'ஆனந்தன் எங்கே ?' என்று விசாரிக்கலானார். உடனே ஒரு பிக்கு விகாரைக்குள் புகுந்து ஆனந்தரை அழைத்துச் சென்றார். 'போதும், ஆனந்தா ! நீ துயரப்பட வேண்டாம் ; அழாதே !' என்று சொல்லிப் பகவர் ஆனந்தருக்கு ஆறுதல் கூறினார். அன்புக்குரிய சகல பொருள்களையும் ஆப்தமானவர்களையும் முடிவில் பிரிந்து தானாக வேண்டும் என்பதைத் தாம் பன்முறை பலவிதமாக எடுத்துப் போதித்து வந்ததை அவர் ஞாபகப் படுத்தினார். பல வழிகளிலும் தாம் உலகுக்கு அறிவுறுத்திய தரும காயம்* நிலைத்திருக்கையில், தமது ஊனுடல் அழியாமற் காத்திருக்க வேண்டியதில்லை என்பதை அவர் தெளிவாக விளக்கிக் கூறினார். புலன்களின் ஆசைகளைக் கைவிட்டு, சந்தோஷம், மயக்கம், அறியாமை ஆகிய தீமைகளைக் கடந்து, கருத்தோடு இடைவிடாது முயன்றால், ஆனந்தரும் பிறவிப் பிணி நீங்கி விடுதலை பெறுவது உறுதி என்பதைப் பெருமான் எடுத்துக் காட்டினார். பற்பல ஆண்டுகளாக ஆனந்தர் தம் அருகிலேயே இருந்து அரும்பெருந் தொண்டுகள் ஆற்றியதையும் அவர் வாயாரப் புகழ்ந்தார்.

சிறு நகராகிய குசிநகரத்தில் ஐயன் உலக வாழ்க்கை நீத்தல் சிறப்பில்லை யென்றும், இராஜகிருகம், சம்பா, சிராவஸ்தி, சாகேதம், கௌசாம்பி, காசி முதலிய பெரு நகரங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் ஆனந்தர் சொன்னார். அதற்கு மறுமொழியாகப் பெருமான் குசிநகர் முற்காலத்தில் மகா சுதர்சனன் என்ற புகழ் பெற்ற மன்னனின் தலைநகராயிருந்த வரலாற்றையும், அதன் பெருமையையும் எடுத்துக் காட்டினார்.

பின்னர், குசிநகரத்து மல்லர்களுக்கு அன்றிரவு தாம் பரிநிருவாணம் அடையப்போவதை அறிவிக்கும்படி பெருமான் கட்டளையிட்டார். அச்சமயம் ஏதோ பொதுக்

*காயம் — உடல் ; தரும காயம் — தருமமாகிய உடல்.

காரியமாக ஊர்க்கூட்டம் கூட்டியிருந்தனர். பெருமானைப் பற்றிய செய்தியைக் கேட்டவுடனே அவர்கள் கூட்டம் கூட்டமாக உபவர்த்தனத்தில் சாலமரச் சோலையிலே வந்து கூடிவிட்டனர்.

பலர் அழுதனர்; பலர் துடித்தனர். ஆண்களும் பெண்களும், குழந்தைகளுமாக வந்திருந்த மல்லர்கள் அனைவரையும் சோகம் பற்றிக்கொண்டது. புனிதமூர்த்தி விரைவிலே பிரிந்து விடுவாரே என்றும், உலகின் பெருஞ் சோதி அணைந்து விடுமே என்றும் அவர்கள் அங்கலாய்த் தனர். அன்றிரவில் வெகு நேரம்வரை அவர்கள் சிறு சிறு கூட்டங்களாகச் சென்று சயனியத்திருந்த பகவரைக் கண் குளிரத் தரிசித்து வந்தனர்.

## கடைசிச் சீடர்

அன்று பகவரிடம் கடைசியாக உபதேசம் பெறுவதற் காகக் குசிநகரவாசியான துறவி ஒருவரும் வந்து சேர்ந்தார். அவர் **சுபத்திரர்** என்ற பெயருடையார். தத்துவ விசாரத் தில் அவர் உள்ளத்தில் சில ஐயங்கள் ஏற்பட்டுக் கலக்கிக் கொண்டிருந்தன. ததாகதர் ஒருவரே அவர் சந்தேகங் களை நீக்க வல்லவர் என்றும், அன்றிரவு விடியுமுன் ததாகதர் தேகவியோகமாவார் என்று மக்கள் கூறியதால் விரைவாக அவரைச் சென்று காணவேண்டும் என்றும் கருதிய சுபத்திரர் வள்ளல் தங்கியிருந்த சோலைக்கு ஓடோடியும் வந்தார்.

அவர் வருகையை அறிந்த ஆனந்தர், பெருமானோடு அவர் விவாதம் செய்தால், இயற்கையாகவே தளர்ந்திருந்த ததாகதர் மேலும் நலிவுறுவார் என்று அஞ்சித் ததாகதர் நிலையை அவருக்கு உணர்த்த ஆரம்பித்தார்.

அந்நிலையில் ததாகதர், அவர்களுடைய பேச்சின் ஒலி கேட்டு, ஆனந்தரை அழைத்துச் சுபத்திரரை உள்ளே யனுப்புமாறு கூறினார். அவ்வாறே ஆனந்தர் சுபத்திர

ரிடம் சென்று, பெருமான் அவரை அனுமதித்துள்ளார் என்றும், அவர் உள்ளே செல்லலாம் என்றும் கூறினார்.

சுபத்திரர் பெருமானிடம் சென்று அவரை வணங்கினார். இருவரும் குசலம் விசாரித்துக் கொண்டபின், சுபத்திரர் அருகே ஓர் ஆசனத்தில் அமர்ந்து, சந்தேகங்களை ஐயனிடம் தெரிவித்தார். அக்காலத்தில் வெவ்வேறு சமயங்களில் ஆசாரியர்களாக இருந்து கொண்டு நாட்டிலே பிரசாரம் செய்து வந்த பூரண காசியபர், கோசலி மற்கலி, அஜிதகேச கம்பளர், கச்சாயனர், சஞ்சயர், நிகந்தநாதர் முதலியோர் தமது சொந்த ஞானத்தில் மெய்ப்பொருளைக் கண்டறிந்தவர்களா, அல்லது அவர்களிலே சிலர் மெய்ஞ்ஞானம் பெறவில்லையா என்று சுபத்திரர் வினவினார்.

பெருமான் அவருடைய வீண் விசாரத்தை உணர்ந்து கொண்டு, அந்த விஷயங்களைப் பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை என்று கூறியதுடன், தாம் அதுவரை போதித்து வந்த தருமத்தின் பெருமையையும் அவருக்கு விளக்கியுரைத்தார். சமய வாழ்க்கையில் உயர்நிலை அடைந்து, ஒழுக்கத்தில் நிலைபெற்று, தியானத்தின் மூலம் மெய்ஞ்ஞானம் பெற்று, ஒவ்வொருவரும் உண்மையை உள்ளபடி உணர்ந்து கொள்வதற்குத் தாம் வகுத்துள்ள 'அஷ்டாங்க மார்க்கம்' என்ற முறை வேறு தரும நெறிகளில் இல்லையென்றும், பௌத்த தருமத்தில் பயிற்சி பெறும் சீடன் முதலில் ச்ரோத பன்னனாகி, இரண்டாவதாக ஸக்ருதாகாமியாகி, மூன்றாவதாக அநாகாமியாகி, நான்காவதாக மிக உயர்ந்த அருகத்து நிலையை அடைவான் என்றும், அத்தகைய நான்கு பயிற்சிப் படிகள் பிறருடைய முறைகளில் இல்லையென்றும் புத்ததேவர் எடுத்துக் காட்டினார்.

மேலும் அவர் கூறியதாவது :

'சுபத்திரா! மெய்ப்பொருளை நாடி நான் வெளியேறும் காலத்தில் எனக்கு வயது இருபத்தொன்பது. தரும ஸ்தாபனத்திற்காக நான் உலகைத் துறந்து, ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகக் கழிந்து விட்டன. (சமய வாழ்வில் பயிற்சி பெறும் துறவிகளுக்காக வகுத்துள்ள) நான்கு படிகளில் எந்தப் படியிலுள்ள துறவியும் இந்தத் தருமத்திற்கு வெளியேயில்லை. வாதப்போர் புரியும் புறச்சமயிகளிடையே இத்தகைய துறவிகள் இல்லை. ஆனால் இந்தத் தருமத்திலே பிக்குக்கள் நிறைந்த சீலத்துடன் வாழ்ந்து வந்தால், உலகத்திலே அருகத்துக்கள் இல்லாமற் போகமாட்டார்கள்'*

## இறுதி உபதேசம்

அடுத்தாற்போல் பகவர் ஆனந்தரைப் பார்த்து, 'ஆனந்தா! "ததாகதரின் உபதேசம் முடிந்துவிட்டது; இனிமேல் நமக்கு ஆசிரியர் எவருமில்லை! என்று உங்களில் சிலருக்குச் சிந்தனை எழக்கூடும். ஆனந்தா! இதை அவ்வாறு நீங்கள் கருதக்கூடாது. இனிமேல் எனக்குப் பிறப்பில்லை என்பது உண்மைதான்; ஏனெனில் இனி எத்தகைய துக்கமும் எனக்கு இல்லாதபடி ஒழிந்துவிட்டது. இந்த உடல் மரித்த பின்பும், ததாகதர் இருந்தே வருவார். நான் தெரிவித்துள்ள தருமமும், உங்களனைவருக்கும் பொதுவான சங்கத்தின் வினய விதிகளும், நான் சென்ற பிறகு, உங்களுக்கு ஆசிரியராக இருந்து வரட்டும்!......

பின்னர் பெருமான் பிக்குக்கள் பக்கம் திரும்பி, எவருக்காவது சந்தேகம் இருந்தால் கேட்கும்படி கூறினார்:

'புத்தரைப் பற்றியோ, தருமத்தைப் பற்றியோ, சங்கத்தைப் பற்றியோ, மார்க்கத்தைப் பற்றியோ யாராவது ஒரு பிக்குவின் மனத்தில், ஏதாவது மயக்கமோ, ஐயப்பாடோ

---

*' தீக நிகாயம்'.

இருக்கலாம். "பகவருடன் நேருக்கு நேராக நாம் இருந்த பொழுது நாம் அவரிடம் விசாரித்துத் தெரிந்து கொள்ளா மற் போனேமே!" என்று பின்னல் உங்களை நீங்களே குறை சொல்லிக்கொள்ள இடம் வைக்கவேண்டாம். ஆத லால் பிக்குக்களே, இப்பொழுதே கேளுங்கள், தாராள மாய்க் கேட்டுத் தெளிந்து கொள்ளுங்கள்!'

பிக்குக்கள் அனைவரும் மௌனமாகவே இருந்தனர். பெருமான் மும்முறை கேட்டும், அவர்களுடைய மௌனம் கலையவில்லை. கூட்டத்திலே புத்தர், தருமம், சங்கம் பற்றி யாருக்கும் எவ்வித ஐயமும் இல்லாதிருக்கலாம் என்று ஆனந்தர் பகவரிடம் கூறினர்.

அதைக் கேட்டும் பெருமான், நிறைந்த நம்பிக்கை காரணமாக ஆனந்தர் அவ்வாறு கூறியதாயும், உண்மையி லேயே அங்கிருந்த பிக்குக்களில் யாருக்கும் எவ்வித ஐயமு மில்லை என்பதைத் தாமும் அறிந்ததாயும் கூறினர். அத் துடன் அங்கு குழுமியிருந்த ஐந்நூறு பிக்குக்களில், (கருத் துடைமையில்) மிகவும் பிற்பட்டு நிற்பவர்கள் உட்பட, யாவருமே திருந்திய வாழ்வு பெற்றவர்கள் என்றும், துக்கம் நிறைந்த பிறவிக் கடலில் இனிமேல் அவர்கள் விழ நேராது என்றும், யாவருக்கும் நிருவாணம் நிச்சயம் என்றும் அறி வித்தார்.

'ஓ பிக்குக்களே! தருமத்தையும், சகல துக்கங்களின் காரணத்தையும், விமுக்திக்குரிய மார்க்கத்தையும் நீங்கள் இப்பொழுது அறிந்திருந்தால், அப்படியிருப்பினும், "நாங் கள் பகவரிடம் மரியாதை யுள்ளவர்கள், பகவரிடம் கொண்ட மரியாதை காரணமாகவே நாங்கள் இவ்வாறு பேசுகிறோம்!" என்றுதான் சொல்வீர்களா?' என்று பெருமான் ஒரு கேள்வி கேட்டார்.

சீடர்கள் அனைவரும் ஒருமித்த குரலில் 'அவ்வாறில்லை' என்று விடை பகர்ந்தனர்.

'ஓ பிக்குக்களே! நீங்கள் பேசுவது, நீங்களே சுயமாக அறிந்து, நீங்களே கண்டு, நீங்களே அநுபவித்த விஷயமா

யில்லையா?' என்று அவர் கேட்க, ஆனந்தர் முதலிய யாவரும் ஆமென்று உரைத்தனர்.

மீண்டும் பகவர் பேச ஆரம்பித்தார் :

'பிக்குக்களே, இப்பொழுது கவனியுங்கள்'

"(சேர்க்கையாகச்) சேர்ந்துள்ள பொருள்கள் யாவற்றிலும் (பிரிந்து) அழிவுறும் இயல்பு அடங்கியுள்ளது" என்பதை நினைவுறுத்தியே நான் உங்களுக்கு உபதேசம் செய்கிறேன். உங்களுடைய விமோசனத்திற்காக இடைவிடாமல் கருத்தோடு உழையுங்கள்!'

இவையே ததாகதரின் கடைசி வார்த்தைகள். பிறகு ததாகதர் மௌனமாகித் தியானத்தில் ஆழ்ந்தார். நான்கு வகைத் தியானங்களையும் கடந்து, இறுதியான பேரின்ப நிலையாகிய நிருவாணத்தில் இலயித்து விட்டார்.

அந்த நேரத்தில் பூமி பயங்கரமாக அதிர்ந்தது. வானத்தில் இடியேறுகள் உறுமின. மன உணர்ச்சிகளை முழுவதும் அடக்கி வெற்றி பெறாத பிக்குக்கள் சிலர் கைகளை உயரே தூக்கிக் கொண்டு 'ஓ' வென்று கதறி அழுதனர்; சிலர் நின்ற நிலையிலேயே தலை சாய்ந்து விழுந்து துயரத்தால் துடித்தனர்.

அழுது அரற்றித் துயரப்பட்டவர்களை அநுருத்தர் தேற்றினர். ததாகதர் பலமுறை கூறிய வாய்மைகளை எடுத்துக் காட்டி, உலகில் எதுவும் நிலையில்லை என்று தெரிந்த பின்பும் வீணாக அழவேண்டியதில்லை என்று அவர் கடிந்து கொண்டார்: 'உணர்ச்சிகளை வென்றவர்கள் அவர் உபதேசித்தருளிய வாய்மையைக் கருத்திற் கொண்டு, அமைதியோடும், அடக்கத்தோடும் இருப்பார் என்று கூறினர்.

அன்றிரவு முழுவதும் அநுருத்தரும், ஆனந்தரும் பௌத்த தரும சூத்திரங்களை ஓதிக்கொண்டிருந்தனர்.

## பின் நிகழ்ச்சிகள்

பின்னர் ஆனந்தர் மூலம் போதிமாதவர் மகா-பரி-நிருவாண மெய்திய செய்தியை அறிந்த மல்லர்கள் நகரிலிருந்து

திரள் திரளாக வந்து சேர்ந்தனர். ஏராளமான மலர்மாலை களும் பரிமளப் பொருள்களும் கொண்டுவந்து மக்கள் அவர் திருமேனியை வணங்கினர். மல்லர்களின் தலைவர்களு டைய ஆணைப்படி நகரிலிருந்த எல்லா வாத்தியங்களும் வந்து சேர்ந்தன. வாத்தியங்களின் இசைகளும், ஆடல் களும், பாடல்களும் இடைவிடாது நிகழ்ந்து வந்தன. இவ் வாறு ஆறுநாட்கள் மல்லர்கள் புத்ததேவரின் திருமேனிக்கு வணக்கம் புரிந்து வந்தனர்.

ஏழாவது நாளில் பரிமளம் மிகுந்த சந்தனச் சிதையின் மீது தேவரின் திருமேனி வைக்கப்பெற்றது. முதலாவதாக மகாகாசியபர், கைகளைக் கட்டிக்கொண்டு மிக்க வணக்கத் துடன் காஷ்டத்தை மும்முறை சுற்றி வந்து, பெருமானின் திருவடிகளை வணங்கினர். பிறகு ஐந்நூறு பிக்குக்களும் அவ்வாறே செய்தனர்.

உடனே காஷ்டத்தில் தீ தானகவே பற்றிக்கொண் டது. தகனம் முடிந்த பிறகு வானத்திலிருந்து வழிந்து வந்த வெள்ள நீரால் அனல் அணைக்கப்பெற்றது. ததாகதரின் உடல் தகனமானதில் நீரோ, புகைக்கரியோ சிறிதுமின்றி, வைரம் போன்ற அஸ்திகள் மட்டுமே மிஞ்சி யிருந்தன. மல்லர்கள் அவற்றைச் சேகரித்து ஒரு பொற்குடத்தில் வைத்து, அக்குடத்தைத் தங்கள் நகரசபை மண்டபத் திலே கொண்டுபோய் வைத்திருந்தனர். தேவரின் அஸ்தி களுக்கு மரியாதை செய்வதற்காகக் கரகத்தின்மீது எண் ணற்ற மலர் மாலைகளும், வாசனைத் திரவியங்களும் தூவப் பெற்றன. அந்த நாட்டு வழக்கப்படி நாட்டியமும், சங்கீத மும் தொடர்ந்து நடந்து வந்தன.

பின்னல் மகத மன்னர் முதலிய ஏழு நாட்டு மன்னர் கள் புத்ததேவரின் அஸ்திகளில் தங்களுக்கும் பங்கு வேண்டுமென்று மல்லர்களுக்குத் தூதனுப்பினர்கள்; மல்லர்கள் முதலில் இணங்கவில்லை. அஸ்திகளுக்காகப் போர்களும் நேரக்கூடிய நிலைமை ஏற்பட்டது. முடிவில்

ஆன்றோர்களின் யோசனைப்படி மல்லர்கள் அஸ்திகளை எட்டுப் பங்குகளாக வைத்து, ஏழு பகுதிகளை ஏழு நாட்டவர்க்குக் கொடுத்துவிட்டு, எட்டாவது பகுதியைத் தங்கள் நகரிலே வைத்துக்கொண்டார்கள். அந்த எட்டுப் பகுதிகளான அஸ்திகளையும் எட்டுப் பொற்குடங்களில் அடக்கம் செய்து, ஒவ்வொரு குடத்திற்கும் ஒரு தாதுகோபம் கட்டப் பெற்றது. அங்கங்களைப் பாதுகாத்து வைக்கும் ஞாபகச் சின்னமாகிய தாதுகோபத்தைத் 'தகோபா' என்று கூறுவது வழக்கமாயுள்ளது.

புத்தர் பெருமான் மகா-பரி-நிருவாணமடைந்த காலம் 'ஈசான சகாப்தம், 148-ஆம் வருஷத்தில் வைகாசி மாதத்திற் பூர்ணிமையும் விசாக நக்ஷத்திரமும் கூடிய செவ்வாய்க் கிழமை யென்பர்' என்பதாக மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் குறித்துள்ளார்கள். ஈசான சகம் எதுவென்று இதுவரை துல்லியமாகத் தெரியவில்லை. ஆயினும் திருவாளர் இ. மு. சுப்பிரமணியபிள்ளையவர்கள், கி. மு. 493, கலி 2609, வைகாசி 19-ஆம் நாள் செவ்வாயன்று நிறைமதி 2 நாழிகை 11 விநாடிக்குத் தொடங்கிற்று. அன்றே புத்தர் நிருவாணமடைந்தார் என்று தமது ஆராய்ச்சியின் முடிவைத் தெரிவித்துள்ளார்கள். எனவே கி. மு. 493-ஆம் ஆண்டே ஈசான சகாப்தம் 148-ஆம் ஆண்டாக இருத்தல் வேண்டும். மற்ற ஆராய்ச்சியாளர்களும், சரித்திர ஆசிரியர்களும் வெவ்வேறு ஆண்டுகளை யூகித்துக் குறித்துள்ளார்கள். ஆனால் அவ்வாண்டுகள் புத்தர் பெருமானுடைய வாழ்க்கையின் மற்ற அமிசங்களோடு பொருந்தவில்லை.

போதி மேவினை; புன்மை அகற்றினை;
சோதி வானவர் தொழ எழுந்தருளினை
ஆதி நாத! நின் அடியிணை பரவுதும்!

## கௌதம புத்தரின் வமிசாவளி



# சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதி

(எண் : பக்க எண்)

**ஒரு குறிப்பு :**

பக்கம் 96 அடிக்குறிப்பு: அன்று ஈசான சகம் 96 (கி. மு. 573) வைகாசி மாதம், 3-ம் தேதி வெள்ளிக்கிழமை என்பதை அன்று கி. மு. 543, வைகாசி மீ, 24-ஆம் தேதி வெள்ளிக்கிழமை, பூர்ணிமை என்று திருத்திக் கொள்ளவும்.

